# மலரும் நினைவுகள்

(ஆசிரியரின் 74-வது அகவை நினைவாக)

'அருங்கலைக்கோன்', 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்
(எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பிஎச்.டி)
தமிழ்ப் பேராசிரியர்—துறைத் தலைவர் (ஓய்வு)
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி

விற்பனை உரிமை :




279, பாரதி சாலை
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

முதற் பதிப்பு : டிசம்பர், 1989
தேன்மழை 30


AD-13 (Plot No. 3354)
Anna Nagar, MADRAS-600 040
Phone : 62 155 83

பக்கங்கள் : xvi + 524 = 540

விலை : ரூ. 60-00

MALARUM NINAIVUKAL

வெளியீடு :

தேன்மழைப் பதிப்பகம்
34, கொத்தவால் தெரு
ஆலந்தூர், சென்னை-600 016
போன் : 432101

---

அச்சிட்டோர் : ஸ்ரீகோமதி அச்சகம்
41, சூரப்ப முதலி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே!

—தாயுமான அடிகள்



மேதகு குடியரசுத் தலைவர்
திரு. R. வெங்கட்டராமன் அவர்கள்

தமிழகத்தின் நற்பெயர் காக்கும்
இந்தியக் குடியரசுத் தலைவர்
அவர்கட்கு

## அன்புப் படையல்

பாங்குறு காந்தி நெறிவளம் தெளிந்தோர்;
பண்புறு தொழிற்சிறப் புணர்ந்தோர்
ஓங்குநற் பார தப்பெரும் புகழை
உலகுக்கோர் தீபமாய்ச் செய்தோர்;
தீங்கிலா வண்ணம் அரசியல் பேணும்
செம்மைபோர்; நம்ஜனா திபதி
வேங்கட ராமப் பெயரொடு பொலியும்
வித்தகர்க் குரியதிந் நூலே.

# சரணாகதி

‘அகல கில்லேன் இறையும்’ என்(று)
அலர்மேல் மங்கை யுறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்(று)
உடையாய்! என்னை ஆள்வானே[1]
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகலொன் றில்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

—நம்மாழ்வார்

1. திருவாய். 6. 10:10

# அணிந்துரை

(டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்,
துணைவேந்தர், புதுவைப் பல்கலைக் கழகம்,
புதுச்சேரி)

ஓங்குபுகழ் வேங்கடவன் பல்கலைக் கழகத்திலிருந்து பாங்குறப் பைந்தமிழ்ப் பணியாற்றி, ஓய்வு பெற்றும் தோய்வுறாமல் தொல்லிசைத் தமிழ்த் தொண்டாற்றும் எனதருமை நண்பர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் 'மலரும் நினைவுகள்' முப்பது மலர்கள் அடங்கிய ஓர் அரிய பூந்துணர்க் கொத்து.

இளமையில் 'நிச்சநிரப்பினுள்' நின்றபோதும், நிலை குலையாது துச்சமெனத் துயரைத் தூக்கி எறிந்து, 'முயற்சி திருவினையாக்கும்' என்னும் வள்ளுவன் வாக்கிற்கு இலக்கியமாய், இலக்கணமாய்த் திகழ்பவர் டாக்டர் சுப்புரெட்டியார் அவர்கள்.

'வைணவத் தமிழ்க்கோ'வாகத் திகழும் பேராசிரியர் ரெட்டியார் வாழ்நாள் முழுவதையும் தமிழ்த் தொண்டிற்காகவே அர்ப்பணித்துக் கொண்டவர். துள்ளித் திரிந்த பள்ளிப் பருவத்திலிருந்தே நமக்குத் தமிழார்வத்தை ஊட்டி வளர்த்த தமிழ்ச் சான்றோர்கள், கல்விநலம் காத்த பெரியார்கள் (துணைவேந்தர்கள்), பணிமேற் கொண்டு தணியாத ஆர்வமுடன் தமிழ்த் தொண்டாற்றிய காலைத் தொடர்பு கொண்ட மூதறிஞர்கள் ஆகியோருடன் தம்

வாழ்வில் ஏற்பட்ட பிணைப்புகளை 'மலரும் நினைவு களாகப்' பின்னிப் பிணைந்துள்ளார்கள்,

தன்-வரலாற்றைத் தருக்க ரீதியாக வழங்காமல், 'மலரும் நினைவுகளாகப்' படைத்துள்ளார் பேராசிரியர் ரெட்டியார். இவர்தம் நினைவுகளில் பெருந் தவத்திரு சித்பவாநந்த அடிகள் உண்டு; மறைத் திரு எஸ். ஜெரோம் 'டி' செளசா உண்டு; சீர்திருத்தச் செயல் வீரர் தந்தை பெரியாரும் உண்டு; பாவேந்தர், வள்ளல், கலெக்டர், கவிராச பண்டிதர், பேராசிரியர்கள், தலைமையாசிரியர், தமிழ்க்கடல், இரசிகமணி, கம்பன் அடிப்பொடி, பிரதி வாதி பயங்கரம், சபாநாயகர், உரைவேந்தர் எனப் பல நிலையினரும் மனம் களிக்கத் தோன்றுகின்றனர்.

நெறிப்படுத்தும் சமயம், நெஞ்சையள்ளும் தமிழ், நேர்மை விளக்கும் தத்துவம், மனநலம் உணர்த்தும் உளவியல் எனப் பல வண்ண மலர்கள் இத்துணரில் மலர்ந் துள்ளன. வெறும் வரலாற்றுப் படைப்பாக இராமல் இலக்கிய மேற்கோளுடன் இதனை, இனிய காவியமாக்கி யுள்ளார் திரு ரெட்டியார்.

'தூர்தர்ஷன்' (Telescope) என வழங்கியதைத் 'தொலைக்காட்சி' எனத் தமிழ்ப்படுத்திய இவர் வழங்கும் 'மலரும் நினைவுகள்' தொலைக்காட்சியில் நிகழும் 'தடங்கலுக்கு வருந்துகின்றோம்' என்பது ஏதுமின்றித் தொடர்ந்து கண்டு களிக்கும் வண்ணம் உள்ளது.

தமிழ்ச் சான்றோர்களின் வரலாற்று ஆராய்ச்சி செய் வோருக்கு இந்நூல் ஓரளவு துணையாக இருக்கும். பிற நூல்களில் வெளிவராத பல அரிய நிகழ்ச்சிகளைக் கொண்டு மணக்கும் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகெங்கும் பெரிதும் வரவேற்கப்படும் என்பது திண்ணம்.

புதுச்சேரி, (ஒ-ம்) **கி. வேங்கடசுப்பிரமணியன்**
*21, நவம்பர் 1989*

# நூல்முகம்

எனக்கு வேண்டும் வரங்களை
இசைப்பேன் கேளாய் கணபதி!
மனத்தில் சலனம் இல்லாமல்,
மதியில் இருளே தோன்றாமல்,
நினைக்கும் பொழுது நின்மவுன
நிலைவந் திடநீ செயல்வேண்டும்,
கனக்கும் செல்வம், நூறுவயது;
இவையும் தரநீ கடவாயே.[2]

—பாரதியார்

இந்த உலகில் கணந்தோறும் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடைபெற்ற வண்ணம் உள்ளன. இவற்றில் சிக்கும் மனிதர்களின் மனநிலைக்கேற்ப இவை 'நல்லன' 'தீயன' என்ற பெயர்களைப் பெறுகின்றன. இவற்றைக் கண்ணுறும் மனிதன் 'காலத்தின் கோலம்' என்று திறனாய்வு செய்கின்றான். இந்தக் காலத்தைத்தான் வைணவப் பெருமக்கள் 'காலதத்துவம்' என்று பெயரிட்டு வழங்குகின்றனர். கவிஞர்கள், சிந்தனையாளர்கள் இத்தத்துவத்தைக் 'காலச் சக்கரம்', 'கால வெள்ளம்' என்றெல்லாம் உருவகப்படுத்திப் பேசும் மரபும் எழுந்துள்ளது. அசித்தின் ஒரு பகுதியாகிய 'மிச்ரதத்துவம்' பல்வேறு விதமாக விகாரப்படுவதற்கு (வளர்ச்சி, தேய்வு முதலி

---

2. விநாயகர் நான்மணிமாலை—7

யவை) எங்கும் ஒரே திரவியமாகப் பரவி நிற்கும் கால தத்துவமே காரணமாக அமைகின்றது. இதனையே சாதாரண மக்கள் 'காலத்தின் கோலம்' என்று வழங்கு கின்றனர். தத்துவ விசாரத்துக்கு உட்படுத்திப் பேசு வதற்குச் சிரமமாக இருக்கும் இக் கருத்து சாதாரண மக்களின் திருவாயில் இலேசாகப் பிறந்து விடுகின்றது.

'காலத்தின் கோலமாகப்' பரிணமித்ததற்கு அடையாறு ஆலமரத்தை எடுத்துக்காட்டாகக் கொள்ள லாம். ஏறக்குறைய 200 ஆண்டுகட்கு முன்புள்ள ஒரு காலத்தில் அது 'சிறு பழத் தொரு விதையில்' ஒளிந்து கொண்டிருந்தது. காலச்சக்கரம்—பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் கூறும் 'காலத்திகிரி'—சுழன்று விதையில் ஒளிந்து கொண்டிருந்த ஆலமரத்தை மெல்ல மெல்ல இழுத்து வெளிக் கொணர்ந்துள்ளது. இங்ஙனம் இந்த உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் யாவுமே காலச் சக்கரத்தின் சுழற்சியால் வெளி வந்தனவாம் என்பது வெள்ளிடை மலை.

ஒரு காலத்தில் கரு-உயிரணுவாக (Germ-cell) இருந்த அடியேன் காலச் சக்கரத்தின் சுழற்றியால் வளர்ந்து வளர்ந்து கல்வி கற்று, பல்வேறு நிலைகளில் பணியாற்றி, ஒய்வு பெற்று, ஓய்வு பெற்ற நிலையிலும் ஆய்வுப் பணியில் மூழ்கியுள்ளேன். இங்ஙனமே அடியே னுக்கு முன்பே தோன்றி வளர்ந்து பல்வேறு பணிகளில் ஈடுபட்ட பல பெரியார்களைச் சந்தித்துப் பழகும் வாய்ப்பு களும் கிடைத்தன. இந்த நீண்ட காலவெள்ளத்தில் அவ்வப்போது முகிழ்த்த பல்வேறுநிகழ்ச்சிகளில்அடியேனை உட்பகுத்திக் கொள்ளவும் நேர்ந்தது. இந்த அநுபவங் களைத் தான் மெய்ப்பொருளியல் நுகர்வினை (பிராரத்த கன்மம்) என்று பேசுகின்றது. காலத்தின் கோலத்தால் தான் இந்த நூலும் தோன்றி கால வெள்ளத்தில் நீந்திக் கொண்டிருக்கப் போகின்றது. கருவூரிலிருந்து உறையூருக்கு

வந்து வாழும் மக்களில் பலர் இதனைப் படித்தநுபவிக்கப் போகின்றனர்.

இந்த நூலில் முப்பது பெரியார்களுடன் அடியேன் பழகியதால் ஏற்பட்ட நினைவுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இவர்களுள் கல்வியாளர்கள் எழுவர்; இவர்களுள்ளும் நால்வர் பல்கலைக்கழகந் துணை வேந்தர்கள்; இருவர் கல்லூரி முதல்வர்கள்; ஒருவர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர். ஏனையவர்களுள் புலமை நலஞ்சான்ற பெரியோர்கள் பதின்மர்; இலக்கியத் தொண்டர்கள் ஐவர்; துறவிகள் இருவர்; சீர்திருத்தச் செம்மல்கள் இருவர்; அரசியல் தொடர்புடையோர் இருவர்; வள்ளல் ஒருவர்; கவிஞர் ஒருவர். இப்படிப் பிரித்துக் காட்டப்பெற்றாலும் எல்லோரிடமும் எல்லாக் கூறுகளும் பல்வேறு அளவுகளில் அடங்கிக் கிடக்கின்றன. இவர்கள் யாவரும் தம் புகழ் நிறீயித் தாம்மாய்ந்த பெரியோர்கள்; சான்றோர்கள். இவர்களிடம் தொடர்பு ஏற்படச் செய்த திருவருளைச் சிந்தித்துப் போற்றுகின்றேன். இவர்கள் யாவரும் சித்தாந்த மொழியில் கூறினால் அடியேனுக்கு 'அணைந்தோராகக்' காணப்படுகின்றனர்; பசுவின் (ஆன்மாவின்) அறிவு அஃது அடையும் பொருளின் தன்மையாக மாறிவிடும் பண்பையுடையது என்ற உண்மையைச் 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்று சித்தாந்தம் பேசும். 'நிலத்தியில்பால் நீர். திரிந்ததற் றாகும்' (குறள் 452) என்ற வள்ளுவர் பெருமான் கூறும் பொன்மொழியின் உண்மையை யொத்தது இது. இன்று என்னிடம் காணப்பெறும் நல்லியல்புகள் யாவும் இப் பெரியார்களைச் சார்ந்தமையால் ஏற்பட்டவையே என்பது அடியேனின் கருத்து. இந்தத் தொடர்பினை ஏற்படுத்தி வைத்த திருவருளைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

இந்த நூல் சிறகு பெற்று வெளிவராமல் ஒரு நிறுவனத்தில் ஓராண்டுக் காலம் கூண்டுப் புழுவாகக் கிடந்தது. இந்நிலையில் இது தேன்மழைப் பதிப்பகம் என்ற நிறுவனத்தை அடைந்தது. அதன் உரிமையாளர் என் அருமைத் தம்பி திரு. வெள்ளையப்பன் கூண்டுப் புழுப் பருவத்திலிருந்த நூலை இறகு முளைத்த நிலையில் வெளிக் கொணர்ந்துள்ளார். இவருக்கு என் உளம் கனிந்த நன்றி. இறகுகள் முளைத்தபிறகு அதைப் பறக்க விடுவதற்குத் துணை செய்த திரு. சி சரவணக்குமார் அவர்கட்கு உரிமையாளர், கோமதி அச்சகம், 41, சூரப்ப முதலித் தெரு, திருவல்லிக்கேணி. சென்னை-600005)என் நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன். எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து வண்ணங்களில் அச்சிட்டு லாமினேஷன் போடும் வரை பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் P. N. ஆனந்தனுக்கும் இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத்தவழச்செய்த திரு V. திருநாவுக்கரசுக்கும் என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு அணிந்துரை அருளிய டாக்டர் K. வேங்கட சுப்பிரமணியன் அவர்களை நான் திருப்பதியில் ஓய்வு பெற்றுச் சென்னை வந்த நாள்முதல் (1978) நெருங்கிப் பழகி வருபவன். பள்ளிக் கல்வி முதல் பல்கலைக் கழகக் கல்வி வரையில் எழும் எல்லாவிதப் பிரச்சினைகளையும் கண்டு சமாளித்து வந்தவர், வருபவர். உயர்நிலைப் பள்ளிக் கல்வி இயக்குநராகப் பல்லாண்டுகள் பணிபுரிந்த காலத்தில் தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் அமைத்த தடத்தில் ஏகாந்தமான தந்தமாளிகையில் (Ivory tower) மூலவராக

அடங்கியிராமல் பட்டி தொட்டியெல்லாம் பாங்குடன் உற்சவராக அலைந்து திரிந்து பிரச்சினைகளை நேரில் கண்டு தீர்த்து வைத்ததைத் தமிழகம் மறக்கவில்லை. இதனால் ஆசிரியர்கள் உள்ளத்தில் நிலையாக வாழ் கின்றார். அங்ஙனமே தமிழக அரசுத்திட்ட ஆணையத்தின் உறுப்பினராக (Member, State Planning Commision) நின்று சுறுசுறுப்பாக இயங்கிப் பணியாற்றுவதை அரசு முதல் அறிஞர் வரை அனைவர் பாராட்டுதலுக்கும் உரியவராகின்றார்.

விரைந்து செயலாற்றும் வேந்தாகிய இவர் புதுவைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகஅமைந்தது தெய்வ சங்கற்பமாகும். பாழாய்க் கிடந்த காண்டவ வனத்தை மயன் உதவியால் இந்திரப் பிரத்தமாக மாற்றியதை மாபாரதத்தில் படித்துள்ளோம்! அங்ஙனமே மயன், விசுவகர்மா இவர்களின் அம்சம் கொண்ட இப்பெரியார் புதுவையில் பாழாய்க் கிடந்த பெரு நிலப்பரப்பை இந்திரப் பிரத்தம் போல் மாற்றியமைத்து எழில் கொழிக்கும் கல்வி அரண்மனையாக—கலைமகளின் திருக் கோயிலாக—அமைத்து வருவதை நாடு முழுதும் கண்டு மூக்கில் விரலை வைக்கின்றது. நானிலமெங்கும் தேடி நல்லாசிரியர்களை நியமித்தல், நல்லறிஞர்களைக் கொண்டு சிறந்த முறையில் நடைமுறைக்கேற்ற பாடத் திட்டங்களை வகுக்கச் செய்து அவற்றைச் செயற் படுத்தல், பல செல்வர்களை அணுகிப் பல்வேறு அறக் கட்டளைகளை நிறுவுதல் போன்ற ஆக்கப் பணிகளில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருப்பதை அறிஞர்கள் அனைவரும் ஒருமுகமாகப் பாராட்டுகின்றனர். 'அறிவு அற்றங் காக்கும் கருவி' என்பதைப் பல்கலைக் கழகத்தின் குறிக்கோள் வாசகமாகக் கொண்டு எதிர்காலக் குடி மக்களாகத் திகழும் மாணாக்கர்களின் அறிவை மலரச் செய்வதில் அரும்பாடுபட்டுப் பணியாற்றுபவர். இத்தகைய

சான்றோருக்குக் கீதையும் திருக்குறளும் வழிகாட்டிகளாக அமைகின்றன.

தவிர, இச்சான்றோருக்கு இலக்கியச் சுவையும் நிறைய உண்டு. சங்க இலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரை ஆழ்ந்து கற்று அநுபவிப்பதை இவர்தம் சொற்பொழிவிலும் அவ்வப்போது 'கலைமகள்' போன்ற பருவ இதழ்களில் வெளிவரும் இவர்தம் கட்டுரை களிலும் வீசும் மணத்தால் அறிந்து கொள்ளலாம். தவிர இத்தனைக்கும் 'மேலாக பண்புடையார் பட்டுண்டு உலகம்' (குறள்) 'உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே' (தொல்காப்பியம்) என்ற ஆன்றோர் வாக்குகட்கு எடுத்துக் காட்டாகத்திகழ்பவர். இத்தகையபெரியார்—சான்றோர்— முப்பது சான்றோர்களைப் பற்றிய நிறமாலை (Spectrum) போன்ற இந்நூலுக்கு ஓர் அணிந்துரை வழங்கி ஆசி கூறியது இந்நூலின் பெரும் பேறு; அடியேனின் பேறு மாகும். அணிந்துரை வழங்கிய அண்ணலுக்கு அடியேனின் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இன்றைய குடியரசுத் தலைவர் திரு. R. வெங்கட்டராமன் நம் நாட்டு 'பாரத ரத்தினம்' போன்றவர். இவர் காங்கிரசு தொழிலாளர் இயக்கத் தலைவராக இருந்த போது என் அருமை நண்பர் திரு. R. கிருஷ்ணசாமி ரெட்டியாரும் (உரிமையாளர், சிதம்பா விலாஸ் பஸ் சர்வீஸ், துறையூர்) நானும் இவரை (1949-50) ஆண்டு பல தடவைகளில் காங்கிரசு அலுவலகத்தில் (நரசிங்கம் பேட்டை தெரு, சென்னை-2) பார்த்து உரையாடிய துண்டு. அதன்பிறகு நான் காரைக்குடியில் பணியேற்ற தாலும் (1950-60), அடுத்து திருப்பதியில் பணியேற்ற தாலும் (1960-77) இவரைப் பார்க்கும் பேறு பெற வில்லை. ஆயினும் இவர் காமராசர் அமைச்சரவையில் தொழில் அமைச்சராகச் சேர்ந்து தமிழகம் ஒரு குரலாகப் புகழ்ந்து பாராட்டும் அளவுக்கு உயர்ந்ததையும், பின்னர்

இந்திராகாந்தி அமைச்சரவையில் சீரும் சிறப்புடனும் பணியாற்றியதை இந்தியத் துணைக் கண்டம் முழுவதும் போற்றிப் புகழ்ந்ததையும் அறிந்து மகிழ்ந்ததுண்டு.

இவருடைய திறமையையும் நேர்மையையும் பாராட்டும் வகையில் குடியரசுத் தலைவராகப் பணியாற்றி வருவதை நாம் கண்டு களிக்கின்றோம். நம் அருமை இராஜாஜிக்குப் பிறகு நாற்பதாண்டு காங்கிரசு ஆட்சியில் ஒரு தமிழர் குடியரசுத் தலைவர் பொறுப்பிலிருப்பது தமிழர்கள் அனைவருக்குமே அளவற்ற மகிழ்ச்சியை அளிக்கின்றது. தஞ்சை மாவட்டம் நீர் வளம் நிலவளத்துடன் மனித வள மேம்பாட்டுக்கும் பேர் போனது என்பதை இவரால் நாம் அறிய முடிகின்றது. தமிழகம் முழுவதும் இவர் சீருடனும் சிறப்புடனும் பணியாற்றுவதைக் கண்டு பெருமிதம் அடைகின்றது. இந்தப் புகழ்ச் சிறப்பின் அறிகுறியாக முப்பது சான்றோரைப் பற்றிய இந்த நூலைச் சான்றோராகிய முதல் இந்தியக் குடிமகனுக்கு அன்புப் படையலாக்கிப் பெருமையும் பெருமிதமும் அடைகின்றேன். இதனால் இந்த நூலும் தமிழகத்தில் பெருமையுடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு முப்பது பெரியார்களுடன் யான் கொண்ட தொடர்புகளை நினைவிற்குக்கொணர்ந்து அவை இலக்கியமாவதற்குத் திருவருள் புரிந்த திருவேங்கடத்து ஆயனை வாழ்த்தி வணங்குகின்றேன். இந்நூல் நன் முறையில் வெளிவருவதற்குத் துணையாக இருந்த திருவருளையும் சிந்திக்கின்றேன்,

பெருதற் கரிய பரம்பொருளைப்
பேசற் கரிய ஒளிப்பிழம்பை
மறுவின் மறைகள் புகழ்முதலை
வானோர்க் கமுதூட் டியஇறையை

தொறுவர் மனைதோ றுறுவெண்ணெய்
சுவைத்த முகிலை யெழிலியென்றுந்
துறுமுஞ் சிகரச் சேடமலைச்
சுடரைத் துதித்தி தீமனனே

—சேடமலை பதிற்றுப்பத்தந்தாதி

'வேங்கடம்'
AD-13; (Plot 3354)
அண்ணாநகர்
சென்னை—600 040
24–11–89

ந. சுப்புரெட்டியார்
தொ. பே. 62 115 83

# உள்ளுறை

# 1. தி. மூ. நாராயணசாமி பிள்ளை

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்![1]

எந்தப் பொறுப்பிலிருந்தாலும் நேர்மையைக் கடைப் பிடித்தல், வைணவத்தில் ஆழ்ந்த பற்றுடைமை, ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால்படுதல், பிற சமயங் களில் காழ்ப்பின்றி சமரச நோக்குடைமை, தாய்மொழிப் பற்று, அமைதியான போக்குடைமை, சாதி வெறி யின்மை, நாட்டுப் பற்றுடைமை—இவை யனைத்தும் உருண்டு திரண்டு ஒன்றான தன்மையையுடைய சான் றாளர்தாம் திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளை. வழக்குரைஞர் தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வாழ்க்கையை நடத்தினாலும் பிற பொறுப்புகள்தாம் அவருடைய வாழ்க்கையை மேம்படுத்தின. ஒல்லும்வகை யெல்லாம் நேர்மையாகப் பணியாற்றினமையால் அவர்தம் வாழ்க்கை வளமாக அமைந்தது; அனைவராலும் போற்றப் பெறும் புகழும் அவரை வந்தடைந்தது.

தோன்றில் புகழோடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று.[2]

என்ற வள்ளுவர் வாக்கிற்கும் இலக்கியமாக இவர் நீடிய வாழ்க்கையும் அமைந்தது. திருச்சி மாவட்டக் கழகத்

1. குறள்—131
2. ஷை—236

தலைவர், இந்து அறநிலைய வாரியத் தலைவர், பொதுப் பணியாளர் தேர்வு ஆணையத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் (ஆறு ஆண்டுகள்), தமிழ்நாடு கூட்டுறவு வங்கித் தலைவர் இன்னோரன்ன பல பெரிய பொறுப்புகளை வகித்த பெரியார் இவர். இப் பொறுப்புகளை வகித்தபோது நேரிய போக்கையே கடைப்பிடித்தார். பல்லோர் போற்ற வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்தார். இவர்தம் வாழ்க்கை பிறருக்கு எடுத்துக் காட்டாகவும் அமைந்தது.

1934-இல் நான் முசிறி கழக உயர்நிலைப் பள்ளியில் பள்ளியிறுதி வகுப்பில் (ஆறாவது படிவம்) படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது திரு பிள்ளையவர்கள் திருச்சி மாவட்டக் கழகத் (District Board) தலைவராக இருந்தார். அந்த ஆண்டில் சனவரி என நினைக்கின்றேன்; கழகத் தலைவர் பள்ளியைப் பார்வையிடுவதற்காக வந் திருந்தார். அந்தக் காலத்தில் தலைவர் பார்வையிட வரு கின்றார் என்றால் பள்ளியே கலகலத்து விடும். ஆசிரியர் கள் நல்ல ஆடையில் தோன்றுவார்கள்; வாரக்கணக்கில் முகச்சவரம் செய்து கொள்ளாதிருக்கும் கீழ் வகுப்பு ஆசிரியர்கள் கூட சுத்தமான முகத்துடன் காணப்படுவார் கள். மாணவர்களும் மிகவும் தூய்மையான தோற்றம் அளிப்பார்கள். அக்காலத்தில் கே. ஆர் என வழங்கும் திரு. கே. இராமச்சந்திர அய்யர் என்ற கணித ஆசிரியர் மாணவர்கள் நலனில் அக்கறை காட்டியதால் மிக்க புகழுடன் திகழ்ந்தார். இவருடைய தனிப்பட்ட முயற்சி யினால்தான் மாணவர் விடுதி தொடங்கப்பெற்று மிக நன்முறையில் இயங்கி வந்தது. அதன் காப்பாளர் பொறுப்பும் இவரிடம் இருந்து வந்தது. இந்த ஆசிரியர் என்னை திரு. பிள்ளையவர்களிடம், "சுப்பு நல்ல மாணாக்கன்; படிப்பில் ஆர்வம் மிக்கவன். பள்ளியிலேயே (வகுப்பிலேயே) முதல்வன். இவன் கல்லூரிப் படிப்பைத் தொடங்கினால் மிக்க புகழுடன் திகழ்வான். இவனுக்கு

எந்த உதவி கிடைத்தாலும் தகும்'' என்று அறிமுகப் படுத்தி வைத்தார். இந்த அறிமுகம் திரு. பிள்ளையவர்கள் திருநாடு அலங்கரிக்கும் வரை நாற்பதாண்டுக் காலம் தொடர்ந்து நிகழ்ந்து வந்தது.

இறையருளால் பல இக்கட்டுக்களிடையில் என் கல்லூரிப் படிப்பும் தொடர்ந்தது. பொருளாதாரத் தட்டுப் பாடு இருப்பினும் நிலத்தினை ஒன்றுக்குப் பாதியாக விற்று அந்த ஆண்டுக்குத் தேவையான ரூ. 500/- தயார் செய்து கொண்டு திருச்சிக்கு வந்து விடுவேன். புனித சூசையப்பர் கல்லூரியில் கணிதம், இயற்பியல், வேதியியல் பாடங்களை விருப்பப் பாடங்களாகத் தேர்ந்து எடுத்துக் கொண்டுபடித்தேன். அக்காலத்தில் பிள்ளையவர்கள் புகழ் வாய்ந்த வழக்குரைஞராகத்திகழ்ந்தவர். இவர் அலுவலகம் திருச்சி பெரிய கடை வீதியில் மலைக்கோட்டைக்கருகில் இருந்தது. அடிக்கடி இல்லா விடினும் சில சமயங்களில் திரு பிள்ளையவர்களைப் பார்ப்பதுண்டு. திரு பிள்ளை யவர்கள் திருமண்காப்பு அணிந்த திருமுக மண்டலத் துடனும் நல்ல முகப்பொலிவுடனும் திகழ்வார். என்னை முதுகில் தட்டிக்கொடுத்து ''நீ தானே கே. ஆர் என்பவ ரால் அறிமுகப் படுத்தப்பெற்ற மாணவன். நன்கு படி. ஏதாவது உதவி தேவைப்பட்டால் துணிவாகக் கேள். அடிக்கடி வந்து கொண்டிரு'' என்று அறிவுரை கூறி ஆசீர் வதிப்பார். நானும்அவரைக் காக்கும்கடவுள்திருமாலாகவே எண்ணி தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன். அக் காலத்தில் இவரது அலுவலகத்தில் திரு. M. முத்துசாமி பிள்ளை. திரு செங்கமலம் பிள்ளை என்ற இளைஞர்களும் வழக்குரைஞர்களாகப் பணியாற்றி வந்தவர்கள்.

1939இல் பி. எஸ்சி பட்டம் பெற்றேன். முதல் வகுப்பில் கல்லூரியில் முதல் மாணவனாக (பல்கலைக் கழகத்தில் மூன்றாவது மாணவனாக)த் தேர்ந்தேன். ஓராண்டுக் காலம் உத்தியோக வேட்டை. மூன்று பேர்ச்

சான்றிதழ்கள் இதற்குத் தேவைப்பட்டன. திருச்சியில் மிக்க புகழோங்கி இருந்தவர் சர். டி. தேசிகாச்சாரி. மாவட்ட நீதிமன்றத்துக்கருகில் ஒரு திருமாளிகையில் குடியிருந்தார். இருப்பூர்தித் துறையிலும் பிற பொதுநிறுவனங்களிலும் மிக்கசெல்வாக்குடன் திகழ்ந்தவர். இவரிடம் ஒரு சான்றிதழ் பெற்றேன். அப்போது இருப்பூர்தித் துறையில் பெரிய அலுவலில் இருந்த திரு. நந்திரெட்டியாரிடம் கடிதம் பெற்றுக் காட்டுப்புத்தூர் மிட்டாதார் திரு கே. எஸ். சப்தரிஷி ரெட்டியார் M.L.C. என்ற பெரியவரிடம் மற்றொரு சான்றிதழ் பெற்றேன். திரு. பிள்ளையவர்களிடம் ஒன்றைப் பெற்றேன். முதலாவது பெற்றது கல்லூரி முதல்வருடையது. மூன்று சான்றிதழ்களில் ஒன்று அண்மையில் பெற்றதாக இருத்தல்வேண்டும். திரு. பிள்ளையவர்களின் சான்றிதழை மட்டிலும் புதுப்பித்துக் கொண்டிருந்தேன். இதற்கு உதவியவர் திரு. முத்துசாமி பிள்ளை. இருமுறை பொதுப்பணியாளர் ஆணையத்தின் மூலம் முயன்றேன்; வேலை கிட்டவில்லை. யாராவது பெரியவர்களின் பரிந்துரையின்றி முயல்வதில் பயன் இல்லை என்ற முடிவுக்கு வந்தேன். இந்த முயற்சியையும் கைவிட்டேன்.

1940 மார்ச்சு வாக்கில் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் (சைதாப்பேட்டை) சேர்வதென முடிவு கட்டி விண்ணப்பித்தேன். பல ஆண்டுகள் முயன்றும் இடம் கிடைக்காதவர்களும் உண்டு. முதல் வகுப்பில் தேறியிருந்தமையாலும் கணிதம், அறிவியல் ஆசிரியர் ''பஞ்சம்'' இருந்தமையாலும் உடனே இடம் கிடைத்தது; சேர்ந்து படித்து எல். டி: பட்டமும் பெற்றேன். நான் சைதையில் படிக்கும் போது மாணவர் விடுதியில்தான் தங்கியிருந்தேன் (1940–41). இக்காலத்தில் திரு பிள்ளையவர்கள் இந்து அறநிலையத்துறையில் தலைவராக இருந்தார்; தியாகராய நகரில் குடியிருந்தார். இந்தக் காலத்தில் அவர் தொடர்பு அறாதிருக்கும் பொருட்டு இருமுறை சந்தித்து ஆசி பெற்றேன். திரு பிள்ளையவர்களும் என்னை மறக்

காமல் நினைவு வைத்திருந்தார்கள். இந்தக் காலத்திலும் இவர் வழங்கிய சான்றிதழைப் புதுப்பித்துக் கொண்டேன்.

1941 ஜுன் முதல் புதிதாகத் தொடங்கப் பெற்ற துறையூர் உயர்நிலைப் பள்ளியின் முதல் தலைமையாசிரியரானேன். பதவி பெரிது; ஆனால் ஊதியம் மிகமிகக் குறைவு. 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற பழமொழியை மறைமொழிபோல் பாவித்து ஒன்பது ஆண்டுகள் மிகத் திறமையாகப் பணியாற்றி நற்புகழ் ஈட்டினேன். 1948-49 இல் ஒரு வழக்குபற்றி எனக்குச் சென்னைப் பயணம் அடிக்கடி இருந்து வந்தது. இக்காலத்தில் 'கே.ஆர்' என வழங்கப் பெறும் கே. இராமச்சந்திரய்யர்—என் பள்ளி வாழ்வில் மிகச் சிறு வயதிலே தந்தையை இழந்து பரிதவிக்கும் எனக்கு ஒரு தந்தைபோல் அரவணைத்து ஆதரித்த கணித ஆசிரியர் குளித்தலை உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராக ஓய்வு பெற்று—சென்னையில் தி. நகரில் குடியேறி வேப்பேறி கிறித்தவ மகளிர் உயர்நிலைப் பள்ளி ஒன்றில் கணித ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது பிள்ளையவர்கள் சென்னைப் பொதுப் பணியாளர் ஆணையத்தில் உறுப்பினர் பதவியேற்றுக் கீழ்ப்பாக்கம் ஆர்மஸ் சாலையில் ஒரு திருமாளிகையில் குடியிருந்தார்கள். இது 1948 என்பதாக நினைவு. அக் காலத்தில் சட்டக் கல்லூரியில் பேராசிரியராகவும் துணை முதல்வராகவும்பணியாற்றிய திரு எஸ்.கோவிந்தராஜுலு நாயுடு அவர்களும் இதே சாலையில் குடியிருந்ததாக நினைவு. அவர் இல்லத்திற்கு எதிராகவுள்ள இல்லத்தில் தான் பிள்ளையவர்கள் குடியிருந்தார்கள். திரு.கே.ஆரைப் புருஷகாரமாகக் கொண்டு பிள்ளையவர்களைச் சந்தித்தேன். அக்காலத்தில் தமிழ் வித்துவான் பட்டமும்(1945), பி.ஏ. பட்டமும் (1947) பெற்றிருந்த எனக்கு—தமிழ் எம்.ஏ. படிக்கவேண்டிய எனக்கு—பி.ஏ. படிக்க வேண்டிய

நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இதில் தமிழில் பல்கலைக் கழகத்தில் முதல் மாணவனாகவும் தேறியிருந்தேன்.

திரு பிள்ளையவர்களைச் சந்தித்தபோது 'பச்சையப்பன் கல்லூரியில் ஒரு தனிப் பயிற்சி ஆசிரியர் (Tutor) பதவியாவது பெற ஏற்பாடு செய்யுமாறு' வேண்டினேன். இதனால் கல்லூரியில் பணியாற்றும் வாய்ப்பு ஏற்படும் என்றும், மேலும் எம். ஏ. பயிலவும் பிஎச். டி.க்கு ஆராயவும் வழி ஏற்படும் என்றும் கருதித்தான் இந்த வேண்டுகோள் விடுத்தேன். 1934-முசிறி உயர்நிலைப் பள்ளியில் ஒரு மாணவனாகவும் 1934-39 இல் திருச்சியில் கல்லூரி மாணவனாகவும் பார்த்த என்னை இப்போது (1948) ஓர் உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியனாகக் காண்கின்றார். என் வளர்ச்சியையும் புலமையையும் காண்கின்றார். மகிழ்ச்சியுடன் என்னை வாழ்த்துகின்றார். ''மிஸ்டர் ரெட்டியார், சென்னை வாழ்க்கை வேண்டா. நாட்டுப்புறத்தில் செல்வாக்குடனும் சிறப்புடனும் வாழும் உங்கட்கு நகர வாழ்க்கை வேண்டா; இங்கு வந்த பிறகு சென்னை நகர வாழ்க்கை நரகவாழ்க்கையாக மாறித் தொல்லைப் படுவீர்கள். உணவு கட்டுபாடு (Ration) நடை முறையில் இருக்கும் காலம். ட்யூடர் ஊதியம் உங்கட்குப் போதாது. எம். ஏ.யையும் முடியுங்கள். பிறகு கவனிக்கலாம்.'' என்று அன்புடன் கூறினார்கள், பிள்ளையவர்களின் அறிவுரையை ஏற்று மகிழ்வுடன் இல்லம் திரும்பினேன்.

1950-ஜூலை முதல் எதிர்பாராத விதத்தில் காரைக்குடி அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் பதவி கிடைத்தது, 1951-இல் தமிழ் எம்.ஏ. பட்டமும் பெற்று எல்லா வகையிலும் கல்லூரி வாழ்க்கைக்கு என்னைத் தகுதியாக்கிக் கொண்டேன், இப்பொழுது பிள்ளையவர்கள் பொதுப்பணியாளர் ஆணையத்தின் தலைவரானார்கள். எனக்கு அளவற்ற மகிழ்ச்சி.

ஆனால் இக்காலத்தில் திரு. பிள்ளையவர்களிடம் எந்த வித உதவியையும் பெற வேண்டிய இன்றியமையாமை எனக்கு ஏற்படவில்லை. ஏதோ காரியமாகச் சென்னை வந்த நான் திரு. கே. ஆருடன் பிள்ளையவர்களைச் சந்தித்து ஆசி பெற்றேன்; எனக்குக் கல்லூரியில் அலுவல் கிடைத்தமைபற்றிப் பெரிதும் மகிழ்ந்தார்; மேலும் மேலும் உழைப்பினால் உயர வேண்டும் என வாழ்த்தி யருளினார். தலைப்பாகையுடனும் திருமண் தாங்கிய முகப் பொலிவுடனும் திகழ்ந்த பிள்ளையவர்கள் என்னை வாழ்த்தியதைச் சீமந் நாராயணனே வாழ்த்தியதாக மன நிறைவு கொண்டேன்.

காரைக்குடிக் கல்லூரி வாழ்வு அதிகமான நூல்களைப் படிப்பதற்கும் நூல்களைப் படைப்பதற்கும் வாய்ப்பு களைத் தந்தன. கல்வியியல், கல்வி உளவியல், அணுவியல் துறைகளில் அதிகமான நூல்களைப் பயின்றேன். ‘தமிழ் பயிற்றும் முறை’, ‘அறிவியல் பயிற்றும் முறை’ ‘கல்வி உளவியல்’ ‘மானிட உடல்’, ‘கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி’, ‘அணுவின் ஆக்கம்’, ‘அணுக்கரு பௌதிகம்’ ‘கவிதையநுபவம்’ ‘இல்லற நெறி’ (மருத்துவம்) போன்ற பல துறை நூல்களைப் படைத்துப் பெரும் புகழ் ஈட்டி னேன். என் வாழ்க்கையையும் என் உழைப்பையும் திரும்ப நோக்கும்போது எனக்கே என்னைப்பற்றி ஒருவித பெருமித உணர்வு தோன்றியது. இக்காலத்தில் திரு பிள்ளையவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரானார்கள். இவர்தம் உயர் பதவியைக் கண்டு எனக்குப் பெரு மகிழ்ச்சி ஏற்பட்டது. பிள்ளையவர் களும் என் உழைப்பையும் ஊக்கத்தையும் கண்டு பெரு மகிழ்ச்சியுற்றார்கள். பிற துறைகளில் நான் எழுதிய நூல் கள் யாவும் பிள்ளையவர்களின் கவனத்தைக் கவர்ந்தன. அந்தந்தத் துறையைச் சார்ந்த பேராசிரியர்கள் செய்ய முடியாத பணியை நான் செய்தது பற்றி வியந்தார்கள். தவிர நான் பணியாற்றிய கல்லூரி

யின் பேராசிரியர்கள் என்னை சென்னைப் பல்கலைக் கழகக் கல்வி ஆலோசனைக் குழு (Academic Council) உறுப்பினனாகத் தேர்ந்தெடுத்தார் கள். பல்கலைக் கழகத்தின் கீழிருந்த கல்லூரிகளின் இந்தக் குழு உறுப்பினர்களிடையே நடை பெற்ற பேரவை (Senate)த் தேர்தலிலும் நான் வெற்றி பெற்றுப் பேரவை யின் உறுப்பினனானேன். மூன்றாண்டுக் காலம் உறுப்பினர் பதவி நீடித்தது. இச்செய்தியும் பிள்ளையவர்கட்கு எட்டியது; ஆசிரியர் சமூகத்தினிடையே எனக்குரிய செல்வாக்கும் பிள்ளையவர்களின் கவனத்தைக் கவர்ந் தது.

1958-கோடைவிடுமுறை என நினைக்கின்றேன். பிள்ளையவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்தபோது புகுமுக வகுப்பில் அறிவியல் பாடங்களைத் தமிழில் கற்பிக்கும் வகை முறை களைப்பற்றி ஆராய ஓர் ஆறு வாரக் கருத்தரங்கு நடத்தத் தீர்மானித்து என்னை வகைதுறைவள வல்லு நராக(Resource Person) நியமித்தார்கள். பல்கலைக் கழகத்தில் புகுமுகவகுப்பில் (Pre-university Class) அறிவியல் பாடங்கள் (இயற்பியல், வேதியியல், தாவர இயல், விலங்கியல். நிலஉட்கூற்றியல்) கற்பிக்கும் ஆசிரியர் களும் நானும் சேர்ந்து வகைமுறைகளை ஆராயவேண்டும் என்பது திட்டம். நாங்கள் (1) கலைச் சொல்லாக்கம், (2) பாடங்களில் மாதிரி வகுப்புகள் எடுத்தல் என்ற இரண்டு திசையில் எங்கள் கருத்தரங்கைநடத்திவந்தோம். இந்த முறைகளை நான் இங்கு விவரிப்பது மற்றொன்று விரித்தலில் கொண்டு செலுத்திவிடும்.

எனக்குப் பல்கலைக் கழக விருந்தினார் விடுதியில் உண்டி உறையுள் இவற்றிற்கு ஏற்பாடாகி இருந்தது. திரு. பிள்ளையவர்கள் நாடோறும் காலைச் சிற்றுண்டிக் குப் பிறகு சுமார் 8.30க்கு தம் இல்லத்திற்கு வந்து தம்மிடம் அளவிளாவிக் கொண்டிருக்குமாறு பணித்தார்.

அங்ஙனமே நானும் போய்வந்து கொண்டிருந்தேன். இங்ஙனம்பழகி வரும்போது அவரது அளவற்ற தமிழ்ப் பற்று, சமயப்பற்று, சமரசநோக்கு, எவ்வெவ்வாறெல்லாம் தமிழ்மொழியிடம் பிற கலைச் செல்வங்களையெல்லாம் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பவை தலைதூக்கி நின்றன. இக்காலத்தில் மாணாக்கர்களின் கல்வியீடுபாடு குறைந்து வருவதன் காரணம், அவர்களிடம் ஒழுங்குமுறை சீர் குலைந்து வருவதற் குரிய காரணம் போன்ற பல்வேறு செய்திகள் எங்கள் பேச்சில் இடம் பெறும். படாடோபமின்றி, அதிக விளம்பரமின்றி ஆக்க வேலைகளில் ஈடுபட வேண்டும் என்ற கொள்கையுடையவர் என்பதை அவரிடம் காண முடிந்தது. என்னை அதிகம் படிக்கவேண்டும், அதிகம் எழுதவேண்டும், அரசியலில் ஈடுபடக் கூடாது, நாம் சமூகத்திடம் பெறும் ஊதியத்திற்கேற்ப நம் தொண்டு சமூகத்திற்குப் போய்ச் சேரவேண்டும், நம்முடைய பணிகளை இறையுணர்வுடன் ஆற்றி வரவேண்டும் என்பன போன்ற அறிவுரைகளைத் தருவார். இந்த அறிவுரைகள் என்னை ஓரளவு நன்னெறிகளில், ஆக்கப் பணிகளில் கொண்டு செலுத்தி வருகின்றன என்பதை இன்றும் நினைந்து பார்க்கின்றேன். காலை 9-45 வரை இந்தச் சல்லாபம் நடைபெற்று வரும், 9-55க்குக் காரில் ஏறுவார்; என்னையும் ஏற்றிக் கொள்வார்; தாம் அலுவலகத்தில் இறங்கிக் கொண்டு என்னைக் கருத் தரங்கம் நடைபெறும் இடத்தில் இறக்கிவிடச் செய்வார்.

ஒருநாள் திரு. பிள்ளையவர்களிடம் பிஎச்.டி பட்டம் பெறவேண்டிய என் ஆர்வத்தைத் தெரிவித்தேன். எந்த முறையிலும் என்னைப் போன்ற தனியார் அப்பட்டத்தின் பொருட்டு ஆய்வதற்கு விதிமுறைகள் இடர்பாடுகளாக இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டினேன். ஓர் இரண்டாண்டிற்குத் தற்காலிகமாகவாவது இந்தப் பல்கலைக் கழகத்தில் பணிபுரிய வாய்ப்பளித்தால் நான் அழகப்பர் ஆசிரியர்க் கல்லூரியில் பணித்துறை மீள்

உரிமையுடன் (Lien) விடுப்பு வாங்கிக்கொண்டு வரமுடியும் என்பதையும் தெரிவித்தேன். அப்போது அவரது ஒரு சாலை மாணாக்கரும் திருச்சி புனித சூசையப்பர் கல்லூரி யின் பொருளாதாரத் துறையின் பேராசிரியருமாகிய திரு. இருதயசாமி ரெட்டியார் அவர்களும் உடன் இருந்தார்கள்; அவரும் என் வேண்டுகோளுக்குப் பரிந்துரை செய்தார்கள். என்ன காரணத்தாலோ இந்த என் வேண்டுகோளை திரு. பிள்ளையவர்களால் நிறை வேற்றி வைக்க முடியவில்லை. தட்டிக் கழிக்கும் போக்குடையவர் அல்லர் என்பதை நான் நன்கு அறிவேன். அவரிடம் உதவி பெறும் ஊழ்இல்லை என்பதை நான் நினைத்துக் கொண்டேன். சந்தர்ப்பம், சூழ்நிலை சரியாக அமையவில்லை போலும் என்பதை ஊகித்துக் கொண்டேன். 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' (புறம்—192) என்ற சங்கப் புலவர் வாக்கையும்,

ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்டு ஒன்றாகும்;
அன்றி அதுவரினும் வந்தெய்தும்; ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்;
எனையாளும் ஈசன் செயல்[3]

என்ற ஔவைப் ப்பாட்டியின் வாக்கையும் நினைந்து அமைதி பெறுவேன்.

கருத்தரங்க ஆய்வில் கலந்துகொண்ட விரிவுரையாளர் களில் தம் திறமையால் என் உள்ளத்தை அதிகம் கவர்ந்தவர் திரு K. அரங்கசாமி அய்யங்கார் என்ற தாவர இயல் விரிவுரையாளர். ஒரு மாதிரிப் பாடத்தை மிகவும் அற்புதமாகக் கற்பித்தார். நாற்பது வயதைத் தாண்டியவர். பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் வாய்ப்பிருந்தும் பிஎச்.டி பெறாதிருந்தார். குடும்பச் சூழல் ஆய்வில் கருத்தைச் செலுத்த முடியாமல் தவிர்த்தது போலும். ஒருநாள் பிள்ளை அவர்களிடம் இவர்

3. நல்வழி—27

திறமையை எடுத்துக் கூறினேன். மாதிரிப் பாடம் ஒன்றைக் கவனித்தால் இவர்தம் திறமையை அறிந்து கொள்ளலாம் என்றேன். இதற்கு ஒரு நாள் குறிக்கப் பெற்றது; பிள்ளையவர்களும் இதனை வந்து கவனித்தார் கள். இத்தகையவர்கள் பலர் இருந்தால் தமிழ்மூலம் அற்புதமாக கற்பிக்கலாம் என்று சொல்லிப் போனார்கள். மறுநாள் காலையில் இவர் பேச்சு பிள்ளையவர்கள் திருமாளிகையில் எழுந்தபோது, 'ரீடராக இருக்க வேண்டியவர்கள் விரிவுரையாளராகவே கிடக்கின்றார்கள். பாவம், குடும்பச் சூழ்நிலை டாக்டர் பட்டம் வாங்க முடியாது செய்கின்றது போலும்!' என்று சொல்லி வைத்தேன். இவருக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்ற கருத்து இவர்தம் பேச்சில் குறிப்பாகத் தெரிந்தது.

பிறிதொரு சமயம் பல தமிழறிஞர்களைப்பற்றியபேச்சு எங்களிடையே எழுந்தது. விபுலானந்தர்அடிகள், பண்டித மணி, கா. சுப்பிரமணியப் பிள்ளை, நாவலர் ச. சோம சுந்தர பாரதியார் போன்றவர்கள் பணியாற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அத்தகைய பெரியோர்கள் இல்லாத நிலை அருகி வருகின்றது என்றார்கள். இந்தச் சமயத்தில் நான் வீர. உலக ஊழியனார் பெயரைக் குறிப்பிட்டேன். இப்புலவர் நாட்டார் மாணவர் என்றும், ஆழ்ந்த புலமையுடையவர் என்றும், இசைஞானமும் நல்ல குரலும் பெற்றிருப்பதால் இவரது சொற்பொழிகள் கேட்போர் கவனத்தை ஈர்க்கக் கூடியவை என்றும், பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை உரையுடன் இவருக்கு மனப்பாடம் என்றும் குறிப்பிட்டேன். இவர் நாமக்கல்லில் தமிழாசிரியராக இருந்த பொழுது இவர் புலமையை நன்கு அறிந்திருந்தேன் என்றும், நான் வித்துவான் தேர்வுக்குப் படித்தபொழுது (1944—45) பொருநராற்றுப் படையை கையில் நூலொன்றும் இன்றி எனக்குப் பாடம் சொன்னது என்னை வியக்க வைத்தது என்றும் தெரிவித்தேன்.

இவரது புலமையை நன்கு அறிந்த திரு. இராமசாமி கவுண்டர் (முதல்வர், நகராண்மைக் கழகக் கல்லூரி சேலம்) இவரைத் தம் கல்லூரிக்கு விரிவுரையளராாக அமர்த்திக் கொண்டார் என்றும் குறிப்பிட்டேன். இத்தகைய பெரும் புலமை மிக்கவர் ஒருவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்ற வாய்ப்பு பெற்றால் பல்கலைக் கழகத்திற்குப் பெருமை என்றும் பேச்சோடு பேச்சாகச் சொல்லி வைத்தேன். இந்தக் காலத்தில்தான் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைமைப் பேராசிரியராகப் பணியாற்றிய திரு. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் வந்திருந்தார்கள். இருவரும் விருந்தினர் மாளிகையில் சிற்றுண்டி உண்ட போது தம்மை இப்பல்கலைக் கழகத்தில் டாக்டர்ஏ. சி. செட்டியார் இருந்த இடத்தில் (திரு.ஏ.சி. செட்டியார் அப்போது ஏதோ கருத்து மாறுபாட்டால் பதவியி லிருந்து விலகி இருந்தார், நியமிக்கலாம் என்று கருதித் தம்மை துணை வேந்தர் அழைத்திருப்பதாகவும், அதன் பொருட்டே தாம் வந்திருப்பதாகவும் தெரிவித்தார். ஒன்றிரண்டு மாதங்களில் நியமனமும் பெற்றார். இப்படிப் பிள்ளையவர்கள். தமிழ்த்துறையை நல்லாசிரியர்களால் வளமாக்கினார் அப்பொழுது காரைக்குடியில் எனக்குப் பேராசிரியர் பதவி வரும் நிலையில் இருந்தது.

திரு. தி· மூ. நாராயணசாமிபிள்ளை தம்முடைய துணை வேந்தர் பதவிக்காலம் முடிந்ததும் திருச்சி சென்று விட்டார். 1960-மார்ச்சுத் திங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் முதன்முதலாகத் தமிழ்த் துறையை தொடங்க நினைத்து விரிவுரையாளர் பதவிக்கு விளம்பரம் செய்திருந்தார்கள். காரைக்குடியில் அப்பொழுது பேராசிரியர் பதவி எனக்குத் தரப் பெற்றிருந்தது (1958-முதல்) காரைக்குடியில் பேராசிரியர் ஊதியம் 200-500 என்றிருந்தது. ஆனால் அது உயர்த்தப்படும் திட்டமும் ஆலோசனையில் இருந்தது. திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் திட்டம் 250-500 என்றி

ருந்தது. இதுவும் உயர்த்தப்படலாம் என்று நினைத்து தான் திருப்பதிக்கு விண்ணப்பம் அனுப்பினேன். இதற் குரிய பேட்டி (Interview) சென்னையில் துணை வேந்தர் எஸ். கோவிந்தரசஜுலு நாயுடு இல்லத்தில் (ஆர்ம்ஸ் சாலை, கீழ்ப்பாக்கம்) நடைபெற்றது. இதற்குப் பதினெட்டு பேர் விண்ணப்பித்திருந்தார்கள். வல்லுநர் குழுவில் திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளையும் டாக்டர் மொ. அ. துரை அரங்கனாரும் (அப்போது ரீடர், சென்னைப் பல்கலைக்கழகம்) இடம் பெற்றிருந்தனர்.

பதினேழு பேரின் பேட்டி முடிந்த பிறகு இறுதியாக என்னை அழைத்தார்கள். பேட்டியில் கேட்கப் பெற்ற வினாக்கள், அவற்றிற்கு யான் அளித்த மறுமொழிகள், என் வெளியீடுகள் (ஐந்து—ஐந்தும் தரமானவை) Heisenberg இன் Nuclear physics ஐ மொழி பெயர்த்து சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றமை—இவை யெல்லாம் எனக்கு பலத்தைத் தந்தன என்று கருதினேன், ஏனையோருக்கு இத் தகுதி இல்லை. எல்லோரும் இளைஞர்கள். (முப்பது வயதிற்குக் குறைந்தவர்கள்); நான் நாற்பது அகவையைத் தாண்டியவன் (43). பேட்டி யின் இறுதியில் திரு பிள்ளையவர்கள் என்னை வைத்துக் கொண்டே துணை வேந்தரிடம் ''திரு ரெட்டியார் நல்ல புலமையுடையவர்; கடுமையான உழைப்பாளி. இவருக்கு இந்த வேலை மிகச் சிறியது. ரீடராகவாவது இருக்க வேண்டியவர். பிஎச். டி. க்குப் பதிவுபெற வழி இல்லாது திண்டாடுகின்றார். திருப்பதி இதற்கு நல்ல சூழ் நிலையை தரும் என்று கருதுகின்றேன். திருப்பதியில் தமிழ்த் துறையை முதுகலை ஏற்படுத்தும் முறை ஆய்வுபட்டங்களுக்கு வழிகாணல் முதலியவற்றை வளர்ப்பதற்குப் பெருந்துணை புரிவார். இவரை எடுத்துக் கொள்வீராகில் பல்கலைக் கழகத்திற்குப் பேரும் புகழும் ஈட்டித் தருவார்....'' என்றெல்லாம் சொன்னார். நானும் சில வினாக்களை விடுக்க

இசைவு பெற்று, ''நான் வந்து சேர்ந்தால் தமிழ்த் துறையைத் தனியாக வைத்திருப்பீர்களா? தனியாக ஒரே விரிவுரையாளர் இருப்பதால் அதனை தெலுங்கு அல்லது வடமொழித் துறையுடன் இணைப் பீர்களா? வீடு கிடைக்குமா? நான் நடுத்தர வயது டையவன்; பேராசிரியர் பதவியிலிருப்பவன். சில ஆண்டு களில் முதல்வர் பதவி கிடைத்தாலும் கிடைக்கும். அதனால்தான் கவலைப்பட்டு இந்த வினாக்களை விடுத் தேன். மன்னித்தருளக'' என்று கூறினேன். துணை வேந்தர், ''வந்து சேர்க; எல்லா வசதிகளும் வாய்ப்பு களும் உங்கட்குக் கிடைக்கும்.'' என்று கூறினார். இதனை இன்று நான் வரலாற்றுப் புகழ் பெற்ற பேட்டியாகக் கருதுகின்றேன். ஏனென்றால், பேட்டி நடைபெறும் போதே நியமனம் உறுதி என்பது வெளிப் படையாகத் தெரிந்தது; வேலைக்கு விண்ணப்பம் போட்டவருக்கே வினாக்கள் விடுக்கும் வாய்ப்பும் கிடைத்தது.

திரு. தி.மூ. நாராயணசாமி பிள்ளையை திருவானைக்கா ஜம்புகேசுவரர் திருக்கோயில் திருப்பணிக் குழுவிற்குத் தலைவராகவும், சர். A. இராமசாமி முதலியாரை திருவரங்கம் திருக்கோயில் திருப்பணிக் குழுவின் தலைவ ராகவும் நியமனம் பெற்றதைச் செய்தித்தாள் மூலம் அறிந்தேன். ஜம்புகேசுவரம் திருப்பணி முடிந்து குட முழுக்கு விழாவின்போது ஒரு மலர் வெளியிட நினைத்து திரு. ச. தண்டபாணி தேசிகரைப் பதிப்பாசிரியராக நியமித்தார் திரு பிள்ளையவர்கள். திரு தேசிகர் ''திரு ரெட்டியார் அவர்கட்கு, வணக்கம். திருபிள்ளையவர்கள் உங்கள் கட்டுரையொன்று மலரில் கட்டாயம் இடம் பெற வேண்டும் என்று விரும்புகின்றார்கள். வைணவம் பற்றி எழுதவேண்டும் என்று விரும்புகின்றார்கள். காலம் குறைவாக இருப்பினும், சிரமம் கருதாது, தவறாது கட்டுரை விரைந்து அனுப்புக'' என்று எழுதியிருந்தார்கள். நம்மாழ்வாரின் தத்துவம் பற்றி ஆய்ந்து டாக்டர் பட்டம்

பெற்ற சமயம் அது. ஆழ்வார் பாசுரங்களை அடிப்படையாகக் கொண்டு பல கட்டுரைகள் திருமலை-திருப்பதி தேவஸ்தானம் வெளியிட்டு வரும் 'சப்தகிரி' (அப்போது இப் பெயர் இல்லை) என்ற திங்கள் இதழில் வெளி வந்து கொண்டிருந்தன. இதனால் 'வைணவம்' பற்றி ஒரு பெரிய, ஆனால் அரிய, கட்டுரையொன்றை ஒரு வாரத்தில் அனுப்பிவைத்தேன். மலர் வெளி வந்த பிறகு என் கட்டுரையே மலரின் கண்ணாக—படிப்பவர்கள் பயன் பெறும் முறையில்—அமைந்துள்ளது என்று அறிஞர் பலர் பாராட்டியதாகத் திரு தண்டபாணி தேசிகர் எழுதியிருந்தார்கள். இக் கருத்தையே பெருவள நல்லூர் க. பத்மநாப ரெட்டியாரும் எழுதியிருந்தார்; நேரில் பார்த்த போதும் புகழ் மாலை சூட்டினார். திருப்பதியில் என் முன்னேற்றத்தைப் பதம் பார்ப்பதற்காகவே என்னைப் பிள்ளையவர்கள் கட்டுரை வரையுமாறு பணித்தார்கள் என்று எனக்கு இப்போது தோன்றுகின்றது. அவர் உள்ளம் உகக்குமாறு கட்டுரை அமைந்து விட்டதை அறிந்து மகிழ்கின்றேன்.

1967-இல் தமிழ்ச் செல்வி, செந்தமிழ்ச் செல்வி, அணுக்கதிர், கலைக் கதிர், கழகத்தின் 1008-வது வெளியீட்டு விழா மலர், பேராசிரியர் ஆர். கே. விசுவநாதன் (அண்ணாமலைப் பல்கலைக் கழக இயற்பியல் பேராசிரியர்) அவர்களின் மணி விழா மலர் ஆகியவற்றில் வெளியான பத்து அறிவியல் கட்டுரைகளைத் (பல் வேறு துறைகளைச்சேர்ந்தவை) தொகுத்து, 'அறிவியல் விருந்து' என்ற தலைப்பில் நூல் வடிவம் பெறச் செய்தேன். இந்த நூலை,

பங்கயம் பூத்த நீலமால் வரைபோல்
பணிமிசை பொலியரங்கேசன்
துங்கமார் பாதம் மறந்திடா வுளத்தோன்
தூயநல் அறநெறி காத்து

மங்கலப் புகழைப் பெற்றவன்; வேழ
வனத்திருப் பணிபுரி அன்பின்
பங்கமில் நாரா யணப்பெரு நம்பி
பதமலர்க் குரியதிந் நூலே.
(வேழவனம்—திருவானைக்கா)

என்ற பாடல்மூலம் திரு பிள்ளையவர்கட்கு அன்புப் படையலாக்கி மகிழ்ந்தேன். என் வாழ்நாளில் அன்பும் பரிவும் ஆதரவும் காட்டி வந்த தந்தையனைய பிள்ளையவர்கட்கு அன்புப் படையலாக்கினது எனக்கு மன நிறைவைத் தருகின்றது.

1969-மே வரையிலும் திருப்பதி பல்கலைக்கழகம் தமிழ் வளர்ச்சி குறித்து மானியம் பெற அனுப்பிய விண்ணப்பத்தின்மீது அதனைத் தொடர்ந்து பல நினைவூட்டுக் கடிதங்கள் அனுப்பியும் ஒன்பதாண்டுகள் தமிழக அரசுக்கு அடியேன் காவடி எடுத்தும் தமிழக அரசு எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. பேரறிஞர் அண்ணா கோப்புகளில் பல உடன்பாட்டுக் குறிப்புகள் எழுதியும் அரசு நிர்வாக இயந்திரம் இயங்கவில்லை. நானும் அலுத்துப் போனேன்; மனத்தளர்வுற்றேன். இந்த நிலையில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை தலைவர் பதவிக்கான விளம்பரம் வந்தது. என்மீது அன்பும் பரிவும் கொண்டு ஆதரவு அளித்து வந்த திரு C.V.CT.V. வேங்கடாசலம் செட்டியார் அவர்கட்கும் (செயலர், அழகப்பர் அறம்) திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளையவர்கட்கும் கடிதங்கள் எழுதி என்னை விண்ணப்பிக்காது அழைப்பின்மூலம் ஆணை பிறப்பிக்க ஏற்பாடு செய்யுமாறு கேட்டிருந்தேன். அவர்கள் இருவரும் விண்ணப்பம் அனுப்புமாறு பணித்தார்கள்; ஆவன செய்வதாகவும் உறுதி கூறினார்கள். ''நான் இனி தமிழகத்திற்கு எந்தபதவிக்காகவும் விண்ணப்பிப்பதில்லை'' என்று எடுத்த சூளுரைக்கு மாறாக விண்ணப்பம் அனுப்பினேன். திரு. பிள்ளையவர்கள் மூன்று நாட்கள் தங்குவதற்கேற்ற வசதிகளுடன் சென்னைக்கு வருமாறு எழுதியிருந்தார்கள்.

நானும் வந்தேன். இரண்டு மூன்று பெரியார்களிடம் என்னை இட்டுச் சென்று அவர்கட்கு அறிமுகம் செய்து வைத்து எனக்குப் பதவி கிடைக்கச் செய்ய வேண்டினார்கள். ஆனால் திரு முத்தையவேளிடம் என்னை இட்டுச் செல்லவில்லை. அதற்குக் காரணம் ஏழுமலையானுக்கே வெளிச்சம்.

இந்த ஆண்டு ஏப்பிரல்—மே மாதம் பேட்டி நடைபெற்றது. வேறு பல்கலைக் கழகங்களில் இருப்பது போன்று வல்லுநர் குழுவிற்கு அண்ணாமலைப் பல்கலை கழகத்தில் இடம் இல்லை. நியமனம் செய்வதற்கென்றே ஐவர் அடங்கிய நிரந்தரக் குழு ஒன்று இருந்தது. அதில் தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடிவேல் அவர்களும் இருந்தார்கள். அப்பொழுது பேராசிரியர் ஆதிநாராயணா என்பவர் துணைவேந்தராக இருந்ததாக நினைவு. இந்தக் குழுவிற்கு முத்தையவேள்தான் தலைவர். இரண்டு நாள் பேட்டி நடைபெற்றது. இருபதிற்கு மேற்பட்ட விண்ணப்பங்கள் வந்திருந்தன. எனக்குரிய பேட்டி இரண்டாவது நாள் நடைபெற்றது. அன்று முத்தையவேள் குழுவில் இல்லை; ஏதோ அவசர காரியமாக வெளியூர் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டதாகப் பேசிக் கொண்டார்கள். பேட்டிக்கு வந்தவர்கள் என் அநுபவம், வெளியிட்ட ஆய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை, வெளியிட்ட பல்வேறு துறையைச் சார்ந்த முப்பத்தாறு நூல்கள் இவற்றைக் கண்டு எனக்குத் தான் இப்பதவி கிடைக்கும் என்று கூறினார்கள். ஆனால் ஆணை கைக்குக் கிடைத்து அதன்படி பணியில் அமரும் வரை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பொறுத்தவரை எதனையும் உறுதியாகச் சொல்ல முடியாது என்றும் சொன்னார்கள். கிடைக்கும் போலிருந்து ஏமாற்றம் அடைந்தவர்கள் பலர் என்றும் கூறிச் சிரித்தார்கள். 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' (புறம்—192) என்ற ஆன்றோர் வாக்கை நினைத்துக் கொண்டேன்.

பேட்டி நன்முறையில் நடைபெற்றது. குழு கேட்ட வினாக்கள், அவற்றிற்கு நான் மறுமொழி அளித்த முறை, நான் கொண்டு சென்ற 36 நூல்கள், ஐம்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் இவை எனக்குச் சாதகமாக இருப்பன போல் தோன்றின. பேட்டி முடிந்து குழு கலையும்போது என்னை வெளியில் கண்ட திரு நெ. து. சுந்தரவடிவேலு என்னைக் கை குலுக்கினார். நானும் இது கிடைப்பதற்கான அறிகுறி என்றே கருதினேன். இரண்டு திங்கள் கழிந்தும் எந்தவித தகவலும் இல்லை. ஒருநாள் சென்னை வந்து திரு முத்தையவேளை அவர் திருமாளிகையில் சந்தித்தேன். அவரது விருந்தோம்பல் முறை, கையைத் தோளின்மீது போட்டுக் கொண்டு அன்பாகவும் ஆதரத்தோடும் பேசிய முறை, துறையூர் பக்கம் சில அன்பர்களின் பெயர்களைச் சொல்லி அவர்கள் பற்றி உசாவிய முறை இவையெல்லாம் என்னை வியக்கச் செய்தன; திக்குமுக்காடவும் செய்தன. தாம் இதை அவசியம் கவனிப்பதாக விடை கொடுத்தனுப்பினார். பிறகு எந்தத் தகவலும் இல்லை. சூளுரைக்கு மாறாக நான் விண்ணப்பித்தது தவறு என்பதை என் உள்ளம் உறுத்தியது. ஏழுமலையான் தடுத்து ஆட்கொள்வான் என்பதை அப்போது அறியாவிடினும் அடுத்த ஆண்டு அறிந்து கொண்டேன். ஓராண்டுவரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அந்தப் பேராசிரியர் இடத்தை நிரப்பாமல் வைத்திருந்து அடுத்த ஆண்டு அழைப்பின் மூலம் டாக்டர் வ. சுப. மாணிக்கத்தை நியமனம் செய்தார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்ற வாய்ப்பு இல்லையெனினும் திரு முத்தையவேளின் உயர்ப் பண்புகளையெல்லாம் நேரில் அறிந்து கொள்ள வாய்ப்பு கிடைத்ததால் மனம் நிறைவு பெற்றேன்.

நான் திருப்பதியில் பணியாற்றத் தொடங்கிய நாள் முதல் டாக்டர் மு. வரதராசன் (அப்போது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்) திருவேங்கடவன்

பல்கலைக் கழகத் தமிழ்ப் பாட நூல் குழுவின் (Board of Studies in Tamil) தலைவராக இருந்து வந்தார். ஒரு பல்கலைக் கழகப் பேராசிரியரே குழுவின் தலைவராக இருக்க வேண்டுமென்பது அப்போதைய விதி. நான் 1970—முதல் ரீடராகவும் துறைத் தலைவராகவும் ஆன பிறகும் கூட இந்த விதி மாற்றப் பெறவில்லை (1975-ல் டாக்டர் எஸ். சச்சிதானந்த மூர்த்தியவர்கள் துணை வேந்தராக நியமனம் பெற்ற பிறகு இந்த விதி மாற்றப் பெற்றது. நான் குழுவின் தலைவரானேன்), டாக்டர் மு.வ. திருநாடு அலங்கரித்தார் (1974). குழுவின் காலம் முடிய இன்னும் ஓராண்டு உள்ளது. திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளை பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பாடக் குழுவில் தலைவராக இருந்தமையைக் கூறி அவரை ஓராண்டுக் காலத்திற்குக் குழுவின் தலைவராக நியமிக்குமாறு பல்கலைக் கழகத் திற்குப் பரிந்துரைத்தேன். துணைவேந்தர் டாக்டர் D. ஜகந்நாதரெட்டி அவர்களையும் பார்த்துப் பேசினேன். என் விருப்பப்படியே திரு. பிள்ளையவர்கள் குழுவின் தலைவராக நியமனம் பெற்றார்கள். பல்லாண்டுக் காலம் பல பொறுப்புக்களில் இருந்த திரு பிள்ளையவர்களால் என்னை ஒரு நல்ல பதவியில் அமர்த்த முடியவில்லை; இப்படிச் சொல்வதைவிட எனக்கு அப் பெருமகனாரின் உதவியைப் பெறும் ஊழ் இல்லை என்று சொல்லுவது பொருந்தும். ஆனால் அப்பெருமானுக்கு உதவுவதற்கு சிறியேனாகிய என்னால் முடிந்தது; இப்படிச் சொல்லு வதைவிட திருவேங்கடவன் திருவருள் எனக்குத் துணை நின்றதால்—ஏன்? அவரிடம் அவ்வருள் பாய்ந்ததால்—அவர் ஏழுமலையானைச் சேவிக்கும் பேறு பெற்றார் என்று சொல்லலாம்.

குழுவின் கூட்டத்திற்கு நாள் குறிக்கப் பெற்றது. திரு பிள்ளையவர்கள் தாம் வரும் இருப்பூர்தி பற்றிய விவரங் கள் குறித்து எழுதியிருந்தார்கள். வயது ஏறியதன் காரண

மாக உடல்நிலை மிகவும் தளர்ந்திருந்தது. ஓர் ஆள் துணையுடன்தான் வந்திருந்தார்கள். நானும் திரு P. சௌரிராசனும் நிலையத்திற்குப் போயிருந்தோம் அவரை வரவேற்க. பல்கலைக்கழக விருந்தினர் மாளிகை யின் கட்டட வேலை பூர்த்தியடையாததால் திரு பிள்ளை யவர்களை பீமா விடுதியில் (காந்தி சாலையிலுள்ளது) இடம் பிடித்து அதில் தங்க வைத்தோம். மாடிப்படி ஏறு வதில் கூட சற்றுச் சிரமப்பட்டார். எனக்கு இதைப் பார்ப் பதற்கு மிகவும் வருத்தமாக இருந்தது. அறையை அடைந் ததும் பணப்பையைத் தவற விட்டதை அறிந்தார். ரூ300/- அதில் இருந்ததாம். எவ்வளவோ முயற்சி எடுத்தும் அது கிடைக்கவில்லை. மறுநாள் முற்பகல் பாடத்திட்டக் குழுவின் கூட்டம் முடிந்தது. குழுவினருக்குப் பீமாவில் விருந்தொன்று கொடுத்தேன். திரு பிள்ளையவர்கள் அப்பளம், ரசஞ்சாதம், பாயசம் இவற்றைத் தவிர எதை யும் உண்ணவில்லை. உணவு முறையில் மிகக் கவனமாக இருப்பதைக் கண்டேன். அன்று மாலை ஓய்வு.

மறுநாள் காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு சிற்றுந்தை (Van) வாடகைக்கு அமர்த்திக்கொண்டு ஏழுமலையானைத் தரிசிக்கச் சென்றோம். சேவை மிக நன்றாக அமைந்தது. திரு பிள்ளையவர்கள் இறையநுபவத்தில் நன்கு தோய்ந்து விட்டார்கள்; தம்மை மறந்த நிலையில் வேங்கட வாணனைச் சேவித்தார்கள். பகலுணவிற்கு விடுதிக்குத் திரும்பி விட்டோம். உணவிற்குப் பிறகு ஓய்வு. மாலை 6- மணிக்கு இருப்பூர்தியில் அனுப்பி வைத்தோம். திருப்பதி பயணம், ஏழுமலையானின் சேவை— இவற்றால் பெற்ற மனநிறைவோடு ஊர் திரும்பினார்கள்.

  

இதன் பிறகு நான் சென்னைக்கு வரும் போதெல்லாம் என் அரிய நண்பர் திரு அரங்கசாமி ரெட்டியாரைப் பார்க்க சென்னை காஸ்மாபாலிடன் விடுதிக்குச் செல்வ

துண்டு. அப்போதெல்லாம் சில சமயம் திரு பிள்ளையவர்களையும் அங்குக் காண்பேன். அளவளாவுவேன். 1977-அக்டோபரில் ஓய்வு பெற்ற பிறகு மூன்று மாதம் திருப்பதியில் தங்கியிருந்தேன். 1978-சனவரி 14தி-முதல் சென்னையில் குடியேறினேன். இந்த ஆண்டு பிப்பிரவரி முதல் கலைக் களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாளராக நியமனம் பெற்றேன். பதினைந்து மாதங்கள் இப்பணியில் இருந்தேன். அதன் பிறகு அத்திட்டம் கைவிடப் பெற்றது. அலுவலின்றி சும்மா இருக்கின்றேன். இக்காலத்தில்தான் திரு பிள்ளையவர்கள் திருச்சியில் இருந்த போது திருநாடு அலங்கரித்த செய்தியைச் செய்தித்தாள் மூலம் அறிந்து வருந்தினேன். அவருடைய அருமைத் திரு மகன் கேப்டன் T. N. இராமசாமிக்கு இரங்கல் கடிதம் எழுதி அவருடைய துக்கத்தைப் பகிர்ந்து கொண்டேன். திரு பிள்ளையவர்கள் வைகுந்தத்தில் நித்தியசூரிகளுடனும் முக்தர்களுடனும் திருவாய்மொழி காலட்சேபம் கேட்டு மகிழ்ந்திருப்பார்கள் என்று என் மனம் இப்போது எண்ணுகின்றது.

## 2. மறைத்திரு. எஸ். ஜெரோம் டி' சௌசா

முற்பிறப்பில் நான் செய்த தவப் பயனால் என் கல்லூரிப் படிப்பு திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் தொடங்கியது. அக்கல்லூரியில் பெற்ற ஒழுங்கு முறை இரண்டாவது இயற்கைபோல் என்னுள் படிந்து இன்றளவும் நிலைபெற்று நிற்கின்றது. இந்த ஒழுங்கு முறை என் வாழ்வு முழுதும் ஒளிகாட்டிக் கொண்டு வந்தமையால், பெரியோர்களின் துணையின்றி, பரிந்துரை செய்ய ஒருவருமின்றி, என் உழைப்பினாலேயே ஒருவகையில் ஏதோ முன்னேற்றப்பாதையில் நடந்து வந்து ஓய்வு பெற்றுப் 13 ஆண்டுகள் கழித்து என் வாழ்க்கை அமைந்தது பற்றிப் பின்னோக்கிச் சிந்திக்கின்றேன். இதனால் சில நினைவுகள் மலர்கின்றன! 'தந்தையொடு கல்வி போம்', 'தாதா எனில் கல்விதானகலும்' என்ற ஆன்றோர் வாக்குகளின்படி தந்தையில்லாவிடில் கல்வியில் முன்னேற்றம் இல்லாது போய்விடும். மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையை இழந்த என் நிலை என்ன ஆகும்? அதுவும் இளமையில் வறுமையும் சேர்ந்து கொண்டால் சொல்ல வேண்டா. 'வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்' (கலி-10) என்ற கலித்தொகை அடியை நினைத்தாலே இவ்வுண்மை தெளிவாகும். பாலை நிலத்து மரத்தின் கிளைகள் வாடியிருப்பதற்கு இளமையில் வறுமையால் வாடும் ஒருவனோடு ஒப்பிடுகின்றார் பாலைபாடிய பெருங்கடுங்கோ. யான் இளமையில் பட்ட துன்பங்களைப் 'பன்னியுரைக்கில் பாரதமாம்.'

ஆனால் இறையருளால் துணிவு மிக்க என் அன்னை பல இன்னல்கட்கும் இடையில் சிறிதும் தளராது 'அம்மையாக' இருந்து என்னை வளர்த்து 'அப்பனாக' இருந்து கல்வி பயிற்றுவித்து, 'அம்மையும் அப்பனுமாக' இருந்து எனக்கு எல்லா நலன்களையும் அருளியதால் என் உயர் கல்வி ஓரளவில் வெற்றியுடன் நிறைவு பெற்றது. இறையருளால் அவர்கள் என் நாற்பத்து மூன்று அகவை வரை உயிரோடு இருந்து என் வளர்ச்சியையும் ஈட்டிவரும் நற்பெயரையும் கண்டு மகிழ்ந்தார்கள். அப்போது நான் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் கல்லூரியில் பேராசிரிய னாகப் பணி புரிந்து வந்த காலம். ஏழாண்டுகள் கடுமை யாக உழைத்து 'தமிழ் பயிற்றும் முறை' என்ற பெருநூலை எழுதி வெளியிட்ட நிலை (அக்டோபர்—1957). இன்றும் பெருஞ்செல்வாக்குடன் புழக்கத்தில் இருந்து வரும் இந் நூலை—அவர்தம் பொன்னார் திருவடிகளில்,

நற்றவத் தாயே! வாழி! பல் லாண்டு
நலனுறப் பெற்றெனை வளர்த்துக்
கற்றவ னாக்கிப் பேணினை! உலகிற்
காணுறு பொருளெலாம் கொணர்ந்துன்
சிற்றடிப் புறத்தில் வைப்பினும் அவைநின்
சீரருட் கொப்பென லாமோ?
மற்றிதை உணர்வேன்! எனினுமிந்நூல்நின்
மலர்ப்பதத் துரிமை செய் தனனே.

என்ற பாடலால் அன்புப் படையலாக்கி மகிழ்ந்தேன். தாய்மொழியைச் சிறார்களிடமும் வளர்ந்தவர்களிடமும் வளமாக வளர்க்கும் வழியைக் கூறும். 'தமிழ் பயிற்றும் முறை'யாம் இந்நூலைத் தாய்க்கு அன்புப் படையலாக்கு வது பொருத்தமன்றோ? 1959-ஆம் ஆண்டு சனவரித்திங்க ளில் என் அன்னையார், 'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோன் எனக்கேட்ட தாய்' (குறள்-69) என்ற வாக்கின் பொருளைக் கேட்ட நிலையில் திருநாடு அலங்கரித்துவிட்டார்கள்.

ஆனால் திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் சேர்ந்தமையால் என பட்டப் படிப்பு முடியும் வரை தந்தையாக நின்று அரவணைத்தும் கடிந்தும் என் கல்வி வளர்ச்சி குன்றாது செழிப்புடன் திகழக் காரணமாக இருந்தவர் முதல்வர் ஜெரோம் டி'சௌசா என்று கூறின் அஃது எள்ளளவும் மிகையாகாது. இதனை நினைக்கும் போது நான்கு நினைவுகள் மலர்கின்றன.

***நினைவு-1 : 1934-35*** இல் நான் இடைநிலை வகுப்பு முதலாண்டு படிக்கும்போது எனக்கு இயற்பியல் பேராசிரியராக அமைந்தவர் தந்தை காம்பெர்ட் (Father Gombert) என்பார். இவர் ஃபிரெஞ்சு பாதிரியார். இவர்பேசும் ஆங்கிலம் மாணவர்க்குப்புரிவதில்லை. முதலாண்டு கால் ஆண்டு, அரையாண்டு முழு ஆண்டுத் தேர்வுகளில் மாணாக்கர்கள் இயற்பியலில் பெற்ற அதிகப்பட்ச மதிப் பெண்கள் 20 சதவிகிதத்திற்கு மேல் உயர்வதில்லை. கற்பிக்கும் முறையும் மாணாக்கர்களின் கவனத்தை ஈர்ப்பதாக இல்லாமையும் பாடம் மனத்தில் நன்கு பதியாமை மற்றொரு காரணமாகும். ஆனால் பண்பாடு, மரியாதை இவற்றை நன்முறையில் கற்றது குறிப்பிடத்தக்கது. மாணாக்கர்கள் பல மாவட்டங்களைச் சேர்ந்த குக்கிராமங்களில் பாடங்களைத் தமிழில் கற்று வந்தவர்களாதலால் ஆங்கிலத்தில் கற்பிப்பதை விரைவாகப் புரிந்து கொள்ளும் பாங்கிலும் இல்லாமை அவர்களின்தேர்ச்சிக் குறைவிற்குப் பிறிதொரு காரணமாக இருந்தது. நடத்தை நயத்தையும் (Courtesy) சரியாக அறிந்து கொள்ளாத நிலையும் இவர்களிடம் காணமுடிந்தது.

ஒருமுறை நான்பெற்ற காலாண்டு மதிப்பெண்களைத் தெரிந்து கொள்வதற்காக உயர்நிலைப் பள்ளிகளின் பழக்கப்படி நேராகப் பாதிரியார் மாளிகையில் தந்தை காம்பெர்ட் அறைக்கு நேராகச் சென்று விட்டேன். பேராசிரியர் அன்பாகத்தான் வரவேற்றார். நான் நாட்டுப்

புறத்தான் என்பதை நன்கு புரிந்து கொண்டமையால் என்மீது அதிகப் பரிவு காட்டினார். நான் கதவை மெது வாகத் தட்ட வேண்டும் என்றும், தான் 'வருக' என்று சொன்னவுடன் அறைக்குள் நுழைந்து தன்னைக் காண வேண்டும் என்றும், தான் 'என்ன வேண்டும்?' என்று கேட்டவுடன் 'காலாண்டுத்தேர்வில் இயற்பியலில் நான் பெற்றுள்ள மதிப்பெண்ணைத் தெரிந்து கொள்ள வந்தேன்' என்று கூறவேண்டும் என்றும் தெரிவித்தார். என் தோளின்மீது தந்தை கையை அணைப்பது போல் போட்டுக் கொண்டு வந்து என்னை வெளியில் இட்டுக் கதவைச் சாத்தினார். என்னைக் கதவைத் தட்டச் சொன்னார். நான் தட்டினேன். 'வருக' என்று குரல் கொடுத்தார். நான் அவர் முன்னிலையில் வந்து அடக்க ஒடுக்கமாக நின்றேன். 'எதற்காக வந்தாய்? என்ன வேண்டும்?' என்று வினவினார். 'நான் காலாண்டுத் தேர்வில் பெற்ற மதிப்பெண் தெரிய வேண்டும்' என்றேன். '20 சதவீதம் பெற்றுள்ளாய்; நன்றாய்ப் படிக்கவேண்டும்' என்று அறிவுறுத்தினார். 'எதிர்காலத்தில் யாரைப் பார்க்கச் சென்றாலும் இம்முறையைப் பின்பற்றுக' என்று கூறி, படிப்பு மட்டிலும் முக்கியமன்று; மதிப்பெண்கள் அதிகம் பெறுவதைவிட நடந்து கொள்ள வேண்டிய வகைமுறைகளைக் கற்றுக் கொள்வது மிகவும் முக்கியம் என்றும், இதுதான் வாழ்க்கையில் நற்பயன் விளைவிக்கும் என்றும் அறிவுறுத்தினார். இந்த அறிவுரை இன்றும் என் நினைவில் பசுமையாகவுள்ளது. இவரிடம் இயற்பியல் அறிந்து கொண்டதைவிட வாழ்க்கையின் ஒழுக்கமுறை களை நன்கு தெரிந்து கொண்டேன்.

இந்த ஆண்டு மூன்று தேர்வுகளிலும் வகுப்பு மாணவர் களில் ஒருவர் கூட 20 சதவிகிதத்திற்குமேல் வாங்க வில்லை. வகுப்பின் அடுத்த பிரிவில் 70 சதவிகிதத்திற்கு மேல் பெற்றிருந்தனர். வகுப்பு சராசரி மதிப்பெண்ணும் எங்கள் பிரிவு சராசரி மதிப்பெண்ணைவிட மூன்று

மடங்கிற்கு மேல் இருந்தது. இந்தப் புள்ளி விவரங்களைக் கண்டார் முதல்வர் ஜெரோம் டி' செளசா. ஒருபிரிவின் வகுப்பு மாணவர்கள் அனைவரையும் மக்குகள் என்று கருதுவது தவறு என்று தெளிந்தார். அப்படி மக்குகளாக இருந்தால் ஏனைய பாடங்களிலும் தேர்ச்சி மிகக் குறைவாக இருக்க வேண்டுமல்லவா? அப்படியில்லையே. இங்கு நோய் மாணாக்கர்களிடம் இல்லை. ஆசிரியரிடம் தான் இருக்கவேண்டும் என்பதைத் தெளிந்தார்.

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (குறள்-948)

என்பது வள்ளுவரின் வாக்கன்றோ? சரியான மருத்துவத்தைச் சரியான காலத்தில் செய்தார்.

அந்த ஆண்டு (1935) பி. எஸ் சி. (ஆனர்சு) தேர்வில் கல்லூரியில் முதல்வனாகவும் முதல் வகுப்பிலும் தேர்ச்சிப் பெற்றிருந்தார் சவரிமுத்து என்ற மாணாக்கர். இவர் சுறுசுறுப்பானவர்; உற்சாகம் மிக்க இளைஞர். இவரை துணை விரிவுரையாளராக நியமனம் செய்து எங்கள் வகுப்பை இவர் பொறுப்பில் விட்டார். இந்தப் புதிய மருத்துவர் அற்புதமாகச் செயல் பட்டார். புனித சூசையப்பர் கல்லூரியில் புதனும் ஞாயிறும் வாரவிடுமுறை நாட்கள். சனி ஞாயிறு விடுமுறைகளாக இருப்பின் ஐந்து நாட்கள் கற்றவற்றை மாணாக்கர்கள் இரண்டு நாட்களில் மறக்கக் கூடும் என்ற நடைமுறை உண்மையைக்—உளவியல் உண்மையைக்—கண்டறிந்தவர்கள் கல்லூரி நிர்வாகத்தினர். இந்தக் கை தேர்ந்த மருத்துவராகிய பேராசிரியர் சவரிமுத்து அவர்கள் புதன்கிழமை தோறும் இயற்பியல் பாடத்திற்குத் தனி வகுப்புகள் ஏற்படுத்தி முதலாண்டுப் பாடங்களைத் திரும்பக் கற்பித்தார். வார வேலை நாட்களில் இரண்டாம் ஆண்டுக்குரிய பாடங்கள் கற்பிக்கப்பெற்றன. எல்லா மாணாக்கர்களுமே முதலாண்டுப் பாடத்தில் மிகத் தெளிவு பெற்றனர். இரண்டாம் ஆண்டு காலாண்டுத் தேர்விலேயே பலர்

70 சதவிகிதத்திற்கு மேல் மதிப்பெண்கள் பெற்றிருந்தனர். நான் 80 சதவிகிதம் பெற்றிருந்தேன். இங்ஙனம் திரு சவரிமுத்து மூலம் தரப்பெற்ற 'புதிய மருந்தால்' வகுப்பில் 'நல்ல குணத்தைக்' கண்டார் முதல்வர் ஜெரோம் டி' செளசா.

*நினைவு—3 :* இடைநிலை வகுப்புப் பல்கலைக் கழகத் தேர்வில் நான் முதல் வகுப்பில் தேர்ச்சியடைந்தேன். தமிழ், கணிதம், இயற்பியல், வேதியியல் பாடங்களில் 60 சதவிகிதத்திற்கு மேல் பெற்றிருந்தேன். கணிதத்தில் 100 சதவிகிதம் பெற்றிருந்தேன். பி.எஸ்சி வகுப்பில் வேதியியலை முதன்மைப் பாடமாகவும், இயற்பியல் கணிதம் இவற்றைத் துணைப்பாடங்களாகவும் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தேன். இந்த ஆண்டுத் தொடக்கத்தில் (1936) கடுமையான வயிற்றுக் கடுப்பு (Dysentry) நோயால் தாக்கப்பெற்றேன். உணவும் செல்லவில்லை. மூன்று மாதத்தில் உடல்நிலை மிகவும் சீர் கெட்டது. அறையிலிருந்து வகுப்பிற்கு நடக்க முடியாத நிலை. வகுப்பிற்கு வந்தாலும் பாடங்களை மனத்தில் ஏற்க முடியாத சோர்வு நிலை. ஆகவே படிப்பையே நிறுத்த வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. ஊருக்கு வந்து விட்டேன்.

இந்த ஆண்டு (1936) என் திருமணமும் நடைபெற்று விட்டது. ஒன்றுவிட்ட அத்தை மகள் துணைவியானாள். படிப்புக்கு உதவி செய்வதாக மாமனார் வீடு ஒப்புக் கொண்டதால் திருமணத்திற்கு இசைந்தேன். பி.எஸ்சி. முதலாண்டுப் படிப்பிற்கு உதவினர். இரண்டாம் ஆண்டு கைவிட்டனர். என் பட்டப் படிப்புக் காலம் மிகவும் சோதனையான காலமாக இருந்தது. இருப்பினும் நிலைமையை இறையருளால் சமாளித்தேன். முதல் வகுப்பில் தேர்ச்சியுற்றேன்; கல்லூரியில் முதல் மாணவனாகவும் பல்கலைக் கழகத்தின் மூன்றாவது மாணவனாகவும் தேர்ச்சியடைந்தேன். பி எஸ்சி. வகுப்பில் (1937) சேர்வதற்குப் பதிலாக இயற்பியல் பி.எஸ்சி (ஆனர்சு)

வகுப்பில் சேர்வதற்குப் 'பகீரதப் பிரயத்தனம்' செய்தேன். ஆனால் அதில் இடம் தர மறுக்கப் பெற்றது. பத்து நாட்கள் நாடோறும் காலை ஒன்பது மணிக்குப் பாதிரி மார் மாளிகையில் முதல்வர் ஜெரோம் டி' செளசாவின் அறைக்குச் சென்று 'சத்தியாக்கிரகம்' செய்தேன். முதல் நாளே முதல்வர் தந்தையவர்கள் 'மிஸ்டர் சுப்பு (கல்லூரி யிலும் சான்றிதழ்களிலும் இதுவே என் பெயர்; ரெட்டி யார் என்ற பின்னொட்டு உத்தியோகத்தில் சேர்ந்த பிறகு சேர்ந்தது, உன் உடல்நிலை சரி இல்லை. இடைநிலைத் தேர்வில் தேர்ச்சி பெற்ற நாலாண்டுகளில் ஆனர்சு முடிக்க வேண்டும் என்பது விதி. ஏற்கெனவே உன் உடல் நிலை சீர்கேட்டால் ஓராண்டு கழிந்தது. இன்னும் மூன்றாண்டு களில் ஏதாவது நேர்ந்தால் உன் வாழ்க்கை கெட்டொழி யும். உன் உடல் நிலையை உத்தேசித்தே நினக்கு ஆனர்சு வகுப்பில் இடந்தரவில்லை. வேதியியல் பி.எஸ்சிக்கு இயற்பியல் ஆனர்சை விட மதிப்பு அதிகம். ஆகவே அவ் வகுப்பிலே படி' என்று தாயினும் சாலப்பரிந்து பேசினர் (ஆனர்சு வகுப்பு தொடங்கி நான்கு ஆண்டுகளில் படிப்பு முடியலாம் என்று பல்கலைக்கழக விதி திருத்தப்பெற்றது.) பத்து நாட்கள் முதல்வர் அறைக்குக் காவடி எடுத்தேன். முதல்வர் என் அவாவைப் புரிந்துகொண்டார்; சிறிதேனும் சினம் கொள்ளவில்லை. நாடோறும் ஒன்றும் பேசாமல் மெளனமாகவே சென்று வந்தேன். அவர் அறையில் அவர் கண்ணில் படுமாறு தரையில் அமர்ந்து தவம் கிடப்பேன். முதல்வர் தன் பாட்டுக்குத் தன் வேலையில் ஆழ்ந்திருப் பார். 9-45க்கு, 'மிஸ்டர் சுப்பு, என் அறையைப் பூட்டிக் கொண்டு சாவியைக் கல்லூரித் தலைமை எழுத்தரிடம் சேர்த்துவிடு' என்று சொல்லிவிட்டு வேகமாகக் கல்லூரிக்கு நடந்து விடுவார். இப்படியே பத்து நாட்கள் செய்து, பிறகு நானே காவடி எடுப்பதைத் தவிர்த்துக் கொண் டேன். சிறிதும் சினங்கொள்ளாமல் இருந்த முதல்வர் ஜெரோம் டி' செளசாவின் பெருந்தன்மையை—தந்தை யின் பாசத்தை—இப்போது நினைக்கும்போது மயிர்

சிலிர்க்கின்றது. உள்ளம் புளகாங்கிதம் கொள்ளுகின்றது. இத்தகைய ஓர் ஆசிரியரை இந்த உலகில் காண்டல் அரிது.

நினைவு—2 : பி.எஸ்சி முதல் ஆண்டு பயிலும்போது ஆண்டார் தெருக்கோடியில் தேசியக்கல்லூரியை ஒட்டியிருந்த ஒருவர் மாடியில் இருந்த ஐந்து அறையில் 10 பேர் தங்கிப் படித்ததாக நினைவு. அந்த வீட்டுக்காரர் ஓய்வு பெற்ற ஒரு பேராசிரியர். கடுந்தூய்மையாளர் (Puritan) பிராமண வகுப்பினர். மாடியில் தங்கியிருந்த நாங்கள் பத்து பேர்களும் 'கலாட்டா செய்யும் பேர்வழிகள்' அல்லோம். சில சமயம் மாலை வேலைகளில் ஏதோ பிரச்சினையை அலசிச் சிரித்து மகிழ்வோம். வீட்டுக்குரியோர் அடிக்கடித் தின்னைப்பள்ளி ஆசிரியர்போல் இதோபதேசம் செய்வார்; கடிந்து கொள்வார். இளம் வயதில் கல்லூரி மாணவர்கள் இப்படித்தான் இருப்பார் என்ற உளவியல் உண்மையை அறியாதவர். அவர் இதோபதேசத்தை நாங்கள் காதில் வாங்குவதே இல்லை. அவருடைய வியப்பான போக்கு (Queer behaviour) எங்கட்கு நகைச்சுவை அளிக்கும். இதையே சில சமயம் பிரச்சினையாகக் கொண்டு சிரித்து மகிழ்வோம். மார்ச்சு மாதம்; தேர்வு சமயம் எங்கள் பத்துப் பேருக்கும் தனித்தனியாக அறையை உடனே காலி செய்யுமாறு வக்கீல் நோட்டீஸ் அனுப்பினார். இதிலிருந்தே அவர் எப்படிப்பட்டவர் என்பதை அறிந்து கொள்ள முடிந்தது. தேர்வு சமயத்தில் எங்கள் மனநிலை அதிர்ந்தது. இந்நிலையில் எப்படி அமைதியாகப் படிக்க முடியும்? நாங்கள் பத்து பேரும் நோட்டீசுகளை எடுத்துக் கொண்டு கல்லூரி முதல்வர் ஜெரோம் டி'செளசாவைச் சந்தித்து அதிர்ச்சியடைந்த முகத்துடன் எங்கள் நிலையை விளக்கினோம். நிலைமையைப் புரிந்து கொண்ட தந்தையனைய முதல்வர், ''மாணவர்களே, கவலை வேண்டா. இதற்கு வழி காண்பேன்'' என்று எங்களைச் சாந்தப்படுத்தினர். எங்களிடமிருந்து நோட்டீசுகளைப் பெற்றுக்கொண்டு அவற்றைத்

தம் கடிதத்துடன் கல்லூரித் தலைமை எழுத்தர் மூலம் ஆண்டார் தெருவில் வசித்து வந்த கல்லூரி வக்கீல், திரு பி.எஸ்.கிருட்டிணமூர்த்தி அய்யரிடம் அனுப்பிப் பதில் நோட்டீஸ் அனுப்ப ஏற்பாடு செய்து, நோட்டீசும் அனுப்பப் பெற்றது. வீட்டுக்காரரர் பெட்டிப்பாம்புபோல் அடங்கி விட்டார். எங்கள்மீது, முதல்வர் கொண்ட பரிவை இன்றும் நினைந்து மகிழ முடிகின்றது; வியக்கவும் செய்கின்றது.

*நினைவு—4* : *1939-40* ஆம் ஆண்டு உத்தியோக வேட்டையிலேயே கழிந்தது. *1940-1941* ஆம் ஆண்டு சைதாப்பேட்டை ஆசிரியர்க் கல்லூரியில் பயிற்சி பெறுவதில் கழிந்தது. 1941-ஆம் ஆண்டு புதிதாகத் தொடங்கப் பெற்ற துறையூர் பெருநிலக்கிழவர் நடுநிலைப் பள்ளியின் முதல் தலைமையாசிரியராகப் பொறுப்பேற்று இரண்டாண்டுகளில் பெரும்பாலும் என் சொந்த முயற்சியால் அதை உயர்நிலைப் பள்ளியாக உயர்த்தினேன். பள்ளி வளர்ச்சியில் என் முயற்சிகள் யாவும் இறையருளால் பயன் விளைத்தன. அளவற்ற புகழும் என்மீது வந்து குவிந்தது. தமிழ் எம்.ஏ. படிக்க முயற்சிகள் எடுத்தேன். பழைய விதிப்படி பி. எஸ் சி பட்டம் பெற்றவர்கள் (பகுதி – 2 தமிழ் படிக்காததால்) நேராக எம்.ஏ செல்ல அனுமதிக்கப் பெறவில்லை. ஆதலால் அதனைக் கைவிட்டு தமிழ் வித்துவான் தேர்வில் முதல் நிலைத் தேர்வை 1944லும், இறுதி நிலைத் தேர்வை 1945லும் எழுதி வெற்றி பெற்றேன். ஆனால் தமிழ் எம். ஏ. பட்டம் பெற முடியவில்லையே என்ற ஏக்கம் என் மனத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தது. மீண்டும் 1945 இல் இம் முயற்சியைத் தொடங்கினேன். இப்போது ஆசிரியர்க்குரிய சலுகையைப் பயன்படுத்திக் கொண்டு பி.ஏ. தேர்வு எழுத இசைவு கோரி சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு விண்ணப்பம் அனுப்பினேன். இசைவு மறுக்கப் பெற்றது. பள்ளியிறுதித்தேர்வு முடித்து இடைநிலை ஆசிரியர் பயிற்சி பெற்றவர்கள் மூன்றாண்டு

ஆசிரியப் பணி புரிந்த அநுபவம் பெற்றிருந்தால் படிப்படியாகத் தேர்வுகள் எழுதி பி,ஏ. பட்டம் பெறலாம் என்ற விதி இருந்தது. இந்த விதியைப் பயன் படுத்திக் கொள்ள எனக்கு உரிமையிருப்பதாகக் கருதிதான் விண்ணப்பம் அனுப்பினேன். மீண்டும் எழுதிக் கேட்டதற்கு ஏற்கெனவே ஒரு பட்டம் பெற்றவர்களை அனுமதிப்பதில்லை என்று மறுமொழி வந்தது.

1945இல் மாவட்டக் கல்வி அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதில் 25 விழுக்காடு இடங்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர்கட்காக ஒதுக்கப் பெற்றிருந்தன. குறைந்தபட்சத் தகுதி எம். ஏ பட்டத்துடன் பி. டி. பட்டமும் பெற்றிருக்க வேண்டும். 1937 இல் நான் கோரிய படி பி.எஸ் சி (ஆனர்சு) படிக்க முதல்வர் அனுமதி வாங்கியிருந்தால் இப்போது விண்ணப்பம் அனுப்புவதில் தடை இருக்காதே என்று கருதினேன். இப்போது தந்தை ஜெரோம் டி' சௌசா சென்னை லயோலா கல்லூரிக்கு முதல்வராக மாற்றப் பட்டிருந்தார். என் நிலையை விளக்கி அவருக்கு எழுதினேன்; நேரிலும் கண்டு பேசினேன். இவரைத் தவிர சட்டக்கல்லூரித் துணை முதல்வர் திரு எஸ். கோவிந்த ராஜுலு நாயுடு, ஜஸ்டிஸ் பஷீர் அகமது (இவர்கள் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவில் செல்வாக்கு மிக்க உறுப்பினர்கள்) ஆகியோரை நேரில் சந்தித்து எம். ஏ: தேர்வு எழுத வழி வகுக்குமாறு வேண்டினேன். தந்தை ஜெரோம் டி' சௌசா இதனை முக்கியப் பிரச்சினையாக எடுத்துக் கொண்டு முயன்றார். இது பதினேழு ஆட்சிக் குழு கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்று இழுபறியாகக் கிடப்பதாகவும் என்னிடம் தெரிவித்தார். 1947இல் நாடு சுதந்தரம் பெறுவதற்கு முன்பதாக விதி மாற்றப் பெற்றுப் புதுவிதி நடைமுறைக்கு வந்தது. இதன்படி பிஎஸ்சி பட்டம் பெற்றோர் பி ஏ. பி.ஓ. எல், பிகாம் தேர்வுகள் எழுதலாம் என்றும்; அங்ஙனமே பி. ஏ. பட்டம் பெற்றோர் பி. எஸ்சி;

பி. ஓ.எல் பி.காம் தேர்வுகள் எழுதலாம் என்றும், பி. ஓ. எல் பட்டம் பெற்றோர் பி எஸ்சி, பி.ஏ தேர்வுகள் எழுதலாம் என்று வழி அமைந்தது. 1947 இல் நான் பி.ஏ. ஆங்கிலம் (முதற்பகுதி); பி. ஏ. தமிழ் (இரண்டாம் பகுதி) தேர்வுகள் எழுதி வெற்றி பெற்றேன். பி.ஏ. பகுதி மூன்றுக்கு விதிவிலக்கு அளிக்கப் பெற்றது. ஆனால் 1951-இல் எம். ஏ. தேர்வு எழுதி வெற்றி பெற்றேன். 1950-இல் துறையூர் தலைமையாசிரியர் பதவியைத் துறந்து காரைக்குடி அழகப்பா ஆசிரியர்க் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் துறைத் தலைவராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

இதற்கிடையில் தந்தை ஜெரோம் டி' சௌசா அவர்கள் இந்திய அரசியல் நிர்ணய சபையில் இடம் பெற்றார். போப்பாண்டவருக்குத் தனிச் செயலராகப் பணியாற்றும் பொறுப்பு பெற்றும் உலகப்புகழ் பெற்றார். 1951 சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாப் பேருரையாற்றினார். இவரைப் பார்த்து ஆசிபெற வேண்டுமென்றே நேரில் பட்டம் பெற விழைந்து காரைக் குடியிலிருந்து சென்னை வந்தேன். மறுநாள் காலை லயோலா கல்லூரி வளாகத்திலுள்ள பாதிரியார் மாளிகை யில் சந்தித்து அவா வாழ்த்தையும் ஆசியையும் பெற்றேன். அதன் பிறகு அவரை நேரில் காணும் பேறு பெறவில்லை. 1977-செப்டம்பரில் திருப்பதியில் நடைபெற்ற என் மணி விழாவையொட்டி வெளியிடப் பெற்ற மணிவிழாமலருக்கு அனுப்பிய ஆசிச்செய்தி : மலர் ஆசிரியர்களுள் ஒருவரான டாக்டர் P. சௌரிராஜனுக்கு எழுதியது; 'அன்பு நிறைந்த டாக்டர் சௌரிராஜனுக்கு, டாக்டர் சுப்பு ரெட்டியாரின் மணிவிழா மலருக்கு கட்டுரையொன்று வழங்குமாறு கேட்டதற்கு மிகவும் நன்றி, என் உடல் நலக் கேட்டின் காரணமாக ஆய்வும் கவனமும் கொண்டு கட்டுரை எழுதும் நிலையில் நான் இல்லாததற்கு மிகவும் வருந்துகின்றேன். நான் டாக்டர் சுப்புரெட்டியாருக்கு

என் உண்மையான பாராட்டுதல்களையும் நல்வாழ்த்து களையும் வழங்கி மகிழ்கின்றேன், இந்த நல்வாழ்த்துகளை பேராசிரியர் சுப்புரெட்டியாருக்குத் தெரிவித்தருள்க. பேராசிரியர் ரெட்டியாரை மிகப் புகழ் பெற்ற என் பழைய மாணவர்களில் ஒருவராகக் கருதுகின்றேன். இந்த மலர் வெளியீட்டைக் காண ஆவலுடன் காத்திருப்பேன். மலர் கிட்டியதும் மிக்க மகிழ்ச்சியுடன் படிப்பேன்.'

சில ஆண்டுகள் கழித்து அவர் திருநாடு அலங்கரித்த செய்தியைத்தான் செய்தித்தாள்களில் கண்டேன்; வருந்தினேன்.

## 3. பன்மொழிப்புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார்

'மயிலைத் தொல்காப்பியர்' என வழங்கும் பன்மொழிப் புலவர் திரு.வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களுடன் 1943 முதல் 1963 வரை (இவர் மறையும் வரை) நெருங்கிப் பழகும் பேறு பெற்றவன் அடியேன். திரு. ரெட்டியார் அவர்கள் தொல்காப்பியம் என்ற இலக்கண நூலையும் பிற இலக்கண நூல்களையும் பழுதற வோதிக் கற்ற மாபெரும் இலக்கணப்புலவர். இலக்கண ஆசிரியர்களின் உண்மைக் கருத்தை நன்கு அறிந்தவர். பருந்தும் அதன் நிழலும்போலும் இணைந்துகற்றவர்என்று சொல்லி வைக்கலாம், சற்றேறக்குறைய இருபதுயாண்டு கள் இவருடன் நெருங்கிப்பழகும் பேறு பெற்றவனாதலால் இவர் தொடர்புடைய சில நிகழ்ச்சிகளை 'மலரும் நினைவு களாக' ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

முதல் சந்திப்பு : நான் துறையூர் உயர் நிலைப் பள்ளித் தலைமையாசிரியனாகப் பணி புரிந்த காலத்தில் (1941-50) யாதோ ஓர் அலுவல் நிமித்தம் சென்னை வந்தேன்; இது 1943 என்பதாக நினைவு. டாக்டர் ஜான்சனைப் பாஸ்வெல் முதலில் சந்தித்ததுபோல் இவர் வாழ்ந்த் இல்ல முகவரியை உசாவி யறிந்துகொண்டு (12, நாட்டு சுப்பராய முதலித் தெரு, மயிலை) இவரை இல்லத்தில் சந்தித்தேன். ஒல்லியான திருமேனி; அடக்க

மான தோற்றம். அழகான முறையில் தென்கலைத் திருமண்காப்பு தீட்டப்பெற்று அறிவொளி வீசும் திருமுக மண்டலம், எவரையும் இன்முகத்துடன் வரவேற்கும் உயரிய பண்பு; இவை பன்மொழிப் புலவரின் புறத் தோற்றம். அகத் தோற்றத்தில் அடங்கிக்கிடக்கும் இவர்தம் ஆழ்ந்த இலக்கண இலக்கியப் புலமை, உயரிய பண்புகள் இவற்றை மேலோட்டமாக அறிய முடியாது.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு (குறள்-783)

என்ற வள்ளுவர் வாக்குப்படி இவை இவருடன் பழகுந் தோறும் வெளிப்படுபவை. ஆயினும்,

ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

—வெற்றி வேற்கை-34

என்ற அதிவீரராம பாண்டியனின் பொன்மொழிக் கிணங்க இவருடன் அடியேன் கொண்ட உறவு 'ஆன்ம உறவாக' வளர்ந்தது. முதல் சந்திப்பே ஆர்வத்துடன் அறிவியல் பயின்ற அடியேனைத் தமிழ்த் தாயின் மடியில் கிடந்து 'தமிழமிழ்தம்' பருகும் வாய்ப்பாக அமைந்து விட்டது; துறையூரிலிருந்தவரை இலக்கியக் கழகத் தொடக்க விழா, பள்ளி ஆண்டு விழா, இரண் டிற்கும் இடையில் பல சிறப்புச் சொற்பொழிவுகள் என்று பல வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொண்டு பெரும் பெரும் புலவர்களைத் தருவித்துப் பல இலக்கியச் சொற் பொழிவுகளை அமைத்துத் தமிழமிழ்தம் பருகினேன். மாணாக்கர்கள், தோழ ஆசிரியர்கள், ஊர்ப்பெரு மக்கள் இவர்களையும் பருகச் செய்து மகிழ்வித்தேன். நான் துறையூரை விட்டுக் காரைக்குடி சென்ற பிறகு இத்தகைய இலக்கிய நிகழ்ச்சிகள் துறையூரில் அரியனவாயின. நான் இருந்தவரை துறையூரில் தமிழ் இலக்கிய வெள்ளம் அடிக்கடிக் கரை புரண்டோடி வந்தது.

ஓர் அரிய நிகழ்ச்சி: இதனால் தமிழ் வித்துவான் தேர்வுகள் எழுத 1943 இல் உறுதி கொண்டேன். வித்துவான் தேர்வுக்குரிய முன்னைய ஆண்டு வினாத்தாள்களை அனுப்பிவைக்குமாறு சென்னைக்கு வந்தபோது பன்மொழிப் புலவரைக் கேட்டிருந்தேன். ஒப்புக்கொண்டு ஒரு சில திங்களில் அனுப்பிவைத்தார். ஏதோ ஒரு திங்களின் முதல் நாள் மாதச் சம்பளத்தை ஓர் உறையிலும் (ரூ. 350/-க்கு ரூ. 100, ரூ. 10/ நோட்டுகள்) எனக்கு அனுப்பவேண்டிய வினாத்தாள்களை ஓர் உறையிலுமாக வைத்துக் கொண்டார். தவறுதலாக என் முகவரி எழுதப் பெற்றிருந்த உறையில் ரூபாய் நோட்டுகளை வைத்து விட்டார். முகவரி எழுதப் பெறாத உறையில் வினாத்தாள்கள் இடம் பெற்றிருந்தன. மவுண்ட் சாலை அஞ்சல் நிலையத்தருகில் மின் வண்டியினின்றும் (Tram car) இறங்கியவர் ரூபாய் நோட்டுகள் உள்ள உறையை வினாத்தாள் உறையெனக் கருதித் தவறாக அஞ்சல் பெட்டியில் சேர்த்துவிட்டார். அடுத்த உறையைப் பார்க்க நேரிட்டபொழுது அது வினாத்தாள்கள் அடங்கிய உறையாக இருந்தது! உடனே அஞ்சல் நிலையத் தலைவரின் கவனத்திற்குத் தன் தவற்றைக் கொணர்ந்தார். உரிய கட்டணம் செலுத்தி அஞ்சல் பெட்டியைத் திறந்துபார்க்கையில் என் முகவரி எழுதிய உறையில் ரூபாய் நோட்டுகள் இருந்தன. இருந்தாலும் அஞ்சல் விதிப்படி அந்நோட்டுகளைத் தர இயலாது என்றும், இன்சூர் கட்டணத்தைப் பெற்றுக்கொண்டு உறையின் மேலுள்ள முகவரியினருக்கே தரப்பெறும் என்றும் அஞ்சல் அலுவலர் சொல்லிவிட்டார்.

இல்லம் திரும்பிய புலவர் பெருமான் சாவகாசமாக அடியேனுக்கு இது குறித்து ஒரு கடிதம் எழுதினார். கடிதம் கிடைப்பதற்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே பண உறை துறையூர் அஞ்சலகத்திற்கு வந்து விட்டது. அஞ்சல் நிலையத் தலைவர் அடியேனுக்குச் சொல்லி

யனுப்பிப் பணத்தை என்னிடம் ஒப்படைத்து விட்டார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உறையின் மீதுள்ள எழுத்தினாலும் எழுதினவரை ஊகித்து அறியக் கூட வில்லை. பல்கலைக் கழக முகவரி இட்ட உறை பன் மொழிப் புலவரை நினைக்கச் செய்தது. இவரைத்தவிர பல்கலைக்கழகத்தில் வேறு ஒருவரையும் அறியேனா தலால். ஆனால் எந்தவிதமான முடிவுக்கும் வரமுடியாத குழப்பமான நிலை. பணத்தைப் பள்ளி அலுவலக இரும்பு பீரோவில் வைத்துப் பூட்டி விட்டேன். இரண்டு நாட்கள் கழித்து பன்மொழிப் புலவரிடமிருந்து விவர மான கடிதம் வந்தது. உடனே பணத்தை 'டிராப்ட்' மூலம் புலவருக்கு அனுப்பிவைத்தேன். 'கலைமகளைத் தருவதற்குப் பதிலாகத் திருமகளைத் தந்து விட்டார் போலும்!' என்று எண்ணிக் கொண்டேன். பிறருக்கு உதவும் உயிராய பண்பு இப்படியெல்லாம் இவரிடம் பரிணமிக்கின்றதே என்று வியந்தேன். இந்நிகழ்ச்சி இன்றும் பசுமையாக என் உள்ளத்தில் உள்ளது.

பல சந்திப்புகள் : 1943 முதல் 1963 வரை எண்ணற்ற சந்திப்புகள். இவற்றுள் இரண்டு முறை (1944, 1945) இருபது நாட்கள் வீதம் இவர் இல்லத்தில் தங்கி வித்து வான் தேர்வுக்குப் படித்ததாக நினைவு. வித்துவான் இறுதித் தேர்வுக்குரிய 'சிவஞான முனிவரின் முதல் சூத்திர விருத்தி' என்ற நூலை மின் வண்டியிலேயே கற்பித்தார். சென்னை ஹாமில்டன் வாராவதியிலிருந்து (இப்போது அம்பேத்கார் பாலம்) திருவல்லிக்கேணிக் காவல் நிலையம் வந்து சேர்வதற்கு சுமார் அரைமணி நேரம் ஆகும். அங்கிருந்து பல்கலைக் கழகம் நடந்து செல்வதற்கு மீண்டும் சுமார் அரைமணி நேரம் ஆகும். இந்த நேரத்தில் கதை சொல்வது போல் சொல்லிக்கொண்டே வருவார். பல்கலைக் கழகம் அடைந்ததும் பக்கங்களைக் சுட்டியுரைத்து 'நான்கு பக்கங்கள் படியுங்கள்' என்று கூறுவார். படித்தால் கண்ணாடியில் நம் முகம் தெரிவது

போல் அந்த நான்கு பக்கங்களிலுள்ள பொருள் தெளிவாகும். இப்படிப் பத்துப் பன்னிரண்டு நாட்களில் சிறார்கட்கு 'விளையாட்டு முறையில்' கற்பிப்பதுபோல் 'சூத்திர விருத்தி' கற்பிக்கப் பெற்றது; அதிலுள்ள கருத்துகளும் தெளிவாயின.

திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியார் ஆரணி பக்கம் ஏதோ ஓர் கழக உயர் நிலைப் பள்ளியில் (District Board high schoop) பணியாற்றிக் கொண்டிருந்தவர் மூன்றாண்டு விடுப்பில் சீறாப்புராணம் பதிப்பித்தலில் டாக்டர் முகம்மது ஹுசேன் நயினாருக்கு (அரபு மொழிப் பேராசிரியருக்குத்) துணையாகப் பணிபுரிந்து கொண்டிருந்தார். இந்தப் பணி நம் புலவர் பெருமானின் பரிந்துரையால் கிடைத்தது என்பது குறிப்பிடத் தக்கது. திரு முதலியார் நம் புலவர் பெருமான் இல்லத்திற்கு (13, வடக்கூர் செல்வ விநாயகர் கோவில் தெரு, மயிலை) அருகில் (நாட்டு சுப்பிராய முதலித் தெருவில்) ஓர் இல்லத்தில் குடியிருந்தார். இவர் அடிக்கடிக் காலையிலும் மாலையிலும் நம் புலவர் பெருமானைச் சந்திக்க வருவார். திரு முதலியார் பெரும் புலவர். சங்க இலக்கியத்திலும் சைவசமய இலக்கியங்களிலும் நல்ல பயிற்சியுடையவராதலால் 'நம் தலைமையாசிரியர் ரெட்டியாருக்கு (எனக்கு) அகநானூற்றுக் களிற்றியானை நிறையிலுள்ள முதல் ஐம்பது பாடல்களைக் கற்பியும்' என்று கேட்டுக் கொண்டார். அவரும் புலவர் பெருமான் இட்டபணியைச் சிரமேற் கொண்டு காலையிலும் மாலையிலுமாகப் பத்து நாட்களில் ஐம்பது பாடல்களையும் மிக அற்புதமாகக்கற்பித்து விட்டார். திரு முத்து சு. மா. அவர்கள் தம் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் துறவறத்தை மேற்கொண்டு காஞ்சித் தொண்டை மண்டல முதலியார் மடத்துத் தலைவராகத் தவத்திரு ஞானப் பிரகாச சுவாமிகள் என்ற திருநாமத்தால் விளங்கியவர். அக்காலத்தில் நான் திருப்பதியில் பணியாற்றிக் கொண்

டிருந்தேன். குடும்பத்துடன் இவர்தம் திருமடத்தில் நான்கு நாட்கள் தங்கிக் காஞ்சியிலும் அதனைச் சுற்றிலுமுள்ள பதினான்கு திவ்விய தேசங்களைச் சேவித்தது இப்போது நினைவிற்கு வருகின்றது.

நான் வித்துவான் தேர்வுக்குப் படிப்பதற்காகத் துறையூரிலிருந்து வந்த நாட்கள் டிசம்பர்-சனவரியில். பனிக்காலமாகையால் நம் புலவர் பெருமான் ஆஸ்த்துமா நோயால் மிகவும் தொல்லைப்படுவார். இவரை விடாமல் பிடித்துக் கொண்டு தொல்லை தந்த நோய்கள் இரண்டு. ஒன்று ஆஸ்த்துமா; மற்றொன்று மூல நோய். இரண்டாவது நோய் பெரும்பாலான வைணவர்களின் பரம்பரைச் சொத்துபோல் காணப்படும்! ஆஸ்த்துமாவுக்கு வெப்பம் தரும் மருந்தும் மூல நோய்க்கு தண்மை தரும் மருந்தும் சாப்பிடவேண்டிவரும். ஆஸ்த்துமாவிற்குச் சாப்பிடும் மருந்து மூல நோயைக் கிளம்பி விடும். மூல நோய்க்குச் சாப்பிடும் மருந்து ஆஸ்த்துமாவை மிகுவிக்கும். இவ்வாறு இரண்டு நோய்களும் இருதலைக் கொள்ளிபோல் இவரைத்தாக்கி வருத்தும்; இவர் இடையில் அகப்பட்ட எறும்புபோல் தவிப்பார். யானும் இவர் நிலையைக் கண்டு துன்புறுவேன். நமக்கு மிகவும் வேண்டப்படுவோர் படும் துன்பம் நம்மையும் தொற்று நோய்போல் பற்றுவது நம் அநுபவம் அல்லவா? பிராரத்தம்தான் (நுகர்வினைதான்) இவரைத் துன்புறுத்துவதற்குக் காரணமாக இருந்தது போலும் என்று இப்போது என் மனம் எண்ணுகின்றது. ஏனெனில் அக்காலத்தில் சமய அறிவும் தத்துவ ஆராய்ச்சியும் என்னிடம் ஏற்படவில்லை.

நூல் படையல்: நான் துறையூரில் தமிழன்னையின் மடியில் கிடந்து தமிழ்த்தேனை மாந்தியபோது எனக்குக் கிடைத்த அநுபவத்தை என் கன்னி முயற்சியாக சுமார் இருபத்தைந்து கட்டுரைகளாக வடித்தேன்: இவற்றுள்

பத்துக்கட்டுரைகள் பெ. தூரனை ஆசிரியராகக் கொண்டு கோவையிலிருந்து வெளி வந்த 'காலச் சக்கரம்' என்ற திங்கள் இலக்கிய இதழில் வெளி வந்தன. இவற்றையும் கைவசம் இருந்த மீதிக் கட்டுரைகளையும் தொகுத்து 'கவிஞன் உள்ளம்' என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டேன். தமிழ் இலக்கியச் சோலைக்குள் புக விரும்பு வாருக்கு இது முன்வாசல்போல் வழி காட்டும். இந்த நூல் பி.ஸ்ரீ அவர்கள் அணிந்துரையுடன் (சனவரி 1949) வெளி வந்தது. இந்த நூலை முதன் முதலில் தாய்ப்பால் போல் தமிழமிழ்தம் ஊட்டிய புலவர் பெருமானுக்கு,

திருந்திய உளத்தை மாலடிக் காக்கிச்
சேவையைத் தமிழ்மொழிக் காக்கிப்
பொருந்திய லமுதை ஆர்வலர்க் காக்கிப்
புலமையை அடக்கத்திற் காக்கி
மருந்தெனும் கருணை எம்மனோர்க் காக்கி
மனத்துற வெய்திய பெரியோன்
அருந்தமிழ்க் குரிசில் வேங்கட ராசன்
அடிமலர்க் குரியதிந் நூலே.

என்ற பாடலால் 'அன்புப் படையலாக்கி' மகிழ்ந்தேன். அக்காலத்தில் இந்நூல் பல இளம் இலக்கிய ஆர்வலருக்குத் தமிழ் விருந்தாக இருந்து வந்தது என்பதைப் பலர் என்னிடம் சொன்னதுண்டு. அக்காலத்தில் உயர்நிலைப் பள்ளி மாணவியாக இருந்த திருமதி சவுந்திரா கைலாசம் அவர்கள் காலச்சக்கரத்தில் வெளி வந்த என் கட்டுரை களைச் சுவைத்து மகிழ்ந்ததாகவும் குறிப்பாகப் பாரதி தாசனின் 'குடும்ப விளக்கில்' உள்ள ஒரு பாடலின் சில அடிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற செந்தமிழ்த் தீனி' என்ற கட்டுரை தம் மனத்தை மிகவும் கவர்ந்ததாகவும் இப்போது நினைவு கூர்ந்து சொல்லி மகிழ்வதை இப்போது நேரில் கேட்டு மகிழ்கின்றேன். இஃது 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக' இனிக்கின்றது.

புலவரின் துறையூர் வருகை : நான் துறையூரில் பணியாற்றிய காலத்தில் ஒருமுறை பள்ளி ஆண்டு விழாவில் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றுமாறு நம் புலவர் பெருமானை அழைத்திருந்தேன். அந்த விழாவில் 'கம்பனில் புதுமை' என்ற தலைப்பில் பேசி மாணவர் உள்ளங்களைக் கவர்ந்தார்; ஊர்ப் பெருமக்களின்பாராட்டு தலையும் பெற்றார். இப்புலவர் பெருமான் என் சிறு குடிலுக்கு எழுந்தருளி விருந்துண்ட போது நான் பெற்ற மகிழ்ச்சி, கண்ணன் தூது சென்றபோது விதுரன் திருமாளிகைக்குச் சென்று விருந்துண்டபோது விதுரன் பெற்ற மகிழ்ச்சியையொத்திருந்தது என்று சொல்லுவேன். விதுரன், 'மருந்து வந்தனை அமரருக்கு அருளிய மாயோன் விருந்து வந்தனன்!' என்று கூறி உளம் உருகுகின்றான். அவனது உணர்ச்சியை வில்லிபுத்தூரார்,

உள்ளினான்; உணர்ந்து, உள்ளமும்
உருகினான்; எழுந்து
துள்ளினான்; விழுந்து இணைஅடி
சூடினான்; துயரைத்
தள்ளினான்; மலர்த்தடக் கையால்
தத்துவ அமுதை
அள்ளி னான்எனக் கண்களால்
அருந்தினான் அளியோன்[1]

என்று காட்டுவர். பின்னர் உணர்ச்சி வசப்பட்டு,

முன்ன மேதுயின் றருளிய
முதுபயோ ததியோ!
பன்ன காதிபப் பாயலோ!
பச்சைஆல் இலையோ!

1. வில்லிபாரதம்—கிருட்டிணன் தூது—77

சொன்ன நால்வகைச் சுருதியோ!
சுருதிநீ எய்தற்கு
என்ன மாதவம் செய்தது
இச்சிறு குடில்!'[2]

என்று பேசுகின்றான். அத்தகைய உணர்ச்சி அன்று என்பாலும் எழுந்தது. விதுரன் திருமாளிகைக்கு எழுந்தருளியவன் பகவான். என் சிறு குடிலுக்கு எழுந்தருளியவர் பரம பாகவதர். ஆகவே என் உணர்ச்சி விதுரனின் உணர்ச்சியை விட உயர்ந்தது என்று கருதுகின்றேன்!

அடுத்த நாள் துறையூர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளியில் ஒருசிறு இலக்கியக் கூட்டம் ஏற்பாடு செய்யப் பட்டது. உள்ளூர்ப் பெரியவர்கள் பலர் வந்திருந்தனர். புலவர் பெருமான் 'சிந்தாமணி' என்ற பொருள்பற்றி அரியதோர் உரை ஆற்றினார். மிக உயர்தரமான பேச்சாக அமைந்தது இது. அன்று இரவு திரு R. கிருஷ்ண சாமி ரெட்டியார் புலவர் பெருமானுக்கு நல்லதொரு விருந்தளித்தார். உள்ளூரிலிருந்தும் பக்க ஊர்களிலிருந்தும் சுமார் நூறு பிரமுகர்கள் வந்திருந்து சிறப்பித்தனர்.

காரைக்குடியில் பணியாற்றியபோது சென்னைப் பல்கலைக்கழக கல்வி ஆலோசனைக் குழுவின் (Academic Council) அழகப்பா ஆசிரியர்க் கல்லூரிப் பேராசிரியர்கள் உறுப்பினராக என்னைத் தேர்ந்தெடுத்தனர், அந்தக் குழு விலிருந்து பல்கலைக் கழகப் பேரவைக்கு (Senate) தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப் பெற்றேன். இதனால் (1953-1956) ஆண்டுகளில் ஆண்டிற்கு நான்கு முறைக் காரைக்குடியி லிருந்து சென்னை வரும் வாய்ப்புகள் இருந்தன. கூட்டங் களுக்கு வரும்போதெல்லாம் இவர் இல்லத்தில் தான் (35, இராக்கியப்ப முதலித் தெரு, மயிலை) தங்குவேன். இக்காலங்களில் ஒவ்வொரு முறையிலும் ஏதாவது ஒன்றிரண்டு புதிய ஆய்வுக் கருத்துகள் என் சொத்தாகச் சேர்ந்து விடும்.

2. வில்லிபாரதம்—கிருட்டிணன் தூது—78

எனக்கு ஏற்பட்ட தெளிவு : இவருடன் நெருங்கிப் பழகிய இருபதாண்டுக் காலத்தில் இலக்கணத்திலும் இலக்கியத்திலும் எத்தனையோ பகுதிகளில் தெளிவு ஏற்பட்ட போதிலும் குறிப்பாக இரண்டு பகுதிகளை நினைக்க முடிகின்றது. தமிழ் இலக்கண்த்தில் மிகவும் நுட்பமாக அறிய வேண்டியவை உள்ளுறையும் இறைச்சியும். இவற்றுள் இறைச்சிப்பொருள் மிகமிக நுட்பமானது. புலவன் தான் சொல்லுகின்ற உவமத்தோடு ஒத்துக்கூறக் கருதிய பொருள் வந்து முடியுமாறு அமைந்திருப்பது உள்ளுறை உவமம். புலவன் தான் கூறிய செய்யுளின் பொருளுக்குப் புறத்தே தோன்றுவது இறைச்சி. இரண்டிற்கு முள்ள வேற்றுமை இதுவே என்றும் 'இறுதங்கு' என்ற அடியிற் பிறந்த பெயர்தான் 'இறைச்சி' என்றும் விளக்குவர். அடிக்கடிப் பார்க்க நேரிடும்போதெல்லாம் எண்ணற்ற எடுத்துக்காட்டுகளைக் கொண்டு தெளிவிப்பார். 'நீர் நிறம் கறப்ப' (அகம்—18) என்ற அகப்பாடலைக் கொண்டு விளக்கியமை இன்றும் என் மனத்தில் பசுமையாக உள்ளது. மேலும் 'இறைச்சியிற் பிறக்கும் பொருளும் உண்டு' என்று விளக்கினது மிகமிக அற்புதம். வடமொழி இலக்கணத்தையும் பொருத்திக் காட்டி விளக்கினமையால் மேலும் எனக்குத் தெளிவு ஏற்பட்டது.[3]

எனக்குத் தெளிவு ஏற்பட்ட மற்றொரு துறை வடமொழியாளர் கண்ட 'ரஸ தத்துவம்' இந்த அரிய கட்டுரையை இலங்கையிலுள்ள ஒரு சங்க மலருக்கு எழுதினார். சுவையியல் என்பது கட்டுரையின் பெயர். அவர் சொல்லச் சொல்ல நானே எழுதினேன். செவ்வைப்படியும் (Fair copy) நானே எழுதினேன். ''மக்கள் உள்ளத்தில் ஒவ்வொரு கால் எழும் உள வேறுபாடு பாவம் எனப்படும்.

---

3. கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா மலரில் 'இறைச்சிப் பொருள்' பற்றிவெளிவந்துள்ள இவர்தம் கட்டுரையில் இறைச்சியின் விளக்கம் விரிவாகத் தரப் பெற்றுள்ளது.

பாவங்களுள் சில நிலை பெற்றிருக்கும்; பல சிறிது நேரம் நின்று மறையும். தனக்கு ஒற்றுமையுடையனவும் வேற்றுமையுடையனவுமான பிற பாவங்களால் கேடுறாமல் ரஸமாகிச் (சுவை) சமையும் அளவும் நிலை பெற்றிருக்கும் பாவம் ஸ்தாயிபாவம் (நிலையான பாவம்) எனப்படும். அது காதல், சோகம் முதலாக ஒன்பது வகைப்படும். உலகியலில் உண்டாகும் காதல் முதலியவற்றிற்குக் காரணமாயும் காரியமாயும் துணைக் காரணமாயும் இருப்பவை கவிஞனின் வாக்கிலும் நடிகனின் அபிநயத்திலும் அறிவிக்கப்படும்பொழுது முறையே விபாவம். (நன்கு தோன்றச் செய்வது) என்றும், அனுபாவம் (விபாவத்துடன் இயைந்துள்ளது) என்றும், சஞ்சாரி பாவம் (துணை செய்யும் உணர்வுகள்—இது நிலை பேறில்லாத பாவம்) என்றும் வழங்கப்பெறும்.

காரணம்—விபாவம்
காரியம்—அனுபாவம்
துணைக்காரணம்—சஞ்சாரிபாவம்

என்றும் வழங்கும். இந்த விபாவ அனுபாவங்களால் வெளிப்படுகின்ற ஸ்தாயிபாவமே 'ரஸம்' அல்லது 'சுவை' என்று பெயர் பெறும்'' என்று விளக்கினார்.

மேலும் காரணமாகிய இந்த விபாவம் 'ஆலம்பன விபாவம்' என்றும், 'உத்தீபன விபாவம்' என்றும் பெயர் பெறும் என்றும்; காரியமாகிய அனுபாவமும் இரண்டு வகைப்படும் என்றும் விளக்கினார். இன்னும் தொல்காப்பியர் கூறும் 'புது முகம் புரிதல்' (மெய்ப்-13) முதலியனவும், 'கூழை விரித்தல்' (மெய்ப்-14) முதலியனவும் அனுபாவ வகையினுள் அடங்கும் என்றும் ஒப்பிட்டு விளக்கினார். சந்திப்பு நேரிடும் போதெல்லாம் இந்த இரண்டு நூற்பாக்களின் கருத்தை விளக்கிக் கொண்டே இருப்பார். ரஸம் பற்றிய கருத்தை என் 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' (1964). 'பரணிப் பொழிவுகள்' (1972),

'கண்ணன் பாட்டுத் திறன்' (1982) என்ற நூல்களில் தெளிவாக்கியுள்ளேன்.

காரைக்குடி வருகை : நான் காரைக்குடியில் பணியாற்றிய காலத்தில் (1950—60) ஒரு முறை என் விருந்தினராக வந்திருந்தார் புலவர் பெருமான். அப்போது காரைக்குடியில் மிகுந்த வறட்சி நிலை நிலவியது. திரு சா. கணேசன் (கம்பனடிப் பொடி), திரு. ராய. சொக்கலிங்கம் முதலிய பெரியார்கட்கு இப்பெருமானை அறிமுகம் செய்து வைத்தேன். புலவர் பெருமானைக் கண்டதில் அவர்கள் பெரு மகிழ்வுற்றனர்- மூன்று நாட்கள் தங்கியிருந்து திரு அரங்கம் சென்றார். நான் திரு அரங்கம் வரையிலும் கூடச் சென்று விட்டு வந்தேன்.

இறுதிச் சந்திப்புகள் : இவை நான் திருப்பதியில் பணியாற்றியபோது (1960 முதல்) நிகழ்ந்தன. 1963-ஆகஸ்டு 28-ம் நாள் திருநாடு அலங்கரித்த வரை நான் திருப்பதியிலிருந்து மாதம் ஒருமுறை இவரைச் சேவித்துத் திரும்புவதுண்டு. ஒருமுறை என்னிடம் கூறிக் கண்ணீர் விட்ட காட்சி இன்னும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது. நான் வந்த சமயம் இவருடன் வசித்தவர்கள் இவர் தம் அண்ணியார் (வயது முதிர்ந்த மூதாட்டி) மருமகள் செல்லம்மாள் (கைம் பெண்), பேத்தி வசந்தா (எம்.எஸ்சி. படித்துக் கொண்டிருந்தவள்), பேரன் S.கிருட்டிண மூர்த்தி (பொறியாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்தவன்) கோவிந்தன் என்ற பணியாளன், இல்லத்தின் பின்புறம் கார் நிற்கும் இடத்தில் பருப்பு மூட்டைகளை அடுக்கி வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து கொண்டிருந்த ரெட்டி இளைஞர் ஒருவர் (திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவா ) திரு. R, சக்கரவர்த்தி அய்யங்கார் (வாசன் கம்பெனி மேலாளர்) ஆகியோர். திரு. அய்யங்கார் பகல் நேரத்தில் இவருடன் இருப்பார். தனக்கு ஏதாவது தேவைப்படுமானால் 'கோவிந்தா' என்று குரல் கொடுத்து பணியாளனைத்தான் அழைப்பது வழக்கம். அப்பொழுது

நம் புலவர் பெருமான் படுத்து அடிக்கடி எழுந்திருக்க முடியாத நிலை.

ஒரு முறை புலவர் பெருமான் என்னிடம் சொன்னது. ''நான் 'கோவிந்தர்' என்று குரல் கொடுப்பேன்: கோவிந்தன் அரைச் செவிடு. கொல்லைப் புறத்தில் வெந்நீர் தயாரித்துக் கொண்டிருப்பான். நான் குரல் கொடுத்தது அவனுக்குக் கேட்டிராது. கேட்டிருந்தால் அவசியம் வந்து 'என்ன வேண்டும்?' என்று கேட்டிருப்பான். 'கோவிந்தன்' என்ற குரல் கொடுத்ததால் கோவிந்தனே வர வேண்டும் என்பதில்லை. 'தாத்தா கூப்பிடுகின்றார்' என்று இல்லத்திலுள்ளார் யாராவது வந்து 'என்ன வேண்டும்?' என்று கேட்கலாம். 'சாகப் போகின்ற கிழவனுக்கு என்ன வேண்டியிருக்கின்றது?' என்று அண்ணியார் (கிழவி) அசட்டை செய்திருக்கலாம். மருமகள் பின்புறமாக சுவரருகில் நின்று கொண்டு அடுத்த வீட்டு அம்மாமியிடம் அரட்டைக் கச்சேரி நடத்திக் கொண்டிருப்பதால் என் குரல் அவளுக்குக் கேட்டிராது. பேத்தி வகுப்புத் தோழியுடன் ஏதாவது பாடம் பற்றிக் கலந்து ஆய்ந்து கொண்டிருப்பாள்; அவளுக்கும் என் குரல் எட்டியிராது. ஆனால் 'குன்றம் ஏந்திக் குளிர் மழை காத்த' கோவிந்தனுக்குக் கேட்டிருக்கும். 'நான் கசேந்திராழ்வானாக இருந்திருந்தால்-அவனுக்கிருந்தபக்தி எனக்கிருந்திருந்தால்—அவன் வந்திருப்பான். என்ன செய்வது? அந்தப் பக்குவம் எனக்கு வரவில்லை. இன்னும் என் உறவினர்கள், சுற்றத்தினர் பற்றிய பற்று அறவில்லையே. என்னிடம் இன்னும் செல்வமிருந்தால் என்னைக் கவனிப்பார்களோ? என்னவோ? வங்கியில் ரூ26/= தான் இருப்பதாக நினைவு'' என்று சொல்லித் தாரைத் தாரையாகக் கண்ணீர் வடித்தார்.

சோர்வி னால்பொருள் வைத்ததுண் டாகில்
சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து
ஆர்வி னவிலும் வாய்திற வாதே
அந்த காலம் அடைவதன் முன்னம்
மார்வம் என்பதோர் கோவில் அமைத்து
மாத வன்என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூவிட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலு மாமே.[4]

என்ற பெரியாழ்வார் பாசுரத்தை நினைத்துக் கொண்டேன். என் கண்களும் குளமாயின.

ஒரு நாள் திரு. R. சக்கரவர்த்தி அய்யங்காரிடமிருந்து தந்தி வந்தது—உடனே புறப்பட்டு வருமாறு. தந்திப் படி திருப்பதியிலிருந்து சென்னை வந்து சேர்ந்தேன். "இப்போது திரு. ரெட்டியார் பேச முடியாது. மயக்க நிலை (Coma) சூழ்ந்து கொண்டது. அரசினர் மருத்துவமனையில் சேர்த்திருக்கின்றோம். பேச்சு நிற்பதற்கு முன் முதல் தந்தி உங்களுக்குத் தரும்படி அவரது கட்டளை. அப்படியே செய்தேன்" என்றார். உடனே மருத்துவ மனைக்கு விரைந்தேன். உணவு, குளியல் முதலியவற்றைக் கவனியாமல் நானும் திரு. அய்யங்கார் அவர்களும் மாற்றி மாற்றி மருத்துவ மனையில் இருந்து வந்தோம். இப்படி நான்கு நாட்கள் இருந்ததாக நினைவு. ஒரு நாள் நள்ளிரவு ஆவி பிரிந்தது. அப்போது நானும் அய்யங்காரும் அரைமணி நேரம் மருத்துவ மனையை விட்டு வெளியில் ஏதோ ஓர் அலுவல் நிமித்தம் சென்றிருந்தோம். வந்து பார்த்தால் புலவர் பெருமான் படுக்கையில் இல்லை. விசாரித்ததில் அவர் திருமேனி பிணம் இருக்கும் அறையில் பெட்ஷீட் சுற்றப்பட்டு வைக்கப் பெற்றிருந்ததைக் கண்டோம். தெர்மாஸ் ஃபிளாஸ்க், ஸ்டீல் கூஜா, டம்ளர் முதலியவை அனைத்தையும் மருத்துவமனைப் பணி ஆட்கள் மறைத்து விட்டனர். பாவிகள்! புலவர்

4. பெரியாழ். திரு. 4.5.13

பெருமான் அணிந்திருந்த ஆடைகளையும் 'கவர்ந்து கொண்டனர்.' வாடகைக் காரில் மயிலாப்பூர் வந்து உறங்கிக் கொண்டிருந்த பேரன் கிருட்டிணமூர்த்தியை எழுப்பி அவனிடம் திருமேனியை எங்களிடம் ஒப்படைக்கு மாறு கடிதம் பெற்று வந்தோம். முறைப்படி மருத்துவ மனையாரிடம் திருமேனியைப் பெற்றோம். 'பெட்ஷீட் மருத்துவ மனைக்குரியது' என்று சொல்லி அதை எடுத்துக் கொண்டனர். 'பிறந்த மேனியாக' இருந்த புலவர் பெருமானின் திருமேனியை' என்னுடைய பட்டு அங்கவஸ் திரத்தால் மூடி எடுத்துக் கொண்டோம்.

மருத்துவ மனையின் ஆம்புலன்ஸ் வேன் பழுதடைந்து கிடந்தது. மாநகராட்சியில் முயன்றும் பயன் இல்லை. இம்முயற்சியில் மூன்று மணி நேரம் கழிந்தது. இறுதியாக அதிகக் கட்டணம் செலுத்தி வாடகைக் காரில் திருமேனியை இல்லத்திற்குக் கொணர்ந்தோம். இல்லத் திற்கு வரும்போது அதிகாலை மணி ஐந்தாகி விட்டது. செய்தி பரவியது. வானொலியில் செய்தி பரப்பப் பெற்றதாக நினைவு. சென்னையிலிருந்த ஒன்றிரண்டு உறவினர்கள் வந்து சேர்ந்தனர். செய்தியறிந்த புலவர் பெருமக்கள் பெருந்திரளாக வந்து குவிந்தனர். பல சங்கங்கள் சார்பாக மலர் வளையங்கள் திருமேனியின்மீது வைக்கப் பெற்றன. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை சார்பாக டாக்டர் மு. வரதராசன் மலர் மாலை சூட்டினார். எல்லோரும் துக்கச் சூழலில் தவித்துக் கொண்டிருந்தனர்.

நானும் திரு. R. சக்கரவர்த்தி அய்யங்காரும் கோவிந்தன் பருப்பு ரெட்டியார் இவர்களின் துணை கொண்டு வைணவ மரபுப்படி திருமேனி சுடுகாட்டிற்குச் செல்ல வேண்டிய ஏற்பாடுகள் செய்வதில் ஈடுபட்டோம். பிற்பகல் மூன்று மணி வரை ஏற்பாடுகள் நடைபெற்ற வண்ணமிருந்தன. திருமேனிக்குத் தீர்த்த மாட்டி, இருக்கையில் சாயவைத்து ஆடை உடுத்தித் திருமண் சாத்தி மாலைஅணிவித்தபோது

'அப்பொழு தலர்ந்த செந்தாமரையினைவென்றதுபோல்' அவர் திருமுகமண்டலம் பிரகாசித்ததை அனைவரும் கண்டு வியந்தனர். புலவர் பெருமான் எழுந்து அனைவரிடம் உரையாடுவது போன்ற ஒருவித பிரமை ஏற்பட்டது. இன்றளவும் சில சமயம் கனவுகளில் புலவர் பெருமானிடம் உரையாடுவது போன்ற காட்சிகள் நேரிடுகின்றன.

மாலை மணி மூன்று. மயிலாப்பூர் இராக்கியப்ப முதலி தெருவிலிருந்து சுமார் ஒன்றரை ஃபர்லாங்க் தொலைவிலுள்ள சுடுகாட்டிற்குத் திருமேனியைச் சுமந்து செல்ல நான்கு பேர்கள் வேண்டுமே. மாநகராட்சி மூலம் ஒருவித ஏற்பாடும் செய்யவில்லை. இந்த நிலையில் நான் திரு. அய்யங்கார், பணிமகன் கோவிந்தன், பருப்பு ரெட்டியார் ஆகிய நால்வரும் திருமேனியைச் சுமந்து செல்லும் பேறு பெற்றோம். மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையை இழந்து அவரைச் சரியாக நினைத்துப் பார்க்க முடியாத அடியேனுக்கு என் தந்தைக்குச்செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து விட்டதாக (அப்போது என் வயது 47) மன நிறைவு ஏற்பட்டது. இன்று திரு. அய்யங்கார் இல்லை; கோவிந்தன் எங்கோ பணியில் அமர்ந்து வேலை பார்க்கின்றான். பருப்பு ரெட்டியாரும் எங்காவது சுறுசுறுப்பாக வாணிகம் நடத்திக் கொண்டிருப்பதாகக் கருதுகின்றேன். இந்தக் கட்டுரை எழுதியதால் நான் இருக்கின்றேன் என்பது தெளிவு. எழுபத்து மூன்று அகவையைத் தாண்டும் நிலையில் உள்ள அடியேன் திருநாடு அலங்கரிப்பது என்றோ?

இதுஎன வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவது இல்லை.[5]

5. சிலம்பு—நடுகல் காதை—அடி 181-82

## 4. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்

திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் ஆரணி கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணி யாற்றி வந்தவர். பன்மொழிப் புலவர் வே. வேங்கட ராஜுலு ரெட்டியார் அவர்களின் பரிந்துரையின் பேரில் டாக்டர் அப்துல் ஹுசைன் நயினர் (சென்னைப் பல்கலைக் கழக உருது—அறபு—பாரசீக மொழித்துறைப் பேராசிரியர்) அவர்கட்கு சீறாப்புராணத்தை வெளியிடும் பணியில் உதவுவதற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத் தில் பணிபுரிந்து வந்தார். அக்காலத்தில் இவர் மயிலாப்பூர் நாட்டு சுப்பராய முதலித் தெருவில் குடியிருந்தார்; அப்போது பன்மொழிப் புலவர் 13, வடக்கூர் செல்வ விநாயகர் கோவில் தெருவிலுள்ள இல்லத்தில் வாசம். சுருங்கச் சொன்னால் சுமார் நூறு அடித் தொலைவில் இருவரும் குடியிருந்தனர். எப்பொழுதும் திருரெட்டியார் வீட்டில் இவரைக் காணலாம். 1944-டிசம்பர் என்பதாக நினைவு; நான் வித்துவான் தேர்வுக்குப் படித்து வந்த காலம். சில இலக்கண நூல்களில் ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக 25 நாட்கள் திரு. ரெட்டியார் இல்லத்தில் தங்கியிருந்தேன். அப்போது என்னைத் திரு. ரெட்டியார் திரு. முதலியாருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அப்போது சென்னையில் உணவுப் பஞ்சம் தலை விரித்தாடிய நிலை; இரண்டாம் உலகப்பெரும் போர் நடைபெற்றுக் கொண்டிருந்த காலம்.

சில சமயம் திரு. ரெட்டியாருடன் பல்கலைக் கழகம் போய் வந்து கொண்டிருந்தேன். மின்னூர்தியில் (Tram Car) சிவஞான முனிவரின் முதல் சூத்திர விருத்தி பாடம் கேட்டு வந்தேன். ஒரு நாள் திரு முதலியாரை நோக்கி, 'சுப்புரெட்டியாருக்கு அகநானூறு—களிற்றி யானை நிரையில் முதல் ஐம்பது செய்யுட்களுக்குப் பாடம் சொல்லும்' என்று பணித்தார் பன்மொழிப் புலவர். இங்ஙனம் திரு. முதலியாரிடம் அகநானூறு பாடம் கேட்கும் பேறு பெற்றேன். சங்க இலக்கியம் எட்டுத் தொகை நூல்களில் அகநானூறும் பதிற்றுப் பத்தும் தனி யாகப் படிப்பவர்கட்குக் கண்ணைக்கட்டி காட்டில் விட்ட மாதிரி இருக்கும். உரையின் துணைகொண்டு படித்தாலும் கருத்தை மனத்தில் வாங்கிக் கொள்வதே சிரமம். இந்நிலையில் கவிதையநுபவம் எப்படி ஏற்படும்? நல்லா சிரியர் பாடம் சொன்னால்தான் இவற்றில் தெளிவு ஏற்படும். பாடம் கேட்கும்போது கூட இதில் சிரமத்தை உணரலாம். திரு. முதலியார் அவர்கள் பாடம் சொல்லும் போது சங்க இலக்கியங்களின் போக்கையும் ஆங்காங்குத் தொட்டுக் காட்டி விளக்குவார்கள்.

நல்லாசிரியரின் இயல்புகளைப் பற்றி நன்னூலார் கூறுவது:

குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியல் அறிவொடு உயர்குணம் இனையவும்
அமைபவன் நூல்உரை ஆசிரி யன்னே.[1]

என்பது. உயர் குடிப்பிறப்பு, கருணை, பெருந்தகைமை, பன்னூற் பயிற்சி, சொல்வன்மை, பூமி மலை நிறைகோல் இவற்றை ஒக்கின்ற குணங்கள், உலகியலறிவு முதலான குணநலங்கள் அமைந்திருப்பவனே நூல் கற்பிக்கும் நல்லாசிரியராவார் என்பது இதன் கருத்து. நிலம்

1. நன்னூல்—26

பொறுமைக்கும் மலை நீர்வளம் தரும் கொடைக்கும் தராசு நடுநிலைக்கும் மலர் முகமலர்ச்சிக்கும் உவமைகளாகக் காட்டப் பெற்றுள்ளன. இந்த நற்குணங்கள் யாவும் திருமுதலியாரிடம் அமைந்திருத்தலைக் கண்டேன். கற்பிக்கும் முறை—பாடம் சொல்லும் முறை—எப்படியிருக்க வேண்டும் என்பதை,

உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பிமுக மலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்துஅவன்
உளங்கொளக்
கோட்டமில் மனத்தின்நூல் கொடுத்தல் என்ப.[2]

என்ற நூற்பாவால் விளக்குவர் அவ்வாசிரியர். 'கொள்வோன் கொள்வகை அறிந்து' என்பதற்குப் பதிலாகத் தொல்காப்பியர் 'கொள்வோன் உணர்வகை அறிந்து' என்று கூறுவர். பள்ளி மாணாக்கர்போல் நான் தேர்வுக்குப் படித்தாலும், இலக்கியத்தைச் சுவைக்கும் இயல்பு என்னிடம் இருப்பதைக் கண்ட முதலியார் அவர்கள் நான் உணர்ந்து அநுபவிக்கும் முறையில் பாடம் சொன்னார்கள் என்பதை இப்போது நினைவு கூர முடிகின்றது.

அகநானூறு பாடத்தைத் தொடங்குமுன் அக இலக்கியத்தின் அடிப்படைக் கருத்தினைச் சுருக்கமாக விளக்கியதை நினைவு கூர்கின்றேன். "இன்ப உணர்ச்சியை—காமத்தை—அடிப்படையாகக் கொண்டது அக இலக்கியம். பருவம் நிரம்பிய உயர்திணை அஃறிணை உயிர்க்கெல்லாம் பொதுவாய் அமைந்து கிடப்பது காம உணர்ச்சி. இவ்வுணர்ச்சிபிறவியிலேயேஉடம்போடு ஒட்டிய இயல்புடையது. இத்தகைய இன்ப உணர்வை—காமத் துடிப்பை—சிறந்த முறையில்நெறிப்படுத்திய பொருளாகக்

2. நன்னூல்—36

கொண்டவை அகத்திணைப் பாடல்கள். இந்தப் பாடல்கள் சித்திரித்துக் காட்டும் அகத்திணை உலகில் தலைமை மாந்தர்களாக விளங்குவோர் தலைவனும் தலைவியும். இவர்தம் காதல் தழைத்து வளர்ந்து கணவன்—மனைவியாக ஆவதில் பல நிலைகள் உள்ளன. இவர்களைப் பெயர் சுட்டிக் கூறும் வழக்கம் இல்லை. அக இலக்கியத்தில் இவர்தம் காதல் நிகழ்ச்சிகளாக வருவன சமுதாயத்தினின்றும் நல்லனவாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றவையாகும். 'மக்கள் நுதலிய அகன்' என்று தொல்காப்பியரும் இதனைக் காட்டுவர். அகத்திணையில் காணப்பெறும் தலைவனிடம் ஒரு சில குறைகள் காணப்பெற்றாலும் தலைவி ஒரு குறிக்கோள் மகளாகவே சித்திரித்துக் காட்டப் பெறுகின்றாள். இல்லத்தில் சொல்லுரிமை உடையவள் இவள் என்பதைத் தொல்காப்பியர் 'அஞ்ச வந்த உரிமை' என்று சிறப்பிப்பர். இல்லற வாழ்க்கையில் இவர்கள் இருவரும் ஓருயிரும் ஈருடலும் போன்றிருப்பர்; இவர்தம் தொடர்பு பிறவி தோறும் தொடர்ந்து வருவதாகக் கூறப்பெறும்.

''தலைவியின் நற்றாய், தந்தை, செவிலி, தோழி, பரத்தையர் ஆகிய அறுவர் ஏதோ ஒரு முறையில் தலைமக்களுடன் உறவுடையோராகக் கொள்ளப் பெறுவர். இவர்களுள் தோழியின் பெரும் பங்கு களவு நெறியிலும், செவிலியின் பங்கு கற்பு நெறியிலும் காணப்பெறும். அகவுலகில் தோழியைப்போன்ற ஓர் அற்புதப் படைப்பினைக் காண்டல் அரிது. இவளிடம் மட்டிலும் தலைவி நன்கு நெருங்கிப் பழகுவாள். தலைவனின் தந்தை, தாயைப் பற்றி நேரான தொடர்புள்ள குறிப்புகள் அக இலக்கியத்தில் இடம் பெறவில்லை; தலைமக்களுடன் ஏதோ ஒரு முறையில் தொடர்புடையவர்கள் கண்டோர், அறிவர், பாணன், பார்ப்பார், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர், தேர்ப்பாகன் என்ற ஒன்பதின்பர். இவர்களுள்ளும் பாணன், தேர்ப்பாகன் ஆகியோரின் பங்கே அதிகமாகக் காட்டப் பெறுகின்றது.

இந்தக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு அகப் பாடல்களைக் கற்க வேண்டும்'' என்று கூறினார்கள் திரு. முதலியார் அவர்கள்.

திரு. முதலியாரவர்கள் கற்பித்த முறை டி. கே. சி. அவர்கள் ஒரு பாடலை விளக்கும் முறைபோல் இருந்தது. பாடலை அறியச் செய்ததை விட உணரச் செய்ததுதான் இவர்கள் கற்பித்த முறையின் உயிராக இருந்தது. பாட்டின் கருத்தை விளக்கும் போக்கில் 'கூற்றை' விளக்கு வார்; பாட்டு எழுந்த நிலையைத் தெளிவாக்குவார். முதலில் பாடலை இசையுடன் பாடுவார்; அநுபவித்துப் பாடுவார் ரசிகமணி டி. கே. சி அவர்கள் பாடுவதைப் போல! அடுத்து, சொற்களின் புணர்ச்சியைப் பிரித்துக் கொண்டே வேறோர் இசையில் பாடுவார். பாடிக் கொண்டே போகும்போது கடின சொற்களின் பொருளை விளக்கிக் கொண்டே போவார். பாடலின் இறுதியடியைப் பிடித்துக்கொண்டு கீழிருந்து மேலே போவார்—தெருவில் நெசவாளர்கள் பாவு ஓடுகிற மாதிரி. பாம்பு பிடிப்பவன் முதலில் பாம்பின் தலையை அமுக்கிக் கொள்ளும் போது பாம்பு உடல் முழுவதையும் நெளித்துக் காட்டுவது போல இப்போது விரைப்பாக இருந்த பாடலின் வடிவம் கட்டு சிறிதளவு தளர்ந்ததுபோல் காட்டும். சிவகாசி வெடிச்சரத்தின் முடிச்சினை அவிழ்த்து விட்டு அச்சரத்தை ஆட்டினால் வெடிகள் தனித்தனி யாகப் பிரிந்து உதிர்வது போல்இவர் பாடலைக்கீழிருந்து மேலே பாடிக் கொண்டே போகும்போது சொற்களின் பொருளும் பாட்டின் முழுப்பொருளும் பாடலிலிருந்து கட்டவிழ்த்துக் கொண்டு என் மனத்தில் பாய்ந்துவிடும்.

'நீர் நிறம் கரப்ப' (அகம்—18) என்ற அகப்பாட்டை விளக்கின பாங்கினை இப்போது நினைவுகூர்கின்றேன்.

நீர்நிறம் கறப்ப ஊழுறு புதிர்ந்து
பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்றுக்

கராஅந் துஞ்சுங் கல்லுயிர் மறிசுழி
மராஅ யானை மதந்தப ஒற்றி
உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தங்
கடுங்கட் பன்றியின் நடுங்காது துறந்து
நாம அருந்துறைப் பேர்தந் தியாமத்
தீங்கும் வருபவோ ஓங்கல் வெற்ப!
ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லளென் தோழி யாவதும்
ஊறில் வழிகளும் பயில வழங்குநர்
நீடின் றாக இழுக்குவர் அதனால்
உலமரல் வருத்தம் உறுதுமெம் படப்பைக்
கொடுந்தேன் இழைத்த கோடுயர் நெடுவரைப்
பழந்தூங்கு நளிப்பில் காந்தளம் பொதும்பில்
பகல்நீ வரினும் புணர்குவை அகன்மலை
வாங்கமைக் கண்ணிடை கடுப்பயாய்
ஓம்பினள் எடுத்த தடமென் தோளே.

இது கபிலர் பாடியது. தோழிக்கூற்று. 'இரவு வருவானைப் பகலில் வா' என்றது. தலைவன் இரவுக் குறியை[3] நாடி அடிக்கடி வந்து கொண்டிருக்கின்றான். தோழி இவனைப் பார்த்து, 'வழியில் பல ஆபத்துகள் உள்ளன. ஒரு நாள் உனக்குத் துன்பம் வந்துற்றாலும் மறு நாள் என் தலைவி உயிர் வாழாள். இதனால் எங்கட்கு வருத்தம் வந்தெய்தும். ஆதலால் இரவில் வாரற்க. எங்கள் தோட்டத்தை அடுத்துள்ள மலைச்சாரலில் பழச் சோலை ஒன்று உள்ளது. ஆங்கு நீ பகலில் வருக. தலைவி யைச் சந்திக்கலாம்' என்று பாடல் கருத்தை விளக்குவார்.

பாடலை ஒரு முறை இசையுடன் படிக்கின்றார்; அடுத்த முறை பதம் பிரித்துப் படிக்கின்றார். பின்னர் கீழிருந்து மேலே போகின்றார். பாடலின் முற்பகுதி தலைவன் இரவில் வரும் வழியை விளக்குகின்றது என்றும்,

3. இரவில் சந்திக்கும் இடம் இரவுக்குறி; பகலில் சந்திக்கும் இடம் பகற் குறி.

இரண்டாவது பகுதி தலைவன் வரும் வழியில் அவனுக்கு ஏதாவது விபத்து நேரிட்டால் தலைவி உயிர் வாழ முடியாது என்பதைக் கூறுகின்றது என்றும், மூன்றாவது பகுதி தலைவியின் தோட்டத்திற்கு அருகிலுள்ள பழங்கள் தொங்கும் சோலைக்கு பகலில் வந்தால் தலைவியைச் சந்தித்து மகிழலாம் என்றும் கூறி விளக்குகின்றார்.

நான்காவது முறை படிக்கும்போது கடின சொற்களின் பொருள் விளக்கம் தருகின்றார். கரப்ப—மறைய, ஊழ் உறுபு—முதிர்ந்து; பூமலர்—அழகிய மலர்கள்; கஞலிய—நெருங்கிய; கடுவரல்—கடுகிவருதல்; கான்யாறு-காட்டாறு; கரா—முதலை; துஞ்சும்—தங்கும்; கல்உயிர் மறி கழி—கல்லில் மோதி மீளும் சுழிகள்; மரா—(இனத் தோடு) மருவாத; மதம்தப—மதம் கெட; ஒற்றி—மோதி; உரா—வலியுற்று; ஈர்த்தல்-இழுத்தல்; உட்குவரும்-அச்சம் தோன்றும்; நீத்தம்-வெள்ளம்; கடுங்கண்-அஞ்சாமை; பன்றியின்-பன்றியைப் போல; நடுங்காது துறந்து-நடுங்குதலின்றிக் கடந்து ஏறி; நாம-அச்சந் தரும்; பேர்தந்து-பேர்ந்து (தாண்டி); யாமம்-நள்ளிரவு; ஈங்கும்-இத்தகைய இடத்து; வருபவோ-வருவாரும் உளரோ; விழுமம்-துன்பம்; வழிநாள்-மறுநாள்; ஊறு-இடையூறு; பயில வழங்குநர்-பலகாலும் போய் வருவா; இழுக்குவர் = தவறு எய்துவர்; உலமரல்-மனம் சுழலுதல்; வாங்கு-வளைந்த; அமை-மூங்கில்; கண்இடை-கணுக்கட்டு நடுவில்; கடுப்ப-ஒக்க; யாய்-அன்னை; ஓம்பிய-போற்றி வளர்த்த; தடமென்தோள்-தலைவி; படப்பை-தோட்டம்; கொடு தேன்-வட்டமாகிய தேன் அடை; இழைத்த-வைக்கப் பெற்ற; கோடு-சிகரம்; நெடுவரை மலை; நளிப்பு-மரச் செறிவு; பொதும்பு-புதர்; புணர்குவை-பொருந்துவை; இவ்வாறு விளக்கம் தந்து கொண்டே படிக்கின்றார். இத னால் வாயில் போட்ட கற்கண்டு கரைகின்றது போல பாட்டின் பொருள் துலங்கத் தொடங்குகின்றது.

பின்னர் பாடலைக் கீழிருந்து படித்துக் கொண்டு மேலே போகின்றார். 'தாய் போற்றி வளர்த்த என் தலைவியை நீ அடையலாம்; அவள் எப்படிப்பட்டவள்? மூங்கிலின் கணுக்களுக்குஇடையிலுள்ள இடத்தையொத்த தோளினையுடையவள். எப்பொழுது வரலாம்? பகலில், எங்கு? எம் தோட்டத்திற்கு அருகில் தேன் அடை வைக்கப் பெற்ற மலை ஒன்று உள்ளது. அதன் அருகில் பழங்கள் தொங்குகின்ற சோலை ஒன்று உள்ளது. அங்குள்ள புதரில். நாங்கள் வருத்தம் அடைவது ஏன் தெரியுமா? நீ வந்து போகும் வழிகள் கொடியவை. அந்த வழிகளில் அடிக்கடி போய் வருவார்கூட தடுமாறிப் போவர். அதனால் நீ அந்த வழிகளில் வருவது குறித்து நாங்கள் வருந்துவோம். அந்த வழிகளின் தன்மைகள் யாவை? வழியிலுள்ள காட்டாறு மிகக் கொடியது. நீரின் நிறம் மறையும்படியாக பூக்கள் நிறைந்த வெள்ளம் கடுகி வருகின்றது. அந்த ஆற்றங்கழிகளில் முதலைகள் தங்கியிருக்கும். ஆற்றின் வெள்ளம் தம் இனத்தை விட்டுப் பிரிந்து நிற்கும் களிற்றி யானையையும் அடித்துக் கொண்டு போகக் கூடியது. இந்தக் கடுவழியில் அச்சம் தவிர்ந்த பன்றியைப்போல் சிறிதும் அஞ்சாது வருபவரும் உள்ரோ? என்கின்றாள் தோழி. இப்படிப் பாடலை ஆந்திர ரசவகை மாம் பழத்தைப் பிசைவதுபோல் பிசைகின்றார். பின்னர் இறுதியாகப் பாடலை இசையுடன் படிக்கின்றார். ரச மாம்பழத்தைக் காம்பில் துளையிட்டு அதன் சாற்றை உறிஞ்சினால் நாம் பெறும் இன்பத்தைப்போல் பாட்டின் முழு கருத்தும் நம் அநுபவமாகிவிடுகின்றது. அடுத்து, இதிலுள்ள 'இறைச்சிப் பொருளை' விளக்கிக் காட்டுவார். உள்ளுறை உவமத்திற்கும் இறைச்சிக்கும் உள்ள வேறு பாட்டை விளக்குவார்.

  

1946-49 வரை திரு. முதலியாரிடம் கடிதத் தொடர்பும் இருந்தது. அதன் பிறகு அடிகளார் சீறாப்

புராணம் பதிப்பிக்கும் திட்டம் முடிந்து எங்குச் சென்றார் என்பது தெரியவில்லை. 1963—பன்மொழிப் புலவர் திருநாடு அலங்கரிக்கும் வரை அவர் இல்லத்திற்கு வந்து—போய்க் கொண்டிருந்தேன். ஒருமுறையாவது திரு. முதலியாரவர்களைச் சந்திக்கும் வாய்ப்பில்லை. நான் காரைக்குடியில் பணியாற்றியபோதும் (1950-60) திருப்பதியில் பணியாற்றியபோதும் (1960-77)—1968 ஆண்டு வரை திரு. முதலியாரவர்களைச் சந்திக்கவே இல்லை. ஆனால், திரு. முதலியாரவர்கள் தருமையாதீனத்தின்கீழ் இயங்கி வந்த புலவர் கல்லூரியில் சில ஆண்டுகள் பேராசிரியராகவும் மற்றும் சில ஆண்டுகள் முதல்வராகவும் பணியாற்றியதாகவும் அறிந்திருந்தேன். அங்குத்தான் துறவறத்தை மேற்கொண்டு ஞானப்பிரகாச அடிகள் என்ற திருநாமத்துடன் காஞ்சித் தொண்டை மண்டல முதலியார் மடத்தில் மடாதிபதியாக எழுந்தருளியிருந்தார் போலும். அடிகளாரைச் சந்தித்தபோது இந்த விவரங்களை எல்லாம் அவரிடம் தெரிந்து கொள்ள எனக்குத் தோன்றவில்லை. விரும்பவும் இல்லை.

1969-இல் நான் திருப்பதியிலிருந்தபோது குடும்பத்துடன் காஞ்சி, மாமல்லபுரம், திருக்கழுக்குன்றம் முதலான இடங்களைச் சுற்றிப் பார்க்கத் திட்டம் இட்டுச் சுற்றி வருகையில் காஞ்சிக்கு வந்திருந்தோம். அப்போது திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் துறவறநெறியை மேற்கொண்டு ஞானப் பிரகாச சுவாமிகள் என்ற திருப் பெயருடன் காஞ்சி தொண்டை மண்டல முதலியார் மடத்தின் தலைவராக எழுந்தருளியிருந்ததைத் திருப்பதியில் மிதிவண்டிக் கடை வைத்திருந்த அவர் மகன்மூலம் கேள்வியுற்றிருந்தேன். இதனால் சுவாமிகளைச் சேவிக்கும் பேறு பெற்றேன். இந்தப் பயணத்தின்போது மூன்று நாட்கள் மடத்தில் தங்கியிருந்தோம். அப்போது மடத்தின் சொத்து நிர்வாகம் வழக்கில் மாட்டிக் கொண்டிருந்தது. அடிகட்கு காப்புச் செலவிற்காக ஒரு சிறு தொகை வழங்கப்

பெற்றிருந்தது. துறவற நெறியிலும் விதி தம்முடன் விளையாடுவதை மிக வருத்தத்துடன் எடுத்துரைத்தார்கள் அடிகள்; ஒருவேளை உண்டிகூட எங்கட்குத் தரக்கூட இயலவில்லையே என்று வருந்தினார்கள். என் தமிழ்த் தொண்டைப் பாராட்டி விழா எடுத்து விருது வழங்க நினைத்திருந்ததையும் தெரிவித்தார்கள்.

சென்னை வந்த பிறகு (1978-சனவரி) ஒருமுறை ஆழ்வார்ப்பேட்டை மகாராணி சின்னாம்பாள் தெருவில் தெய்விகப் பேரவையின் அலுவலகத்தில் அடிகளார் தங்கியிருந்தபோது நான் அவரைச் சேவித்து ஆசி பெற்றேன். குன்றக்குடி அடிகளாரின் ஆதரவில் அடிகளார் இங்குத் தங்கியிருந்தார்கள் என்பதையும் அறிந்தேன். இல்லறத்திலிருந்தபோது பெற்ற தொல்லைகளைவிட துறவறத்திலிருந்தபோது அதிகத் தொல்லைகளை அநுபவித்தார்கள்.

அவாவில்லார்க் கில்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும் (குறள்—368)

என்ற குறளை நினைத்துக் கொண்டேன். வறுமை என்பதற்குப் 'போகம் துய்க்கப் பெறாத பற்றுள்ளம்' என்ற பேராசிரியரின் பொருளும் நினைவிற்கு வந்தது. அவாவை அடக்க முடியாததால் அடிகளாருக்கு ஏற்பட்ட துன்பங்கள் இவை என்பது எனக்குத் தெளிவாயிற்று.

அதன்பிறகு மடத்தின் உரிமைப் பற்றி எழுந்த வழக்குகளின் முடிவு என்ன ஆயிற்று என்பது தெரியவில்லை. சென்னையில் தொடங்கப் பெற்றிருந்த தெய்விகப் பேரவை பற்றியும் விவரங்கள் அறியக் கூடவில்லை. ஆனால் அடிகளார் காஞ்சி மடத்தில் இருந்தபோது நோய்வாய்ப்பட்டார் என்றதகவல் மட்டிலும் எனக்கு எட்டியது. காஞ்சியில் மடம் இவருக்கு ஏற்பட்டிருந்த நோயைத் தீர்க்கப் பொறுப்பைத் தட்டிக்கழித்ததாலோ வேறு என்ன காரணத்தாலோ கோவையில் தம் சீடர் ஒருவர் ஆதரவில் சிகிச்சை பெற்றிருந்தபோது சிவப்பேறு அடைந்துவிட்டார்

என்பதைச் செய்தித்தாள்கள் வாயிலாக அறிந்தேன்; வருந்தினேன்.

நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாளது உணர்வார்ப் பெறின் (குறள் 334)

என்ற குறளைச் சிந்திக்கின்றேன்.

'தோற்றஞ்சால் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்றம் அளந்துநும் நாள்உண்ணும்'[4]

என்ற சமண முனிவரின் வாக்கையும் என் மனம் அசை போடுகின்றது. அடிகளார் சிந்தாந்த முத்திப் பெற்றுச் சிவத்தோடு அத்துவிதமாய்க் கலந்து சிவனது இன்பத்தில் திளைத்திருக்கின்றார் என்பதாக என் மனம் இப்போது எண்ணுகின்றது.

---

4. நாலடி—7.

## 5. பெருந்தவத்திரு சித்பவானந்த அடிகள்

திருப்பராய்த்துறைப் பெருந்தவத்திரு சித்பவானந்த அடிகளை 'யதிராசர்' (துறவிகட்கெல்லாம் அரசர்) என்று சொல்லி வைக்கலாம். இத்திருநாமம் இராமாநுசருக்கு வழங்கிவந்தது. திருச்சி-கரூர் இருப்பூர்திப்பாதையில் உள்ள திருப்பராய்த்துறை என்பது பாடல் பெற்ற திருத்தலங்களில் ஒன்று. அகண்ட காவிரிக் கரையின் தென்பால் உள்ளது இத்திருத்தலம். ஞானசம்பந்தப் பெருமான், நாவுக்கரசர் பெருமான் என்ற தேவார முதலிகளின் திருப்பாடல்கள் பெற்ற திருத்தலம்.[1]

விடையும் ஏறுவர் வெண்பொடிப் பூசுவர்
சடையில் கங்கை தரித்தவர்
படைகொள் வெண்மழு வாளர் பராய்த்துறை
அடைய நின்ற அடிகளே (1.135:7)

என்பது சம்பந்தர் தேவாரம்.

போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்களன் றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே
(5.30:5)

என்பது அப்பர் தேவாரம். இத் திருத்தலத்தைத் தேர்ந்தெடுத்து இராமகிருஷ்ண தபோவனம், விவேகானந்த

1. சம்பந்தர் 1.135; அப்பர் 5.30.

வித்தியவனம் என்ற இரு நிறுவனங்களை அமைத்த அடிகளின் சேவை பொன்னெழுத்துகளால் பொறிக்கத் தக்கவை. முன்னது இராமகிருஷ்ணர் பாதையில் மக்களை நெறிப்படுத்துவதற்கு அமைக்கப்பெற்ற நிறுவனம். பின்னது சிறுவர்கள் நல்ல முறையில் கல்வி கற்பதற்கு ஏற்படுத்தப் பெற்ற உயர்நிலைப்பள்ளி. முன்னது காவிரிக் கரையின்மீது திருச்சி—கரூர் இருப்பூர்திப் பாதைக்கும் திருச்சி—கரூர் நெடுஞ்சாலைக்கும் இடையில் அமைக்கப் பெற்றுள்ளது. பின்னது ஆற்றங்கரைக்கும் ஆற்றுக்கும் இடையிலுள்ள படுகையில் அமைக்கப் பெற்றுள்ளது,

*நினைவு-1:* 1944-ல் ஏப்ரல்-மேயில் அடிகளாருடன் தொடர்பு ஏற்பட்டது. அன்று முதல் இன்று வரை வானுற வோங்கி வளர்ந்து வந்த இருபெரு நிறுவனங்களும் நன்றாகச் செயற்பட்டுக் கொண்டுள்ளன. அக்காலத்தில் அடிகளாருடன் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தவர் திரு. T.C. சகந்நாத ரெட்டியார் என்ற தமிழாசிரியர். குழித்தலைக் கழக உயர்நிலைப் பள்ளியில் (District Board High School) பணியாற்றிக் கொண்டிருந்தார். இவருடைய புருஷகாரத்தால் (தகவுரையால்) அடிகளாரை நான் பணியாற்றிய துறையூர் உயர்நிலைப் பள்ளியின் மூன்றாவது ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்க அழைத்து வந்தேன். எண் அளவில் மூன்றாவது ஆண்டு விழாவாக இருந்தாலும் உண்மையில் முதலாவது ஆண்டு விழாவாகவே கருதுதல் வேண்டும்.[2] நான் ஒன்பது ஆண்டு களாக வளர்த்து விட்டு வெளியேறின பள்ளி பேரும்

---

2. பள்ளி 1941 இல் சூன் திங்கள் நடுநிலைப் பள்ளியாகத் தொடங்கப்பெற்றது. 1943-44ல் தான் நான்காம் படிவம் தொடங்கப்பெற்று உயர்நிலைப்பள்ளியாக வளரத் தொடங்கியது. 1942, 1943 இல் ஆண்டு விழாக்கள் கொண்டாடப் பெறவில்லை.

புகழுடனும் திகழ்கிறது என்றால் அது அடிகளின் ஆசியே காரணம் என்று இன்றளவும் கருதி வருகின்றேன்.

பள்ளிக்குச் சரியான கட்டடம் இல்லை. ஏற்கனவே தமிழ் எழுத்து ட போலக் கட்டின ஓட்டுக் கட்டடத்தைப் பல அறைகளாகத் தடுத்து வகுப்பறைகளாக்கப் பெற்றன. இரண்டு அறைகள் ஓட்டுக் கட்டடத்தில் அமைந்தன. ஒரு பக்கம் இரண்டு குடும்பங்கள் தங்குவதற்காகத் தடுக்கப் பெற்ற ஒன்றில் நான் குடியிருந்தேன். தேன் கூட்டில் இராணி ஈ தங்குவது போன்ற மிகச் சிறிய இடம். மற்றொரு பகுதி தலைமையாசிரியர் அறையாகவும் இதிலுள்ள அறைகள் தளவாடங்கள் வைக்கப் பயன்பட்டன. நான்கு வகுப்பறைகள் கீற்றுக் கொட்டகைகளில் இருந்தன. அடிகளாருக்கும் திரு. சகந்நாத ரெட்டியாருக்கும் மிக எளிய முறையில் என் இல்லத்தில் அமுது படைக்கப் பெற்றது. இரவில் தங்குவதற்கு தலைமையாசிரியர் அறையில் தரையில் பாய்போட்டு சயனத்திற்கு ஏற்பாடு செய்தேன். ரூ 50/-மாத வருவாயில் நான் காலம் தள்ளின காலம் அது. அடிகளாருக்குத் தங்குவதற்கு நன்கு வசதி செய்ய முடியவில்லையே என்று அன்று உணர்ந்தேன். ஆனால் அடிகளார் மனமுவந்து எழுந்தருளி விழாவைச் சிறப்பித்தது அனைத்தையும் மறக்கச் செய்துவிட்டது. ஊர்ப்பெருமக்கள் திரண்டு வந்து அடிகளாரைப் பெருமைப் படுத்தினர். நகரத்திலிருந்து பள்ளி சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவிலிருந்தமையால் மக்கள் வருவதற்கும் திரும்புவதற்கும் சிரமமாக இருக்கும். 'நடராஜா சர்வீஸைத்' தவிர வேறு வசதிகள் இல்லை. குதிரை வண்டிகள் தாம் கிடைக்கக்கூடிய ஒரே வகை வாகனம். அதிகாலையில் இருவரையும் பேருந்தில் ஏற்றித் திருச்சிக்கு அனுப்பி வைத்தேன். ஆண்டு விழா தொடங்கின நாள் முதல் அடிகளாரின் ஆசி இடையறாது என்னைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

நினைவு-2: 1946இல் என நினைக்கின்றேன். இதற்குள் தபோவனத்தில் கட்டட வசதிகள் நன்கு அமைந்து விட்டன. மாணவர்க்கென ஆண்டில் ஒருமுறை மூன்று நாட்கள் அந்தர் யோக முகாம் நடத்தத் தொடங்கினார் அடிகளார். இந்த முகாமில் அறுபது மாணவர்கள் தேர்ந் தெடுக்கப்பெற்றிருந்தனர். ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் தலைமையாசிரியரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற இரண்டு மாணவர்கள் கலந்து கொள்ளலாம். நான் என் பள்ளி இரண்டு மாணவர்களுடன் அந்தர் யோகத் தில் கலந்து கொண்டேன். அடிகளார் இளம் சமூகத்தின ரிடம் பரிவு கொண்டு, அவர்களை நல்ல குடிமக்களாக்க வேண்டும் என்று தபோவனச் செலவில் இந்தத் திட்டத் தைச் செயற்படுத்தி வந்தார். முற்பகல் 8 மணி முதல் பிற்பகல் 5 மணி முடிய திட்டம் செயற்படும். அடிகள் முற்பகலில் ஒரு மணி நேரமும் பிற்பகலில் ஒருமணி நேர மும் சொற்பொழிவாற்றுவார். இரவு 8 மணி முதல் 9மணி வரை 'கேள்வி நேரம்' என்று ஒன்று இருந்தது. அந்த நேரத்தில் மாணவர்கள் சமயம், ஒழுக்கம் முதலியவை பற்றி வினாக்களை விடுக்கலாம். அடிகள் அவற்றிற்கு அமைதியாக, பொருத்தமாக, மாணவர்கள் மனம் கவரும் வண்ணம் அற்புதமாக விடைகள் தருவார். இந்த நேரம் மிகவும் கவர்ச்சியாகவும் உற்சாகமாகவும் இருக்கும்.

நான் விடுத்த வினாவும் அடிகள் அதற்குத் தந்த விடையும் இன்றளவும் என் மனத்தில் பசுமையாக உள்ளன.

நான்: சுவாமி, 'அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம் இம்மூன்றிற்கும் உள்ள வேறுபாட்டை விளக்கி அருள வேண்டும்' என்றேன்.

அடிகள்: இந்த வினாவைப் பரமஹம்சர் காலத்தி லேயே சீடர் ஒருவர் அவரிடம் கேட்டார். அதற்கு அவர் அளித்த விடையையே உங்கட்குச் சொல்லுகின்றேன்.

இந்த வினா மூன்று தத்துவங்களிலும் பரமான்மா—சீவான்மா இவர்களிடையேயுள்ள உறவு முறையைப் பற்றியது. ஒருவர் ஏதோ ஒரு பயணத்தை மேற்கொள்ளு கின்றார். வழிப்பயணத்தில் பசியை ஆற்றிக்கொள்வதற்கு ஆற்றுணா (கட்டமுது) எடுத்துச் செல்லுகின்றார். இப்பொழுது இரண்டு பொருள்கள் இவரிடம் உள்ளன. ஒன்று இவர், மற்றொன்று, கட்டமுது, இது துவைதம். துவைதத்தில் ஆன்மா பரமான்மா தனித் தனியான பொருள்கள் —ஆள் கட்டமுது இரண்டும் தனித்தனியாக இருப்பது போல. சில கல் தூரம் நடந்து செல்லு கின்றார். பசி வருகின்றது. வழியில் காணப்படும் சோலை சூழ்ந்த குளத்தங்கரையில் தங்கி உணவு கொள்ளுகின்றார். இப் பொழுது கட்டமுது இவர் வயிற்றில் உள்ளது. இது விசிட் டாத்வைதம். இங்கு ஆளும் கட்டமுதும் தனித்தனியாக இருப்பது காணப்பட்டாலும் இரண்டும் ஒரே இடத்தில் நெருங்கியுள்ளன. விசிட்டாத்வைதத்தில் ஆன்மாவும் பரமான்மாவும் தனித்தனியாக இருப்பினும் ஒன்றை யொன்று சார்ந்துள்ளன. இன்னும் சில கல் தூரம் நடந்து செல்லுகின்றார் இப்பயணி. வயிற்றில் கட்டமுது இல்லை. அது செரிமானம் ஆகி பயணியுடன் இரண்டறக் கலந்து விடுகின்றது. அத்வைதத்திலும் ஆன்மா பரமான்மாவுடன் இரண்டறக் கலந்து விடுகின்றது. இவ்வாறு இராமகிருஷ் ணர் சீடருக்கு விளக்கினார்' என்று கூறி முடித்தார். இந்த அளவு மாணவர்க்குத் தெளிவாகும்.

தொடர்ந்து வயதான ஒரு சிலருக்கு இரண்டு எடுத்துக் காட்டுகளைக் கொண்டு அத்வைதத்தை விளக்கினார் அடிகள். ஒரேயொரு மூலப்பொருளாயுள்ள பிரம்மமே பல சீவன்கள் ஆகின்றது, பிரம்மமும் சீவர்களும் அடிப் படையில் ஒன்றென்பதை உணர்த்தவே வேதாந்திகள் பிரம்மத்தைப் பரமான்மா என்றும், சீவர்களைச் சீவான்மா எனவும் வழங்குகின்றனர். பிரம்மமே உலகமாக வும் உயிர்களாகவும் ஆகின்றது என்பது அத்வைதக்

கொள்கை. ஆனால் பிரம்மம்உலகமாகத்தோன்றுவதற்கும் அதுவே உயிர்களாவதற்கும் வேற்றுமை உண்டு. பிரம்மம் உலகம் ஆவதை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம். ஒருவருக்குக் கயிறு பாம்பாகத் தோன்றுகின்றது. இங்குக் கயிற்றைப் போலவே பாம்பும் ஓர் உள்பொருள். அந்த நேரத்தில் அவ்விடத்தில் இல்லாத பொருளானாலும் அஃது என்றுமே எவ்விடத்திலும் இல்லாத பொருளல்ல. பாம்பு உள்ள பொருளாயும் நாம் முன்பேஅறிந்தபொருளாயும் இருப்பதால்தான் கயிற்றைக் கண்டதும் அதன் நினைவு வருகின்றது. இந்த உவமையில் உண்மை தெரிந்ததும் அங்கு பாம்பு என்னும் பொருளுக்கே இடம் இல்லை. ஒரு வெண்ணிறப் பூவைச் செந்நிறக் கண்ணாடி வழியாகப் பார்க்கும்பொழுது அப்பூவும் செந்நிறப்பூவாகவே தோன்றுகின்றது. இங்கு உண்மை தெரிந்ததும் பாம்பு இல்லாததுபோலப் பூ என்ற பொருளும் இல்லாது போகாது. அதன் ஓர் இயல்பு மட்டிலுமே இலதாகும். கயிறு பாம்பாகின்றபோது பொருளே மாறுகின்றது. ஆனால் வெண்ணிறப்பூ செந்நிறப்பூ ஆகின்றபோது பொருள் மாறவில்லை. அதன் ஒரு கூறுமட்டிலுமே மாறுகின்றது. கயிறு பாம்பாகத் தோன்றும் உவமை பிரம்மம் உலகமாகத் தோன்றுவதை விளக்குகின்றது. வெண்ணிறப் பூ செந்நிறப் பூவாகத் தோன்றுவது பிரம்மம் சீவனாவதை விளக்குகின்றது. முதல் உவமையில் பொருள் ஒன்று அல்ல. ஆனால், இரண்டாவது உவமையில் பொருள் ஒன்று; இயல்புதான் வேற்றுமை. இதிலிருந்து பிரம்மமும் சீவர்களும் ஒன்றென்பதும் இயல்பிலே தான் வேற்றுமை என்பதும் புலனாகும்.' இவ்வாறு அத்வைதத்தைப் பெரியவர்கட்கு விளக்கினர்.[3]

**நினைவு-3** 1950 ஜூலை முதல் நான் காரைக்குடியில் புதிதாகத் தொடங்கப்பெற்ற ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி

3. பிரம்மத்தைத் தாயுமான அடிகள் 'பெரிய பொருள்' என்று மொழி பெயர்ப்பர்(பொ. வ-8).

யில் பணியேற்றேன். 1950-51, 1951-52 ஆகிய இரண்டாண்டுகள் கேரளாவில் திருச்சூரில் அரசகுடும்பத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஐ. நாராயணமேனன் என்பாரும் (ஐ. என். மேனனே வழக்கிலுள்ள பெயர்)[4] 1952-53, 1953-54இல் பேராசிரியர் எஸ். சீநிவாசன்[5] என்பாரும் கல்லூரி முதல்வர்களாக இருந்து வந்தனர். முதல்வர் சீநிவாசன் காலத்தில் கல்லூரி மூன்றாவது ஆண்டு விழாவிற்கு அடிகளாரை அழைக்க வேண்டும் என்ற என் பரிந்துரை ஒப்புக்கொள்ளப் பெற்றது. அடிகளாரைக் கூட்டிவர என்னையே காரில் திருப்பராய்துறைக்கு அனுப்பினர். ஆண்டு விழாவில் அடிகளாரின் சொற்பொழிவு அற்புதமாக அமைந்தது. சொற்பொழிவின் சாரம் பயிற்சிபெறும் ஆசிரியர்கள் தம்மிடம் பயிலும் மாணாக்கர்களை ஆஞ்சனேயர் போன்று ஆற்றல், ஒழுக்கம், பாண்டித்தியம் முதலிய பண்புகள் நிறைந்தவர்களாக உருவாக்கப் பாடுபடவேண்டும் என்பது. என்னுடன் பணியாற்றிய கணிதப் பேராசிரியர் எஸ். கிருஷ்ண அய்யங்கார் அவர்கள் 'என்ன மிஸ்டர் ரெட்டியார், உங்கள் சாமியார்

---

4. இவர் சென்னை மாநிலக்கல்லூரியில் தத்துவப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர்.

5. இவர் அழகப்பர்கலைக் கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராகப் பணியாற்றிவந்தவர்; பல ஆண்டுகள் மதனபள்ளியில் உள்ள ஓர் இடைநிலைக் கல்லூரியில் பல்லாண்டுகள் பணியாற்றிவந்த இவரை 1948இல் வள்ளல் அழகப்பர் கலைக்கல்லூரியைத் தொடங்கின போது இவரைப் பேராசிரியராகக் கொணர்ந்தார். திரு. சீநிவாசன் திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றிய போது, வள்ளல் உயர்நிலைப் பள்ளிக் கல்வி பெற்ற போது அவருக்குத் தனிப் பயிற்சி ஆசிரியராக (Tutor) இருந்தவர்.

மாணாக்கர்களை வானரங்களாக்க வேண்டும் என்கின்றாரே' என்று கிண்டல் பாவனையில் கேட்டார். வைணவராக இருந்தாலும் அவருக்கும் வைணவத்திற்கும் உள்ள தொடர்பு அமாவாசைக்கும் அப்துல்காதருக்கும் உள்ள தொடர்புதான். அடுத்த நாள் ஒய்வு வேளையில் இதை விளக்குவதாகக் கூறி அவரை அமைதி பெறச் செய்தேன்.[6] அன்று இரவே உணவை முடித்துக்கொண்டு அடிகளாரை நல்ல சிற்றுந்து (Van) ஒன்றில் உறங்குவதற்கு வசதி செய்து நானே திருப்பராய்த்துறை வரையிலும் சென்று தபோவனத்தில் விட்டு வந்தேன். அடிகளார் நான் வர வேண்டியதில்லை என்று சொல்லியும், என் மனம் ஒருப்படவில்லை. தந்தையை இட்டு வருவது போல் இட்டு வந்தேன். வண்டியில் போகும்போது சொன்னார்கள். 'மிஸ்டர் ரெட்டியார், உங்கள் மன அமைதி கெட்டால், இரண்டு வாரம் தபோவனத்தில் வந்து தங்க வேண்டியது. இஃது, என் நிலையான கட்டளை (Standing Order) என்று கூறினார். அருள் நிறைந்த அந்த உள்ளத்தில் பிறந்த ஆசியுடன் கூடிய அந்தக் கட்டளையின் கனத்தால் இன்றுவரை என் மனநிலை கெடவில்லை; மாறாக, எதையும் தாங்கும் இதயத்தை ஆண்டவன் அருளியுள்ளான்.

**நினைவு—4 :** பயிற்சிக் கல்லூரியில் பல்கலைக்கழக விதிப்படி கல்லூரிக்கு வெளியே ஏதாவது ஒரு நல்ல இடத்தில் குடிமைப் பயிற்சி முகாம் நடத்திப் பயிற்சி பெறும் ஆசிரியர்க்குப் பயிற்சிதரவேண்டும். பேராசிரியர் சீநிவாசன்

---

6. அடுத்த நாள் அநுமனின் கல்வி, ஆற்றல், வீரம், சாதுர்யமாகப் பேசும் திறம்—முதலியவற்றைக் கூறி இத்தகைய அநுமன் போல் மாணவர்களை ஆக்க வேண்டும் என்று தானே சொன்னார் என்று விளக்கினேன்.

முதல்வராக இருந்தபோது ஓராண்டு இப்பயிற்சியை திருப்பராய்த்துறையில் நடத்தலாம் என்று யோசனை கூறினேன். இது நல்ல சூழ்நிலை என்றும் விவரித்து விளக்கினேன்.[7] முதல்வர் ஒப்புக் கொண்டார். உணவுப் பொறுப்பை வித்தியாவன விடுதிப் பொறுப்பில் விட்டு விடலாம் என்றேன். இத்தனையும் ஒப்புக்கொண்டார் முதல்வர். திரு.இராமுடு என்ற தபோவன மேலாளருக்கு எழுதி நாளொன்றுக்கு ஆளுக்கு இவ்வளவு தொகை என அறுதியிட்டு இப்பொறுப்பை இறுதியாக்கினேன். தங்குவதற்குப் படுகையிலுள்ள பள்ளி வகுப்புகளும்,பேராசிரியர்கள் தங்குவதற்கு பள்ளி அலுவலகத்திற்கருகிலுள்ள இரண்டு அறைகளும் ஒதுக்கப்பெற்றன. மாணவருக்குச் செப்டம்பரில் அளிக்கப்பெறும் விடுமுறையை யொட்டி எங்கள் முகாமை அமைத்துக் கொண்டோம். மாணவர் விடுதியில் காஃபிக்குப் பதிலாக ராகிமால்ட் தான் வழங்கப் பெற்றதால் காஃபி தருவதற்கும் ஏற்பாடு செய்தேன். அதிகாலையில் 6 மணிக்கும், 8 மணி சிற்றுண்டியோடும், 4.30 மணி சிற்றுண்டியோடும் காஃபி வழங்க ஏற்பாடு செய்தேன். நாடோறும் அடிகள் முற்பகல் 10லிருந்து 11 மணி வரை வகுப்பு எடுப்பார். காந்தியடிகள் பேசும் பாணியில் எளிமையான ஆங்கிலத்தில் பேசி உயர்ந்த கருத்து விருந்து அளிப்பார். மாணவர்கள் அடிகளாரின் பேச்சை உற்சாகத்தோடு செவிமடுத்தனர். ஐம்பது அடி தொலைவில் ஓடும் காவிரி மாணவர்களின் நீராட்டத்திற்குச் சிறப்பாக அமைந்தது. மழையானாலும்

---

7. பல தடவை இப்பயிற்சி இளையாற்றங்குடியிலும் ஒரு தடவை மாத்தூர், ஒரு தடவை, சூரக்குடி,ஒருதடவை பிள்ளையார்பட்டி, ஒரு தடவை இராமேசுவரத்திலுமாகப் பத்து முகாம்கள் நடைபெற்றன. முதல் ஐந்தாறு ஆண்டுகளில் மாணவர் விடுதிப் பொறுப்பு என்னிடம் இருந்தமையால் முகாமில் உணவு வழங்கும் பொறுப்பு என்னிடம் தரப்பெற்றிருந்தது.

மாணவர்க்கு உடற்பயிற்சி இன்றியமையாததாக இருந்ததால் சுமார் 500 மாணாக்கர்கள் ஒரே சமயத்தில் பயிற்சி பெறுவதற்கு இடையில் தூண்களே இன்றி எழுப்பப்பெற்ற அஸ்பேஸ்டாஸ் கூரையின் அடியில் பயிற்சி பெறும் ஆசிரியர்கட்கு உடற்பயிற்சி நடைபெற்றது.

அந்தக்காலத்தில் வள்ளல் அழகப்பர் உயிருடன் நடமாடிய காலம். திருச்சி இருப்பூர்தி சந்திப்பில் பயணிகள் தங்கும் அறையொன்றில் தங்கியிருப்பதாகச் செய்தி கிடைத்தது, திருப்பராய்த்துறையில் குடிமைப் பயிற்சி முகாம் நடைபெறுவதாகவும் வசதியாக இருக்கும் ஒரு நாள் வருகை புரிந்து கொடியேற்றி ஒரு மணி நேரம் மாணவர்களிடையே உரையாற்ற வேண்டும் என்று முதல்வர் எழுதியிருந்தார். வள்ளல் திருச்சியில் தங்கியிருக்கும் செய்தியைக் கேட்டு எப்படியாவது அவரை இட்டு வரவேண்டும் என்றுகூறி முதல்வர் என்னை அனுப்பினார். நான் காலை 6 மணிக்கே வள்ளலைச் சந்தித்து திருப்பராய்த் துறைக்கு எழுந்தருளுமாறு வேண்டினேன். தமக்கு முக்கியமான பணியிருப்பதாகவும், உடல்நிலையும் சரியாக இல்லையென்றும், அதனால் தாம் திருச்சியில் ஓய்வாக இருப்பதாகவும் கூறித் தம் இயலாமைக்கு வருத்தம் தெரிவித்து என்னை வாளாதிரும்புமாறு செய்து விட்டார். காலை எட்டு மணிக்கே திருப்பாராய்த் துறையை வந்தடைந்தேன். அவருக்காகச் சிறப்பாகச் செய்யப் பெற்றிருந்த சிற்றுண்டி வகைகளை பேராசிரியர்களாகிய நாங்கள் பகிர்ந்து கொண்டு சுவைத்தோம். வள்ளல் திருப்பராய்த்துறைக்கு வருகை புரிந்திருந்தால் எத்தனையோ கல்வி நிறுவனங்களை நிறுவியவர் அடிகளாரின் ஆசியைப் பெற்றிருப்பார். உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் பெற வேண்டிய கல்வி பற்றிய கருத்துகள் அவர் மனத்தை ஒரு சிறிதாவது மாற்ற மடையச் செய்திருக்கும் என்பது அடியேனின் கணிப்பு.

இங்கு சுமார் 10 நாட்கள் தங்கியிருந்ததால் வித்தியா வனத்தில் அளிக்கப்பெறும் கல்வி முறையையும் மாணவர் விடுதியில் வழங்கப் பெறும் உணவு முறைகளையும் நன்கு கவனிக்கும் வாய்ப்பு கிடைத்தது. இதற்கு முன்னர் வந்த போது இவ்வளவு விரிவாக அறிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படவில்லை. பள்ளி இயற்கைச் சூழலில் அமைந் திருந்தது. அஃது ஒரு சிறு 'சாந்தி நிகேதம்' என்றே சொல்லலாம். தாகூர் சிந்தையில் உதயமாகி நமது கண்ணுக்கு இலக்காகி இருப்பது இன்றைய சாந்தி நிகேதம் என்ற பல்கலைக் கழகம்; 1980-இல் அனைத் திந்திய கீழ்த்திசை மாநாடு—கருத்தரங்கு நடைபெற்ற போது அங்கு மூன்று நாட்கள் தங்கி அந்தச் சூழலை அநுபவிக்க நேர்ந்தது. அது போலவே, விவேகாநந்த வித்தியாலயம் இருந்து வருகின்றது. வகுப்பறைகள் இடம் விட்டுத் தனித்தனியாகச் சற்று உயர்ந்த மேடைகளின் மீது கட்டப்பெற்றுள்ளன. காவிரி பெருக்கெடுத்து வெள்ளம் வரும்போது தண்ணீர் வகுப்பறைக்குள் நுழைந்து விடும்; இருக்கைகளைத் தொட்டு ஓடும். அப்போது பள்ளிக்கு விடுமுறை அளிக்கப் பெறும். அருகில் உள்ள நீச்சல் குளமும் சற்று உயர்ந்த நிலையில் கட்டப் பெற்றுள்ளதால் வெள்ளம் அதனுள் புகாது. பெரும் பாலும் மாணவர்கள் நீச்சற் குளத்தைச் சுற்றிலுமுள்ள குழாய்களில் நீராடுவார்கள். சோப்பு போட்டுக் குளிப் பார்கள். பிறகு நீச்சல் குளத்திலும் நீந்துவார்கள். வித்தியாலய மாணவர்கள் எல்லோருமே நீந்தக் கற்றுக் கொள்வது கட்டாயமாக இருந்து வருகின்றது. காலை 6 மணி முதல் 45 நிமிடம் உடற்பயிற்சி; அதன் பிறகு நீராட்டம். 7-30 மணிக்குள் அறையிலிருக்க வேண்டும். நீராடிய பிறகு நெற்றியில் விபூதி சந்தனம் தரித்துக கொள்வது கட்டாயமாக இருந்து வருகின்றது. 9-30 மணி முதல் மாணவர்கள் தம் மெய்யை அடிகளாரிடம் காட்டி தான் பள்ளிக்குச் செல்ல வேண்டும். சத்து வேண்டும் என்று குறிப்பிடப் பெற்ற மாணவர்கட்கு அடிகளே

டானிக், லேகியம் தம் கையாலேயே வழங்கி ஆசி கூறுவார்.

உணவு முறைகள் : மாணவர்கள் தட்டுகளில் உண்பார்கள். அவர்களே தட்டுகளைக் கழுவிக் கொள்ள வேண்டும். இது செய்வதற்கு வரிசையாகக் குழாய்கள் அமைக்கப் பெற்றுள்ளன. கழுவிய தட்டுகளை வரிசையாக வைப்பதற்கு நிலை தாங்கிகள் (Stands) இருந்தன. அவரவர்கள் தட்டுகளை அவரவர்க்குரிய எண்ணில் வைத்துக் கொள்ள வேண்டும். காலை 7-30 மணிக்கு இட்டலி, தோசை, பொங்கல், உப்புமா இவற்றில் ஏதாவது ஒன்று சட்னி அல்லது சாம்பாருடன் வழங்கப்பெறும். பாலுடன் கலந்த ராகிமால்ட் பானமாக வழங்கப்பெறும். நண்பகல் உணவு வழக்கமாக காய்கறிகளுடன். மாலை 5 மணிக்கு எளிய முறையில் சிற்றுண்டி; ஏதாவது சுண்டல் முதலியவை. அதன் பிறகு 6-30 மணி விளையாட்டுகள். இரவு 7-30 மணிக்கு உணவு. மோருக்குப் பதிலாக இரவில் உணவுடன் பால் வழங்கப்பெறும். உணவு முதலியவை மாணவர்களாலேயே பரிமாறப்பெறும். முறை வைத்து குழுக்களாக நின்று இப்பணியை மிகவும் அற்புதமாகச் செய்து வருவதைக் கண்டவர் எவரும் வியக்காமலிக்க முடியாது. உணவு பரிமாறின பிறகு ஒரு வடமொழி சுலோகத்தால் வழிபட்ட பின்னர்தான் உண்ணத் தொடங்கவேண்டும் என்ற முறை கட்டாயமாகக் கடைப்பிடிக்கப்படுகின்றது. எல்லோரும் உண்ட பிறகு மீண்டும் ஆஞ்சனேயர் பற்றிய ஒரு சுலோகத்தைப் பேருராலியுடன் நவிற்றி பெருமகிழ்ச்சியுடன் சேர்ந்தாற்போல் எழுந்து செல்வது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

படிப்பு முறைகள் : எல்லோரும் அதிகாலை 5 மணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு படிப்பில் ஈடுபடவேண்டும். அதுபோலவே காலை சிற்றுண்டிக்குப் பிறகு மாணாக்கர்கள் வகுப்பாசிரியர்கள் தந்த வீட்டு வேலைகளைச் (Home - work) செய்யவேண்டும். பாடங்

களில் பின் தங்கும் மாணவர்கள் பொதுமண்டபத்தில் வந்து பாடங்களுக்குரிய ஆசிரியர்களின் மேற்பார்வையில் வீட்டு வேலைகளைச் செய்யவேண்டும். பாடல்களில் எழும் பல்வேறு ஐயங்கள் ஆசிரியர்களால் அகற்றப் பெறும். இம் முறை ஒரு வகை மேற்பார்வைப் படிப்பாக (Supervised study) அமையும். இவ்வாறு பணி புரிவோருக்கு மாணவர்கள் கணக்கிலிருந்து குறைந்த அளவு தொகை எடுத்து மொத்தமாக வழங்கப்பெறும். மாணவர் விடுதியே இப்பொறுப்பை மேற்கொள்ளும். இரவிலும் 7-30 மணி உணவிற்குப் பிறகு 8 மணி முதல் 9-30 மணி வரை எல்லோரும் படிப்பில் ஈடுபட்டிருக்க வேண்டும். இவற்றை மேற்பார்க்கும் பொறுப்பு தபோவனத்துக்குரிய ஒருவரிடம் இருந்து வரும். நோய் வாய்ப்படும் மாணவர்களைக் கவனிக்க மருத்துவ வசதி உண்டு. காலையில் 8-9 வரையிலும் மாலையில் 5-6 வரையிலும் மருத்துவர் ஒருவர் இப்பணியில் ஈடுபட்டிருப்பார்.

பிரமச்சாரிகள் : தபோவனம், மாணவர் விடுதி இவற்றின் நடை முறைகளைக் கவனிக்கப் பன்னிரண்டு பிரம்மச்சாரிகள் தேர்ந்தெடுக்கப் பெற்று அவர்கள் பொறுப்பில் இவை கண்காணிக்கப் பெற்றன. மடப்பள்ளி பற்றிய பணிகளை ஒருவர் ஏற்பார். இட்டலிமாவு அரைத்தல், பொடி வகையறா தயார் செய்தல் ஆகியவை யாவும் இயந்திரங்களால் செய்யப் பெற்றன. உமி மட்டிலும் நீக்கப் பெற்ற அரிசிதான் உணவுக்குப் பயன் படுத்தப் பெறும். ஒருவகை மரத்தாலான திரிகைகளால் இவ்வரிசி தயாரிக்கப் பெறும். இச் செயல்களையெல்லாம் இன்னொரு பிரம்மச்சாரி கவனிப்பார். மடப்பள்ளியில் உணவு தயாரிக்கும் அலுவல்களை ஒரு பிரம்மச்சாரி கவனிப்பார்.சோறு கஞ்சி வடிக்கப் பெறாமல் தயாராக்கப் பெறும். அனல் வீணாகாமல் பயன்பட்ட அடுப்பு தனிச் சிறப்பு வாய்ந்தது நோய்வாய்ப்பட்டுள்ள மாணவர்களின் சிகிச்சைகள் பிறிதொருவரின் பொறுப்பிலிருக்கும்.

பாலுக்காக 25 உயர்தர பசுமாடுகள் பராமரிக்கப் பெற்று வந்தன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேளைக்கு பத்து லிட்டருக்குக் குறையாமல் கறக்கும். இம் மாடுகளின் பராமரிப்பு ஒரு பிரம்மச்சாரியின் பொறுப்பிலிருக்கும். படுகைத் தோட்டங்களில் பல்வேறு கறிகாய்கள் உற்பத்தி செய்யப்பெறும்; இந்தப் பொறுப்பு ஒரு பிரம்மச்சாரி யிடம் இருந்து வரும், இந்த கறிகாய் உற்பத்தியை மீறியும் திருச்சியிலிருந்து கறிகாய்கள் வாங்கப் பெறும். என்ன தான் உணவு முறைகள் சரியாக இருந்தாலும் மாண வர்கள் தாமே ஏதாவது வாங்கித் தின்னவேண்டும் என்ற உந்து விசை இயல்பாக இருப்பதை நன்கு அறிந்த அடிகள் பெப்பர்மிண்ட், சாக்கலெட், பிஸ்கோத்து வகைகள், பேப்பர், பென்சில், மை, பேனா முதலிய வைகள் கிடைக்க ஏற்பாடு இருந்தது. இதை ஒரு பிரம்மச்சாரி கவனித்து வருவார்.

நான் அந்தர் யோகத்திற்கு போவதற்கு (1946) இரண்டாண்டுகட்கு முன் இலால் குடியிலிருந்து ராமுடு, கிட்டு என்ற இரண்டு ஆரிய வைசியச் சிறுவர்கள் அந்தர் யோகத்திற்கு வந்திருந்தனர். அவர்கள் அடிகளின்பால் ஈர்க்கப் பெற்றுத் தம் பாகத்திற்குக் கிடைக்கும் சொத் துக்களை ரொக்கமாகப் பெற்று அத்தொகைகளை தபோவனத்திற்கு அன்பளிப்பாக அளித்து விட்டுப்பிரம்மச் சாரிகளாகச் சேர்ந்து கொண்டனர். ராமுடு என்பவர் தான் தபோவனத்தின் மேலாளராக அனைத்துச் செயல் களையும் மிகப் பொறுப்புடன் கவனித்து வந்தவர். மிகவும் சாந்தமானவர். பிரம்மச்சாரிகள் பன்னிரண்டு பேருக்கும் சுமார் 25 ஆண்டு கட்குப் பிறகு அடிகள் கல்லாடையும் புதிய திருநாமமும் வழங்கினார். ராமுடு சாந்தானந்தா என்ற புதுப் பெயருடன் திகழ்ந்தார். நான் திருப்பதியிலிருந்து ஒய்வு பெற்ற பிறகு தலைமைச் செயலகத்தில் (Secretariat) சந்திக்கும் வாய்ப்பு ஏற் பட்டது. அங்குள்ள சிற்றுண்டி சாலையில் சிற்றுண்டி,

காப்பி அருந்திக் கொண்டு உரையாடி மகிழ்ந்தோம். அவர் நான்கு ஆண்டுகட்கு முன்னர் முக்தியடைந்து விட்டார்; சென்ற ஆண்டு (1986) அடிகள் திரு நாடு அலங்கரிப்பதற்கு முன்னதாக அடுத்து வரும் அடிகளாரை வரவேற்பதற்குப் போய் விட்டார் போலும் என்று என் மனம் எண்ணுகின்றது.

**நினைவு—5 :** நான் திருப்பதியில் பணியாற்றிய போது சிறுவர்க்காக 'நமது உடல்' என்ற நூல் வெளியிடும் நிலையில் இருந்தேன் (1966 சனவரி). இதை அடிகளாருக்கு அன்புப் படையல் செய்து ஆசிபெற நினைத்தேன். தவத்திரு சாந்தானந்தா அவர்கட்குக் கடிதம் எழுதி அடிகளாரின் ஒளிப்படம் ஒன்று அனுப்புமாறும் அன்புப்படையல் செய்ய இசைவு கோருமாறும் கேட்டிருந்தேன். அடிகள் நூலை விவேகானந்த அடிகட்குப் படைக்குமாறுகூறி ஒளிப்படம் அனுப்ப இசைவு தர மறுத்து விட்டதாக தவத்திரு சாந்தானந்தாமறுமொழி தந்துவிட்டார். நான் அடிகளாரிடம் பழகிய நாள் தொட்டு அடிகள்தாம் எனக்கு தமிழக விவேகாநந்தராகக் காட்சியளிக்கின்றார் என்று கருதுகின்றவனாதலின் அடிகளாருகே,

வங்கநாடு ஈன்ற நரேந்திரன் கண்ட
　　மாண்புறு கற்பனை வித்தைத்
துங்கமார் கல்விச் சாலைகள் மலிந்த
　　தூயநல் தபோவன மாக்கிப்
பொங்கிய ஞானத் தீங்கனி தந்து
　　புவியெல்லாம் நுகர்ந்திடச் செய்யும்
எங்கள்மா முனிவர் சித்பவா நந்தர்க்
　　கிச்சிறு நூலுரித் தாமால்.

என்ற பாடல் மூலம் அன்புப் படையலாக்கினேன். தவத்திரு சாந்தானந்தா அவர்கட்கு ஒருபடி அனுப்பி அடிகளாரின் திருவடிகளில் வைத்து வணங்குமாறு கடிதமும் எழுதினேன்.

**நினைவு—6:** 1960 ஆகஸ்டு முதல் 1966 ஏப்பிரல்—மே முடிய குடும்பத்தைவிட்டுத் திருப்பதியில் மாணியாக வாழ்ந்து வந்தேன். மூத்த மகன் இராமலிங்கம் பி. யு. சி. தாண்டி விட்டான். அவனைத் திருப்பதியில் இளங்கலை வகுப்பில் சேர்க்கத் தீர்மானித்தேன், இளையமகன் மூன்றாம் படிவம் தாண்டிய நிலையில் இருந்தான். அவன் தமிழில் பாடங்கள் பயின்றவனாதலாலும் திருப்பதியில் ஆங்கிலத்தில் படிக்க வாய்ப்பு இருந்தாலும் உயர்நிலைப் பள்ளி அளவில் தமிழ் கற்பிக்கும் வசதி இல்லாததாலும் அவனை விவேகாநந்த வித்தியாலய உயர்நிலைப் பள்ளியில் படிக்கவைக்க எண்ணி அடிகளாரை மாலை நான்கு மணி சுமாருக்குத் தபோவனத்தில் சந்தித்தேன். இது 1966 பிப்பிரவரி மார்ச்சுத் திங்களில் நடைபெற்ற தாக நினைவு. நான் சென்றபோது அடிகளாரின் அறையில் கூட்டம் அதிகமாக இருந்தது. இளந்துறவிகள் விழுந்து வணங்கி ஆசி பெற்றுக் கொண்டிருந்தனர். இறுதியாக நானும் கிடந்த வண்ணம் அடிகளின் ஆசி பெற்றேன். ''என்ன ரெட்டியார், நான் தென்காசியில் நாளை நடைபெற இருக்கும் அந்தர் யோகத்திற்குக் கிளம்பிக் கொண்டிருக்கின்றேன். மாலை 5-45 இருப்பூர்தியைப் பிடிக்கவேண்டும். ஏதாவது முக்கிய வேலையாக வந்தீர்களா?'' என்று வினவினார். ''ஆம் சுவாமி! காரில் போகும் போதே பேசிக் கொள்ளலாம்'' என்றேன். 'சிற்றுண்டி?' என்றார். 'சுவாமி அது முக்கியமல்ல; சுவாமியைக் கண்டு பேசுவதே முக்கியம்' என்றேன். 3-30 மணி சுமாருக்கு இருவரும் காரில் ஏறினோம்.

காரிலேயே நான் வந்த வேலையைத் தெரிவித்தேன். ''இந்த ஆண்டு குடும்பத்தைத் திருப்பதிக்கு மாற்ற வேண்டும், என் இளையமகன் இராமகிருஷ்ணன் மூன்றாவது படிவம் முடித்து ஜூனில் நான்காம் படிவத்தில் நம் வித்தியாலயத்தில் சேர்க்களண்ணித்தங்களிடம் பேச வந்தேன்'' என்றேன். சேர்த்துக் கொள்வதில் தடை

இல்லை. இங்கு மூன்றாவது பாரம் படிக்கும் நிலையில் இருந்தால் சேர்த்துக்கொள்ளலாம். வித்தியாலயத்தில் நான்கு ஆண்டுகள் படிக்கவேண்டும் என்றவிதி உள்ளதே'' என்றார் ''விதியை என் பொருட்டு மாற்ற வேண்டா. வேறு யோசனை கூறுங்கள்'' என்றேன். 'சென்னை தியாகராயநகரில் உள்ள இராமகிருஷ்ணா உயர் நிலைப் பள்ளி ஏற்றது; விடுதியில் இடம் கிடைப்பது சிரமமாக இருக்கும். குஜராத்திகள் அதிகம் உள்ள இடம். தேர்வு எழுதி முயன்று பார்க்கலாம்' என்றார். 'ஒரு கால் அங்கு இடம் பெற இயலாவிடில் என்ன செய்வது?' என்று கேட்டேன். 'பெரிய நாய்க்கன்பாளையம் இராம கிருஷ்ணவித்யாலயா ஏற்றது. தொலைவு காரணமாகத் தாங்கள் விரும்பாவிடில், திருப்பதியில் வர இருக்கும் சென்ட்ரல் ஸ்கூலில் சேர்த்துவிடுங்கள். நீங்கள் நாள் தோறும் பையன் படிப்பு, வீட்டு வேலை முதலியவற்றைக் கவனியுங்கள். உங்கட்குதான் எல்லாப்பாடங்களிலும் திறமை உண்டே' என்றார். இந்தியில் ராஷ்ட்ராபாஷா தேறியிருந்தான். வடமொழியை தனி வகுப்பில் கற்க ஏற்பாடு செய்தேன். இந்த இருமொழிகளைத் தான் கற்றான் இராம கிருட்டிணன் திருப்பதியில்.

கார் மாலை 5-15க்குத் திருச்சி இநப்பூர்தி சந்திப்பை வந்தடைந்தது. ஏற்கெனவே இட ஒதுக்கீடு செய்யப் பெற்றிருந்தமையால் நேராக வண்டிக்குச் சென்று அதில் ஏறிக் கொண்டோம். 'இன்னும் 30 நிமிடம் உள்ளது, அதற்குள் ஏதாவது சாப்பிடலாமே. தபோவனத்தில் சிற்றுண்டி அருந்துவதற்குக் கூட நேரம் இல்லாது போய் விட்டது' என்று சொல்லிக் கொண்டே தாம் தயாராக வைத்திருந்த இரண்டு சத்து மாவு உருண்டைகளைத் தந்து அருந்துமாறு பணித்தார்; கமண்டலத்திலிருந்து நீரும் தந்தார். அந்தக் காட்சி இன்றும் என் மனத்தில் பசுமை யாகவே உள்ளது. இதை எழுதும்போது (21-10-1989) அடிகள் நம்மிடையேயில்லை. சென்றமூன்று ஆண்டுகளாகத் திருநாட்டில் வாழ்கின்றார். இந்தச் சந்திப்பிற்குப் பிறகு

பிற்குப் பிறகு அடிகளாரைத்தரிசிக்கும் பேறு பெறவில்லை. இதுவே என்இறுதி சந்திப்பாகி விட்டது.

□ □ □

இப்போது பகவத் கீதையை சொற்பொழிவுகளாக எழுதும் பணியில் ஈடுபட்டிருக்கின்றேன். 18-வது இயலை எழுதிக்கொண்டிருக்கின்றேன். இவ்விடத்தில் அடிகளார் இந்த உலகில் செய்து வந்த தொண்டுகளை நினைக்கும் போது ‘‘காமிய கர்மங்களைத் துறப்பதைச் சந்நியாசம் என்று கூறுவர் ஞானிகள்..எல்லாக் கர்மங்களின் பயனைத் துறப்பதைத் தியாகம் என்பர் தீர்க்கதரிசிகள்’ (கீதை 18:2) என்ற சுலோகம் நினைவிற்கு வருகின்றது. இந்தச் சுலோகம் சந்நியாசம்—தியாகம் என்ற கருத்தைச் சிந்திக்க வைக்கின்றது. இம்மையில் தமக்குப் பட்டம் பதவி, பேர், புகழ், மக்கட் பேறு, செல்வம், நீண்ட ஆயுள், உடல்நலம் முதலியவை அமைய வேண்டும் என்று ஆசைப்படுவதும், மறுமையில் துறக்கத்தில் உள்ள பதவிகள் வேண்டுமென்று விரும்புவதுமே காமிய கர்மம் என்பது. இத்தகைய ஆசைகளை ஒழிப்பது சந்நியாசம். இது சில ஞானியர்களின் கருத்து. வேறு சில ஞானிகள் நித்திய நைமித்திய, காமியமாகிய எல்லாக் காமங்களின் பயனை விட்டு விடுவதே தியாகம் என்கின்றனர். சந்நியாசம் என்பதும் தியாகம் என்பதும் ஒரு கருத்தைத்தான் விளக்குகின்றன என்பது பரந்தாமனின் கோட்பாடு. ‘அற்றது பற்றெனில் உற்றது வீடு’ (திருவாய் 1.2:5) என்கின்றார் நம்மாழ்வார்.

‘‘காமிய வினைகளைத் துறத்தலே சந்நியாசம். சந்நியாசி வினை புரியாமல் இருக்க வேண்டிய தேவை இல்லை. வினை புரியாமல் ஒருவரும் உலகில் ஒருக்கணமும் இருக்க முடியாது. துறவி துறப்பதெல்லாம் காமிய வினையேயன்றி வேறு அல்ல. ஆனால் தியாகம் எனப்படுவது வினையின் பயனை விரும்பாது வினையைப் புரிவதே ஆகும். பெருந்தவத்திரு சித்பவானந்த அடிகள் இந்த இரண்டு பெரு நெறிகட்கும் எடுத்துக்காட்டாக வாழ்ந்து அண்மையில் (1986) வீடுபேற்றை அடைந்தவர்கள்.’’

## 6. பு.ரா. புருடோத்தம நாயுடு

1944-சனவரித் திங்கள் என்பதாக நினைவு. சென்னைக்குப் போகும்போதெல்லாம் பன்மொழிப் புலவர் வே. வேங்கடரஜுலு ரெட்டியார் இல்லத்தில் தங்குவது வழக்கம். 'ஜான்சனின் இலக்கியக்கழகத்' திற்கு (Club) பல அறிஞர்கள் வந்து கூடுவது போல் 'மயிலைத் தொல்காப்பியர்' எனப்பெயர் பெற்றிருந்த பன்மொழிப்புலவர் திரு. ரெட்டியார் அவர்களின் இல்லத் திற்குப் பல பெரும் புலவர்கள் வந்து வந்து போவதுண்டு. வெளியூரிலிருந்து வரும் புலவர்கள் இரவில் அவர்தம் இல்லத்தில்தான் தங்குவார்கள். இம்முறை திரு பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்கள் ஏதோ அலுவலாக சென்னைக்கு வந்தவர் திரு. ரெட்டியார் இல்லத்தில் தங்கி னார். நான் அப்பொழுது துறையூர் உயர்நிலைப் பள்ளி யில் தலைமையாசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந் தேன். திரு.நாயுடு அவர்கள் அப்பொழுது திருவையாற்று அரசுக் கல்லூரியில் (Raja's Oriental College) தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

இப்பொழுது முதல் முறையாகத் திரு. நாயுடு அவர் களை அடியேனுக்கு அறிமுகம் செய்து வைத்தார் பன்மொழிப் புலவர் திரு. ரெட்டியார் அவர்கள். 'பாடம் சொல்லுதலை அற்புதமாகச் செய்வார்' என்றார். சேனாவரையத்தைப் பாடம் கேட்க வேண்டுமென்றால், இவரையொத்த முறையிலேயே அண்ணாமலைப்

பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் திரு பூவராகம் பிள்ளையும் சேனாவரையம் பாடம் சொல்லுவதில் சிறந்தவர்' என்றும் சொல்லி வைத்தார். நான் பயிற்சிக் கல்லூரியில் படிக்கும்போதும், பின்னர் பயிற்சிக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றும்போதும்ஆசிரியர்கள்பாடம் சொல்லும் முறை, கல்வி உளவியல் முதலியவற்றைப் படித்துப் பயன் பெற்றவனாதலாலும், பயிற்சி பெறும் ஆசிரியர்க்குப் பாடம் சொன்னவனாதலாலும் பாடம் சொல்லுதலைப்பற்றி நன்னூலார் கூறிய,

உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைந்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்துஅவன் உளங்
கொளக்
கோட்டமில் மனத்தின் நூல்கொடுத்தல் என்ப[1]

என்ற நூற்பாப் பகுதியை இப்போது நினைத்துக் கொள்ளுகின்றேன்.

இந்த ஆண்டு பிப்பிரவரி (1944) யில் துறையூர் உயர்நிலைப்பள்ளிக்கு மாணாக்கர் இலக்கியக் கழகத்தில் ஒரு சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்துமாறு அழைத்தேன். என் வேண்டுகோளை ஒப்புக்கொண்டு 'திருவாய் மொழி' என்ற தலைப்பில் பேசினார். இதற்கு ஊர்ப் பொது மக்களில் தமிழார்வம் மிக்க பலரும் சமயார்வம் மிக்க சிலரும் வந்திருந்தனர். நம்மாழ்வார் வரலாற்றை மிக அற்புதமாக எடுத்துக்காட்டி, மதுர கவியாழ்வார் நம்மாழ்வாரைச் சந்தித்த வரலாற்றை கேட்போர் வியக்கும் வண்ணம் விவரித்து விளக்கினார். திருப்புளியாழ்வாரின் கீழ் யோகநிலையில் இருந்த 'நம்மாழ்வாரை'க் காண்

1. நன்னூல்—பொதுப்பாயிரம்—நூற்பா-36

கின்றார் மதுரகவிகள்.[2] அவருடைய நிலையை ஆராய்ந் தறிய எண்ணி ஒரு சிறுகலை எடுத்து அவர்முன் இட்டு ஒலி உண்டாக்குகின்றார். உடனே குருகைபிரான் கண் விழித்து நோக்குகின்றார். மதுரகவிகள் அவரோடு பேசி யறிய எண்ணி,

'செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால்
எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?'

என்ற வினாவை விடுக்கின்றார். இதற்கு நம்மாழ்வார் வாயிலிருந்து,

'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'

என்ற விடைவருகின்றது.

அப்போது—ஏன் இன்றும் இப்போதும் கூடத்தான்—துறையூரில் 'வைணவம்' என்பது 'வீசை என்ன விலை?' என்று கேட்பது போலத் தான். எங்களுக்கெல்லாம் 'எதிரும் புதிருமாக' இந்த உரையாடலைத் திரு. நாயுடு அவர்கள் விளக்குகின்றார்கள். "செத்தது—உடல். உடம்பு மூலப் பகுதியின் விகாரமாக உள்ளது; அறிவற்றது; அதனால் அதனைச் செத்தது என்றார். சிறியது—உயிர்.

---

2. இவர் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர். ஆழ்வார் திருநகரிக்குக் கிழக்கே சுமார் மூன்று கல் தொலைவிலுள்ள வைத்தமாநிதிப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் திருக்கோளூரில் அவதரித்தவர். அயோத்தி, மதுரை முதலிய வடநாட்டுத் திருத்தலப்பயணத்தை முடித்துக்கொண்டு கங்கை கரையில் தங்கியிருக்கும் போது தென்திசையை நோக்கி ஒரு பேரொளி தோன்றியதைக் கண்டு அதை நோக்கியே நடந்து வந்தவர். அந்த ஒளி ஆழ்வார் திருநகரியிலுள்ள திருப்புளியாழ்வார் வரை நகர்ந்து கொண்டு வந்து நின்று நம்மாழ்வார் இருப்பைக் காட்டியது.

உயிர் அணு வடிவினதாக உள்ளது; அஃது உடம்பு முழுவதும் தன் ஞானத்தால் வியாபித்து, உடம்பு முழுவதி லுமுள்ள நிகழ்ச்சிகளை அறிகின்றது; அதனால் அதனைச் சிறியது என்றார். பிறத்தல்—உயிர் தன் வினைகளுக்கேற்ப உடம்பை அடைதல். எத்தைத் தின்று எங்கே கிடக்கும்? (அவ்வாறு உடம்பை அடைந்த உயிர்) எதனை அநுபவித்து எங்கே இருக்கும்? என்றார்'' என்று விளக்கினார் திரு. நாயுடு அவர்கள். இதன்பிறகு நம்மாழ்வார் தந்த விடை யின் விளக்கம் வருகின்றது. அத்தைத் தின்று அங்கே கிடக்கும்—உடம்பை அடைந்த உயிர் தன் வினைப்பயனை அநுபவித்துக்கொண்டு அவ்வுடம்பிலேயே இருக்கும் என்பது நம்மாழ்வாரின் விடை விளக்கம். உயிர் அந்தந்தப் பிறப்பிற்குரிய வினை முடியும்வரை அந்தந்த உடம்பில் இருக்கும் என்பது இதன் கருத்தாகும். இதன் பிறகு 'நம்மாழ்வார் அவதரித்த காரணத்தால் திருக்குருகூர் என்ற பெயர் வழக்குமாறி 'ஆழ்வார் திருநகரி' என்ற பெயராலே வழங்கப்படுகின்றது. திருக்குருகூர் என்ற பெயர் நூல் வழக்கில் மட்டுமே உள்ளது' என்று கூறிய கருத்து மாணாக்கர்கட்கும் நல்லவிருந்தாக அமைந்தது; எம்போலியருக்கும் ஒரு சிறந்த செய்தியை அறிந்த மன நிறைவு ஏற்பட்டது. அடுத்து, திருவாய்மொழியிலுள்ள சில பாசுரங்களை எடுத்துக் கொண்டு விளக்கின பாங்கு கேட்டிருந்த சில பெரியோர்களை பக்தியின் கொடுமுடிக்கு இட்டுச் சென்று விட்டது.

1945-இல் அடியேனும் 'வித்துவான்' பட்டம் பெற் றேன். வித்துவான் தேர்வுக்குப் படிக்கும்போது 'சேனா வரையம்' தேர்வுக்குரிய பாடப் பகுதியாக இருந்தது. அதைப் படிக்கும்போது அங்காங்கு என் மனத்தில் எழுந்த ஐயங்களைப் போக்கிக் கொள்ள விரும்பிச் சில வாரங்கள் சனி—ஞாயிறு விடுமுறைகளில் திருவையாற்றிற்குப் போய் வருவதுண்டு. விடுமுறைக் காலங்களிலும் சில நன்மாணாக் கர்கள் திருநாயுடுவைச்சூழ்ந்துகொண்டு இருந்ததை நேரில்

கண்டு மகிழ்ந்ததுண்டு. பண்டைக் காலத்தில் நடைபெற்ற குருகுல வாசத்தை இது நினைப்பூட்டுவதாக இருந்தது. அப்போது S. K. இராமராசன் (உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர்; இப்போது தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் பேரகராதித் துறையில் பணியாற்றுபவர்), மு. இராமசாமி (தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர்; தற்சமயம் இராசிபுரத்தில் நிலையாக வாழ்ந்து கொண்டு பேச்சாலும் எழுத்தாலும் இலக்கியப் பணி ஆற்றி வருபவர்)மாணாக்கர்களாக இருந்தனர். இவர்கள் 1946-இல் வித்துவான் இறுதி நிலைத் தேர்வு எழுத வேண்டியவர்கள்.

நான் திருவையாற்றிற்கு வந்தபோது சில சமயங்களில்தான் திரு. நாயுடு அவர்கள் சேனாவரையத்தில் சில ஐயங்களை அகற்றினார்கள். அந்த ஆண்டு (1945) வித்துவான் இறுதி நிலைத் தேர்வு எழுத இருந்த T. V. கோபாலன் என்ற அவருடைய தலைமாணாக்கனிடம் என்னை இணைத்து விட்டார். 'எல்லாப் பாடங்களிலும் எழும் எல்லாவித ஐயங்களையும் அவனிடமே கேட்டுத் தெளியலாம் என்று தெரிவித்து விட்டார். இந்த மாணாக்கன் வியத்தகு நினைவாற்றலையுடையவன். எதைக் கேட்டாலும் சொல்லுவான். இவன் ஒரு 'கம்ப்யூட்டர்' மாதிரி. எதைக் கேட்டாலும் கடல் மடை திறந்த வெள்ளம்போல் விடை பெருக்கெடுத்தோடும்; பொரி மத்தாப்பில் தீ வைத்தால்அஃது எப்படிப் பொரிந்து மேல் எழும்புகின்றதோ அப்படியிருக்கும். இப்படி ஒரு மாணாக்கனை நான் பார்த்ததில்லை. இவன் அந்த ஆண்டு பல்கலைக் கழகத் தேர்வில், முதல் வகுப்பில் முதல் மாணாக்கனாகத் தேர்ந்து ரூ1000/= பரிசையும் பெற்றான். இவன் வேறு யாரும் இல்லை; தற்சமயம், திருவையாற்று அரசர் கல்லூரியில் பேராசிரியராகவும், முதல்வராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற பிறகு புதுச்சேரி ஃபிரெஞ்சு ஆய்வு நிறுவனத்தில் (French Institute)

ஆய்வாளராகப் பணியாற்றும் திரு. T. V. கோபாலய்யர் தான், நான் புதுவை போகும்போதெல்லாம் என்னிடம் அன்பாகவும் மரியாதையாகவும் பழகி வருபவர்.

நல்லாசிரியராகத் திகழ்ந்து நூற்றுக்கணக்கான தமிழ்ப் புலவர்களை உருவாக்கிய திரு. நாயுடு அவர்கள் சென்னைக்கு வந்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வுப் பேராசிரியராகப் பணி ஏற்ற பிறகுதான் அவருடைய பேரும் புகழும் தமிழுலகமெங்கும் கலங்கரை விளக்குபோல் ஒளி காட்டத் தொடங்கியது. அக்காலத்தில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பாடத் திட்டக் குழுவின் தலைவராக இருந்தவர். திரு. T. M. நாராயண சாமிப் பிள்ளை. மணிப்பிரவாள நடையிலுள்ள ஈடு முப்பத்தாறாயிரப் படியைத் (திருவாய்மொழியின் உரை) தமிழாக்கம் செய்து தமிழுலகுக்கு அளிக்க வேண்டும் என்று திருவுள்ளங் கொண்டார் திரு. பிள்ளையவர்கள். இவர் அக்காலத்தில் தமிழ் ஆய்வாளராகப் பணியாற்றி வந்த பன்மொழிப் புலவர் வேங்கடராஜுலு ரெட்டியாரைக் கலந்து இந்தப் பெரும் பணிக்குத் தக்கவர் யார் என்பதை ஆராயும்போது திரு. ரெட்டியார் அவர்கள், திரு. நாயுடு அவர்களால்தான் இந்தத் தெய்வப் பணியை நிறைவேற்ற முடியும் என்று தெரிவித்தார்கள். அக்காலத்தில், இராஜாஜி அமைச்சரவையில் இந்து—அறநிலையத்துறை அமைச்சராகத் திகழ்ந்த திரு K. வேங்கடசாமி நாயுடு அவர்களும் இப்பணியில் மிகவும் அக்கறை காட்டி வந்தார். திரு. பிள்ளையவர்கள், திரு. K. வேங்கடசாமி நாயுடு அவர்கள் ஆகிய இருவரும் அக்காலத்தில் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்த டாக்டர் A. L. முதலியாரைச் சந்தித்து இப்பெரும் பணியைப் பல்கலைக் கழகம் ஏற்றுச் செய்ய வேண்டும் என்றும், இதற்குத் தக்கவர் திரு பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்களே என்றும் தெரிவித்தனர். அக்காலத்தில்

சென்னைச் சட்டக் கல்லூரியில் பணியாற்றிய திரு. S. கோவிந்தராஜுலு அவர்கட்கும் இந்தப் பணித் திட்டம் உருவாவதற்குப் பெரும்பங்கு உண்டு. பல்கலைக் கழக விதிப்படி விளம்பரம் செய்யப்பெற்றது; தேர்வுக் குழுவும் அமைக்கப்பெற்றது. திரு. புருடோத்தமநாயுடு அவர்கள் விரிவுரையாளராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இதுதான் திரு. புருடோத்தமநாயுடு அவர்கள் ஈடுமுப்பத் தாறாயிரப் படியைத் தமிழாக்கம் செய்வதற்குத் தேர்ந் தெடுக்கப் பெறுவதற்குத் திரைமறைவில் நடைபெற்ற வரலாறு.

திரு. நாயுடு அவர்கள் தாம் ஏற்றுக் கொண்ட தெய்வப்பணியை மிக அற்புதமாக நிறைவேற்றி னார்கள். 1952 முதல் தொகுதியும் 1959 இல் பத்தாம் தொகுதியும் வெளி வந்தன. அதன் பிறகு அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆசாரிய ஹிருதயம் என்ற நூலுக்கு மணவாளமாமுனிகளின் மணிப் பிரவாள நடையிலுள்ள உரையைத் தமிழாக்கம் செய்யும் பணியை மேற்கொண்டு அதனைச் சிறப்புறச் செய்து முடித்தார்கள். இது நான்கு பகுதிகளாக அமைந்து 1-2 பகுதிகள்; 3- 4பகுதிகள் சேர்ந்து இரண்டு தொகுதிகளாக (1965) வெளியிட்டு ஓய்வு பெற்றார். பின்னர் அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தில் பல்கலைக் கழக மானிய ஆணையின் உதவியினால் கிடைத்த இரண்டாண்டுப் பணியை ஏற்றுக் கொண்டு பிள்ளை உலக ஆசிரியரால் இயற்றப் பெற்ற ஸ்ரீவசன பூஷணத்திற்கு மணவாளமாமுனி கள் எழுதிய மணிப்பிரவாளநடையிலுள்ள உரையைத் தமிழாக்கம் செய்து கடலூர் தி. கி. நாராயணசாமி நாயுடுமூலம் வெளியிட ஏற்பாடு செய்தார் (1970).

காரைக்குடியிலிருந்தபோது சென்னைப் பல்கலைக் கழகக் கல்வியியல் ஆலோசனைக் குழுவிற்கும் (Academic Council) ஆட்சிப் பேரவைக்கும் (Senate) உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருந்தேன். 1953-56 ஆண்டுகளில்

ஆண்டிற்கு நான்கு முறை காரைக்குடியிலிருந்து சென்னைக்கு வந்துபோகும் வாய்ப்புகள் இருந்தன. 'மயிலைத் தொல்காப்பியர்' (35, இராக்கியப்ப முதலித் தெரு, சென்னை-4) இல்லத்தில்தான் தங்குவேன். ஆனால் திரு. நாயுடு அவர்களைச் சந்தித்து அளவளாவாமல் திரும்புவதில்லை. வரும்போதெல்லாம் ஒரு வேளையாவது அவர் இல்லத்தில் உணவு கொள்ளச் செய்து விடுவார். அவ்வளவு பாசத்துடன் பழகுவார். அவர் படைத்த நூல்களை அவ்வப்பொழுது எனக்காக ஒரு படியை விலை கொடுத்து வாங்கி வைத்து விடுவார் மயிலைத் தொல்காப்பியர்.

1960-ஆகஸ்டு முதல் நான் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியேற்ற பிறகு திங்களுக்கு ஒரு முறை வார விடுமுறை நாட்களில் சென்னைக்கு வந்து திரும்புவதுண்டு. அப்பொழுது பன்மொழிப் புலவர் ரெட்டியார் அவர்களின் உடல்நிலை குன்றி அடிக்கடிச் சிகிச்சை பெற்று வந்தார். அவரைப் பார்த்து அவருக்கு ஆறுதல் கூறவும் நான் ஆறுதல் பெறவும் நான் அடிக்கடிச் சென்னைப் பயணத்தைத் தவறாது மேற்கொண்டிருந்தேன். அப்பொழுதெல்லாம் திரு. நாயுடு அவர்களைப் பார்த்து அளவளாவாமல் திரும்புவதில்லை. திரு. ரெட்டியார், திரு. நாயுடு ஆகிய இரண்டு வைணவ அடியார்களை அடிக்கடிச் சந்தித்து உரையாடியதாலும், திரு. நாயுடு அவர்களின் படைப்புகள் என்னை ஈர்த்ததாலுமே என்னைத் திருவேங்கட முடையான் நம்மாழ்வார் தத்துவத்தை என் டாக்டர் பட்டத்திற்கு ஆய்வுப் பொருளைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளச் செய்தனவோ என்று கூட நினைக்கத் தோன்றுகின்றது. அல்லது எம்பெருமான் வாழும் சூழ்நிலையே என்னைச் 'சார்ந்ததன் வண்ணமாகச்' செய்து விட்டதோ என்று கூடக் கருதுவது பொருத்தமாகின்றது.

ஒரு சமயம் (1962 என்பதாக நினைவு) திருப்பூர் K. R. சுப்பிரமணியம் (இவர் ஒரு சோதிடர்) திருவேங்கட வன்மீது தாம் பாடிய ஒரு நூலை திருமலையில் வெளி யிடவும் அந் நிகழ்ச்சிக்குத் தலைமையேற்கவும் திரு நாயுடு அவர்களைக் கேட்க, அதற்கு அவர் 'என்னை விடப் பன் மடங்கு சிறந்த பேராசிரியர் ரெட்டியார் திருப்பதியிலேயே பணியாற்றி வருகின்றார். அவரைக்கொண்டு உங்கள் கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்ளலாமே' என்று கூறி என்னிடம் ஆற்றுப் படுத்தினார். இதைக் கேட்டதும் எனக்கோ அளவற்ற மகிழ்ச்சி. 'மாருதி அல்லனாகில் நீ எனும் மாற்றம் பெற்றேன்'[3] என்று இராமன் தன்னைத் தூதனாகத் தேர்ந்தெடுத்ததாக அங்கதன் மகிழ்ச்சி யடைந்ததுபோல எனக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டது. சைவ னாக இருந்தாலும் என்னை ஒரு வைணவனாகக் கருதிய திரு. நாயுடுவின் பரந்த நோக்கை இப்போது நினைத் தாலும் நெஞ்சம் குளிருகின்றது, இத்தகைய பரந்த நோக்குடைய வேறொரு வைணவப் பெருமகனைக் காண்டல் அரிது.

1964-இல் யான் 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற ஒரு நூலை வெளியிட்டேன். அதற்குத் திரு. நாயுடு அவர்களிடமிருந்து அரியதோர் அணிந்துரை பெற வேண்டும் என்று என் மனம் விழைந்தது. வேண்டு கோள் விடுத்தேன். அன்புடன் ஒப்புக்கொண்டு அணிந் துரை வழங்கி என்னை வாழ்த்தினார். ''பொதுவாக நூலின் போக்கு விளக்க முறும் முறையிலும் ஆராய்ச்சிப் பாங்கிலும் அமைந்துள்ளது. நண்பர் திரு ரெட்டியாரின் தொண்டுள்ளத்தில் முளைத்தெழுந்த இந்நூல் பல தமிழ் மக்கள் உள்ளத்திற்கு நல்லவிருந்தாக அமையும் என்பதற்கு ஐயம் இல்லை. நீலமேனி நெடியோன் அருளால் இவர்

..............................

3. யுத்த. அங்கதன் தூது—13.

இன்னோரன்ன பல நூல்களைப் பல துறைகளிலும் எழுதித் தமிழன்னைக்கு அணி செய்தல் வேண்டும். இதற்குச் 'செடியாய வல் வினைகள் தீர்க்கும்' திரு வேங்கடவன் இவருக்கு உடல் நலமும் மனவளமும் அருள் வானாக என அவன் திருவடிகளை நினைந்து வாழ்த்துகின் றேன்'' என்று எழுதினார். திரு நாயுடு அவர்களின் தூய உள்ளத்தில் எழுந்த இந்த ஆசியின் கனம் இன்றளவும் என்னை எழுத்துப் பணியில் ஈடுபடச் செய்து வருகின்றது. என்பது என் அதிராத நம்பிக்கை.

சைவம் மக்களிடையே பரவியதுபோல வைணவம் பரவவில்லை. சைவ மடங்கள் சமயத்தைப் பரப்புவதில் மேற்கொண்டு வரும் தொண்டுகளைப் போல வைணவ மடங்கள் தொண்டுகளை மேற்கொள்ளவில்லை. ஆழ்வார் கள் பன்னிருவர், அவர்களால் அருளிச் செய்யப் பெற்ற பிரபந்தங்களின் தொகுப்பே நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் என்ற செய்தியே பெரும்பாலோருக்குத் தெரி யாமல் இருந்தது. பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை போன்ற சிறந்த அறிஞர்கள் அடங்கிய குழுவின் துணை கொண்டு மர்ரே கம்பெனி (5, தம்பு செட்டித் தெரு, சென்னை —1) எஸ். இராஜம் அவர்கள் வெளியிட்ட குறைந்த விலை நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பதிப்பும் (1955, 1956) திரு நாயுடு அவர்களின் ஈட்டின் தமிழாக்க மும் பொது மக்களிடம் வைணவம் பரவத் துணை செய்தன.

பகவத் பிரபந்தம் என வழங்கும் திருவாய்மொழியின் பெய ரும் மணிப் பிரவாள நடையில் அமைந்த இதன் உரை களாகிய ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீரா யிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்து ஆறாயிரப் படி என்று ஐந்து உரைகளின் தொகுப்பு பகவத் விஷயம் என்ற பெயரால் வழங்குவதும் திரு. நாயுடு அவர்களின் ஈட்டின் தமிழாக்கத்தாலேயே பொது மக்கள் அறிய வாய்ப்புகள் ஏற்பட்டன. திருவாய் மொழியின் உரைகளை வைணவர்கள் 'வியாக்கியானம்'

என்ற பெயராலேயே வழங்குவர். நூல்களின் அளவையினைக் 'கிரந்தம்' என்னும் அளவுப் பெயரால் அளவிட்டுக் கூறும் வழக்கு தமிழிலும் உண்டு என்பதை யாப்பருங்கலக் காரிகையின் பாயிர உரையால் தெளியலாம்; ஒற்றொழித்து உயிரும் உயிர் மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துகளையுடையது 'கிரந்தம்' எனப்படும். படி என்பது, அளவு என்னும் பெயரினையுடையது. இதனைத் திரு. நாயுடு அவர்கள் ஈட்டின் தமிழாக்கம் என்ற நூலின் முதற் பகுதியின் முன்னுரையில் தெளிவாக விளக்குகின்றார்.

ஆறாயிரப்படி: இஃது இராமாநுசர் காலத்திலேயே திருக்குருகைப் பிரான் பிள்ளான்[5] என்பவரால் உடையவர் பணித்தபடி அருளிச் செய்யப் பெற்றது. பிள்ளான் உடையவரின் மானச புத்திரராகவும் முதன்மைச் சீடராகவும் திகழ்ந்தவர். இந்த வியாக்கியானம் ஆறாயிரம் கிரந்தங்களையுடையதாதலின் இந்த உரையும் 'ஆறாயிரப்படி' என்றதிருநாமம் பெற்றது. இறைவனைப்பற்றிக் கூறுகின்றவிஷ்ணு புராணம் ஆறாயிரம் கிரந்தங்களையுடையதாதலின் இறைவனைப் பற்றிக் கூறுகின்ற இத்தமிழ் மறைக்கும் அத்தொகையளவிலேயே இந்த வியாக்கியானத்தை அருளிச் செய்தார் பிள்ளான்.

ஒன்பதாயிரப்படி: இதனை அருளிச் செய்தவர் நஞ்சீயர். உடையவர் பிரம்ம சூத்திரத்திற்கு அருளிச் செய்த ஸ்ரீபாஷ்யம் ஒன்பதாயிரம் கிரந்தங்களையுடையதாலின் அத்தொகையளவில் இந்த வியாக்கியானம் எழுந்தது. நஞ்சீயர் தம் ஆசாரியராகிய பட்டரிடம் ஆறாயிரப்படி வியாக்கியானத்தைப் பெற்று அதனைச் சிறிது விரிவாகச் செய்யத் திருவுள்ளம்பற்றி பட்டரின் அநுமதி பெற்று இதனை அருளிச் செய்ததாக வரலாறு.

5. இவர் திருமலை நம்பியின் திருக்குமாரர்; உடையவரின் சகோதரியின் பிள்ளை.

பன்னீராயிரப்படி[6] : இதனை அருளிச் செய்தவர் வாதிகேசரி அழகிய மணவாளசீயர். முன்புள்ள பெரியோர்கள் அருளிச் செய்த வியாக்கியானங்களையெல்லாம் கண்டு அவற்றின் சார தரமான பொருள்சிறப்புகளையெல்லாம் சுருக்கி, எல்லார்க்கும் எளிதாகவும் விளக்கமாகவும் இருக்குமாறு அருளிச் செய்தனர். ஸ்ரீபாகவதம் பன்னீராயிரம் கிரந்தங்களை உடையதாதலின் அத்தொகையளவில் இந்த வியாக்கியானம் எழுந்தது.

இருபத்து நாலாயிரப்படி : இதனை அருளிச் செய்தவர் 'வியாக்கியானச் சக்கரவர்த்தி' என்ற அடை மொழியுடன் திகழும் பெரிய வாச்சான் பிள்ளை என்பவர். இவர் நம் பிள்ளையின் மாணாக்கர். ஆசாரியரின் விருப்பத்திற்கிணங்க ஒழுகும் மாணாக்கர். தம் பக்கலில் எல்லாச் சாத்திரங்களையும் அலகு அலகாகக் கற்றவர், தம் ஆசாரியரின் நியமனப்படி இந்த வியாக்கியானத்தைச் செய்தார் ஆச்சான் பிள்ளை. ஸ்ரீராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களையுடையதாதலின் அத்தொகையளவில் இந்த வியாக்கியானம் எழுந்தது.

முப்பத்து ஆறாயிரப்படி : இதனை எழுதி உதவியவர் வடக்குத் திரு வீதிப்பிள்ளை. இவர்தம் ஆசாரியரான நம் பிள்ளை ஒரு முறை திருவாய் மொழி சம்பந்தமாக நாடோறும் அருளிச் செய்து வந்த சொற்பொழிவுகளைக் கேட்டுக் குறிப்பெடுத்துத் தனியே ஏடுகளில் எழுதி வரலாயினர். இதுவே ஈடு முப்பத்தாறாயிரப்படி என்ற வியாக்கியானம். இதனை 'ஈடு' என்ற திருப்பெயராலே வழங்குவர். ஈடு என்பது உடல் குளிர் முதலியவற்றால் தாக்காதிருக்கும் பொருட்டு அணிந்து கொள்ளும்

6. இஃது இருபத்து நாலாயிரப்படி, முப்பத்துஆறாயிரப்படி என்னும் வியாக்கியானங்கட்கு காலத்தாற் பிற்பட்டதாயினும் எண் வரிசை நோக்கி ஈண்டு எழுதப் பெறுகின்றது.

கவசத்தைக் குறிக்கும். கவசம் உடலைக் காத்தல் போன்று இந்த வியாக்கியானமும் கற்போராலும் எழுதுவோராலும் வேற்று மக்களாலும் தன்னிலை திரிந்து மாறுபடாதபடி திருவாய்மொழியைக் காத்து நிற்றலின் இதற்கு 'ஈடு' என்ற தனிச் சிறப்புப் பெயரினை நம் முன்னோர் வைத்து வழங்கினர். இது நம்பிள்ளை நாடோறும் காலட்சேபத்தில் அருளிச் செய்தனவற்றை வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதிவைக்கப்பட்டதாதலில் இதனை 'ஈடு' என்று வழங்கினர் என்று கொள்ளுதலும் அமையும். இடுதல்—எழுதுதல், இது சுருதப்பிரகாசியினை ஒத்திருத்தலின் இதனை 'ஈடு' என்றும் தன்னைக் கற்பார் யாவரையும் இறைவனிடத்து ஈடுபடச் செய்வதாதலின் ஈடு என வழங்கினர் என்றும் கூறுவதுண்டு. பிரம்ம சூத்திரத்திற்கு உடையவர் செய்தருளின ஸ்ரீ பாஷ்யத்தின் ஆழ்பொருள் எல்லாரும் விளங்கும் பொருட்டுச் சுதரிசன பட்டர் என்பார் செய்தருளின நூலே சுருதப்பிரகாசிகை என்பது; இது முப்பத்தாறாயிரம் கிரந்தங்களையுடையது. இத்தொகையளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது. வடக்குத் திருவீதிப் பிள்ளை இதனை எழுதினாலும் இதன் ஆசிரியர் நம்பிள்ளையேயாதலால் அப்பெரியாரின் திருப்பெயரைச் சேர்த்து 'நம்பிள்ளை ஈடு' என்ற திருப்பெயராலும் இவ்வியாக்கியானம் வழங்கி வருகின்றது.

திருவாய்மொழி இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாரால் அருளிச் செய்யப்பட்டது என்பதை நாம் அறிவோம். இங்ஙனமே வியாக்கியானங்களும் இறைவனுடைய திருவருளுக்கு முற்றும் இலக்கானவர்களும் ஆழ்வாருடைய பேரருளுக்குப் பாத்திரர்களாயும் வடமொழி தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் வல்லவர்களாயும் இருந்த பெருமக்களால் அருளிச் செய்யப் பெற்றவை. இதனால் திருவாய்மொழியைப் போலவே வியாக்கியானங்களும் அருமைபெருமைகளையுடையவை. இவை சுவாநுபவத்தோடு செய்யப்

பெற்றவையாதலால் இவற்றைக் கற்போரிடத்தும் சுவாநுபவத்தை எழச் செய்ய வல்லவை. இச்செய்திகளையெல்லாம் வடமொழி அறியாதமிழருக்கு முதன் முதலாக எடுத்துக்காட்டி உதவியவர் திரு. பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்கள். இத்தகைய பெரியாரைத் தமிழ் உள்ளங்கள் வாழ்த்துகின்றன. வைணவ உள்ளங்கள் வணங்கி மகிழ்கின்றன.

திருப்பதியில் பணியாற்றியபோது தமிழகத்திலிருந்து பல அன்பர்களின் மணிவிழா மலர்கட்கும் பலசிறப்பு மலர்கட்கும் கட்டுரைகள் வழங்குமாறு அழைப்புகள் வந்தன. பெரும்பாலும் அம்மலர்கட்கு எழுதிய கட்டுரைகள் திவ்வியப் பிரபந்தத்தின்மேலேயே மலர்ந்தன. திருமலை திருப்பதி தேவஸ்தானம் பதிப்பிக்கும் 'சப்தகிரி' என்ற திங்கள் இதழிலும் பிரபந்தத்தின் மேல் எழுதிய சில கட்டுரைகள் வெளிவந்தன. சென்னை வந்த பிறகு ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றத்தில் திங்களுக்கு ஒன்றாக ஓராண்டுக் காலம் நாலாயிரத்திலேயே பன்னிரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினேன். இவற்றில் இரண்டு பொழிவுகள் கட்டுரை வடிவம் பெற்றன. இங்ஙனம் பல்வேறு காலத்தில் பல்வேறு சந்தர்ப்பத்தில் எழுதப் பெற்ற 19 கட்டுரைகள் 'சில நோக்கில் நாலாயிரம்' என்ற தலைப்பில் நூல் வடிவம் பெற்றன. இந்த நூலை 'ஈட்டின் தமிழாக்கம்' என்ற நூலை பத்துத் தொகுதிகளாக வெளியிட்டுத் தமிழர்கட்கு வைணவ விருந்தளித்த திரு. நாயுடு அவர்கட்கு,

முத்தர்கள் பராவும் சீர்த்திசால் திருவாய்
மொழியெனும் பாற்கடல் நடுவண்
வித்தகம் பெருகும் தண்ணருள் உளத்தை
மேவுநஞ் சேடனாய் மாற்றிப்

பத்திகொள் கவிதா யோகத்தைப் புரிந்து
பாரகத் தொளியினை வளர்க்கும்
சித்தனெம் புருடோத் தமநம்பி பதத்தில்
திருவினைப் பெறுகஇந் நூலே.

என்ற பாடல் மூலம் அன்புப்படையலாக்கி மகிழ்கின்றேன். திரு. நாயுடு அவர்கள் 'செடியாய வல்வினைகள் தீர்க்கும்' திருவேங்கடவன்மீது ஆராக்காதல் உடையவர். இவர் தம் இறுதிக்காலத்தை தம் அருமைமகள் நப்பின்னையின் திருமாளிகையில் கழித்து பரமபதித்தவர். இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் நினைவுகூரும் வகையில் நான் பணியாற்றிய திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையின் சார்பில் நூல் 'வெளியீட்டு விழா' எடுக்கச் செய்தேன். மாநகராட்சி மேல் நிலைப்பள்ளியில் தமிழாசிரியையாகப் பணியாற்றி வரும் திரு. நாயுடுவின் அருமைமகள் புலவர் நப்பின்னை எம்.ஏ., பி.எட். அவர்களைப் படையல் படியைப் பெறச் செய்தேன். முதல் படியைப் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். திரு. நாயுடு அவர்களிடம் தந்தால் என்ன உணர்வு பெறுவேனோ அந்த உணர்வைப் பெற்றேன் அவர்தம் திருமகளார் நப்பின்னையிடம் தந்ததால். என் மனமும் முழு நிறைவு பெற்றது.

## 7. பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை

சிலரது புகழ் அவர்கள் செய்த தொண்டினால் நிலைபெற்று நிற்கின்றது. ஏன்? தொண்டே அவர்களின் பெயரை நம் நினைவிற்குக் கொணர்கின்றது. சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறை தோன்றியநாள்முதல் ஆராய்ச்சிக்காக ஏற்பட்ட துறையாகவே இருந்து வந்துள்ளது. இதில்பலபெரியார்கள் பணியாற்றி வந்துள்ளனர். தமிழ்ப்பேரகராதி பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையைநினைக்கச் செய்கின்றது. 'ஈட்டின் தமிழாக்கம்' திரு. பு.ரா. புருடோத்தம நாயுடுவை நினைவுக்குக் கொணர்கின்றது. ஸ்ரீபுராணம் (சமண நூல்), தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி, திராவிட மொழி மூவிடப் பெயர் ஆகிய நூல்கள் பன்மொழிப் புலவர் திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியாரை நினைக்கச் செய்கின்றன. ஆங்கிலம் – தமிழ்ப் பேரகராதி டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரை நினைவு கூரச் செய்கின்றது. இவர்கள் யாவரும் தம்மையே மறந்து 'பணியே பரமன் வழிபாடு' (Work is worship) என்ற நினைவுடன் தமிழ்ப் பணி புரிந்து புகழ்பெற்றவர்கள். இவர்களைப் பகவத்கீதை யின்மொழியில் கூறினால் 'கர்ம யோகிகள்' என்று சொல்லி வைக்கலாம்.

1944 என்று நினைக்கின்றேன். பன்மொழிப் புலவர் மயிலைத் தொல்காப்பியர் இல்லத்தில் சில நாட்கள் தங்கியிருந்தபோது ஒரு நாள் அடியேனைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைக்கு இட்டுச் சென்றார். அன்று

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் அறைக்கு இட்டுச் சென்று என்னை அவருக்கு (இப்படிச் சொல்லுவதைவிட அப்பெரியாரை எனக்கு) அறிமுகப் படுத்தி வைத்தார். அப்போது நான் துறையூர் உயர் நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். பன்மொழிப்புலவர் என்னைஅறிமுகப் படுத்தும்போது, ''இவர் இளந்தலைமையாசிரியர். தமிழ்ப்பற்று மிக்கவர். தமிழில் வடமொழி கலந்து எழுதுவதை விரும்பாதவர். அறிவியல் துறைகளில் புலமை மிக்கவர் என்றெல்லாம்... இன்னும் எப்படி எப்படியோ சொல்லி'' புகழ் மாலை சூட்டினார். பன்மொழிப் புலவரின் அன்பு என்னைப் பற்றி அப்படியெல்லாம் சொல்லச் செய்தது. பெரும் பேராசிரியர்முன் என்க்கு நாணித் தலைகுனியும் நிலைஏற்பட்டுவிட்டது. இருவருமே என் நிலையை அறிந்து கொண்டது அவர்கள் இன்முகத் தில் பிரதிபலித்தது.

''மிகவும் மகிழ்ச்சி. அதுவும் புதிதாகத் தொடங்கிய பள்ளியில் தலைமையாசிரியர் பதவி ஏற்பதென்பது மிகவும் சிரமமான பணியை ஏற்றுக் கொண்டுள்ளீர்கள் என்பது பொருள். கடுமையாக உழைத்துப் பள்ளியை மேல் நிலைக்குக் கொணரவேண்டும். இதனால் உங்கட்குப் பேரும் புகழும் வருவதற்கு வழியேற்படும்'' என்றார்கள் பிள்ளையவர்கள்.

''உழைப்பிற்கு அஞ்சாதவர் இந்த இளைஞர். கணித ஆசிரியர்கள், அறிவியல் ஆசிரியர்கள் கிடைக்காதகாலம். நிர்வாகப் பொறுப்பு, புதிய வகுப்புகட்கு கீற்றுக் கொட்டகை அமைத்தல், புதிதாக வாங்கப் பெற்ற நிலத்தில் ஆடுகளன்களை அமைத்தல், உரிய இடங்களில் செடிகளை நட்டு மரமாக்குதல் முதலிய பல்வேறு பொறுப்புகளுடன் வாரத்திற்கு 28 பாட வேளைகள் (Periods) வகுப்பறையில் உழைக்கின்றார். கணிதமும் அறிவியலும் கற்பிப்பது இவருக்குக் கைவந்த கலை. இந்த

நிலையில் வித்துவான் தேர்வுக்கும் படித்து வருகின் றார்....'' என்றெல்லாம் கூறினார் பன்மொழிப் புலவர். இவற்றுள் எல்லாம் உண்மை நிலைகளை உணர்த்து வனவாக இருந்தமையால் எனக்குப் பெருமித உணர்ச்சி யும் உண்டாகி விட்டது. 'நான் உழைப்பது போதாது; மேலும் உழைக்கவேண்டும்.' என்ற சங்கல்பமும் எடுத்துக் கொண்டேன்.

பின்னர் பேராசிரியருடன் மேற்கொண்ட என்உரை யாடல்பல துறைகளில் விரிந்து சென்றது. பிள்ளையவர்கள் கேட்டார்கள்: ''நீங்கள் அறிவியல் ஆசிரியராயிற்றே. Telescope, Microscope, Magnifing lens என்பன போன்ற கலைச் சொற்களை எப்படித் தமிழில் கலைச் சொற்களாக்குவீர்கள்?'' என்று. ''ஐயா, தங்கள் போன்ற பெரியோர்களின் முன்னிலையில் நான் ஒரு கற்றுக்குட்டி. நான் இப்பொழுது கற்று வருபவன். தாங்கள் இவற்றைப் பற்றிச் சிந்தித்திருக்கலாம். தாங்கள் சிந்தித்தவற்றைக் கூறினால் நானும் அவற்றைக் கேட்டுப் பயன் பெறுவேன்; மேலும் அவ்வழியில் சிந்திப்பதற்கும் நெறிமுறைகளையும் கண்டு கொள்வேன்'' என்று மறுமொழிபகர்ந்தேன் மிகவும் பணிவாக. நான் அப்போது 27 அகவையை எட்டினவன். பேராசிரியரோ 60 அகவையை எட்டும் நிலையில் இருந் தவர். இன்னும் ஒன்றிரண்டு ஆண்டுகளில் ஓய்வுபெறும் நிலையிலும் இருந்தார் என்றும் ஏற்கெனவே பன்மொழிப் புலவர் மூலம் அறிந்து கொண்டுமிருந்தேன்.

பேராசிரியர் பிள்ளையவர்கள் சொன்னார்கள்: 'Telescope என்பதைத் 'தூரதரிஷணி' என்று மொழி பெயர்க்கலாம். Microscopeஐ 'சூக்ஷ்ம தரிஷணி' என்று தமிழாக்கம் செய்யலாம். Magnifying lens என் பதைப் 'பூதக் கண்ணாடி எனலாம்' என்று. இம் மாதிரி சந்தர்ப்பங்களிலும், உத்தியோக வேட்டையில் பேட்டிக் காகச் செல்லும்போது குழுவினர் விடுக்கும் வினாக் களுக்கு விடையிறுக்க வேண்டிய சந்தர்ப்பங்களிலும்

சாதுர்யமாகவும் சதுரப்பாட்டுடனும் பேசவும் விடையளிக்கவும் இறைவன் ஆற்றலை அளித்து என்னை வாழ்விக்கின்றான் என்பது என் அநுபவம்.

நான் சொன்னேன் : 'ஐயா, தாங்கள் சொன்ன மூன்று கலைச் சொற்களையும் ஒன்றன்பின் ஒன்றாக கரும் பலகையில்,

Telescope—தூரதரிஸணி

Microscope—சூக்ஷ்மதரிஸணி என்றும் இவற்றையடுத்து

பிரியதரிஸணி என்றும் எழுதலாம்; அடுத்து,

Magnifying lens—பூதக் கண்ணாடி என்றும் எழுதிக் கொள்ளலாம் (தயவு செய்து அதிகப்பிரசங்கத்தனத்தை மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்) என்று கூறி என் கருத்தை விளக்கத் தொடங்கினேன்.

'ஐயா, தமிழிலுள்ள அகப்பொருள் பாடல்களில் 'பரத்தையிறபிரிவு' என்ற ஒரு துறை உண்டல்லவா? இதில் பெரும் பங்கு கொள்பவன் பாணன் என்ற பாத்திரம் என்பதை நாம் அறிவோம். இவற்றைக் கருத்தில் பின்னணியாகக் கொண்டு சிந்தித்தால் ஓர் அற்புதமான பொருள் என் மனத்தில் எழுகின்றது. 'பிரியதரிஷணி' மனைவியைக் குறிக்கின்றது. இவள், 'தூரதரிஷணி' என்ற சொல்லுக்கு தனக்குத் தெரியாமல் தொலைவில் பரத்தையொருத்தியுடன் தன் கணவர் தொடர்பு கொண்டுள்ளார் என்று பொருள் கொண்டு அவர்பால் ஐயம் எழ இடம் அளிக்கும். இங்ஙனமே, 'சூக்ஷ்ம தரிஷணி' என்ற சொல் இதே எண்ண ஓட்டத்தில் தனக்குத் தெரியாமலும் வேறு எவரும் அறிந்து கொள்ள முடியாதவாறும் பரத்தையொருத்தியுடன் அதிநுட்பமாக—அதிசூட்சுமமாகத் தொடர்பு கொண்டுள்ளார் தன் கணவர் என்று கருதுவதற்கும் இடம் அளிக்கும் அல்லவா? இப்படியெல்லாம் பொருள் மாறாட்டத்தை விளைவிக்கும் இந்தச் சொற்களுக்குப் பதிலாக,

Telescope—தொலைநோக்கி
Microscope—நுண்அணுப் பெருக்கி.

என்ற தூய தமிழ்ச் சொற்களைப் போட்டுக் கொண்டால் இந்த விதக் குழப்பத்தை உண்டாக்கா. தமிழ்மொழியின் சிறப்பாற்றலைத் தெரிவிப்பதாகவும் இருக்கும். சொற்களே தாம் குறிப்பிடும் கருவிகளின் செயலையும் சுட்டியுரைப்பதாகவும் அமையும்' என்று நளினமாகக்கூறினேன். தொடர்ந்து, 'பூதக்கண்ணாடி' என்ற சொல், 'மூக்குக் கண்ணாடி' (spectacles) என்பதைப்போல், 'பூதங்கள் தரித்துக் கொள்ளும் கண்ணாடி' என்ற பொருளையும் தருவதாக அமைந்து விடுமல்லவா? இதற்குப் பதிலாக 'உருப்பெருக்கி' என்ற தமிழ்ச்சொல்லை ஏற்றுக்கொண்டால் 'தமிழ்மொழி புதிய சொல்லாக்கத்திற்கெல்லாம் வளைந்து கொடுக்கும் தனித்தன்மை வாய்ந்த மொழி என்பதையும் விளக்கி நிற்கின்றதல்லதா?' என்று மேலும் கூறினேன்.

பேராசிரியர் அவர்கள் என் 'குட்டிச் சொற்பொழிவை' கூர்ந்து கவனித்தார். கணத்துக்குக்கணம் அவர் முகப் பாவனையில் மாற்றங்கள் நடைபெற்று வந்ததை நான் கவனிக்காமல் இல்லை. தன்இருக்கையினின்றும் எழுந்தார். என் அருகில் வந்தார். அப்படியே என்னைக் கட்டிக் கொண்டு, 'இளைஞரே, நீங்கள் சிந்திக்கின்றீர்கள். உங்கள் சிந்தனை மேன்மேலும் வளர்ந்து அறிவியல் தமிழைத் தூய தமிழாக்கத் துணை புரிவதாகுக. உங்கள் வயதை விட, இருமடங்கு வயதைத் தாண்டிய நான், தமிழ் மொழியின்பால் பெருவிருப்புடைய நான், உங்களை வாழ்த்துகின்றேன். தங்கள் தமிழ்ப் பணி பெருகி வளர்வதாகுக' என்றும் 'இறைவனை நினைந்து போற்றுகின்றேன்' என்றார். நான் பேராசிரியரின் அன்புத் தழுவலால், அவர் காட்டிய அன்புப் பெருக்கால் வெலவெலத்துப் போனேன். அருகிலிருந்த பன்மொழிப் புலவரும் இந்த அன்பு உரையாடலில் சொக்கிய நிலையில் இருப்பதை என்

னால் காண முடிந்தது. அவரும், என்னை நோக்கி, 'தம்பீ, உங்களுடைய உண்மையான தமிழ்ப்பற்றையும் சிந்திக்கும் ஆற்றலையும் இன்றுதான் என்னால் நன்றாகக் காண முடிந்தது. திரு. பிள்ளையவர்களின் வாழ்த்து உங்கள் பல துறைப் பணிகளையும், வளமுடையதாக்கும்' என்று ஆசி கூறி வாழ்த்தினார். இக்காட்சி இன்று நடைபெற்றதுபோல் என் உள்ளத்தில் பசுமையாகவே உள்ளது.

ஒரு நிகழ்ச்சி: நான் காரைக்குடியிலிருந்தபோது 'எழுத்து' என்ற இதழில் வெளி வந்த செய்தி ஒன்று நினைவிற்கு வருகின்றது. சர்முகம்மது உஸ்மான் சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்தபோது யாரோ ஒரு பேரன்பர் துணைவேந்தருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாராம். ஒரு நாள் வரலாற்றுப் பேரறிஞரான கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் துணைவேந்தரைப் பார்க்கச் சென்றிருந்தபோது துணைவேந்தர் சாஸ்திரியாடருன் இக் கடிதத்தைத்தந்து படிக்குமாறு பணிக்க அதில் ''தமிழ்த் தெரியாத இந்த வையாபுரிப் பிள்ளையைப் பல்கலைக் கழகப் பதவியிலிருந்து விலக்கிவிட வேண்டும்'' என்று எழுதியிருந்ததாம். இஃது ஒரு மாநாட்டுத்தீர்மானமாகவும் இருந்ததாம். 'பேராசிரியரே இதற்கு என்ன யோசனை கூறுகின்றீர்கள்?' என்று துணைவேந்தர் சாஸ்திரியாரைக் கேட்க, அதற்குப் பின்னவர் மேசைக்கு அடியிலிருந்த கழிவுதாள் கூடையைக் கண்களால் சுட்டினாராம். சீற்றம் கண்களில் பிரதிபலித்ததாம். துணைவேந்தரும் ''நானும் அதைத்தான் செய்யப்போகிறேன்'' என்று முறுவலித்தாராம். இலக்கிய ஆராய்ச்சித் துறையில் துருவமீனாகத் திகழ்ந்த பேராசிரியர் ஒருவருக்கு நேரிட நேர்ந்த கதி இது.

ஒரு மாநாட்டுத் தீர்மானம்: பல ஆண்டுகட்கு முன்னர் மதுரை மாவட்டம் பெரிய குளத்தில் நடைபெற்ற ஒரு திருக்குறள் மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்

பட்டதாம். ''திரு. வையாபுரிப் பிள்ளை திருக்குறள் காலத்தைப் பின்னுக்குத் தள்ளி விட்டதை இந்த மாநாடு வன்மையாகக் கண்டிக்கின்றது. மேலும், திருவள்ளுவர் காலம் அதற்கும் முற்பட்டது என்பதை ஒருமனதாக இம் மாநாடு தீர்மானிக்கின்றது'' என்ற கருத்துப்பட அமைந்த இத்தீர்மானத்தை வாக்கெடுத்து அறுதியிட்டதாம். தொன்மையான நூலின் காலத்தை மக்களாட்சி முறையில் அறுதியிட்டது சரிதானா? என்பது ஒரு பெரிய கேள்வி. கருத்தரங்குகள், பட்டிமன்றங்கள் போன்ற மேடைகளில் தக்க சான்றுகளுடன் இதுகாறும் வெளிவந்த ஆராய்ச்சி முடிவுகளை மேலும் அலசலாம். குறை கூறலாம். நிறை இருந்தால் போற்றலாம். ஆராய்ச்சி இதழ்களில் மறுப்பு கள் வெளியிடலாம். ஆனால், மாநாட்டில் வாக்கெடுத்து முடிவு காண்பது அடாத செயல்.

**பேரகராதி ஆசிரியர் :** சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியின் பதிப்பாசிரியராகத் திகழ்ந்து பெரும் பணி ஆற்றியவர் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை. இப் பெரும் பணி பல நிலைகளில் பல குழுக்களின் உதவியால் நிறைவேற்றப்பெற்றது. தொடக்கத்தில் சொற்களின் பொருளை விளக்கும் பாங்கில் இலக்கியச் சான்றுகள் காலவரிசையில் (தொன்மையிலிருந்து இன்று வரை என்ற முறையில்) காட்டப்பெற்று வந்தன. இடையிலும் முடி விலும் இந்நிலை மாறியது. மனத்திற்குத் தோன்றிய வாறு எவ்வித வரையறையுமின்றி காட்டப் பெற்றுள்ளன. இந்த அகராதியில் குறைகளே இல்லையென்று கூறவிட முடியாது. ஆனால் இக்குறைகளை இவரே உணர்ந்து எடுத்துக்காட்டுவார். அச்சேறாத நிலையிலிருந்தால் திருத்திக்கொள்வார். கருத்து வேற்றுமையுள்ளவர்கள் பொழிந்த வசைமாரிகளையும் நகைத்துக்கொண்டே ஏற்று மகிழ்வார். குறைக்கு எடுத்துக்காட்டு ஒன்று: 'கன்னல்' என்ற சொல்லுக்குக் 'குருவி' என்ற பொருளும் அந்த அகராதியில் காணப் பெறுகின்றது. இது தவறானது என்பதைப் பிள்ளையவர்களே ஒப்புக் கொண்டுள்ளார்கள்.

பல பெரியோர்கள் அடங்கிய குழு 'கன்னலெனும் சிறு குருவி' என்று ஒரு பாடலில் வருவதைச் சான்றாக ஏற்றுக் கொண்டதால் ஏற்பட்ட தவறு என்று அவரே கூறியுள்ளார். பேரகராதிக்குப் பிள்ளையவர்கள் எழுதி யுள்ள நீண்ட ஆங்கில முகவுரை ஆய்வாளர்கட்கு அவர் வழங்கியுள்ள ஓர் அறிவுக் கருவூலம்; பிற்காலத்தில் ஆய்வில் ஈடுபடுவோருக்கு அஃது ஒரு கலங்கரை விளக்கம்.

பதிப்பாசிரியர்: பேரகராதிப்பணி நிறைவு பெற்ற பிறகு பேராசிரியர் பிள்ளையவர்கள் சில பழந்தமிழ் நூல்களை ஆய்ந்து பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டார்கள். தமிழ் தாத்தா மகாமகோப்பாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதஅய்யர் அவர்களின் பதிப்புத்திறனுக்கு அருகில் வருகின்றது பிள்ளையவர்களின் பதிப்புத்திறன். இருந்த வற்றை இருந்தபடியே பதிப்பித்தல் என்ற உறுதியும் விருப்பப்படிப் பாடங்களைத் திருத்துதல், குதர்க்கமாக உரை கூறுதல் போன்ற திரிபுணர்ச்சிக்கு இடங் கொடுத்தல் போன்ற தவறுகளை செய்யாதிருத்தலும் இவர்தம் நேர்மைப் பண்புகளாகும். நான் காரைக் குடியிலிருந்தபோது நூலகப் பொறுப்பு என்னிடம் தரப் பெற்றிருந்ததால் இவர்களுடைய நூல்களையும் பதிப் பித்த நூல்களையும் வாங்கிவைத்திருக்கின்றேன். இவர் பதிப்பித்தும் பல்கலைக்கழகத்தின் மூலம் வெளிவந்த 'புறத்திரட்டு' என்னும் அரிய நூல் இலக்கிய ஆய்வாளர் கட்கு ஒரு சிறந்த கையேடாக உதவும். யான் திருப்பதி யில் பணியாற்றிய காலத்தில்நான் பதிப்பித்து உரைக் குறிப்பிடனும் ஆய்வுக் குறிப்புடனும் பல்கலைக்கழக மூலம் வெளியிட்ட 'முத்தொள்ளாயிர விளக்கம்' என்ற நூலுக்குப் 'புறத்திரட்டு' பேரளவில் துணைபுரிந்ததை இப்போது நினைவு கூர்கின்றேன். சென்னைப் பல் கலைக்கழகம்மூலம் இப்பெருமகனார் உரைக் குறிப்புடன் வெளியிட்ட சில நீதி நூல்களையும் பார்த்துப் படித்து மகிழ்ந்ததுண்டு.

கால ஆராய்ச்சி: கால ஆராய்ச்சியைப் பற்றிய இவர் முடிவுகளைப் பெரும்பாலான தமிழறிஞர்கள் ஒப்புக்கொள்வதில்லை[1]. திருவள்ளுவர் காலத்தை சுமார் கி. பி. 600 என்பதையும், கம்பரது காலத்தைக் கி. பி. 1178 என்று கூறுவதையும்,[2] சிலப்பதிகாரம்—மணிமேகலையின் காலம் கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டு என்று மொழிவதை அவர்கள் ஒப்புக் கொள்வதில்லை. ஆனால் இவரது ஆய்வு முறை அறிவியல் முறையின் அடிப்படையிலும் இவர் கூறும் வாதங்கள் அளவை நூல் முறையிலும் அமைந்து படிப் போரைக் கவர்கின்றது. இந்த முறை, கால ஆராய்ச்சி யில் ஈடுபடுவோருக்குச் சிறந்த வழிகாட்டியாக அமையும். எடுத்துக்காட்டாக, கம்பரது காலத்தை அறுதியிடும் இப்பெரியார் 'எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின் மேல்' என்று கம்பராமாயணப்படிகளில் காணும் ஒரு தனியனைக் கொண்டு கி. பி. 885-இல் கம்பர் தமது காவியத்தை அரங்கேற்றினார் என்று வெளியாகின்றது என்று கூறி 'இதனை ஒப்புக்கொண்டால் பலவித அசம்பாவிதங்களை ஒப்புக்கொள்வதாய் நேரிடும்' என்று மொழிபவர். மூன்று காரணங்களால் இத்தனியனின் இயல்பான பொருள் முரண்பாட்டையும் காட்டுவர்[3] அடுத்து, வேறு சில காரணங்களை முறையாக எடுத்துக் காட்டிக் கம்பரது காலத்தை அறுதியிடுவார்.

ஆனால், இவர்தம் சிந்தாமணியின் கால ஆராய்ச்சி[4] கால ஆராய்ச்சியில் ஈடுபடுவோர்க்குச் சிறந்ததொரு முன்

1. தமிழ்ச் சுடர்மணிகள் —திருவள்ளுவர்காலம் பக். 75.
2. ஷை. கம்பர் காலம்-பக். 130
3. ஷை. பக். 111 114.
4. சீவகசிந்தாவணி — (சமாஜப்பதிப்பு — மூலம் மட்டும்)—முகவுரை காண்க.

மாதிரியாகும். சிறந்த பாரிஸ்டர் (வக்கீல்) ஒருவர் ஒரு பெரிய வழக்கை நீதி மன்றத்தில் அளவை முறையைக் கையாண்டு வாதம் புரிவதுபோல சிந்தாமணியின் கால எல்லையை சுமார் 10-ஆம் நூற்றாண்டு என்று அறுதியிடு கின்றார். அதன் காலத்தைப் பற்றி ஒரு மேலெல்லையை உறுதி செய்து கொண்டு 'இதற்கு மேல் இவருடைய காலம் இருக்கமுடியாது' என்று வரம்பு கட்டுகின்றார். அங்ஙனமே ஒரு கீழ் எல்லையையும் உறுதி செய்துகொண்டு 'இதற்குக்கீழ், இவருடைய காலம் இருக்க முடியாது' என்று வரம்பு கட்டுகின்றார். மேலிருந்து கீழும் கீழி லிருந்து மேலுமாக சில நிகழ்ச்சிகளையும் சான்றுகளை யும் எடுத்துக்காட்டிக் கொண்டே அவற்றை ஒவ்வொன் றாகத் தள்ளுபடி செய்து கொண்டே வந்து இவருடைய முடிவை உறுதியாக அறுதியிடுகின்றார். அறிஞர் பெருமக்கள் சிலருக்கு இவர்தம் பல்வேறு ஆய்வு முடிவுகள் ஒப்புக் கொள்ளக் கூடியவையாக இல்லை யெனினும், இவரது அணுகு முறையை எவரும் பாராட் டாமல் இருக்க முடியாது. அப்படி யாராவது இருப்பின் அது புலவர்கட்கே பரம்பரைச் சொத்தாக இறங்கி வரும் பொறாமைக்காய்ச்சல் என்று கொள்ளுவதைத் தவிர வேறு காரணம் அடியேனுக்குப் புலப்படவில்லை.

ஆனால், இதுகாறும் இவர் ஆய்வுகளில் கண்டுள்ள முடிவுகளை மறுத்து வெளி வந்த கட்டுரைகளை யான் படிக்கும் வாய்ப்பில்லை. அத்தகைய மறுப்புக் கட்டுரைகள் வெளி வந்தனவாகத் தெரியவில்லை. ஆனால் அவர்கள் வாழ்ந்த காலத்தில் புலவர்களிடையே கண்டனக் குரல்கள் எழுந்தன. வசைமாரிகள் குவிந்தன. மறுப்புக் கட்டுரைகள் எழுதி வெளியிடுவது அறிஞர் கட்கு அழகு; பொறுப்பும் கூட. ஏன்? தமிழ்ப் பண் பாட்டிற்கும் அத்தகைய செயலே பொருத்தமானது. 1946-இல் சென்னைப் பல்கலைக்கழகப் பணியினின்றும் ஒய்வு பெற்ற பிறகு இவர் கோட்டையூர் பெருவள்ளல்

டாக்டர் இராம. அழகப்பச் செட்டியார் கேரளப் பல்கலைக்கழகத்திற்கு தமிழ் ஆராய்ச்சிக்கென்று வழங்கிய ஓர் இலட்சம் வெண் பொற்காசுகளை வழங்கிய திட்டத்தின் கீழ் சில ஆண்டுகள் பணியேற்று சில ஆண்டுகள் பணியாற்றி வந்தார்கள். நான் 1950-ஆம் ஆண்டில் துறையூர்ப் பணியைத் துறந்து காரைக்குடியில் வாழ்ந்த காலத்தில் (1950—1960) பேராசிரியர் இருமுறை காரைக்குடிக்கு வருகை புரிந்தார்கள். ஒரு முறை சா. கணேசன் (கம்பன் அடிப்பொடி) அவர்கள் நடத்தி வந்த கம்பன் திருநாள் முதல் நாள் நிகழ்ச்சிக்குத் தலைமைப் பொறுப்பேற்க வந்திருந்தார்கள். அப்போது கற்பக நிலையத்தில் (இது சா. க. வின் இல்லத்தின் பெயர்) ஓய்வாக உரையாடி பல இலக்கியச் செய்திகளைப் பற்றி அளவளாவி மகிழ்ந்தேன். இன்னொருமுறை சொ. முருகப்பனார் எழுதிய 'கம்பராமாயணம்'—பாலகாண்டம்' வெளியீட்டு விழாவிற்கு வந்திருந்தார்கள். இது வள்ளல் அழகப்பர் தலைமையில் நடைபெற்றது. திரு பிள்ளையவர்கள் நூலை வெளியிட்டார்கள். அவர் வெளியீட்டுரை பின்னர் நூல்வடிவிலும் வெளிவந்தது. அதனையும் பார்த்து மகிழ்ந்திருக்கின்றேன். இதன் பிறகு இவரைப் பார்த்து அளவளாவும் வாய்ப்பு எனக்கு ஏற்படவில்லை. இவர் மறைந்த செய்திதான் நாளிதழ்கள் வாயிலாக எனக்கு எட்டியது. இன்று என் உள்ளத்தில் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் ஒரு சிறந்த ஆய்வு மன்னராகவும் பண்பாட்டின் கொடுமுடியாகவும் இடம் பெற்றுத் திகழ்கின்றார்கள்.

பெரியவர்கள் ஆராய்ச்சிப் போரில் நான் என்னை எந்த முறையிலும் உட்படுத்திக் கொள்வதில்லை, அரசன் சண்முகனார்—சிவஞான முனிவர், இராகவ அய்யங்கார்—நாவலர் சோமசுந்தர பாரதியார், சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை—அறிஞர் அண்ணாதுரை இவர்களிடையே நடைபெற்ற

இலக்கியபோர்—ஆராய்ச்சிப் போர்—இவற்றையெல்லாம் நான் இதழ்களில் படித்து மகிழ்ந்ததுண்டு. நான் கல்லூரியில் படித்த காலத்தில் இராகவய்யங்கார் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் இவர்கள் புரிந்து வந்த சொற்போர்களை இதழ்களில் படித்தது இன்றளவும் நினைவில் உள்ளது. இந்தப் போரில் திரு இராகவய்யங்கார் தோல்வியுற்றார். ஒரு கட்டுரைக்கு அவர் மறுப்பு எழுத முடியவில்லை. ஆனால் ஏதோ ஒரு வகையில் இலங்கையிலிருந்து வெளி வந்து கொண்டிருந்த இதழொன்றில் 'இராகவன்' என்ற புனை பெயரில் ஒரு கட்டுரையை வெளியிட்டிருந்தார். இதனைக் கண்ணுற்ற பாரதியார் 'இராகவன்' என்ற புனைபெயர் இராகவ அய்யங்காராகத்தான் இருக்கவேண்டும் என்பதை உறுதி செய்து கொண்டார். நகைச்சுவையாக (ஆனந்த விகடனில் என்பது நினைவு) 'மறைந்து நின்று எய்தவன் சின்ன இராகவனா? பெரிய இராகவனா' என்று எழுதினார்.[5] இதனால் இராமாயணத்தில் வாலியின்மீது மறைந்து நின்று இராமன் கணைதொடுத்த நிகழ்ச்சி நினைவிற்கு வந்து நம்மை மகிழ்விக்கின்றது.

என் வாழ்வில் இங்ஙனம் விஷயங்களை விட்டு விலகாமல் நேர்தாக்குதலின்றி வெளிவந்த எழுத்துகள் என் மனத்தைக் கவர்ந்துள்ளன. இஃது ஓர் இலக்கிய

5. ரா. இராகவய்யங்கார் வயதில் மூத்தவர். மு. இராகவய்யார் இளையவர். மைத்துனர் முறையினர். இருவரும் இலக்கியச் சிம்மங்கள். ஆழ்ந்த புலமையுள்ளவர்கள்.

அறிஞர்களின் பரம்பரையை நினைவு படுத்துகின்றது. இந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை. ஆனால் அவரைத் தாக்கின வர்கள் விஷயங்களை விட்டு விலகி நேர்தாக்குதலில் இறங்கித் தமிழ் பண்பாட்டைச் சிறிது குறைத்து விட்டார் கள் என்பது அடியேனின் கருத்து. உண்மையை எடுத்துக் காட்டியமைக்கு அறிஞர் உலகம் பொறுக்கும் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை.

## 8. தந்தை பெரியார்

'அறம் தோய்ந்து மறம் வளர்ந் தோங்கும் காலத்தில் திருமால் அவதரித்து நல்லோர்களைக் காத்து அல்லோர்களை அழிக்கின்றான்' என்பது அவதார இரகசியங்களில் ஒரு தத்துவம். இங்ஙனமே மூடப் பழக்கங்களும் மூடநம்பிக்கைகளும் ஆகிய முடை நாற்றம் சமுதாயமாகிய காட்டில் அளவுக்குமீறி வீசும்போது அதனை அகற்றுவதற்காகக் கற்பூரப் பெட்டகம் போல் பெரியார் ஒருவர் பிறப்பார் என்பது அடியேனின் கருத்து. தந்தை பெரியாரின் பிறப்பும் அவர் ஆற்றிய தொண்டும் இத்தகையது. தீவிரக்காங்கிரசு வாதியாக இருந்த பெரியார் அக்கட்சியில் சாதி வேறுபாடு தலைதூக்கி நின்ற காலத்தில் அதனை விட்டுப் பிரிந்து தன்னந்தனியனாக நின்று சமுதாயச் சீர்திருத்தப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு சுமார் எழுபத்தைந்து ஆண்டுக் காலம் தமிழகத்தில் நடையாடினார் என்பதைத் தமிழகம் நன்கு அறியும். தமிழர்கள் நன்கு அறிவார்கள்.

தந்தை பெரியார் அவர்களை 'தமிழகத்தின் முதல் பேராசிரியர்' என்று பொருத்தமாகக் குறிப்பிட்டார் அறிஞர் அண்ணா. 'உயர் எண்ணங்கள் மலரும் சோலை' என்று போற்றியுரைப்பர் பாவேந்தர் பாரதிதாசன். 'தந்தை பெரியார் அவர்களின் சிந்தனை பட்டை தீட்டப் பெற்ற செயற்கை வைரம் அல்ல; வைரம் பாய்ந்த சிந்தனை' என்று அறிஞர் உலகம் கருதும்.

1934-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் என் கல்லூரிப் படிப்பு தொடங்கியது திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில். இரண்டாண்டுக் காலம் திருச்சி சவுக்குப் பகுதியில் உள்ள காசியப்பாராவுத்தர் ஸ்டோர்ஸ் என்ற விடுதியில் தங்கும் அறை அமைந்தது. என் அரிய நண்பர் திரு. பி. அரங்கசாமி ரெட்டியார் அங்குத் தங்கிப் படித்த தால் எனக்கும் அங்கு அறை அமைத்துத் தந்தார். அக் காலத்தில் திருச்சி 'டவுன் ஹாலுக்கு' எதிரிலுள்ள மைதானத்தில் அடிக்கடிப் பெரியாரின் சொற் பொழிவுகள் நிகழும். நாங்கள் இருவரும் அவற்றைச் செவிமடுக்கும் வாய்ப்புகள் பெறுவோம். இது தவிர ஆதிகுடி வேங்கடராம அய்யர் உணவு விடுதியில் (திருச்சி தேவர் மன்றத்திற்கு அருகில் இருந்தது) உணவு கொள்ளப் போகும்போது அருகிலுள்ள வாசக சாலையில் 'குடியரசு' 'விடுதலை' 'குமரன்' போன்ற தமிழ் செய்தித்தாள் களையும் படிக்கும் வாய்ப்புகளும் எங்கட்குக் கிடைத்தன. தந்தை பெரியார் அவர்களின் கருத்துகள் அனைத்தும் என் உள்ளத்தைக் கவராவிடினும் அவரது சமுதாயச் சீர்த்திருத்தம் பற்றிய கருத்துகள் என் மனத்தைப்பெரிதும் கவரும். அக்காலத்தில் காந்தியடிகளின் அரிசன் (Harijan) என்ற ஆங்கில ஏடும் என் மனத்தைக் கவர்ந்தது. ஞாயிறன்று கெயிட்டி சினிமாக் கொட்டகைக்கு எதிரி லிருந்த மாவட்ட நூலகத்தில் ஒரு மணி நேரம் காலம் கழிப்பதுண்டு. அப்போது திரு. வி.க. அவர்களின் நூல் களில் என் மனத்தை அதிகம் கவர்ந்தவை இரண்டு நூல் கள். ஒன்று, 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை'; மற்றொன்று 'மனித வாழ்கையும் காந்தியடிகளும்' இதனால் காந்தியடிகளின் கருத்துகள் என் மனத்தில் ஆழமாகப் பதிந்தன. இந்த இரு பெரியார்களின் கருத்து களும் என் இளம் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தன; என்னை நன்னெறிப்படுத்தின. கட்சிச் சார்பு அன்றிருந்து இன்றுவரை என்னிடம் ஏற்படாவிட்டாலும் கருத்துகளின்

சார்பு இன்றுவரை இருந்து வருகின்றது. என் மாணவப் பருவத்தில் தந்தைப் பெரியாரின் நேர்த் தொடர்பு எனக்கு ஏற்பட வாய்ப்பில்லை. சென்னையில் படித்த ஓராண்டுக் காலத்திலும் (1940—41) என் படிப்பில் தான் அக்கறை சென்றது. சில சமயம் பனகல் பார்க் அருகில் பெரியார் பேச்சைக் கேட்பதுண்டு. திருச்சியில் படித்தபோது ஒரு முறையும் சென்னையில் படித்த போது ஒருமுறையும் காந்தியடிகளின் பேச்சையும் கேட்டதுண்டு.

துறையூரில் தலைமையாசிரியனாக இருந்தபோது (1941—1950) தந்தை பெரியார் அடிக்கடி துறையூருக்கு வருவதுண்டு. அவர் தங்கும் இடம் சேடத் தெருவிலுள்ள கிருட்டிணன் செட்டியார் அவர்களின் திருமாளிகை. அவர் துறையூருக்கு வருகை புரியும் போதெல்லாம் அவரைப் பார்த்து அளவளாவுவதில் தவறுவதில்லை. பெரியவர் களிடமும் சிறியவர்களிடமும் அவர் காட்டும் ஒரே மாதிரி யான மரியாதை என் உள்ளத்தைக் கவர்ந்தது. நான் அவரிடம் நேராக அறிமுகமானது என் இருபத்தைந்தாவது அகவையில்; தலைமையாசிரியனாக வாழ்க்கை தொடங்கிய காலத்தில். பார்க்கும் போதெல்லாம் 'வாங்க தம்பி; உட்காருங்க' என்று சொல்லும் பாங்கே என் உள்ளத் தைக் கவரும். பெரிய முனிவர் ஒருவரைச் சீடன் ஒருவன் நெருங்கிப்பணிவது போன்ற ஒருவித பிரமை—'மயக்கம்'— ஏற்படும், அவருடைய அறிவுரையில் தெளிவு இருக்கும்; ஞான ஒளியும் வீசும். ஒரு சமயம் 'தம்பி, நீங்கள் சிறிய வயதில் தலைமையாசிரியர் பொறுப்பை வகிக்கின்றீர்கள். நம்முடைய தமிழ்ப் பிள்ளைகளை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். பிராமணர்கள் நடத்தும் பள்ளிகளில் பிராமணப் பிள்ளைகள் கவனிக்கப்படுவது உங்கட்கு ஒளி காட்டட்டும். எப்பொழுதும் விதிகட்குப் புறம்பாகச் செயற்படாதீர்கள். எப்பொழுதும் நேர்வழியைக்கடைப் பிடியுங்கள்; குறுக்கு வழி வேண்டா' என்று சொன்னது இன்றும் என் நினைவில் பசுமையாகவுள்ளது.

பெரியாரை எனக்கு முதலில் அறிமுகம் செய்து வைத்தவர் திரு. கங்காதரன் என்ற என் அரிய நண்பர். இவர் ஒரு ஆயுள் காப்பு நிதி நிறுவனத்தின் ஏஜெண்டு. நான் அலுவலில் அமர்ந்ததும் ரூ 4000க்கு இவரிடம் ஆயுள்காப்பு நிதி பத்திரத்திற்குப் பதிவு செய்து கொண்டேன்; தொடர்ந்து என் வகுப்புத் தோழர் E.B. சுந்தரம் (8-ஆம் வகுப்புத் தோழர்) என்பவரிடம் ரூ 2000/-க்கு ஒரு பத்திரத்திற்குப் பதிவு செய்து கொண்டேன். இருவரும் சில ஆண்டுகள் துறையூரில் இருந்தார்கள். திரு கங்காதரன் என்பவர் வயதில் பத்து ஆண்டுகள் எனக்கு மூத்தவர். குடும்பத்தில் ஏற்பட்ட பிணக்கால் 1945ஆம் ஆண்டு வாக்கில் செங்கணாச்சாரி (கேரளம்) சென்றவர்தான்; பின்னர் துறையூர் திரும்பவில்லை. என்ன ஆனார் என்பது பற்றி ஒரு செய்தியும் இல்லை. திரு. சுந்தரம் நாமக்கல்லில் குடியேறினார். வழக்கு விஷயமாக நாமக்கல்லுக்குப் போகும்போதெல்லாம் எங்காவது சந்தித்துப் பேசுவதுண்டு. பெரியார் அவர்களைச் சந்திப்பதற்குச் சேடத் தெருவிற்குப் போகும் போதெல்லாம் சேடத்தெருவில் பல இளைஞர்கள் என் நண்பர்களானார்கள். நாளடைவில் நண்பர் குழாம் பெருகியது. பள்ளி ஆண்டு விழாவிற்கு இவர்கள் பெருங்கூட்டமாகத் திரண்டு வந்து எங்களைப் பெருமைப் படுத்துவர்.

நான்காம் படிவம் திறப்பதற்கு (படிப்படியாக உயர் நிலைப் பள்ளியாக்குவதற்கு) இசைவு கோரிக் கல்வி இயக்குநருக்குப் பள்ளி விண்ணப்பம் விடுத்தது. பரிந்துரையுடன் இவ்விண்ணப்பம் சென்னை செல்லுகின்றதா என்பதை நோட்டம் பார்ப்பதற்குக் கோவையிலுள்ள மண்டலக் கல்வி ஆய்வாளரைச் (Divisional Inspector of Schools) சந்தித்துப் பேசிவிட்டுத் துறையூர் திரும்பும் போது ஈரோட்டில் இறங்கினேன். பள்ளியின் நிர்வாகக் குழு அமைக்கும் விஷயமாக ஈரோடு மகாஜனப் பள்ளித் தலைமையாசிரியராக இருந்த திரு M. R. பெருமாள்

முதலியாரைப் பார்ப்பதற்காகப் பள்ளிக்குச் சென்றேன். அவரால் அப்பள்ளியின் குழுபற்றிய பத்திரத்தின் நகல் கிடைக்காவிடில் தந்தை பெரியாரை அணுகிக் கேட்கலாம் என்றுதான் நினைத்தேன். மாலை 3-மணி இருக்கும், திரு முதலியாரைப் பார்த்து இதைப்பற்றிக் கேட்டேன். அங்குத்தாளாளர் அலுவலகத்தில் சிறுவன் ஒருவன் (வயது சுமார் இருபது இருக்கலாம்) எழுத்தராகப் பணியாற்றி வந்தான். அவனை வருமாறு சொல்லியனுப்பினார் தலைமையாசிரியர் முதலியார். அவன் ஒரு பார்ப்பனச் சிறுவன். ''தாளாளர் இசைவின்றி நகல் தர முடியாது'' என்று மறுத்து விட்டான். திரு முதலியாரும் ''என் நிலை இதுதான் இங்கு. எந்தவிதச் செல்வாக்குமின்றி பணி யாற்றிவருகின்றேன். எதிர்காலம் ஒளிமயமாக இருக்கு மென்று கருதுகின்றேன். என் இயலாமைக்குப் பொறுத் தருளுங்கள்'' என்று மறு மொழி தந்தார். பின்னர் அவர் வழங்கிய குளிர் பானத்தை அருந்தி விடை பெற்றுக் கொண்டு இரவு புறப்படும் இருப்பூர்தியில் திருச்சியை அடைந்தேன் அதிகாலையில். பின்னர் துறையூருக்கு வந்து சேர்ந்தேன்.

ஒன்றிரண்டு நாட்களில் தந்தை பெரியாருக்கு ஒரு கடிதம் எழுதினேன். 'மதிப்புக்கும் பெருமைக்கும் உரிய தந்தை அவர்கட்கு, வணக்கம், கோவை சென்று திரும்பும் போது தங்களைப் பார்ப்பதற்காகவே ஈரோடு வந்தேன். மகாஜனப் பள்ளியின் நிர்வாகக் குழுபற்றிய பதிவு செய்யப்பெற்ற பத்திரத்தின் நகல்வேண்டும். எங்கள் பள்ளியின் நிர்வாகத்தை அம் முறையில் அமைக்க வேண்டும். திரு M. R. பெருமாள் முதலியாரைப் பார்த்தேன் (தலைமையாசிரியர்). அவரால் தர இயல வில்லை; தாளாளர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணி புரியும் சிறுவன் தர மறுத்து விட்டான். தாங்கள் ஊரில் இல்லாமையால் வாளா திரும்பினேன். தயவு செய்து மேற்குறிப்பிட்ட பத்திரத்தின் நகலை ஒரு வாரத்தில்

அனுப்பி வைத்தால் மிக்க நன்றியுடையவனாக இருப்பேன். துறையூர் வருங்கால் தங்களைச் சந்தித்து மேலும் பல யோசனைகளையும் பெறுவேன். சிரமம் தந்ததற்குப் பொறுத்தருள்க'' என்பது கடிதம். ஒரு வாரத்தில் பதிவு அஞ்சலில் ஆசியுடன் நகல் வந்து சேர்ந்தது. ஏற்கெனவே திருச்சி பொன்னய்யா உயர் நிலைப்பள்ளியின் குழு பற்றிய பத்திரத்தின் நகல் வாங்கி வைத்திருந்தேன். இந்த நகல் கம்பெனிச் சட்டப்படித் (Companys Act) தயாரிக்கப்பட்டது; குறைந்தது இருபதுபேர் உறுப்பினர்களாக இருக்கவேண்டும் இதன்படி. ஈரோட்டு நகல் அறநிலைய நிறுவனச் சட்டப்படி (Trust Act) தயாரிக்கப்பெற்றது; இதன்படி ஏழுபேர் உறுப்பினர்கள் போதும். எங்கள் பள்ளி நிர்வாகம் இதனையே விரும்பியது. குடும்பத்தினர் அறுவரும் தலைமையாசிரியர் பணித்துறைசார்ந்தவராகவும் (Ex Officio) கொண்டு குழு அமைக்கப் பெற்று பதிவு செய்யப் பெற்றது. இந்த முறையில் தந்தை பெரியார் எங்கள் பள்ளிக்கு உதவினார்.

1950—60 இல் காரைக்குடியில் பணியாற்றியபோது எப்படியோ திராவிட கழகத்தைச் சேர்ந்த என். ஆர். சாமி (பீங்கான்பாத்திர வணிகர்) என் நண்பரானார். சில நாட்களில் கல்லுக்கட்டி (தெற்கு) யிலுள்ள இவர் கடையில் சில மணித் துளிகள் அமர்ந்து உரையாடுவதுண்டு. காரைக்குடியில் மகர் நோன்பு பொட்டலில் (காந்தி சதுக்கத்தில்) மாபெரும் கூட்டத்தில் தந்தை பெரியார் பேசுவதுண்டு. அப்பொழுதெல்லாம் கூட்டத்தின் ஒரு மூலையில் அமர்ந்து கொண்டு தந்தை பெரியாரின் சொற்பொழிவினைக் கேட்பதுண்டு. எந்தக் கூட்டமானாலும் தந்தை பெரியார் மூன்று மணி நேரத்திற்குக் குறையாமல் பேசுவார். இப்படித் தமிழகத்தில் சுமார் எழுபது ஆண்டுகட்கு மேல் நடமாடிய தந்தை பெரியார் தம்முடைய கருத்துக்களைத் தமிழகத்தில்பரப்பிக்கொண்டு

வந்தார் கடவுள் மறுப்புக் கொள்கைகளைத் தவிர சமூகத் தீர்த்தம், விதவைத் திருமணம், சாதியொழிப்பு' சுயமரியாதை பற்றிய கொள்கைகள் யாவும் எனக்கு உடன்பாடேயாகும். தனிமையில் பழகும்போது இவர் தம் பரந்த மனப்பான்மை தெளிவாகும்.

வயதில் குறைந்த இளைஞர்கள் சிறுவர்களிடம்கூட இவர் மரியாதையுடன் பேசுவதைக் கண்டு மகிழ்ந்த துண்டு. 'வாங்க தம்பி' 'என்ன வேலையாக வந்தீர்கள்?' என்பன போன்ற சொற்கள் இவர்கள் திருவாயினின்று புறப்படும்போது எல்லோருமே சொக்கிப் போவார்கள். இவர்தம் காந்தசக்தி வாய்ந்த பேச்சில் சிக்கியவர்களுள் அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, நாவலர் நெடுஞ்செழியன், பேராசிரியர் அன்பழகன். பொன்மனச் செம்மல் எம். ஜி. இராமச்சந்திரன், பட்டுக்கோட்டை அழகிரிசாமி, பூவாளுர் பொன்னம்பலம், செட்டி நாட்டில் சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா, கானாடுகாத்தான் சண்முகம், பாவேந்தர் பாரதிதாசன் முதலியோர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள். தேர்தலில் காங்கிரசு கட்சியைத் தோற்கடித்து ஆட்சி பீடத்தையும் கைப்பற்றி ஆண்டவர்களையும் ஆள்பவர்களையும் காண்கின்றோம். நம் அருமை இராஜாஜிகூட இவருடைய நெருங்கிய நண்பராகத் தொடர்ந்து திகழ்ந்தனர் என்றால் தந்தை பெரியாரின் பெருமையை எடுத்துச் சொல்ல முடியுமா? என் நல்லூழின் காரணமாக இன்று வரை நல்லோரின் கூட்டுறவுதான் இருந்து வருகின்றது. திரு. வி. க., விவேகாநந்த அடிகள், சுவாமி சித்பவா நந்தர், காந்தியடிகள் போன்ற பெரியோர்களின் நூல் களையே படித்துப் பயன்பெறவும் என் நல்லூழ் துணை நின்றது. ஜகவீரபாண்டியன், மு. இராகவய்யங்கார், ரா. ராகவய்யங்கார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், பூவராகம் பிள்ளை, கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம், பண்டித

மணி கதிரேசன் செட்டியார். ஒளவை துரைசாமிபிள்ளை, தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், பேராசிரியர் க. வெள்ளைவாரணனார், திரு பு. ரா. புருடோத்தம நாயுடு, டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் வ. சுப. மாணிக்கனார் போன்ற பெரும் புலவர்களின் கருத்தும் எழுத்தும் என்னைக் கவர்ந்தமையால் யானும் ஓரளவு தமிழ் தெரிந்தவனாகத் தமிழகத்தில் நடமாடி வருகிறேன்; எழுதியும் வருகின்றேன்.

ஒரு சமயம் என் அரிய நண்பர் என். ஆர். சாமி சொன்னது: 'தந்தை பெரியார் அவர்கள் வந்துள் ளார்கள், என் இல்லத்தில்தான் எழுந்தருளியுள்ளார்கள். அவர் தொடர்பு உங்கட்கு உண்டு என்பதை வெளிப் படையாகக் காட்டிக் கொள்ளவேண்டா. திரு சா. கணேசனின் பேராதரவு பெற்றுத் திகழ்கின்றீர்கள் என்பதை நான் நன்கு அறிவேன். இப்பெரியாருக்குத் தந்தை பெரியாரைப் பிடிக்காது. நீங்கள் தந்தை பெரியாருடன் தொடர்பு கொண்டவர் என்பது சா. க. அவர்கட்குத் தெரிந்தால் அவர் உங்கள்மீது கொண்டிருக்கும் அன்பும் ஆதரவும் குறைந்தாலும் குறையலாம். ஆகவே, தந்தை பெரியாரைப் பார்க்க வேண்டும் என்று நினைத்தால் இரவு ஒன்பது மணி சுமாருக்கு என் இல்லத்திற்கு வாருங்கள். நானும் ஐயா விடம் தங்கள் வருகையைச் சொல்லிவைக்கின்றேன்'' என்பது. நல்ல அறிவுரை. காரைக்குடியிலிருந்தவரை இப்படித்தான் தந்தை பெரியாரிடம் பழகி வந்தேன். இதனால் எனக்கு எவ்வித தீமையும் நேரிடவில்லை.

என் வாழ்வில் எந்தக் கட்சிச் சார்பும் எனக்கு ஏற்பட வில்லை. நான் மேற்கொண்டிருக்கும் ஆசிரியப் பணிக்கு இஃது சிறிதும் ஒவ்வாதது. எல்லோருடைய பேச்சுகளைக் கேட்டாலும், உரைகளைப் படித்தாலும் எனக்கு உகந்த தவைதாம் என் மனத்தில் படியும்; ஏனையவை படியா. ஒரு சமயம் என். ஆர். சாமி ''அண்ணே (இப்படித்தான்

அவர் என்னை விளிப்பது) கடைக்கு வாருங்கள், ஐயாவிடமிருந்து (இப்படித்தான் தந்தை பெரியாரைக் குறிப்பிடுவது) ஒரு பரிந்துரைக் கடிதம் வாங்கியுள்ளேன். அதைத் தாங்கள் படித்துக் கருத்து கூறவேண்டும்'' என்று கூறி கடைக்கு அழைத்துச் சென்றார். அக்காலத்தில் குன்றக்குடியில் குன்றக்குடி அடிகளார் பொறுப்பில் பெண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளி ஒன்று நடை பெற்று வந்தது. அதில் தம் தமக்கை மகளுக்கு ஓர் இடம் கிடைக்கும்படிப் பரிந்துரைக்கும்படித் தந்தை பெரியாரைக் கேட்டிருந்தார் என். ஆர். சாமி. அதற்குப் பெரியார் எழுதிக் கொடுத்திருந்த கடிதம்: ''பெருந்தவத்திரு குன்றக்குடி அடிகளார் மகாசந்நிதானத்திற்கு அடியேன் ஈ. வே. இராமசாமி வணக்கத்துடன் எழுதிக்கொள்வது. இக்கடிதம் கொண்டு வரும் திரு என். ஆர். சாமி நம் கட்சித் தொண்டர்களில் தலையாயவர். இவருடைய தமக்கைப் பெண் தங்கள் பள்ளியில் ஆசிரியப் பயிற்சி பெற விழைகின்றாள். மகாசந்நிதானம் அருள் கூர்ந்து அப்பெண்ணுக்கு ஓர் இடம் கிடைக்கப் பணிவன்புடன் வேண்டுகின்றேன். வணக்கம்—இங்ஙனம் அன்பன் ஈ. வே. இராமசாமி'' என்று எழுதப் பெற்றிருந்தது.

என். ஆர். சாமி என்னிடம் சொன்னது: ''அண்ணே; நம் தந்தை பெரியார் பெருமிதத்துடன் எழுதாமல் இப்படிக் கூழைக் கும்பிடு போடுகின்றாரே, மடத்திற்கு அடிமைபோல் எழுதுகின்றாரே'' என்றார். நான் சொன்னேன்: ''என். ஆர். சாமி, நாம் அநுபவம் இல்லாதவர்கள். நம்மைவிட நான்கு மடங்கு அநுபவம் பெற்றிருப்பவர்கள் நமது ஐயா அவர்கள். இங்கிதம் அறிந்தவர்கள். திரு. குன்றக்குடி அடிகளாரும் மடத்துச் சம்பிரதாயங்கள் பலவற்றைத் துறந்து பொது மக்களுடன் கலந்து பழகத்துடித்து நிற்பவர்கள்; மடத்திலேயே பல சீர்திருத்தங்களை நடைமுறைக்குக் கொணர்ந்தவர்கள். சான்றாண்மையை நம் ஐயா அவர்களிடமும் காணலாம்''

அடிகளாரிடமும் நாம் தெரிந்து கொள்ளலாம். தவிர, ஐயா அவர்கள் சந்நிதானம் வகிக்கும் பீடத்திற்கு மதிப்பு தருகின்றார்கள். இவற்றை நம் ஐயா அவர்களின் மேடைப் பேச்சிலிருந்து தெரிந்து கொள்ள முடியாது; தனிமையிலும் 'உபதேசம்' பெறவேண்டும். பிராமணர் களை 'ஆரியர்கள்' என்று கூறி மேடையில் கடிகின் றார்கள். நம் அருமை இராஜாஜியின் உயிரனைய தோழ ராகவும் திகழ்கின்றார்கள்...'' என்று சொன்னேன். ''ஆமாம் அண்ணே, ஆமாம் அண்ணே. நீங்கள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை,'' என்று சொல்லி ஆமோதித்தார் என். ஆர். சாமி. பின்னர் அவர் அடிகளாரைச் சந்தித்துத்தம் தமக்கை மகளுக்குப்பள்ளியில் இடமும் பெற்றார்.

நான் திருப்பதி சென்ற பிறகு தந்தை பெரியார் அவர்களைப் பார்க்கும் பேறு அடியோடு அற்றுப் போய் விட்டது. கிட்டத்தட்டப் பதினேழு ஆண்டுகள் (1960—1977) அவரைப் பார்க்கவே இல்லை. சென்னைக்கு வந்த பிறகும் பார்த்துப் பேசும் பேறு பெறவில்லை. இராஜாஜி அவர்கள் திருநாடு அலங்கரித்தபோது அவரது திருமேனி சுடுகாட்டில் சடங்குகட்குப் பிறகு எரியூட்டப்பெறும்வரை சுடுகாட்டில் துக்கச் சூழலில் காத்துக் கிடந்தார் என்பதைச் செய்தித் தாளில் படித் தேன். தந்தை பெரியாரும் இராஜாஜியும் கொண்டிருந்த நட்பு வரலாற்றுப் புகழ் பெற்றது. அது நம்போலி யருக்கு என்றுமே பாடம் புகட்டவல்லது; நம் சந்ததி யினருக்கும் வழிகாட்டியாக இருப்பது.

சில ஆண்டுகட்கு முன்னர் தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடி வேலு அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தில் பெரியார் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நிகழ்த்தும்போது தந்தை பெரியாரைப் பற்றியும் அவர்தம் அருங்குணங்கள், அவர் தமிழகத்திற்கு ஆற்றிய தொண்டுகள் பற்றிய செய்திகளையும் விரிவாக வெளி

யிட்டார்கள். அவற்றையெல்லாம் இப்போது நினைத்துப் பார்க்கின்றேன், அவர் சொன்னவற்றில் ஒன்றை மட்டிலும் நினைவு கூர்கின்றேன். ஒரு சமயம் பெரியார் ஒரு கூட்டத்திற்குக் காரில் சென்று கொண்டிருந்த பொழுது அவர் கொள்கைகளைப் பிடிக்காத ஓர் அன்பர் அவர்மீது செருப்பை வீசினாராம். அஃது அவர்மீது வந்து விழ்ந்ததாம். செருப்பை எடுத்துப் பார்க்கும். போது அது சிறந்ததாக இருந்ததாம். உடனே காரோட்டி யிடம் ''காரைத் திருப்பு. இந்தச் செருப்பு மிக நன்றாக வுள்ளது. இன்னொரு செருப்பு அங்குத் தெருவில் கிடக்கும். இந்தச் செருப்பு நமக்கும் பயன்படாது; தெருவில் கிடக்கும் செருப்பும் ஒருவருக்கும் பயன்படாது. நாம் சென்று அதனை எடுத்துக் கொண்டால் இவை இரண்டும் யாருக்கும் பயன்படும்'' என்று கூறி அந்தச் செருப்பையும் எடுத்து ஜோடி சேர்த்துக்கொண்டாராம். அரசியல், பொதுத் தொண்டு, சமூகத் தொண்டு போன்ற வற்றில் ஈடுபட்டு அவற்றை தம் வாழ்க்கைப் பணியாகக் கொண்டிருப்பவர்கட்கு இத்தகைய பரிசும் வெகுமதியும் கிடைக்கத்தான் செய்யும். இவற்றைப் பொருட்படுத் தாது தம் பணியைப் பொறுமையுடன் செய்து கொண்டு தான் வரவேண்டும் என்பது இந்நிகழ்ச்சியால் நாம் தந்தை பெரியாரிடம் கற்றுக்கொள்ளும் பாடம். தவிர, இத்தகைய நிகழ்ச்சி நமக்கு ஒரு புதிராகவும் உள்ளது!

நான் கேள்வியுற்ற இன்னொரு நிகழ்ச்சி. அறிஞர் அண்ணா முதல்வராகப் பணியாற்றிய காலம். ஏதோ ஒரு முக்கிய நிகழ்ச்சி இராஜா அண்ணாமலை மன்றத்தில் நடை பெற்றது. பெருங் கூட்டம். பார்வையாளர் கூட்டத் தில் முன் வரிசையில் இரண்டு கிழவர்களும்—இராஜாஜி யும் தந்தை பெரியாரும்—அமர்ந்திருக்கின்றனர். அறிஞர் அண்ணா வருகின்றார்; மேடை ஏறும்முன் இவர்களைக் காண்கின்றார். இவர்கள் அருகே வந்து இருவர் காலையும் தொண்டு வணங்கி விட்டு மேடை ஏறுகின்றார். குழுமி

யிருந்தோரிடையே பலத்த கைத் தட்டல். மேடை ஏறிய வுடன் முதலில் அண்ணா பேசியது: ''பெரியோர்களே, தோழர்களே, நான் இவர்களை வணங்கியது உங்கட்குப் புதிராக இருந்தது போலும். அதனால்தான் கைதட்டினீர் கள் என்று நினைக்கின்றேன். ஏன் வணங்கினேன் தெரி யுமா? இவர்கள் இருவரும் என் அரசியல் குருமார்கள். காலில் முள் குத்தி சீழ் பிடித்து வலி தாங்க முடியாத நிலை யில் இவர்களிடம் சென்று என்ன செய்வது? என்று யோசனை கேட்டால் தாடியில்லாத பெரியவர் 'அப்பா தம்பீ, கவனமாக முள்ளை எடுத்து விட்டு சீழையும் அகற்றி மருந்து போடு; சரியாகி விடும்' என்று சொல்லு வார். அவர் அருகிலிருக்கும் வெண் தாடிப் பெரியவர், 'காலையே வெட்டி விடு; சரியாய் விடும்' என்று சொல்லு வார். இது தான் இப்பெரியார்கள் தரும் 'உபதேசத்தி லுள்ள' வேற்றுமை'' என்று சொன்னாராம். கூட்டத்தி னரின் கைதட்டல் இரண்டு மணித் துளிகள் வரை விண்ணைப் பிளந்ததாம். முன் வரிசையிலிருந்த இரண்டு பெரியார்களும் கூட மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்து கைதட்டிக் கொண்டிருந்தார்களாம். இந்த இரு பெரியார்களும்— ஏன்? இதைப் பேசிய அண்ணாவும்—வள்ளுவப் பெருமா னின் 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள் – 26) என்ற திருவாக்கிற்கு இலக்கியமாகத் திகழ்பவர்கள்.

நான் திருப்பதி சென்று அங்குப் பணியாற்றிய காலத் தில் (1960—1977)—1975-இல் என நினைக்கின்றேன்— பெரியாரின் ஆண்டு விழா மலர் ஒன்றில் 'எழுத்துச் சீர்திருத்தம்' பற்றி கட்டுரையொன்று வரைந்தனுப்புமாறு கேட்டிருந்தார் என் அரிய நண்பர் கே. வீரமணி. அங்ஙனமே கட்டுரையொன்று வரைந்து அனுப்பி யிருந்தேன் அதில் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிக் கூறியுள்ள பல சிறந்தக் கருத்துகளுக்கிடையில் குறிப்பிட்டுள்ள ஒரு கருத்தை ஈண்டு நினைவு கூர் கின்றேன். ''தந்தை பெரியாரவர்களின் கருத்துகள் புதுமை

யாகவும் புரட்சிகரமாகவும் இருப்பதால் அவை மக்களிடம் உடனே 'செரிமானம்' ஆவதில்லை. ஆனால், அவரிடம் வெறுப்பினைக் காட்டி வருபவர்களே காலப் போக்கில் அவற்றைச் 'செரிமானம்' செய்து அவற்றின் பெருமையை யும் அருமையையும் நன்கு அறிவர். ஆனால் சில சமயம் தம் கருத்துக்களை மந்தமதி மாணாக்கருக்கு விளக்க முடியாத ஆசிரியர்கள் பொறுமை இழந்து சினமுற்று அவர் களைக் கையினாலும் கோலினாலும் புடைப்பது போன்று நம் தந்தை அவர்களும் தம்முடைய கொள்கைகளை மூடப் பழக்கங்களில் மூழ்கியுள்ள பொதுமக்களுக்கு விளக்கும் போது சில 'முரட்டு முறைகளை' (பிள்ளையார் சிலை களை உடைத்தல், இராமர் படத்தை செருப்பால் அடித்தல் போன்றவை) கையாள்வர்.''[1] இவர் கூறிய எழுத்துச் சீர்த்திருத்தம் இப்போது ஓரளவு நடைமுறைக்கு வந்து விட்டது.

சுமார் பத்து ஆண்டுகட்கு முன்னர் புரசைவாக்கத் திலுள்ள கிறித்தவ குருகுலச் சமய சித்தாந்தக் கல்லூரியில் 'ஈ. வே. ரா. தத்துவம்' என்ற தலைப்பில் இரண்டு நாள் கருத்தரங்கு ஒன்று நடை பெற்றது. தமிழகம், ஆந்திரம், கேரளம், கர்நாடகப் பகுதிகளிலிருந்து பல பேராளர்கள் கலந்து கொண்டனர். திரு. வலம்புரிஜான் சிறப்புரை ஆற்றியதாகநினைவு. நானும் திரு. N. கடிகாசலமும் (என் ஆராய்ச்சி மாணவர்) கலந்து கொண்டோம். பெங்களூரி லிருந்து வந்து கலந்து கொண்ட சமய வட்டத் தலைவர் (Bishop) ஒருவர் மிகவும் காரசாரமாகப் பேசியது இன்றும் என் மனத்தில் பசுமையாக உள்ளது. பேச்சின் சாரம்: ''இந்து சமயத்திலுள்ள சாதி வேறுபாட்டின் கொடுமை களைத் தாங்க முடியாமல் நாம் மதம் மாறினோம். இங்கு வந்த பிறகும் சாதி வேறுபாட்டின் கொடுமைகள் நீங்கின

1. பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் (பெரியார் சுய மரியாதைப் பிரசார வெளியீடு, 50, ரண்டால்ஸ் சாலை, சென்னை—600007). பக். 62—63

பாடில்லை. அவை சகிக்க முடியாமல் மேலும் தலை விரித்தாடுகின்றன. தந்தை பெரியார் போன்ற ஒரு மகான் நம் சமயத்தவராகப் பிறந்து ஒரு நூற்றாண்டு வாழ்ந்து சீர்திருத்தம் செய்ய வேண்டும்'' என்பது.

தொண்ணூறாண்டுகட்குமேல் இப்பூவுலகில்—குறிப் பாகத் தமிழகத்தின் மண்மீது—நடையாடிய தந்தை பெரியார் மறைந்தது அறிஞருலகத்திற்குப் பேரிழப்பு. இராஜாஜியைப் போலவே உடல்நிலை குன்றிய காலத் திலும் மனநிலையில் துடிப்பாக வாழ்ந்தவர் பெரியார் 'இந்தியப் பேரொளி' (சவகர்லால் நேரு). 'தமிழ்ப் பேரொளி' (அறிஞர் அண்ணா) என்று வெளியிட்டதைப் போன்றே இவர் நினைவாக நூல் ஒன்று வெளியிடத் திட்டமிட்டது சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். பல அறிஞர்களின் கட்டுரைகள், கருத்துகள் முதலியவற்றைத் திரட்டி முறைப்படுத்தியது. எக்காரணத்தாலோ அந்த நூல் இன்றுவரை வெளியிடப்பெறவில்லை. அதற்கு அடியேனும் ஒரு சிறிய கட்டுரை எழுதினேன். அண்மைக் காலம் வரை அதன் நகல் என்னிடம் இருந்து வந்தது; ஒரு நாள் பலவற்றைக் கிழித்தெறியும்போது இதுவும் அக்கதியை அடைந்து விட்டது. ஆனால் அதன் சாரம் நினைவில் உள்ளது. ''பெரியாரின் சீடர்கள் யாவரும் தம் பெயர்களை மாற்றிக் கொண்டனர். ஆனால் அவர் பெயராகிய 'இராமசாமி' அவரோடு நிலைத்து நின்றது. இராமர் படத்தை ஊர்வலம் செய்து செருப்பால் அடிக்கச் செய்தார். ஆனால் 'இராமசாமி' என்ற தம் பெயரைக் கட்டுரைகளிலும், காசோலைகளிலும் எத்தனையோ பத்திரங்களிலும் இன்ன பிறவற்றிலும் எழுதித் தள்ளி யிருப்பார். 'சிரீராம செயம்'என்பதை இலட்சக்கணக்காகப் பயன் கருதி எழுதியவர்கள் உண்டு. இவர் பயன் கருதாது தம் பெயரை எழுதி இராம பக்தரானார் என்பது அடியேனின் கணிப்பு, இராமகாதையில் வரும் அநுமனுக்கு நிகரான இராமபக்தர்கள் இவ்வுலகில்

இல்லை. ஞாயிற்றுக் கிழமையை அநுமனது நாளாகக் கொண்டாடுவதுண்டு. தந்தை பெரியாரும் மீளாத உலகம் சென்றது ஞாயிற்றுக் கிழமையில்தான். ஆதலால் அந்த உலகில்—பரமபதத்தில்—வைணவ குடும்பத்தைச் சார்ந்த வராதலால்—ஒரு திருமாளிகையில் நித்திய சூரிகளுடனும் முக்தர்களுடனும் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும். இவர்,

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்த (புறம்—165)

பெரியாருள், ஒரு பெரும் பெரியாராக—'தந்தை பெரியா ராகி' விட்டார்'' என்று எழுதியிருந்தேன்.

# 9. துணைவேந்தர் எஸ். கோவிந்தராஜுலு நாயுடு

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்(குறள்—666)

சட்டக்கல்லூரிப் பேராசிரியர், அதன் துணைமுதல்வர், பின்னர்முதல்வர், அதன்பின்னர்சட்டப்படிப்பின்இயக்குநர் மாநிலக் கல்வி இயக்குநர், இறுதியாகத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் (முதல் பத்தாண்டுகள்) என்று பல்வேறு நிலைகளில் அரும்பணியாற்றி ஒல்காப் பெரும் புகழ் பெற்றுத் திகழ்ந்த மேதை திரு.எஸ்.கோவிந்த ராஜுலு நாயுடு அவர்கள். சென்னைப் பல்கலைக் கழகத் தின் ஆட்சிக் குழுவில் பல்லாண்டுகள் உறுப்பினராகப் பணியாற்றி டாக்டர் ஏ. எல். முதலியாருக்கு (துணை வேந்தர்) வலக்கையாக நின்று பணியாற்றியவர்கள். சிந்தனைக்கும் செயலாற்றுந் திறனுக்கும் டாக்டர் முதலி யாருக்கு நிகரானவர்கள். இதனை நன்கு மதிப்பிட்ட டாக்டர் டி. சகந்நாதரெட்டி (திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தராக ஆறு ஆண்டுகள் பணியாற்றி ஒய்வு பெற்றவர்) இவரை டாக்டர் ஏ. எல். முதலியாரின் பையடக்கப் பதிப்பு' (Dr. A. L. Mudaliars Pocket Edition) என்று அடிக்கடி வேடிக்கையாகக் கூறினதைக் கேட்டு மகிழ்ந்ததுண்டு.

*1943—44* இல் இப்பெருமகனைச் சந்தித்து ஓர் உதவியை நாடினேன். துறையூர் உயர்நிலைப் பள்ளியில்

பி. எஸ்சி, எல், டி. பட்டத்துடன் தலைமையாசிரியராகப் பணியாற்றி வந்த காலம் அது. அப்போது திரு நாயுடு அவர்கள் சென்னைச் சட்டக் கல்லூரியில் பேராசிரிய ராகவும் துணை முதல்வராகவும்பணியாற்றிக்கொண்டிருந் தார். இரண்டாம் உலகப் பெரும்போர் நடைபெற்று வந்ததால் சென்னை முழுவதும் குண்டுவீச்சுக்கு அஞ்சி இரவு நேரத்தில் இருட்டடைப்பு (Black-out) செய்யப் பெற்றிருந்தது. கடற்கரைப் பகுதியையொட்டிய பகுதி களுக்கே விபத்து அதிகம் என்று கருதப்பெற்றதால் சட்டக்கல்லூரியை தியாகராய நகரில் ஒரு கட்டடத்தில் நடைபெற்று வந்தது.

***நினைவு—1:*** நான் சென்றபோது திரு. நாயுடு அவர்கள் வகுப்பில் இருந்தார். திரு. நாயுடு அவர்கள் அக்காலத்தில் 'இந்தியக் குற்றத்துறைத் தொகுதி' (Indian Penal Code)யை விளக்கி விரிவுரையாற்றுவதில் வல்லுநர் என்று புகழ் பெற்றிருந்தார். ஆங்கில இலக்கிய வகுப்பு நடத்துவதுபோல் இருக்கும் என்பார்கள். ஆதலால் தாழ்வாரத்தின் ஒரு பக்கம் இருந்தவாறு ஒரு பதினைந்து மணித்துளிகள் அவரது பேருரையைச் செவி மடுத்தேன். இதைக் கேட்டதும் அவர் புகழ் பெற்றிருந்தது உண்மைக்குப் புறம்பாக இல்லை என்பதை உணர்ந்தேன். தவிர, இந்தச் சட்டத் தொகுதி இலக்கிய நயத்துடன் மெக்காலே பிரபுவால் வரையப்பட்டது என்பதை நான் இடைநிலை வகுப்பு (Intermediate Class) படித்த போதே (1934-36) அறிந்திருந்தேன். மெக்காலே பிரபுவின் ஒன்று விட்ட சோதரர் (Nephew) டிரவிலியன் மெக்காலேயால் எழுதப்பெற்ற மெக்காலே பிரபுவின் வாழ்க்கை வரலாறு என்ற நூல் பாடநூலாக இருந்தது. இது மிக அற்புதமான நூல். திருவாளர் சின்னசாமி அய்யர் (புனித சூசையப்பர் கல்லூரி, திருச்சி) மிக அழகாகப் பாடம் நடத்தினார். இந்தச் சட்டம் இலக்கிய நயத்துடன் மிளிர்ந்ததால் ''முதியவர்கள் இதை மூளையிலும் இளைஞர்கள் தங்கள்

பையிலும் சுமந்தனர்.'' (The older carry it in their heads and the younger in their pockets) என்ற வரி இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது.

விரிவுரை முடிந்து திரு. நாயுடு அவருடைய அறைக்கு வந்ததும் நான் அவரைச் சந்தித்து நான் கோரி வந்த உதவியைத் தெரிவித்தேன். ''ஐயா, நான் பி.எஸ்சி, எல்.டி பட்டங்கள் பெற்றவன். மூன்றாண்டுகள் ஆசிரியப் பணி அநுபவம் உடையவன். தமிழ் எம்.ஏ. தனியாகப் பயின்று தேர்வு எழுத இசைவு அளிக்க மறுக்கின்றது பல்கலைக் கழகம். பி.ஏ. பட்டம் பெற்றவர்கட்குத்தான் அளிக்கப்படும் என்கின்றது. ஆசிரியப் பணி அநுபவத்தைக் கணக்கிற்கொண்டு பி.ஏ தேர்வு எழுதக் கோரினேன். பல்கலைக் கழக மரபுப்படி எந்தப் பட்டமும் பெறாதவர்கட்குத்தான் இந்தச் சலுகை உண்டு என்று கூறி அதற்கும் அனுமதி அளிக்க மறுக்கின்றது. இதுகுறித்து வழி அமைக்க மற்றொரு ஆட்சிக்குழு உறுப்பினர் ஜஸ்டிஸ் பஷீர் அகமது (அப்போது ஆழ்வார் பேட்டையில் குடியிருந்தார்) அவர்களையும் என் குருநாதர் மறைத்திரு. ஜெரோம் டி' செளஸா (லயோலா கல்லூரி முதல்வர்) அவர்களையும் பார்த்து வேண்டுகோள் விடுத்திருக்கின்றேன். நீங்கள் மூவரும் உதவினால் என் நிலையில் உள்ள பலருக்கும் உதவுவதாக இருக்கும்'' என்று ஆங்கிலத்தில் தான் விளக்கினேன். அவரும் தெலுங்கில் ''சூஸ்தானு பாதபபட வொத்து'' (பார்க்கலாம், கவலைப்பட வேண்டா) என்று அன்பாகக் கூறி விடை அளித்தார். என் கோரிக்கை 1947இல் நிறைவேறிற்று. விதிகள் திருத்தப் பெற்று வழி அமைக்கப் பெற்றது. இதன் பிறகு 1960-மேமாதம் வரையில் இப்பெருமகனை சந்திக்கும் வாய்ப்பு ஏற்படவில்லை.

காரைக்குடியை விட்டுத் திருப்பதிப் பணியை ஏற்றுக் கொள்ளப் போகும்முன் (1960) சென்னை கீழ்ப்பாக்கம் ஆர்மஸ் சாலையில் திரு. நாயுடுவின் இல்லத்தில் நடை

பெற்ற பேட்டியின் போது தான் இவரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது அந்தப் பேட்டியில்தான் திருப்பதிப் பணிக்கு நான் தேர்ந்தெடுக்கவும் பெற்றேன். திரு. தி. மு. நாராயண சாமிபபிள்ளையவர்கள் (வல்லுநர் குழுவின் உறுப்பினர்) என் திறமை முதலியவற்றைச் சிலாகித்துப்பேசி திரு. நாயுடு அவர்கட்கு நன்கு அறிமுகம் செய்து வைத்தார். 1960 ஆகஸ்டு முதல் தேதியன்று திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முதல் தமிழ் விரிவுரையாளராகப் பணி ஏற்றேன். ஏற்று ஒருவாரத்திற்குள் துணை வேந்தர் நாயுடு அவர்களை மரியாதைக்காக அவர் இல்லத்தில் சந்தித்தேன். அப்போது அவர் மிக அன்பாகப்பேசினார். என்னுடைய ஆராய்ச்சியையும் எழுத்துப் பணியையும் போற்றியதுடன் அவற்றில் ஆழமாகவும் ஈடுபடும்படியும் சொன்னார். பல்கலைக் கழக நூலகத்தில் தமிழ்ப் பிரிவில் நூல்வளத்தைப் பெருக்குமாறு பணித்தார். எவ்வளவு தொகையானாலும் வழங்கப்படும் என்றும் கூறினார். ஆனால் உள்ளூர் ரெட்டிகளுடன் பழகி அவர்கள் அரசியலில் சிக்கிக்கொள்ளாதிருக்குமாறும் எச்சரித்தார். சாதிவெறியும் சமயவெறியும் சிறிதும் இல்லாத எனக்கு இந்த எச்சரிக்கை பொருந்துமாறில்லை. சங்கோசப்படாமல் தம்மை அடிக்கடிச் சந்தித்துப் பேசலாம் என்றும், காலை 7-9 மணி இதற்கு ஏற்றது என்றும் சொல்லி வைத்தார்.

திக்கற்ற நிலையில் இருந்த எனக்கு உள்ளூர்ப் பிரமுகர்களின் உதவியும் தேவை இருக்கும் என்று கருதி முதலில் நகரசபைத் தலைவர் திரு. P. முனிரெட்டி அவர்களைச் சந்தித்து அறிமுகப்படுத்திக் கொண்டேன் (அவர் இன்று இல்லை). அவரும் நான் தங்கியிருந்த சாலைக்கு அருகிலுள்ள நிம்மகாய வீதியில் தங்கியிருந்தார். தொலைவிலிருந்து வந்த நான் எந்த விதமான உதவிக்கும் தன்னை நாடலாம் என்று சொன்னார் அன்புடன். அடுத்து இன்னும் அருகிலுள்ள M. பலராமரெட்டி என்பவரையும்

சந்திந்து அறிமுகப் படுத்திக் கொள்ளுமாறு பணித்தனர் பல்கலைக் கழகத்தில் புதிதாக ஏற்பட்ட நண்பர்கள். திரு. பலராமரெட்டி செல்வாக்குள்ள பல்கலைக் கழக ஆட்சிக் குழு உறுப்பினர். இவண் குறிப்பிட்ட இரண்டு ரெட்டிமார்களும் தீவிர காங்கிரஸ்காரர்கள். காந்தி நெறியில் ஒழுகும் சீலர்கள். திரு. பலராமரெட்டி மட்டிலும், ‘‘மிஸ்டர் ரெட்டியார், என்னைத் தெருவில் சந்தித்துப் பேசாதீர்கள். பல்கலைக் கழகத்திற்கு வரும் போதும் என்னை அறிந்தவராகக் காட்டிக் கொள்ளாதீர்கள். தேவையிருக்கும்போது என் வீட்டிற்கு வாருங்கள்; நானும் அவ்வப்போது உங்கள் அறைக்கு வருவேன் என்னுடன் தாங்கள் பழகுவதைத் துணை வேந்தரிடம் கோள் சொல்லுவதற்கென்று பலர் காத்திருக்கின்றனர். இதனால் உங்கட்குத் தொந்தரவும் நேரிடும்’’ என்று என்னை எச்சரித்தார். இந்த மூன்று பேர் சந்திப்புகளும் உள்ளூர் அரசியல் நாடியை துல்லியமாக அறிந்து கொள்ள வாய்ப்பு அளித்தன. ஏழுமலையானே எனக்கு எச்சரிக்கை விடுத்ததாக இன்றளவும் கருதுகின்றேன். இந்த எச்சரிக்கைகள் என் இயல்புக்கும் ஒத்தனவாகவும் இருந்தன. நான் உள்ளூர் அரசியலையும் சாதி, சமய வெறிகளையும் கடந்து நிற்பவன்; இவற்றை வெறுப் பவனும் கூட.

பள்ளி வாழ்வு, கல்லூரி வாழ்வு, அதன் பின்னர் இன்றுவரை வைணவர்களின் தொடர்புதான் எனக்கு அதிகமாக ஏற்படுகின்றன; இத்தொடர்பும் நீடிக்கின்றது. திருப்பதியில் யான் பணியாற்றியபோது எல்லாத் துறை கட்கும் இட நெருக்கடி. துறைகள் வேகமாகப் பெருகின. கட்டட வேலை அசுரவேகத்தில் மேற்கொள்ளப் பெற்றா லும் துறைகளின் பெருக்கத்திற்கேற்ப கட்டட வளர்ச்சி நடைபெற முடியவில்லை. முதுகலை வகுப்புகள் உள்ள துறைகளே இட நெருக்கடியால் தொல்லைப்பட்டபோது இளங்கலை வகுப்பு உள்ள தமிழ்த்துறையை யார்

கவனிக்கப் போகின்றனர்? எட்டாண்டுகள்வரை நான் தங்குவதற்குப் பல இடங்கள் தற்காலிகமாக அமைந்தன. தத்துவத்துறை ஓர் ஆண்டு, இந்தித் துறை 2 ஆண்டுகள், விலங்கியல் துறை 2ஆண்டுகள், தெலுங்குத் துறை ஓர் ஆண்டு, பெயர் சொல்ல முடியாத சாவடிபோன்ற பொது இடங்களில் 2 ஆண்டுகள். இப்படியாக நான் இடத்திற்கு இசை நாற்காலி(Musical Chair) விளையாட வேண்டியிருந்தது.

நினைவு—2: முதன் முதலாக இந்தித் துறையில் தான் எனக்கு இடம் தரப்பெற்றது. ஜமாபந்தி கணக்கப் பிள்ளைபோல் ஒரே மண்டபத்தில் அமர்ந்திருந்தேன். இப்போது அருகிலிருந்த தத்துவத்துறையுடன் நெருக்கமான தொடர்பு உண்டாயிற்று. இதில் உள்ளூரைச் சார்ந்த டாக்டர் K.C. வரதாச்சாரியாரிடம் நெருங்கிப் பழகினேன். அவரையே வழிகாட்டியாகக் கொண்டு டாக்டர் பட்டத்திற்கு ஆய்வுசெய்ய விண்ணப்பித்தேன். இரண்டு மாதத்தில் இசைவு மறுக்கப் பெற்றது. வழக்கப் படிக் காலை நேரத்தில் துணைவேந்தர் திரு. நாயுடு அவர்களைச் சந்தித்துப் பேசினேன். தாம் இசைவு தரமறுத்தமைக்கு இரண்டு காரணங்கள் சொன்னார். (1) வழிகாட்டி பொருத்தமற்றவர்; தமிழே படிக்கத் தெரியாதவர். துறையறிவும் இவருக்குப் போதாது. (2) முதுகலை வகுப்பு தமிழில் இல்லாமல் தமிழில் பிஎச்.டிக்கு ஆராய முடியாது என்பவையே இரண்டு காரணங்கள். டாக்டர் K.C. வரதாச்சாரியாரைச் சிறிதும் பிடிக்காது என்பது எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அவரை வழிகாட்டியாகத் தேர்ந்தெடுத்திருக்க மாட்டேன். ஏமாற்றத்தால் தாக்குண்டு செயலற்ற நிலையில் ஓராண்டு கழிந்தது. என்றாலும் துணைவேந்தரைப் பார்க்கும் போதெல்லாம் இப்பேச்சு தொடர்ந்து கொண்டுதான் இருந்தது.

***நினைவு -3 :*** துணை வேந்தருக்கு எதிர்ப்பான மின்னாது இடித்தது போன்ற ஒரு சூழ்நிலை திடீரென்று தோன்றியது! உள்ளூர் அரசியல், சாதிச்சச்சரவு போன்ற எதிலும் பத்தினித்தனத்ன தக்கடைப்பிடித்தஎனக்கு இதன் காரணம் தெரியாவிடினும் என் தோழ ஆசிரியர்கட்கு இதன் காரணம் தெரியாமல் போகாது. ஆனால் இதனை அக்கறையுடன் வினவி அறிந்துகொள்ளமுயலவில்லை. அக்காலத்தில் (1962) இந்தப் பல்கலைக்கழக கட்டுக்குள் அடங்கிய கல்லூரிகள் சித்தூர், அனந்தப்பூர், கடப்பை, கர்நூல், நெல்லூர் ஆகிய மாவட்டங்களிலுள்ளவை. இப்பகுதிகளிலுள்ள அனைத்துக் கல்லூரிகளிலுமுள்ள மாணவர்கள், ஆசிரியர்கள். மாணவர்களின் பெற்றோர்கள் இலங்கையில் மூலபலம் திரண்டதைப்போல் ஒரு நாள் திருப்பதியில் திரண்டனர். பல்கலைக் கழகத்திலிருந்து ஊர்வலம் புறப்படுகின்றது. ஊர்வலம் சுமார் ஒரு மைல் நீளத்திற்கு மேற்பட்டது. ஊர்வலத்தின் நடுவில் ஓரிடத்தில் கோவிந்தராஜுலு நாயுடு அவர்களின் கொடும்பாவி வைக்கப்பட்ட பாடையையும் அடுத்து பதுமாவதி மகளிர் கல்லூரி முதல்வர் திருமதி இராஜேசுவரி அம்மையாரின் கொடும்பாவி வைக்கப்பெற்ற பாடையையும் மாணவர்கள் சுமந்து வருகின்றனர். மாணவர்கள் சிலர் மகளிர் வேடந்தாங்கி ஒப்பாரி வைத்துக்கொண்டு செல்லுகின்றனர். கடைத்தெருவின் இருபுறமும் உள்ள கடைகளில் உள்ளோரிடம் 'கோவிந்தடு போயினாரே, கோவிந்தம்மா போயினாரே' என்று அழுகையும், சிரிப்பும் கலந்த புலம்பல்களுடன் செல்லும் மகளிரின் வேடந்தாங்கிய மாணவர்கள் செல்லுகின்றனர். பறைமேளம், தாரை, தப்பட்டை, சங்குகள் முழக்கத்துடன் ஒலிக்கின்றன. பொரி, கடலை, ஒருபைசா, 2 பைசா கலந்த கலவைகளை தெருவெங்கும் இறைத்துச் செல்லும்காட்சி. சுடுகாட்டிற்குப் பிணம் செல்லும்போது நடைபெறும் கோலாகலங்கள் அனைத்தும் ஊர்வலத்தில் காணப்பெற்றன. அறையில் ஏதோ எழுதிக்கொண்டிருந்த நான் காந்தி

சாலை வந்து இக்காட்சிகளைக் கண்டு திடுக்கிட்டுப் போனேன்; வியப்பும் ஏற்பட்டது. சுமார் நான்கு மணி நேரம் ஊர்வலக்காட்சி நடைபெற்றதாகவும், பின்னர் ஊர்வலம் ஊருக்கு வடபுறம் உள்ள சுடுகாட்டில் முடிந்த தாகவும், இரண்டு கொடும்பாவிகளையும் ஈமப்படுக்கை யில் சேர்த்து வைத்து எரியூட்டியதாகவும் செய்தி பரவியது.

இந்தப் 'பிரளய நிகழ்ச்சி'க்குக் காரணம் என்ன?எவரை யும் வினவியறிய மனம் துணியவில்லை. பலரது பேச்சுக் களைக் கவனித்ததில் நான் அறிந்து கொண்டவை: து.வே. சாதி வெறி மிக்கவர். கீழ்மட்டத்திலிருந்து மேல்மட்டம் வரை பலிஜ வகுப்பினரையே நியமிக்கவே விரும்புபவர். ஆட்கள் கிடைக்காவிட்டால்தான் வேறு சாதியினரை நியமிப்பார். இப்படிச் செய்தாலும் திறமையற்றவர்கட்கு இடம் கொடார் என்பதில் இரண்டு கருத்துகள் இருக்க முடியா. வேறு சாதியினரிலும் திறமையானவர்களையே தேர்ந்தெடுப்பார். பல்கலைக்கழகம் சிறப்புடன் வளர்ந்து திகழவேண்டும் என்பதே இவரது முக்கிய குறிக்கோளாக இருந்தது என்பதையும் மறுத்தற்கில்லை. ஒருசமயம் மருத்துவக்கல்லூரி ஆண்டுவிழாவுக்குத் தலைமை வகித்துப் பேசும்போது 'எவர் ஒருவர் உயர் பதவியில் இருக்கும் போது அவரவர் சாதியினரை, ஆதரித்து நியமனம் செய்வ தில் தவறு இல்லை' என்று பேசி விட்டார். ஏற்கெனவே சாதி வெறி பிடித்தவர் என்று குமுறிக் கொண்டிருந்த சமூகம் எதிர்ப்புச் சக்திகளை ஒன்று திரட்டி இப்படி ஒரு பிரளயத்தை ஏற்படுத்தி விட்டது என்பதை அறிந்தேன். ஆந்திர அரசின் சட்டமன்ற மேலவையிலும் உறுப்பினராக இருந்த இவரை ஆளுங் கட்சியினரும் எதிர்க்கட்சியினரும் சேர்ந்து வற்புறுத்தி இவரை மேலவைக் கூட்டம் ஒன்றில் மருத்துவக் கல்லூரியில் கூறியதற்கு மன்னிப்பு கோரும்படி செய்தார்கள் என்று பேசிக்கொண்டதும் என் செவியில் பட்டது.

'நல்லவர் வல்லவர் நாலும் தெரிந்த திரு. நாயுடு அவர்கள்' இங்ஙனம் சிக்கலில் மாட்டிக்கொண்டதற்கு மேலும் காரணத்தை ஆராய்ந்ததில் இஃது ஆணவமலத்தின் செயற்பாடே என்பதை ஒருவாறு அறிந்துகொள்ள முடிந்தது. ஆன்மாவை விடாது பற்றியிருப்பது ஆணவ மலம். இது பற்றியிருக்கும்போது மனிதன் தான் செய்வது இன்னது என்பது கூட அறியாமல் செய்வான். செல்வர், அதிகாரம் பெற்றவர், உடற்பலம் மிக்கவர் இவர்களைப் பற்றும்போது இது செயற்படும் கொடுமையை நன்கு அறியலாம். ஆணவத்தை இருளோடு ஒப்பிடுவார்கள் சித்தாந்திகள். ஒருவிதத்தில் இஃது இருளை விடக் கொடியது. இருள் தன்னிடத்திலுள்ள பொருளை மறைக்கும்; தன்னை மறைக்காது. ஆனால் ஆணவம் தன் செயலை மறைப்பதுடன் தன்னையும் மறைத்துக் கொள்ளும். இருளில் மறைந்து கிடக்கும் பொருள்கள் நம் கண்ணுக்குப் புலனாகாவிடினும், அவற்றை மறைத்துக் கொண்டிருக்கும் இருளாவது நமக்குப் புலனாகும். ஆணவம் நம் அறிவை மறைக்கின்றது; அதே சமயம் தன்னையும் மறைத்துத் தனது செயலையும் மறைக்கின்றது. இருள் வெளிப்பட்டுத் தன்னைக் காட்டிக்கொண்டே தனது தொழிலைச் செய்கின்றது. ஆனால் ஆணவம் வெளிப் படாமல் தன்னை மறைத்துக் கொண்டே தனது தொழிலைப் புரிகின்றது. இதனாலேயே ஆணவம் என ஒன்று உண்டு என்பதையும் அறிவு முழுமையடையாமைக் குக் காரணம் என்பதையும் உணரமுடிவதில்லை. ஆணவத் துள் அமிழ்ந்து ஆணவமே மயமாகக் கிடக்கும் இந்த நிலையில் அதற்கு அறிவு சிறிது கூட இருப்பதில்லை. இந்த நிலையில்தான் வரகூடிய விளைவைப்பற்றிச் சிறிதும் சிந்திக்காமல் மருத்துவக் கல்லூரியில் தாம் பேசுவது இன்னதென யோசிக்காமல்ஆணவமலத்தின் செயற்பாட்டி னால் ஏதோ பேசிவிட்டார். அதன் விளைவுதான் இந்தப் பிரளய நிகழ்ச்சி. தாம் வகிக்கும் பெரிய பதவியால் இந்த மலம் செயற்படுவதையும் சிந்திக்க முடியவில்லை.

மூன்றாவது முறை துணைவேந்தர் பதவி இவருக்கு வேண்டா என்பது இறைவனது சங்கற்பம் போலும்.

**நினைவு -4 :** நான் குடும்பம் இன்றித் தனியாக இருந்தமை, வகுப்பில் சரியாக வேலையில்லாமை இவை தந்த துன்பம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லுவதற்கில்லை. இதற்குச் சரியான மருந்து இலக்கிய நுகர்ச்சி. இதற்கு முத்தொள்ளாயிரத்தைத் தேர்ந்தெடுத்து நுகரத் தொடங்கினேன். ஒவ்வொரு பாடலையும் திண்ணனார் இறைவனுக்குப் படைக்கப் பெற்றப் பன்றி இறைச்சியைச் சுவைத்தது போல், டி. கே. சி. பாடல்களைச் சுவைத்து மகிழ்வதைப்போல், சுவைத்து மகிழ்ந்தேன். இந்த அநுபவத்தை எழுத்துவடிவமாக்கினேன். இந்தப் படையல் அற்புதமாக அமைந்தது. இதனைப் பதிப்பாசிரியர் சக்கரவர்த்தி டாக்டர் உ. வே. சரமிநாத அய்யருக்கு அன்புப் படையலாக்கினேன். துணைவேந்தர் நாயுடு அவர்கள் அநுமதித்த தொகையால் பல்கலைக்கழக வெளியீடாக (1965) வெளிக்கொணர முடிந்தது. அறியதோர் ஆங்கில நூல் முகம் (Preface) இந் நூலை அலங்கரிக்கின்றது.

**நினைவு-5 ;** ஒருநாள் எதிர்பாராத வண்ணம் கல்லூரி முதல்வரிடமிருந்து ஒரு பரிந்துரையின் நகல் வந்தது. அதில் ''திரு. ந. சுப்புரெட்டியார் (தமிழ் விரிவுரையாளர்) தெலுங்குத் துறையிலோ அல்லது வடமொழித் துறையிலோ இணைக்கப்படவேண்டும்'' என்று குறிக்கப்பெற்றிருந்தது. இந்த நகல் வந்த நேரம் மாலை 4-00 மணி; வீட்டிற்குத் திரும்பும் நேரம். இது முதல்வர் பல்கலைக் கழகத்திற்குச் செய்த பரிந்துரை. இரவு முழுவதும் உறக்கம் சரியாக இல்லை: அதிகாலையில் எழுந்து காலைக் கடன்கள், குளியல், சிற்றுண்டி இவற்றை விரைவாக முடித்துக் கொண்டு சுமார் 8-மணிக்கு முதல்வர் டாக்டர் பம்பாபதிராவ் இல்லத்திற்கு விரைந்தேன். அவர் இன்முகத்துடன் வரவேற்றுக் காஃபி வழங்கினார். நான் சற்றுப் படபடப்புடன் இந்தப் பரிந்துரையின் உள்நோக்கம்

பற்றி உசாவினேன். ''மிஸ்டர் ரெட்டியார், இதுபற்றி எனக்கு ஒன்றுந் தெரியாது. நான் துணைவேந்தருடன் கலந்து யோசித்து அனுப்பவில்லை. தொலைபேசிமூலம் துணைவேந்தரிடமிருந்து பெற்ற செய்தியின் படி இதை அனுப்பினேன். நீங்கள் துணைவேந்தரைச் சந்தித்துவிவரங் களை அறிந்து கொள்ளலாம். (கடிகாரத்தைப் பார்த்து) மணி 8-40 ஆகிறது. உடனே புறப்படுங்கள். அவர் நீராடப் போய்விடுவார்,'' என்று என்னை முடுக்கினார்.

நானும் விரைந்து (மிதிவண்டியில்தான்) துணை வேந்தரின்திருமாளிகையை அடைந்தேன். குளியலறைக்குள் நுழையும் சமயம் போய்ச் சேர்ந்துவிட்டேன், ''என்ன மிஸ்டர் ரெட்டியார், எப்பொழும் காலை ஏழு மணிக்கு வருவீர்களே, இன்று அகாலத்தில் வந்திருக்கின்றீர்களே, ஏதாவது சிறப்புச் செய்தி உண்டா?'' என்று வினவினார். ''உண்டு, நேற்றுமாலை முதல்வரிடமிருந்து ஒரு கருத்துரு (Proposal) வந்தது. அதிர்ச்சியடைந்தேன். முதல்வரைப் பார்த்தேன். அவர் தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், தங்களைச் சந்தித்துத் தெரிந்து கொள்ளுமாறும் பணித் தார். அவரிடமிருந்து தான் நேராக வந்து கொண்டிருக் கின்றேன்'' என்றேன். ''டெல்லி, ஆந்திரப்பல்கலைக் கழகங்களில் தனியாக இருக்கும் விரிவுரையாளரை ஏதாவது ஒரு பொருத்தமான துறையில் இணைப்பது வழக்கமாக உள்ளது. அதனையொட்டிதான் அப்படி இருக்கலாம்என்று கருதியே இப்படி ஒரு கருத்துரு அனுப்ப செய்தேன்'' என்றார், ''இப்படி ஒரு நிலை எழும் என்று கருதியே சென்னையில் தங்கள் இல்லத்தில் என் நியமனத்திற்காக நடைபெற்ற பேட்டியில் இந்த வினாவை எழுப்பினேன். தாங்கள் 'தனியாகத்தான் இருப்பீர்கள்' என்றீர்கள். இப்போது நிலைமை மாறு கிறது'' என்றேன். தொடர்ந்து ''நான் இங்கு வந்தது இந்த விரிவுரையாளர் பதவியை நாடி அன்று; அதுவும் ஒரு நல்ல கல்லூரியில் பேராசிரியர் பதவியைத் துறந்து,

தமிழில் எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி போன்ற பட்டங் கட்கு வழி வகுக்கப்படும் என்று நம்பியே வந்தேன்.'' என்றேன்.

''அது சரி. தெலுங்குத் துறையுடன் இணைந்திருந் தால் கூட இவையெல்லாம் வருவதற்கு வாய்ப்புகள் இருக்குமே. அவை வந்தவுடன் துறை தனி அந்தஸ்து பெற்றுவிடும்'' என்றார். ''எல்லாம் அறிந்த தாங்கள் என்னை இப்படி ஒரு இக்கட்டான நிலைக்கு உட்படுத்து கின்றீர்கள். தற்போது தெலுங்குத் துறையிலுள்ள பேராசிரியர் இலக்குமி காந்தம் மொழிவெறிப் பிடித்தவர். தமிழர்களைக் கண்டால் அவருக்கு பிடிக்காது. தற்காலிக விடுப்புக் கடிதம் அனுப்பினாலும் அதற்குக் குறுக்கே நிற்பார். தனிப்பட்ட முறையில் தமிழக அரசுக்குக் கடிதங்கள் எழுத முடியாத தடைகளைப் போடுவார். பொறாமைக் குணம் படைத்தவர், தமிழ்த்துறையை வளரவிடார். தாங்கள் இருக்கும்வரை எனக்கு அச்சம் இல்லை. தங்கட்குப் பிறகு நிலைமை எப்படியிருக்கும் என்று சொல்ல முடியாது'' என்றேன். ''அப்படியொன்றும் விபரீதமாக நேர்ந்துவிடாது. தாங்கள் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை'' என்றார்.

''தாங்கள் நினைப்பது சரியே; நல்லுள்ளம் படைத் தவர்கள். ஆனால் உலகநிலை அப்படியில்லையே. இந்த அக்னிப் பரீட்சைக்கு என்னை தயவுசெய்து உட்படுத்த வேண்டா. இப்போது ஒப்புக் கொண்டால் ஒரே வாரத்தில் 'ரசாபரசம்' கட்டாயம் விளையும்'' என்று எதிர்ப்பு தெரி வித்தேன். தொடர்ந்து 'தமிழர்கள் சத்தம் போடுபவர்கள்; எந்தவிதக் கட்டுப்பாட்டிற்கும் இணங்கி வராதவர்கள்' என்று கூச்சல் போடுவார். உங்கட்கும் 'தர்ம சங்கடம்' நேரும். இந்நிலையில் தாங்கள் அவர் பக்கம் சேர்ந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. இந்தக் கருத்துருவைச் செயற்படுத்திதான் ஆக வேண்டும் என்று தாங்கள்

வற்புறுத்தினால் பத்து மணிக்குப் பணியைத் துறந்து விடும் ராஜினாமா கடிதம் தந்து என்னைக் கழற்றிக் கொள்ளும் ஒரே வழிதான் எனக்குத் தோன்றுகின்றது. ஒரு துறைக்கு அடிமைப்பட்டு, தன்மானம் இழந்து, தமிழ் வளர்ச்சிக்குக் குந்தகம் விளையும் நிலையை உண்டாக்கிக் கொள்வதைவிட வேலையின்றிச் சிரமப்படுவதை நான் ஏற்பேன்'' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறினேன்.

என் பேச்சைச் செவிமடுத்த துணைவேந்தர் அசந்து போனார். அவரும் உணர்ச்சி வசப்பட்டு என்னைக் கட்டிக் கொண்டார். ''மிஸ்டர் ரெட்டியார், கவலைப் படாதீர்கள். அந்தக் கருத்துரு செயற்படுத்தப்படாது. அது கருவிலே கலைந்துவிடும்; அது செயற்படாது தானே அழிந்துவிடும்'' என்று கூறி உற்சாகப்படுத்தினார். எனக்கும் விடை கொடுத்துக் குளியலறைக்குச் சென்று விட்டார். ''அப்பாடா. வழியின் குறுக்கே போடப்பட இருந்த ஒரு பெரிய தடைக்கல் போடப்படாமல் போய் விட்டது'' என்று ஒரு செருமூச்சு விட்டேன். 'இது குன்றத் தின்மீது இருந்து கொண்டு வேடிக்கை பார்க்கும் ஏழுமலை யானின் திருவிளையாடல், நாடகம் போலும்' என்று நினைத்துக் கொண்டு வெற்றியுடன் அறைக்குத் திரும்பி னேன்.

திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் கோவிந்தராஜ சுவாமியை அண்ணன் என்றும், மலையின்மீது எழுந்தருளி யிருக்கும் சீநிவாசன் தம்பி என்றும், தம்பி அரசின் கணக்கு வழக்குகளைப் பார்ப்பது, நிர்வாகத்தைச் சீருடனும் சிறப்புடனும் கவனித்துக் கொள்வது என்ற பொறுப்புகள் யாவும் அண்ணனைச் சார்ந்தது என்று கருதும் மரபு ஒன்று உண்டு. இரவு பகல் ஓயாது ஒழியாது அடியார்கட்குச் சேவை தந்து கொண்டே 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு' என்று நின்று கொண்டே பணம் திரட்டும் சீநிவாசன் தன் அண்ணன் கோவிந்தராசனைக்

கொண்டு இத்தகைய கூத்தை நடத்தி என்னை அலைக் கழிக்கின்றானோ என்றுகூட என் மனம் எண்ணத் தொடங்குகின்றது. அக்காலத்தில் சீநிவாசன் கணக்கு வழக்குகளை கோவிந்தராஜ சுவாமியின் பொறுப்பி லிருந்தது போல் பல்கலைக் கழகக் கணக்கு வழக்குகள் எல்லாம் இந்தத் துணைவேந்தர் கோவிந்த ராஜுலு நாயுடுவின் பொறுப்பில் இருந்ததாக நாங்கள் ஒற்றுமை நயம் கண்டு மகிழ்வதுண்டு.

*நினைவு-6 :* நானும் பிஎச்.டி.க்குப் பதிவு செய்து கொள்ளும் முயற்சியைக் கைவிடவில்லை. பார்க்கும் போதெல்லாம் கேட்டுக் கொண்டே வந்தேன். முதுகலை வகுப்பு இல்லாமல் பதிவு செய்து கொள்ள முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார் துணைவேந்தர். வடமொழித் துறையில் முதுகலை வகுப்பு உள்ளது. தமிழ் நன்கு அறிந்த டாக்டர் V. வரதாச்சாரியை வழி காட்டியாகக் கொண்டு செய்ய நினைக்கின்றேன்' என்றேன். 'சென்னைப் பல்கலைக் கழகத்தில் இந்தித் துறையில் உள்ள திரு. எஸ். சங்கரராஜு நாயுடு என்னைப் போலவே ஒரு தனி விரிவுரையாளர். அவர் இந்தியைச் சிறுதும் அறியாத பேராசிரியர் ரா. பி. சேதுபிள்ளையை வழிகாட்டியாகக் கொண்டு செய்து பட்டம் பெற வில்லையா?' என்றேன். அதற்கு அவர், ''சென்னையில் அதிகமாகப் பால் உற்பத்தி செய்துள்ளனர். சிறிது தண்ணீர் கலந்தால் ஒன்றும் தெரியாது. இங்குப் பாலே உற்பத்தி இல்லை. எடுத்த எடுப்பில் தண்ணீரை ஊற்றச் சொல்லுகின்றீர்களே'' என்று சொல்லி நகைத்தார். துணைவேந்தர் பேச்சில் சதுரர். எவர் எந்த உதவியை நாடினாலும் அதைச் செய்ய முடியாது என்ற நிலையிலும் இனிமையாகப் பேசி மகிழ்ச்சியுடன் திரும்பும்படிச் செய்து விடுவார். ''எல்லா வழிகளிலும் முயன்று முடிந்து விட்டது. இனி, கும்பகோணம் வழி என்ற ஒரே வழிதான் உண்டு' அதில் முயன்று பார்க்க வேண்டியதுதான்'' என்று

சொன்னேன். ''கும்பகோணம் வழி என்றால்?'' என்று கேட்க, நான் ''இன்னும் ஆறு மாதத்தில் அதைத் தெரிவிப்பேன். சென்னைவாசியான தங்கட்கு இது தெரியாமலிருக்க முடியாது'' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டேன்.

சோதிடர், கவிஞர், திருப்பூர் சுப்பிரமணியம் சொன்னது மனத்தை நெருடிக் கொண்டே இருந்தது. ''ரெட்டியார் அவர்களே, கிரகங்கள் இருக்கும் நிலையை வைத்து ஆராய்ந்ததில் உங்கட்கு மேற்படிப்பு இல்லை என்று தெரிகின்றது. ஆனால் நீங்கள் இலேசில் விடமாட்டீர்கள். ஏழுமலையான் திருவடி வாரத்தில் வசிக்கின்றீர்கள். அவன் அருளால் உங்கள் முயற்சி வெற்றியில் கொண்டு செலுத்தினும் செலுத்தலாம். விடாது முயலுங்கள்'' என்று சொல்லியிருந்தார். என் சிறுவயது முதல் என் இதயத்தில் எழுந்தருளியிருப்பவன் முருகன்.

நாளென் செயும்வினை தானென்
செயும்எனை நாடிவந்த
கோளென் செயும்கொடுங் கூற்றென்
செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்-38

என்று அருணகிரியாரின் வாக்கை நினைந்து செயலாற்றத் தொடங்கினேன்.

கும்பகோணம் ஓமியோபதி நிறுவனத்திற்கு எழுதி அஞ்சல்வழிக் கல்விமூலம் ஓமியோபதி மருத்துவம் பயின்றேன். இந்தத் தேர்வை ஓர் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியரின் முன்னர் எழுத வேண்டும். நான்

1960—66 வரை விடுமுறைக் காலங்களில் காரைக்குடி யில் இருந்து வந்தேனாதலால் என் அரிய நண்பர் காரைக்குடி நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் திரு. V. சொக்கலிங்கம் பிள்ளையின் முன்னர் தேர்வு எழுதினேன். இரண்டு மாதங்களுக்குள் என் தேர்வு வெற்றியும் அறிவிக்கப் பெற்று சான்றிதழும் பெற்றேன். ஒருநாள் வழக்கம்போல் காலையில் துணை வேந்தர் நாயுடு அவர்களைச் சந்தித்துச் சான்றிதழை அவர்முன் வைத்துக் கும்பகோணம் வழிமூலம் டாக்டர் பட்டம் பெற்றதை எடுத்துக் கூறினேன். இனி பல்கலைக்கழகம் வழங்கும் டாக்டர் பட்டத்தின்மீது அக்கறை இல்லை என்றேன் சிரித்துக் கொண்டே, உடனே துணைவேந்தர் ''பிஎச் டிக்கு பதிவு செய்ய உடனே விண்ணப்பம் அனுப்புங்கள். உங்கள் கவலையையும் ஆர்வத்தையும் இப்போது அறிகின்றேன்'' என்றார். மறுநாளே உரிய முறையில் விண்ணப்பம் தயாரித்து வடமொழித்துறை துணைப் பேராசிரியர் டாக்டர் V. வரதாச்சாரியை வழிகாட்டியாக இருக்க இசைவு பெற்றேன். 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலின்' திவ்விய தேசத்தில் வாழவழி வகுந்த அவனைப்பற்றியே ஆராய நினைத்து நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவம் (Religion and Philosoply of Nalayira Divya Prabandham with Special Reference to Nammazhvar) என்ற தலைப்பை ஆய்வுப் பொருளாகத் தேர்ந்து எடுத்துக் கொண்டு ஆய்வைத் தொடங்கினேன்.

நினைவு -7: நான் திருப்பதியிலிருந்தபோது 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற நூலை முடித் தேன். காரைக்குடியிலிருந்த போதே தொல்காப்பியப் பொருளதிகாரம் பற்றிய பத்துக் கட்டுரைகள் 'அமுதசுரபி' என்ற திங்கள் இதழில் வெளி வந்திருந்தன. இவற்றைத் தொடர்ந்து மேலும் 24 கட்டுரைகள் எழுதப் பெற்று 34

கட்டுரைகளாக வெளி வந்ததே இந்நூல் (மார்ச்சு-1964). இதனைத் திருநாயுடு அவர்கட்கு,

ஆங்கிலக் கலைஞன்; சீர்த்துணை வேந்தன்;
அன்பெனும் தேன்பொதி உளத்தன்;
வேங்கடே சுவரன் பல்கலைக் கழக
விளக்கினை மேதகத் தூண்டிப்
பாங்குறு கலைமான் முகத்தொளி கண்டோன்;
பண்புறு கோவிந்த ராசன்
ஓங்குநற் புகழோன் திருவடி மலரில்
ஒளிமணம் பெறுகஇந் நூலே.

என்ற பாடலின் மூலம் அன்புப் படையலாக்கி மகிழ்ந்தேன். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் 'தமிழ்' இடம் பெறச் செய்து அதன் வளர்ச்சியில் 'கடைக்கண் நோக்கத்தை'க்கொண்ட இப்பெருமகனாருக்கு இந்த நூலைப் படைத்தது பொருத்தந்தானே.

மூன்றாவது முறை துணைவேந்தர் பதவி நீட்டிக்கப் பெறாமல் திரு நாயுடு அவர்கள் ஓய்வு பெற்றார்கள். சென்னையில் நிரந்தரமாகக் குடியேறி விட்டார்கள். ஓய்வு பெற்ற இரண்டு திங்களுக்குள் ஒருமுறை திருப்பதிக்கு வந்தார்கள். பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் இவர்மீது கொண்டிருந்த அன்பிற்கு அறிகுறியாக நிதி திரட்டி விருந்தளித்து நினைவுச்சின்னம் வழங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒரு பல்கலைக்கழகத்தின் இதயமாக இருப்பது அதன் நூலகம் என்று கருதினார் திரு நாயுடு; இரவு பகல் என்று பாராது ஓயாது உழைத்து முதற் பணியாக நூலகக் கட்டடத்தை முடித்து வைத்தார்; அனைத்தும் அதற்கடுத்தவை எனக் கருதினார். இதனால் வெள்ளியால் இக்கட்டடம் போன்ற ஒரு நினைவுச் சின்னத்தைத் தயாரித்து ஒரு பெரிய விருந்துடன் இதனை வழங்கி இவ்ரைச் சிறப்பித்தார்கள். இந்த நினைவுச் சின்னம் இவருக்கு மனநிறைவு தந்திருக்க வேண்டும். தன்

இதயத்தில் நீண்ட நாள் கருக் கொண்டிருந்த கருத்து நூல் நிலையம். அந்தக் கருத்து செயற்படுத்தினமைக்கு அறிகுறியாக வழங்கப் பெற்றது வெள்ளியாலாகிய நூலகக் கட்டடச்சின்னம்; நிலையான, நிரந்தரமான நினைவுச் சின்னம்.

இந்த விருந்தேற்பு விழாவிற்கு வந்திருந்த முந்தைய துணைவேந்தர் பல்கலைக்கழக விருந்தினர் இல்லத்தில் தங்கியிருந்தார்கள். அப்போது நானும் என் வழிகாட்டியாக அமைந்த டாக்டர் வரதாச்சாரியும் அவரை மரியாதைக்காகப் பார்க்கச் சென்றிருந்தோம். அப்போது என் ஆய்வைப் பற்றி அன்பாக விசாரித்தார்கள். எழுத்துத் தேர்வுக்குத் தயாரித்துக் கொண்டிருப்பதாகக் கூறினோம். விரைந்து முடித்துப் பட்டம் பெற வேண்டுமென்று வாழ்த்தினார்கள். சென்னையிலிருந்து கொண்டு தன்னாலியன்ற வரை தமிழக அரசின் மானியம் கிடைக்க முயலுவதாகவும் அன்புடன் கூறினார்கள். தமிழ்த்துறை வளர்ச்சிக்குத் தம் காலத்தில் உதவ முடியாவிடினும் எதிர் காலத்தில் ஏழுமலையான் திருவருளால் அது வளர்ந்து சிறந்து திகழும் என்று வாழ்த்தினார்கள்.

*நினைவு-8* : சென்னைக்குச் சென்ற பிறகு இவரது பொருளாதார நிலைமை சரியாக இல்லை என்பதை என்னால் ஊகிக்க முடிகின்றது. இவர் முன்னின்று தொடங்கிய தென்னிந்திய மொழிகளின் நூல் நிறுவனத்திடமிருந்து (The Southern Language Book Trust) ஏதாவது மதிப்பூதியம் (Honorarium) வழங்க முயன்றார் டாக்டர் ஏ. எல். முதலியார். இந்த நிறுவனத்தின் பொருளாதார நிலையும் சீர்கெட்டுக் கிடந்தது. இந்த நிறுவனத்தின் இயக்கத்தைக் கவனித்து வந்தவர்கள் சென்னை, திரு வேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர்கள். திரு கோவிந்தராஜுலு நாயுடுவிற்குப் பிறகு திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தராக பதவி ஏற்றவர் டாக்டர் V. C. வாமன்ராவ் அவர்கள்.

(வேலூரிலிருந்து 100க்கு மேற்பட்ட ஆண்டுகட்கு முன்னர் ஐதரபாத் நிஜாம் அரசின் பணியேற்று அங்கேயே நிரந்தர மாக குடியிருந்து வரும் முதலியார் குடி வழியில் வந்தவர்.) டாக்டர் முதலியார் டாக்டர் வாமன் ராவுக்கு நேராகக் கடிதம் எழுதித் திரு. நாயுடு அவர்கட்கு உதவும் கருத்தைத் தெரிவித்திருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. தம்முடைய தனி எழுத்தரைக் கொண்டு எழுதச் செய்தார். தாம் எழுதினால் தம் மதிப்பிற்குக் குறைவாகும் (Infradig) என்று கருதினார் போலும் (இதை என்னுடன் நன்கு பழகி வந்த டாக்டர் வாமனராகவே சொன்னது). ஆனால் டாக்டர் ராவ் டாக்டர் ஏ. எல். முதலியாரை நன்கு மதித்துப் பதிவாளர் மூலம் 'உதவுவதற்கில்லை; நிறுவனத்தின் நிதி நிலைமை இடந்தரவில்லையே' என்று வருத்தத்துடன் கடிதம் அனுப்பச் செய்தார். இதனைக் கேட்டபோது,

> பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்
> சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்
>
> —வெற்றிவேற்கை, 18,19.

என்ற அதிவீரராமபாண்டியனின் அநுபவம்மிக்க அமுத மொழிகளை நினைத்துக் கொண்டேன். திருப்பதியில் விருந்து நடைபெற்ற போது திரு. நாயுடு அவர்களைக் பார்த்ததுதான் கடைசிமுறையாக இருந்தது. அதன்பிறகு அவர் திருநாடு அலங்கரித்தசெய்தியைத் தான் நாளிதழ் களில் பார்த்தேன்; வருந்தினேன்.

> படுமழை மொக்குளில்
> பல்காலும் தோன்றி
> கெடுமிதோர் யாக்கை
>
> —நாலடி-27

என்ற சமண முனிவரின் திருவாக்கை நினைத்துக் கொண்டேன்.

  

டாக்டர் V. C. வாமன்ராவுக்குப் பிறகு (1964-69) துணைவேந்தராக வந்தவர் டாக்டர் D ஜகந்நாதரெட்டி. துடிப்பிலும் செயலாற்றும் திறனிலும் திரு நாயுடுவிற்கு நிகர்ந்தவர் டாக்டர் ரெட்டி. 'பாம்பின் கால் பாம்பறியும்' என்ற முதுமொழிக்கிணங்க திருநாயுடுவின் அரும்பணியைப் போற்ற நினைத்தார். பல்கலைக்கழகத்தில் கட்டடப் பணியை நிறைவேற்றுவதில் திரு நாயுடு அவர்களை விசுவகர்மா என்றால், டாக்டர் ரெட்டியை மயன் என்று சொல்லலாம். பல்கலைக்கழக முன்னேற்றத்திற்கு அல்லும் பகலும் ஓயாது உழைத்த உத்தம சீலர்கள் இவர்கள். டாக்டர் ரெட்டி பதவியேற்றதும் இத் திருவேங்கடவன் பல்கலைக் கழகம் தோன்றுவதற்கு முதற் காரணமாக இருந்த ஆந்திரகேசரி பிரகாசம்பந்துலுக்கும், நீலம் சஞ்சீவி ரெட்டிக்கும், இப்பல்கலைக்கழகம் சீருடனும் சிறப்புடனும் வளர உழைத்த முதல் துணைவேந்தர் திரு நாயுடு அவர்கட்கும் நினைவுச்சின்னங்கள் அமைக்க எண்ணினார். தம் காலத்தில் எழும்பிய நிர்வாகக் கட்டடத்திற்கு 'நீலம் சஞ்சீவ ரெட்டி பவனம்' என்று திருநாமம் சூட்டினார் டாக்டர் ரெட்டி.

ஏனைய இரு பெரியார்களின் நினைவுச் சின்னங்களை மாணவர் இயக்கத்தைக் கொண்டு, எழுப்ப நினைத்தது டாக்டர் ரெட்டியின் பேருள்ளம்; சீருள்ளம். பல்கலைக் கழகம், பல்கலைக்கழக ஆட்சிக்குட்பட்ட கல்லூரிகள் இவற்றில் சேரும் மாணவர்களிடம் ஒரு ரூபாய் நன்கொடையாக வசூலிக்கச் செய்தார். பலதுளி பெரு வெள்ளம் போல் நிதிதிரண்டது. நிர்வாகக் கட்டடத்திற்கு அருகில் நேராக நெடுஞ்சாலையிலிருந்து பல்கலைக் கழகத்திற்குப் பிரிந்து வரும் குறுஞ்சாலையை நோக்கியவண்ணம் ஆந்திர கேசரியின் சிலையை நிறுவச் செய்தார். அங்ஙனமே நெடுஞ்சாலையிலிருந்து பிரிந்து நூலகத்தை நோக்கி வரும் குறுஞ்சாலையை நோக்கியவண்ணம் திருநாயுடு (முதல் துணைவேந்தர்) அவர்களின் சிலையை நிறுவச் செய்தார்.

உதவி வரைத்தன்று உதவி; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. (குறள்—105)

என்ற குறளை நினைக்கச் செய்கின்றன டாக்டர் ரெட்டி யின் பெருஞ் செயல்கள்.

டாக்டர் ரெட்டியின் காலத்தில் எழுந்த கட்டடங் களுள் மிகப் பெரியது, இனியது (கந்தழிவரை) வெட்டு வளைவு (Hyperbola) வடிவத்திலுள்ள கேள்வியரங்கு (Auditorium). டாக்டர் ரெட்டி காலத்தில்தான் இதன் வேலை முற்றுவிக்கப்பெற்று ஆந்திர மாநிலக் கல்வி அமைச்சர் திரு. M V.கிருஷ்ணராவ் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது. திறப்பு விழாவில் டாக்டர் ஜகந்நாத ரெட்டியின் கடும் உழைப்பையும் அருந்தொண்டினையும் பலபடப் புகழ்ந்து பாராட்டினார் அமைச்சர். இந்தக் கேள்வியரங்கிற்கு 'டாக்டர் ஜகந்நாத ரெட்டி கேள்வியரங்கு' என்று திருநாமம் சூட்டி நினைவுச் சின்ன மாக்கலாம் என்றும் பரிந்துரைத்தார் பல்கலைக் கழக நிர்வாகத்திற்கு. ஆனால் அப்பரிந்துரை செயற்படுத்தப் பெறவில்லை.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (குறள்—110)

என்ற குறள் மண்டபத்தைக் காண்போர் கருத்தில் குமிழி யிட்ட வண்ணம் உள்ளது.

## 10. திரு. ஏ.கே. செட்டியார்

1946 என்று நினைக்கின்றேன். நான் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாக வேலை. பார்த்த காலம். ஒருநாள் முற்பகல் பதினொரு மணி இருக்கும். அகண்ட நெற்றி, மூக்குக் கண்ணாடி அணிந் திருந்தாலும் கூரிய பார்வை தெரியுமாறு அழகிய கண்கள், அழகான திருமுக மண்டலம், அரைக்கைக்குமேல் சற்று நீண்ட வெள்ளைக் கதர் சட்டை, நான்குமுழக் கதர் வேட்டி இவையெல்லாம் கலந்த தோரணையில் ஒருவர் வந்து சேர்ந்தார். பார்த்தவர்களை ஈர்க்கக்கூடிய புன்முறு வலுடன் காணப்பட்டார். நேராக அலுவலகத்திற்குதான் வந்தார். மாணவர்களைச் சேர்க்கும் காலம் கடந்து விட்டது. ஆதலால் பையனைச்சேர்ப்பதற்கு வந்தவர் என்று தோன்றவில்லை. 'தங்களை யார் என்று தெரிந்து கொள்ளலாமா?' என்று அடக்கமாகக் கேட்டேன். 'நான் ஒரு நாடோடி' என்று மறுமொழி வந்தது. 'புரிய வில்லையே' என்றேன். பின்னர் 'உலகம் சுற்றிய தமிழன்!' என்று விளக்கம் வந்தது. அப்பொழுது 'இப்படி ஒரு நூலைப் படித்து அநுபவித்திருக்கின்றேன்; அந்த நூலின் ஆசிரியரா?' என்று வினவினேன். 'ஆம்' என்றார்கள். பின்னர் எழுந்து மரியாதையாக 'வணக்கம்!' என்று கை கூப்பி வரவேற்றேன். இப்படியாக எனக்கு 'உலகம் சுற்றிய தமிழன்' திரு ஏ. கே. செட்டியார் அறிமுகமானார்.

அவர் எழுதிய நூலில் ஆசிரியருடைய ஒளிப்படம் கூட இல்லை. அப்படியொன்று நூலை அலங்கரித்திருந்தால் எளிமையாக அவரை அடையாளம் கண்டு கொண்டிருப்பேன். நூலைப் படித்தபோது நூலாசிரியரைப் பற்றி நான் கற்பனையில் கணித்திருந்த உருவம் வேறு வகையிலும் இப்போது நான் காணும் உருவம் மிக எளிமையாகவும் இருந்தபடியால் பெருத்த ஏமாற்றம் அடைந்தேன். பல நாடுகளில் சுற்றி வந்தவர் கார் முதலான வாகன வசதிகளுடனும் மேல் நாட்டுப் பாணியில் உடைகளை அணிந்தவராகவும் இருப்பார் என்றும், அளவற்ற ஆங்கில மோகம் பேச்சில் தாண்டவமாடும் என்றெல்லாம் நினைத்திருந்தேன். 'குளிர் பானம் தருவிக்கட்டுமா?' என்று வினவினேன். 'ஒன்றும் தேவை இல்லை' என்று கூறிவிட்டார். பள்ளி ஊரை விட்டு ஆறு ஃபர்லாங் தொலைவிலிருந்ததால் எதனையும் உடனே தருவிப்பதென்பது மிகச் சிரமமாக இருக்கும். என் இல்லம் பள்ளிக்கட்டடத்திற்குள்ளேயே இருந்தமையால் 'எலுமிச்சை பழம் பானம்' தருவித்து வழங்கினேன்.

'பகலுணவு என் இல்லத்தில்; மரக்கறி உணவு தான் ஏற்றுக் கொள்ளலாமா?' என்று கேட்டேன். 'அன்புடன் தருவதால் எதுவும் ஏற்பேன். தவிர, நானும் மரக்கறி உணவு உண்பவன் தான்' என்றார். 'பிற்பகல் மூன்றரை மணிக்கு மாணவர்கள்-ஆசிரியர்கள் கூட்டத்தில் ஒரு மணி நேரம் உரையாற்ற வேண்டும்' என்று வேண்டினேன். ஒப்புக் கொண்டார்கள். உணவுக்காக விட்டிற்கும் தகவல் அனுப்பினேன். பள்ளி உதவியாள் P. முத்துசாமி பக்கத்து வீட்டிலிருந்து இரண்டு வாழை இலையும் கொண்டு வந்துவிட்டான். 'வெட்டிக் கொண்டு வா' என்றால் 'அவன் கட்டிக் கொண்டு வந்து விடுவான்.' உடனே திரு செட்டியாரவர்களை ஆசிரியர்கள் அறைக்கு இட்டுச் சென்று ஓய்வாகஇருந்த தமிழாசிரியர் வீ.சி.கிருஷ்ணசாமி, ஓவிய ஆசிரியர் K.சேதுராமன், இடைநிலை ஆசிரியர்கள்

T.S. இராமய்யா நாயுடு, V.S. உமாபதி ஆகியோருக்கு அறிமுகம் செய்து 'வருந்தியழைத்தாலும் வாராத விருந்தினர் நம் பள்ளிக்கு எழுந்தருளியிருக்கின்றார் விதுரன் திருமாளிகைக்குக் கண்ணன் எழுந்தருளியது போல்' என்று கூறினேன். பிற்பகல் மூன்று மணிக்கு ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யலாமா?' என்று யோசனை கேட்டேன். 'அவசியம் செய்ய வேண்டும்' என்று ஒரு மனதாக உரைத்தார்கள். உடனே எல்லா வகுப்புகளுக்கும் கூட்டம் பற்றிய சுற்றறிக்கையை அனுப்பச் செய்தேன். மூன்று அழைப்பிதழ் எழுதச் செய்து கையெழுத்திட்டு மிதிவண்டி வைத்திருந்த மூன்று மேல்வகுப்பு மாணவர்களைத் தேர்த்தெடுத்து கடைவீதியிலுள்ள முக்கியமானவர்களை அழைக்குமாறு இருவரையும், சேடத் தெருவிலுள்ள முக்கியமானவர்களையும் அழைக்குமாறு ஒருவரையும், அனுப்பி வைத்தேன். பள்ளிக்கு எதிரிலுள்ள மாவட்ட நீதி மன்றத்திற்கு ஒருவரை அனுப்பி வக்கீல் P. அரங்கசாமி ரெட்டியாருக்கும் தகவல் அனுப்பினேன்.

பெரும்பாலும் இம்மாதிரியான சிறப்பு நிகழ்ச்சிகட்கு ஏற்பாடு செய்யும் முன்னர் ஆசிரியர்களைக் கலக்காமல் எதுவும் செய்வதில்லை. இதனால் ஆசிரியர்களின் ஒத்துழைப்பு மிக நன்றாக அமைந்தது. என்னுடைய செயல் ஒவ்வொன்றும் மாணவர்கள் நலனுக்காக என்றே மேற்கொள்ளப்பெற்றதால் மேல் வகுப்பிலுள்ள பல நல்ல மாணாக்கர்கள் எல்லாவித கூட்டங்கள் நன்கு நடைபெறுவதற்கும் ஒத்துழைத்தனர். அக்காலத்தில் நான் மேற்கொண்ட ஒவ்வொரு செயலும் இன்றும் என் நினைவில் பசுமையாகவுள்ளது.

சிறிய விருந்துதான். என்ன செய்வது? அதுவும் திடீரென்று ஏற்பாடு செய்தால் அதற்கேற்றபடி தானே அமையும்? குருவிக்குத் தகுந்த இராமேசுவரம்தானே. திரு செட்டியாரவர்கள் மிக்க மகிழ்ச்சியாக உண்டார்கள். உணவு விடுதியிலிருந்து 'எடுப்பு' எடுத்து வர ஏற்பாடு

செய்தாலும் இப்படி விருந்து அமையாது என்பது அநு பவத்தால் அறிந்து கொள்ள முடிந்தது. திரு செட்டியாரை என் இல்லத்திலேயே ஓய்வுகொள்ளச் செய்துவிட்டுப் பள்ளி அலுவல்களைக் கவனிக்கச் சென்று விட்டேன்.

**இலக்கியக் கூட்டம் :** நான் துறையூரில் பணியாற்றிய காலத்தில் அடிக்கடி இலக்கியக் கூட்டத்திற்கு ஏற்பாடுகள் செய்துவந்ததால் பள்ளியிடம் பொதுமக்கள் தொடர்பு நன்றாக இருந்தது. அழைப்பும் அறிவிப்புகளும் அனுப்பி வைத்தால் 100 பேருக்குக் குறையாமல் ஊர்ப்பெருமக்கள் திரள்வார்கள். திரு. செட்டியார் பேசிய கூட்டத்திற்கு இருபத்தைந்து பேர்களுக்குக் குறையாமல் ஊர்ப்பெரு மக்கள் வந்திருந்தனர். ஆசிரியர்கள் இருபது பேர். இரண்டுமணி நேர அறிவிப்பினால் இவ்வளவுபேர் திரண்டு விட்டனரே என்று திரு. செட்டியார் அவர்களும் அதிசயித்தார்கள். கூட்டத்தைக் கண்டதும் செட்டியார் அவர்கட்கும் உற்சாகம் கிளம்பி விட்டது. நூலகத்திலிருந்து 'உலகம் சுற்றிய தமிழன்' என்ற நூலை எடுத்து வந்து கையில் தயாராக வைத்திருந்தேன். அதைக் கூடியிருந் தோருக்குக் காட்டி அதிலுள்ள கருத்துகளை பத்துநிமிடம் எடுத்துரைத்து என்வரவேற்புரையை முடித்துக் கொண்டேன். பயணநூல்கள் தமிழில் அத்திபூத்த மாதிரி என்பதை எடுத்துக் காட்டினேன். 'பயணநூல் சுவையாக எழுதுவதற்கு இவருக்கு நிகர் இவரே' என்பதை வற்புறுத்திக் கூறினேன்.

திரு. செட்டியாரவர்களின் எளிமையான தோற்றமே கூடியிருந்தோரைக் கவர்ந்தது. இவ்வளவு அரிய நூலை எழுதியவர் இவ்வளவு எளிமையாக இருக்கின்றாரே' என்று மக்களும் ஆசிரியர்களும் வியந்தனர்; மாணவர் களும் அதிசயித்தனர். திரு. செட்டியாரவர்கள் பல நாடுகட்குச் சென்று சுற்றிப் பார்த்தபோது நேரில்கண்ட காட்சிகள், பல பெரியோர்களிடம் ஏற்பட்ட உறவு கள், பல இடங்களில் தங்கினதில் ஏற்பட்ட அநுபவங்கள்,

பல்வேறு உணவுகளைத் தேர்ந்தெடுத்து உண்டமை—இவற்றையெல்லாம் நகைச்சுவை தோன்ற அற்புதமாக எடுத்துரைத்தார்கள். நேரிட்ட தொல்லைகளையும் துன்பங்களையும் சிரிக்கச் சிரிக்க எடுத்துரைத்தார்கள். 'இடுக்கண் வருங்கால் நகுக' (குறள்—621) என்ற குறளுக்கு எடுத்துக்காட்டுகள் போலிருந்தன. இவர் சமாளித்த முறைகளைக் கூறும்போது புவியியல், வரலாறு கற்பிக்கும் ஆசிரியர்கள் தாம் கூறும் நிகழ்ச்சிகளை இப்படியல்லவா கற்பிக்கவேண்டும் என்று கூறுவது போலிருந்தது இவர் பேச்சு? அருச்சுனன் மேற்கொண்ட தீர்த்த யாத்திரையை வில்லிபுத்தூராழ்வார் வருணிப்பது[1] போலிருந்தது இவர் உரை என்றும் சொல்லிவைக்கலாம். சிறுசிறுநிகழ்ச்சிகளையும் நகைச்சுவையுடனும் கற்பனை நயத்துடனும் எடுத்துக்காட்டி விளக்கினது மாணவர்கள் இவருடன் சுற்றுலாவை மேற்கொண்டது போலிருந்தது; தம்மை மறந்த நிலையில் இவர் உரையில் ஈடுபட்டு மகிழ்ந்தார்கள். திரு: செட்டியாரவர்களும் தாம் இங்கு பேசியதுபற்றி முழுமையான மனநிறைவு கொண்டார்கள். மாலை சிற்றுண்டியை முடித்துக் கொண்டு சுமார் 5-30க்கு திருச்சி செல்லும் பேருந்தில் முன்வரிசையில் ஏற்றி அனுப்பி வைத்தோம். என் அரிய நண்பர் மணவாளன் (வண்டியோட்டி) அவரை அவர் இறங்கும் இடத்திற் கருகில் இறக்கிவிடுவதாகக் கூறியது எனக்கும் மகிழ்ச்சியைத் தந்தது, பேருந்தில் ஏற்றியபோது குமரி மலருக்கு பள்ளியின் பேரில் ஐந்து ஆண்டுச்சந்தாவை வற்புறுத்திச் செட்டியார் அவர்களின் கையில் சேர்ப்பித்தேன்.

இந்த நாளிலிருந்து திரு. செட்டியாரவர்களின் நட்பு ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றியது, 1949-50 ஆண்டுகளில் அடிக்கடி சென்னை போய்வரும்

---

1. வி. பா: அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் 11—20

நிர்பந்தங்கள் ஏற்பட்டன. போகும்போதெல்லாம் குமரி மலர் அலுவலகத்தில் (100, மாவ் பரீஸ் சாலை, தேனாம் பேட்டை, சென்னை-600 018) இவரையும் இவரது அரிய நண்பர் திரு. கோபாலனையும் பார்த்து அளவளாமல் திரும்புவதில்லை.

ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே![1]

என்ற மக்கள்வாக்கில் பயிலும், அதிவீரராமபாண்டியனின் திருவாக்கிற்கு எடுத்துக் காட்டாக அமைந்தது இவரிடம் எனக்கு ஏற்பட்ட நட்பு. குமரி மலர் அலுவலகத்திற்கு செல்லும்போது செட்டியாரவர்கள் சில சமயம் இருப்ப தில்லை. ஆனால் திரு கோபாலன் அவர்கள் என்னை வரவேற்ற முறைகள், அன்புடன் அளவளாவின முறைகள். முதலியவை என் உள்ளத்தை மிகவும் கவர்ந்தன. இந்த இணை பிரியாத இரு நண்பர்கள் தமிழ்ப் பண்பாட்டின் கொடுமுடிகளாகத் திகழ்ந்தனர். இந்த இரு பெரியார்களும் இன்று (24-10-1989) இல்லை, மூன்றாண்டு இடை வெளியில் ஒருவர்பின் ஒருவராகத் திருநாடு அலங்கரிதனர்.

திரு வ. சுப்பையாபிள்ளை இயற்கை எய்தியபோது கேதம் விசாரிக்கச் சென்ற நானும் திரு செட்டியாரவர் களும் பவழக்காரத் தெருவில் திருபிள்ளையவர்களின் இல்லத்தில் சந்தித்ததை நினைவு கூர்கின்றேன். இருவரும் ஆளேறும் மிதிவண்டியில் நகரப் பேருந்து நிலையத்திற்கு வந்து சேர்ந்தோம். நான் 7-சி பேருந்து ஏறி அண்ணா நகர் வந்து சேர்ந்தேன். திரு. செட்டியார் 9-பேருந்து ஏறி தி. நகரை அடைந்தார்கள். திரு. செட்டியாரவர்கள் பாண்டி பசாருக்கு அருகிலுள்ள ஓர் இல்லத்து மாடியில் தங்கியிருந்தார்கள். சில சமயம் நான் என் சம்பந்தியின் துணிக்கடையில் இருக்கும்போது (சாரி டிலக்ஸ்) அதை யொட்டிய நடை பாதையில் அவர் மெதுவாக நடந்து செல்வதைப் பார்ப்பதுண்டு. என் கண்ணில் படும்போ

2. வெற்றி வேற்கை-34

தெல்லாம் வேகமாக ஓடிச் செட்டியாரவர்களை இடை மறித்துக் கடைக்கு இட்டு வருவேன். இவரை என் சம்பந்தி M. R. துரைசாமி ரெட்டியாருக்கு அறிமுகப் படுத்திவைப்பேன். காஃபி பருகிக்கொண்டே நாங்கள் செட்டியாருடன் உரையாடி மகிழ்வோம். மாவ்பரீஸ் சாலையிலிருந்த குமரி மலர் அலுவலகம் லஸ்சர்ச் சாலைக்கு மாற்றப்பட்ட பிறகு ஒரு நாள் திரு. கோபாலன் அவர்களைப் பார்க்கச் சென்றேன். அண்மை யில் செட்டியாரவர்கள் மறைந்த சமயம் அது. செட்டி யாரவர்கள் மறைந்தபோது நான் திருப்பதியில் இருந் தேன். திருப்பதியிலிருந்து திரும்பிய பிறகு கேதம் விசாரிப்பதற்காகவே கோபாலன் அவர்களைப் பார்க்கச் சென்றேன். சிறகொடிந்த பறவை போல் காணப்பட்டார் அவர். ஆறுதல் கூறி நான் எழுதிய ஒன்றிரண்டு நூல்களை அவருக்கு அளித்து விட்டுத் திரும்பினேன். குமரிமலர் உரிமையையும் பிறவற்றையும் செட்டியாரவர்கள் திரு கோபாலனின் பேருக்கு எழுதி வைத்ததையும் அறிந்து கொண்டேன். இதன் பிறகு இவர் மறைந்த செய்தி தான் என் காதுக்கு எட்டியது. எவரையும் அறியாததால் இந்தக் கேதம் விசாரிக்கச் செல்லவில்லை. இருவர் மறைவும்,

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு

என்றகுறளை (குறள்—336) நினைவூட்டுவதாக இருந்து வருகின்றது.

கவிஞன் உள்ளம்: நான் துறையூரில் தமிழன்னையின் மடியிலிருந்துகொண்டு தமிழமுதம் பருகிய அநுபவத்தை இருபத்தைந்து இலக்கியக் கட்டுரைகளை எழுதி வைத் திருந்தேன். இவற்றில் பத்துக்கட்டுரைகள் திரு. பெ. தூரனை ஆசிரியராகக் கொண்டு கோவையிலிருந்து வெளி வந்த 'காலச் சக்கரம்' என்ற இதழில் அச்சு வடிவம் பெற்றன. இவற்றையும் வெளிவராதவற்றையும்

தொகுத்துக் 'கவிஞன் உள்ளம்' என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டேன். இதுதான் என் கன்னி முயற்சியாக வெளிவந்த முதல்நூல் (அப்போது என்வயது 32). இதற்கு ஒரு பெரியாரிடம் அணிந்துரை பெறுவதற்காகச் சென்னை வந்தேன். சென்னையில் தக்கார் ஒருவரை அறியாதவனாதலால் குமரிமலர் அலுவலகம் (100, மாவ்பரீஸ் சாலை) சென்றேன். திரு. கோபாலன் அவர்கள் அருகில் சீனிவாச அய்யங்கார் சாலையில் ஓரில்லத்தில் தங்கியிருந்த திரு பி. ஸ்ரீ. அவர்களிடம் என்னை இட்டுச் சென்று அறிமுகப்படுத்தி வைத்து அணிந்துரை பெறச் செய்தார்கள். அந்தக் காட்சி இன்றளவும் என் உள்ளத்தில் பசுமையாகவே உள்ளது. இது நடைபெற்றது 1949-சனவரியில், இதன்பிறகு துறையூர் தலைமையாசிரியர் பதவியைத் துறந்து 1950-ஜூலை முதல் காரைக்குடியில் புதிதாகத் தொடங்கப் பெற்ற அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் முதல் தமிழ்ப் பேராசிரியனாகப் பொறுப்பேற்றுப் பணியில் அமர்ந்தேன்.

குமரிமலரில் என் கட்டுரைகள்: காரைக்குடிக் கல்லூரி வாழ்வில் ஓய்வும் நூலக வசதிகளும் நன்றாக அமைந்தன. ஏராளமான நூல்களைப் படிக்கும் வாய்ப்புகள் கிடைத்தன. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள் பற்றியும், மொழிவரலாறு பற்றியும் பல கட்டுரைகள் எழுதினேன். இவை யாவும் குமரிமலரில் தொடர்ந்து வெளிவந்தன. பல பெரியோர்களின் கட்டுரைகளுடன் சிறியேனின் கட்டுரைகளும் வெளிவந்தமைகுறித்து எனக்கு மனப்பூரிப்பே ஏற்பட்டது. எல்லாம் இறைவன் திருவருளே என்று அமைதியும் அடக்கமும் கொண்டேன். இதனால் செட்டியார், கோபாலன் இவர்களின் நட்பு ஆழமாக அமைய வாய்ப்புகள் ஏற்பட்டன. இதனால் எழுத்தாளர் உலகில் ஒருவனாகத் திகழ்ந்தேன். பல பெரியோர்களின் தொடர்பும் ஏற்படக் காரணமாகவும்

இது அமைந்தது. குமரிமலரில் முதன்முதலாக வெளி வந்த 'பாரதியின் பாஞ்சாலி சபதம்' பற்றிய என் ஆய்வுக் கட்டுரை பல பெரியோர்களின் ஆசியைப் பெறக் காரணமாகவும் அமைந்தது. இக்கட்டுரையே பின்னர் விரிந்து பாரதியின் நூற்றாண்டில் நான் தெளியிட்ட நான்கு நூல்களில் ஒன்றாக பாஞ்சாலி சபதம் - ஒருநோக்கு என்ற பெயரில் நூல் வடிவம் பெற்று (மதுரை சர்வோதய இலக்கியப் பண்ணை வெளியீடு) வெளிவந்தது, வேறு கட்டுரைகள் வேறு தொகுப்புகளில் பரவலாகச் சேர்ந்தன. ''கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்'' என்ற தனியான நூலாகவே (மதுரை நாவலர் புத்தக வெளியீடு) வெளி வந்துள்ளது; இக்கட்டுரைகள் யாவும் குமரிமலரில் வெளி வந்தவை. 'விஷயதானத்திற்கு' எந்தவிதமான சன் மானமும் வேண்டியதில்லை என்று திரு செட்டியார் அவர்களிடம் சொல்லிவிட்டேன், குமரிமலர் அலுவல கத்திற்கு இலக்கியச் சுவை நுகரும் பெரிய அரசு அதிகாரிகள், நீதிபதிகள், பெரிய பெரிய எழுத்தாளர்கள் முதலிய பலர் வந்து வந்து போவதைக் கண்டிருக் கின்றேன். செட்டியார் அவர்கள் இருந்த அது ஜான்சனின் இலக்கியக் கழகம் (Literary club) போல் புகழோங்கி நின்றது.

திரு. செட்டியாரவர்கள் அடக்கமான ஒரு சிறந்த காந்தியவாதி, கதரைத் தவிர வேறு ஆடை அவர் திருமேனியை அலங்கரித்ததைப் பார்த்ததில்லை. காந்தியடிகள் பற்றி, 'டாக்யுமெண்டரி' படம் எடுத்த வர்கள், அது ஏனோ புகழுடன் சிறப்பு அடையவில்லை. அருமை இராஜாஜியவர்களிடம் மிக்க பக்தியுடன் பழகுபவர்கள். நல்ல எழுத்தாளர். எதை எழுதினாலும் தெளிவாகவும் சுவைபடவும் எழுதுபவர். 'செய்வ திருந்தச் செய்' என்பதற்கு திரு செட்டியாரவர்கள் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தார்கள். தேசியமும் தெய்விகமும் இருகண்களாகப் போற்றி வந்த பெரியார்

ஏ. கே. செட்டியாரவர்கள். பொருளாதார அடிப்படை யில் செல்வத்தைச் சேர்க்கவில்லை; சாதாரணமாக நம்மைபோல் அதை அவர் அதிகமாக ஆசைப்படுவ தில்லை. இறுதி மூச்சு இருந்தவரை மனநிறைவுடன் வாழ்ந்த மாபெரும் பெரியாராகவே திகழ்ந்தார். ஸ்வயத் தில் வாழ்வாங்கு வாழ்ந்தவர். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற பொன்மொழிக்கு இலக்கணமாகத் திகழ்ந்த ஒரு மாபெரும் மேதை. அவர் என்பால் காட்டி வந்த அன்பு, மதிப்பு, மரியாதை எல்லாம் என்றுமே என்னால் மறக்க முடியாது. இறுதிக் காலத்தை ஒரு 'வெள்ளை வேட்டி சாமியார்' போலவே கழித்தவர், கோட்டையூர் தந்த மாணிக்கம்.

# 11. வீர. உலக ஊழியனார்

இலக்கிய உலகில் நாட்டார் என்றால் திரு. வேங்கடசாமி நாட்டார் அய்யாவைக் குறிக்கும்; நகரத்தார் என்றால் பண்டித மணி கதிரேசன் செட்டியார் அய்யாவைக் குறிக்கும்; ரெட்டியார் அய்யா என்றால் பன்மொழிப்புலவர் வேங்கட ராஜுலு ரெட்டியார் அய்யா வைக் குறிக்கும். அய்யர்வாள் என்றால் தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் தான் நினைவிற்கு வருவார்கள், 'இலக்கணத்தாத்தா' என்றால் மகா வித்துவான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை நினைவுக்கு வருவார்கள். நாட்டார் அய்யாவின் தலை மாணாக்கர் திரு. வீர. உலக ஊழியனார் அவர்கள். 'லோகதாசன்' என்று பெற்றோரால் இடப்பெற்ற திருநாமத்தை இப்படி மாற்றி வைத்துக்கொண்டார் என் பதை அவர் மூலமாகவே கேட்டறிந்தேன். இப்படி மாற்றி யமைத்துக் கொண்டதன் காரணம் தனித் தமிழ்ப் பற்று என்பது தான். பண்டிருந்தே தமிழ்ப்புலவர்களின் குருதி யில் ஊறியிருந்த இக்கரு பிற்காலத்தில் ஓர் இயக்கமாகவே உருப்பெற்றுத் 'தனித்தமிழ் 'இயக்கமாக' வடிவெடுத்தது. இதற்கு முதன்முதலில் வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர்' என்று தன் பெயரை மாற்றி வைத்துக்கொண்ட சூரிய நாராயண சாஸ்திரி அவர்களா? அல்லது தான் நடத்தி வந்த 'ஞானசாகரம்' என்ற இதழின் பெயரை 'அறிவுக்

கடல்' என்றும், 'வேதாசலம்'[1] என்ற தம் பெயரை 'மறை வலை' என்றும் மாற்றி வைத்துக்கொண்ட 'மறைமலை யடிகளா'? என்பது என்னால் அறியக் கூடவில்லை. 'அடிகள்' என்ற பின்னொட்டு அவர்கள் துறவுக் கோலம் கொண்ட பின்னர் பெயருடன் ஒட்டிக்கொண்டது. திராவிட இயக்கம் தோன்றிய பின்னர் 'நாராயணசாமி' என்ற பெயர் நெடுஞ்செழியனாகவும் 'இராமசாமி' என்ற பெயர், அன்பழகனாகவும், சோமசுந்தரம் என்ற பெயர் மதியழகனாகவும், மாறியனவாகக் கேட்டதுண்டு.

திரு. உலக ஊழியனார் சேலம் மாவட்டம் கழக உயர் நிலைப்பள்ளிகளில் தலைமைத் தமிழாசிரியராகப் பணி யாற்றிப் பேரும் புகழும் பெற்ற பெருமகனார். நாமக்கல் கழக உயர்நிலைப்பள்ளியில் பணியாற்றியபோதுதான் அவர் எனக்கு அறிமுகமானர்ர். இவர் பேச்சுத் திறன் பற்றிப் பலர் என்னிடம் சொல்லியதனால் இவரை ஒரு முறை (1942–செப்டம்பர் என்பதாக நினைவு) துறையூர்ப் பள்ளி மாணவர் இலக்கிய மன்றத்தின் தொடக்க விழாவிற்கு அழைத்திருந்தேன். மிக அருமை யாகப் பேசி மாணாக்கர்களின் கவனத்தை ஈர்த்தார். பேச்சின் எடுப்பும் 'கணீர்' ஓசையும், பாடல்களை இசை யுடன் பாடி விளக்கின முறையும் கேட்போரின் செவிக்கு இனியனவாய், சிந்தைக்கு நல்விருந்தாய் அமைந்திருந்தன. அன்றிருந்து அவர் என் இனிய நண்பரானார்; குடும்ப நண்பருமானார். குருகுலவாசம்போல் நாட்டாரிடம் பயின்றவராதலால் ஆசிரியரிடம் அமைந்திருக்க வேண்டிய நற்குணங்கள் யாவும் இவரிடம் என்னால் காண முடிந்தன.

ஈதல் இயல்பே இயம்பும் காலைக்
காலமும் இடமும் வாலிதின் நோக்கிச்

1. 'வேதாசலம்' என்பது திருக்கழுக்குன்றம். வேதமே மலையாதலின் இது சைவ சமய குரவர் நால்வர் பாடல்களும் பெற்ற திருத்தலம்.

சிறந்துழி யிருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமில் மனத்தின் நூல்கொடுத்தல் என்ப.[2]

என்று நன்னூலார் கூறும் இலக்கணத்திற்கு இலக்கிய மாகத் திகழ்ந்ததை என்னால் அறுதியிட முடிந்தது. தேவை ஏற்படும் போதெல்லாம் இவருக்குப் பள்ளியிலும் ஊர்ப்பொது மன்றங்களிலும் வாய்ப்புகள் நல்கினேன். எப்பொழுது வந்தாலும் என் விருந்தினர்தான். அப் பொழுது நானும் என் மனைவியும்தான் குடும்பம்; குழந்தைப் பேறு இல்லை. என் அன்னையார் துறையூருக்கு ஏழு கல் தொலைவிலுள்ள கோட்டாத்தூர் என்ற என் சொந்த ஊரில் வேளாண்மைத் தொழிலைக் கவனித்து வந்தார்கள்.

தமிழில் நல்ல புலமை ஏற்பட வேண்டுமானால் நல்லாசிரியரிடம் மூன்று நான்கு நூல்களையாவது பாடம் கேட்க வேண்டும். என் வாழ்வில் புலமைஎய்துவதை முதல் நோக்கமாகவும் தேர்வு எழுதிப் பட்டங்கள் பெறுவதை இரண்டாவது நோக்கமாகவும் கொண்டிருந்தேன். 1943 முதல் சென்னைப் பல்கலைக்கழகம் நடத்தி வரும் வித்துவான் தேர்வு எழுதுவதைக் குறிக்கோளாகக் கொண் டிருந்தேன். வித்துவான் இறுதி நிலைத் தேர்வுக்குப் 'பொருநராற்றுப் படை' பாடமாக இருந்தது. ஒரு சிறப்புச் சொற்பொழிவை வெள்ளியன்று அமைத்தேன்; சனி ஞாயிறு என் இல்லத்தில் தங்கி பொருநராற்றுப்படை பாடம் சொல்லவேண்டும் என்று திரு. ஊழியனாருக்கு எழுதி வேண்டுகோள் விடுத்திருந்தேன். அவரும் இப் பணியை அன்புடன் ஏற்றுக்கொண்டு மறுமொழி தந்திருந் தார்.

2. நன்னூல்—பொதுப்பாயிரம். 36

'''பத்துப்பாட்டு' என்னிடம் ஒருபடி தான் உள்ளது; இன்னொரு படி இருந்தால் வசதியாகப் பாடஞ் சொல்ல வாய்ப்பாக இருக்கும்'' என்று கூறினேன். ''அது பற்றிக் கவலை வேண்டா. நான் நாட்டார் அய்யாவிடம் பாடம் கேட்டவன். பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை —இவை உரையுடன் மனப்பாடமாக—எனக்குத் தெரியும். ஒரு படியே போதும்; அதை நீங்கள் வைத்துக்கொள்ள லாம்'' என்றார். இரண்டு நாட்களில் காலையும் மாலையு மாக 'பொருநராற்றுப் படையை' அற்புதமாகக் கற்பித்து விட்டார். சொல்லுந்தோறும் நச்சினார்க்கினியரின் உரை நயத்தையும், அவர் சிறப்பாகக் கையாளும் 'மாட்டேறு' என்ற உத்தியையும் அற்புதமாக விளக்கியது இன்றும் (அக்டோபர்—1989) என் மனத்தில் பசுமையாக உள்ளது.

சிலப்பதிகாரம்—மதுரைக் காண்டமும் தேர்வுக்குப் பாடமாக இருந்தது. அதனை முழுதும் கேட்க வாய்ப் பில்லை. நான்கு காதைகளை மட்டிலும் பாடம் கேட் டேன். 'அடைக்கலக் காதை', 'கொலைகளக் காதை' 'ஆய்ச்சியர் குரவை' 'வழக்குரை காதை'-ஆகிய நான்கை யும் பாடங் கேட்கும் பேறு ஏற்பட்டது. நான்கு முறை துறையூரில் பொதுக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து கொண்டு வாய்ப்புகள் ஏற்படுத்தி இவற்றைக் கேட்டேன். தேர்வுகளை முதன்மை நோக்கமாகக்கொண்டு 'மேம் புல் மேய்ந்தால்' புலமை ஏற்படாது. 'வாயிலோயே, வாயிலோயே' என்ற தொடரை (வழக்குரை காதை— அடி 24) என்ற தொடரை வாய் இல்லோயே, வாய் இல்லோயே' என்று சிறிது மாற்றிக்கொண்டால் இப் போது தென்னாட்டில் கூர்க்கர்கள் செல்வர் வீடுகளிலும் அலுவலகங்களிலும் காவலர்களாக இருந்து வருவதுபோல் அக்காலத்தில் பாண்டிநாட்டுடன் கிரேக்க நாட்டு தொடர்பு இருந்து வந்ததால் கிரேக்கர்கள் (யவனர்கள்) அரண்மனையில் வாயில் காவலர்களாக இருந்து வந்ததை ஊகிக்கலாம் என்றார். (வாய் இல்லோயே' என்பதற்கு

('தமிழ்ப் பேசத் தெரியாதவனே) என்று பொருள்கொள்ள வேண்டும் என்றார். இஃது அவரது சிந்தனைத் திறனைக் காட்டுகின்றது.

பருகுவன் அன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்[3]

பாடம் கேட்டதை நினைவுகூர்கின்றேன். கீதையைக் கண்ணன் உபதேசித்ததைப் பார்த்தன் ஆர்வமாகக் கேட்டான்; பரந்தாமனும் மிக்க ஆர்வமுடன் உபதேசித்தான், ஆசிரியன்—மாணாக்கன் உறவு பார்த்தன்—பரந்தாமன் உறவுபோல் அமைதல் வேண்டும் என்பது கற்பித்தல் துறையில் ஒரு குறிக்கோள் நிலை. இந்த நிலையைத்தான் நான் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பேராசிரியனாகப் பணிபுரிந்தபோது (1950 – 1960) பயிற்சி பெறும் ஆசிரியர்கட்கு அடிக்கடி வற்புறுத்திக் கூறுவேன்.

திரு ஊழியனார் சிலம்பம் ஆடுவதிலும், ஆசனங்கள் செய்வதிலும் சித்த மருத்துவத்திலும் நல்ல பயிற்சி பெற்றிருந்தார். வாலிபப் பருவத்தில் இல்லறத்தில் இருக்கும்போது 'பவள பஸ்பம்' சாப்பிடுவது நல்லது என்று அடிக்கடிச்சொல்வார்; இதைநெய்யிலோ, தேனிலோ குழைத்துச் சாப்பிடவேண்டும் என்று அறிவுரையும் கூறுவார். நான் இதைச் சாப்பிட ஆர்வம் கொண்டேன். தானே இதைச் செய்து தருவதற்கும் முன் வந்தார். ஒரு புது மண் மொந்தை வாங்கப்பட்டது. 30 பலம் பவளமும், ஒரு போத்தல் (அரைப்படி) தேனும் வாங்குமாறு பணித்தார். பதினைந்து எலுமிச்சைப் பழத்தின் சாறு தயாரித்துக்கொண்டு அச்சாற்றில் பவளத்தை ஓரிரவு முழுவதும் ஊற வைத்தார். மறுநாள் காலையில் பவளத்திலிருந்த அழுக்கெல்லாம் நீங்கி இருந்தது. அதை மீண்டும் மீண்டும் நன்னீர் விட்டு நன்றாகக் கழுவினார்; பவளத்தை

3. நன்னூல்—பொதுப்பாயிரம்—40

நன்கு உலர்த்தினார். மண் மொந்தையை நன்றாகக் கழுவி அதில் இந்தப் பவளத்தைப் போட்டு அது நன்றாக முழுகும் வரையிலும் தேனை ஊற்றினார். பிறகு ஒரு மண் மூடியால் மொந்தையை நன்றாக மூடி மெல்லிய கம்பியைக் கொண்டு மொந்தையினின்று மூடி நழுவாதவாறு வலுவாகப்பிணித்தார். பள்ளியிலேயே என் வீடு, வீட்டிற்குப்பின் புறம் பள்ளமும் படுகுழியும் நிறைந்த பாறைத் தரை. ஒரு குழியில் இரண்டு வரிசை சாணத்தாலான விராட்டியைப் பரப்பினார். அதன்மீது மொந்தையை வைத்து மொந்தையைச் சுற்றிலும் மேற்புறமும் விராட்டிகளை இரண்டு மூன்று வரிசைகளாக அடுக்கி மொந்தையை நன்கு மூடினார். மேற்புறத்தில் ஒரு பெரிய தகரத்தை வைத்து அதன்மீது தகரம் நகராதவாறு நாலைந்து கற்களை வைத்தார். பின்னர் தீ மூட்டினார். ஓரிரவு முழுவதும் தணல் கனிந்த நிலையிலிருக்க வேண்டும் என்றார். போதுமான அளவு விராட்டி அமையாவிட்டால் பவளம் பஸ்மமாகாது என்று மிக்க விழிப்புடன் அதிகமாக விராட்டிகளைப் பயன்படுத்தி இருந்தார்.

மறுநாள் காலையில் விராட்டி சாம்பல் மயமாகி இருந்தது; வெப்பமும் தணிந்திருந்தது. மொந்தையை மேற்புறம் நன்கு துடைத்து. கம்பிக் கட்டை அகற்றி மூடியை நீக்கிப் பார்க்கும் போது தேன் காகிதம் எரிந்த சாம்பல்போல் இருந்தது. மொந்தையிலுள்ளவற்றை ஒரு தாம்பாளத்தில் கொட்டி வாயினால் ஊதியே சாம்பலை அகற்றினார். பவளம் நன்றாகப் பஸ்மம் ஆகியிருந்தது என்று மேலோட்டமான பார்வையிலேயே கணித்து விட்டார். பின்னர் பஸ்மமாகி இருந்த பவளத்தை மேலும் தூய்மையாக்கினார் அவர் சொற்படி திரு. சிநிவாசராவ் என்ற ஆயுர்வேத மருத்துவரிடமிருந்து கல்வம் ஒன்றைக் குழவியுடன் இரவலாக வாங்கி வைத்திருந்தேன். பொரிந்திருந்த பவளத்தைச் சிறிது சிறிதாகக் கல்வத்தில் போட்டு நன்றாகப் பொடி பண்ணினார். பிறகு

தூய்மையான துணியில் வடிகட்டினார் (வஸ்திர காயம் செய்தார் என்பது மருத்துவமொழி). துணியில் தங்கின வற்றை மீண்டும் கல்வத்தில் போட்டுப் பொடி பண்ணி னார்; வஸ்திரகாயம் செய்தார். இந்த நுண்ணிய நிலை யிலுள்ள பொடியே 'பவளபஸ்பம்' என்பது. பிறகு இரண்டு கண்ணாடிப் போத்தல்களில் நிரப்பி இறுக்கமான தக்கை யைக் கொண்டு மூடி என் கையில் கொடுத்து விட்டார். இப்பொடியை தேனில் குழைத்து விட்டு விட்டு இரண்டு மண்டலம் (48+48 நாட்கள்) உண்டு நல்ல பயனைக் கண்டேன்.

இவர் சொற்பொழிவுகள் மாணவர் ஆசிரியர், இலக்கியத்தைச் சுவைக்கும் நாட்டமுள்ள ஊர்ப் பெரு மக்கள் இவர்கள் மனத்தைக் கொள்ளை கொண்டன. நான் துறையூரிலிருந்த ஒன்பதாண்டுக் காலத்தில் இவரைப் போன்ற பல்வேறு புலவர் பெருமக்களைத் துணை கொண்டு,

> சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
> தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்[4]

என்ற பாரதியின் மொழியில் துறையூரைத் தமிழ் மணம் கமழச் செய்ய முடிந்தது. என் தோழ ஆசிரியர்களும் மாணவ மணிகளும் என்னுடைய தமிழ்ப் பணிக்கு உறுதுணையாக இருந்ததை இப்போது நினைவுகூரும் போது உள்ளம் குளிருகின்றது.

துறையூரில் மேல்கோடியில் இச்சி மரத்தடியில் ஒரு நாள் மாலையில் நடைபெற்ற இலக்கியக் கூட்டம் நினை விற்கு வருகின்றது. பெருங்கூட்டம். வெள்ளம்போல் மக்கள் திரண்டிருந்தனர். கம்பனில் ஒரு பாடலும் அதே கருத்துடைய நளவெண்பாவிலுள்ள ஒரு பாடலும் ஊழியர் பேச்சில் தாண்டவமாடுகின்றன; அற்புதமாக

4. பா. க: தேசிய கீதங்கள்—தமிழ்.2

விளக்கம் அடைகின்றன. மக்கள் முகத்தில் அவர்கள் அநுபவித்த இலக்கியச் சுவை பிரதிபலித்ததைக் காண முடிகின்றது. கைகேயியின் அந்தப் புரம். இராமனது முடிசூட்டு விழாவைத் தெரிவித்ததற்கு நள்ளிரவில் தசரதன் வருகின்றான். அப்போது கூனியின் போதனையால் மனம் மாறுபாடுற்று அலங்கோலத்துடன் கிடக்கும் கைகேயியைக் காண்கின்றான் அரசன். கைகேயி ஒரு காலத்தில் தனக்குத் தந்த இரண்டு வரங்களை இப்பொழுது தருமாறு வற்புறுத்துகின்றாள். ஒரு வரம் தன் மகன் பரதன் முடிசூடுவது; மற்றொரு வரம் இராமன் பதினான்கு ஆண்டு காட்டுக்குச் செல்வது. தசரதன் இதனைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போகின்றான். புண்ணில் வேற்படை புகப்பெற்ற வேழம்போல் வருந்துகின்றான். மன்னனது அந்த நிலையைக் கண்டும் கைகேயியின் மனம் சிறிதும் இளகவில்லை. மிரட்டுகின்றான்; கெஞ்சுகின்றான். 'மண்ணே கொள் நீ; மற்றைய தொன்றை மற' என இரக்கின்றான். அதற்கு அவள் 'வையக முற்றும் நடந்த வாய்மையன்' என்ற பெயரெடுத்த நீயே வாய்மை தவறி நடந்தால், இனி வாய்மைக்கு யார் உளர்?' என்று பதிலிறுக்கின்றாள். மன்னன் அவளைப் பலவாறு பழித்துத் துயருறுகின்றான். 'நீ சொன்ன சொல் தப்பினால் நான் உயிர் மாய்வேன்' என்று தன் உறுதியை வெளியிடுகின்றாள். மன்னன் மூர்ச்சிக்கின்றான். கைகேயியோ தன் எண்ணம் நிறைவேறிவிட்டதென்று எண்ணி உறங்கி விடுகின்றாள். இந்தச் சூழ்நிலையைப் படிக்கும் நம்முடைய மனம் மிக இறுக்கமாகின்றது. இதனை நீக்கிக் கவிஞன் இரவு கழிகின்றது என்கின்றான். ஆவி நிறைந்துள்ள பாத்திரத்தின் மூடியைத் திறந்ததும் ஆவி நீங்குவது போல், துயரத்தால் கவியப் பெற்றிருந்த நம் மனமும் துயரத்தினின்றும் விடுதலை அடைகின்றது. இந்தக் கொடிய செயலுக்குக் காரணம் ஒரு பெண்தானே என்று, ''நாணினாள் என் ஏகினாள் நளிர் கங்குலாகிய

நங்கையே' என்று இரவு கழிந்த நிகழ்ச்சியை அழகாகக் காட்டுகின்றான் கம்பநாடன்.

இப்போது விடியற் காலையின் வருணனை வருகின்றது. கடையாமத்தில் கோழிகள் கூவுகின்றன என்று கூற வந்த கவிஞன் கற்பனையால் ஒரு காட்சியைச் சித்திரிக்கின்றான். மூன்றாம் யாமத்தில் கைகேயியின் அந்தப்புரத்தில் இரவில் நடந்த காட்சிகளையெல்லாம் கோழிகள் கண்ணாரக் காண்கின்றன. ஒரு பெண்ணினால் மன்னன் மதிகெட்டுப் புலம்பியதையெல்லாம் காண்கின்றன. அந்தத் துயரத்தை ஆற்ற முடியாத கோழிகள் கடையாமத்தில் தமது இறகுகளாகிய கைகளால் வயிற்றிலறைந்து கொண்டு அழுகின்றன என்று வருணிக்கின்றான் கவிஞன். இவ்வாறு விளக்கிய ஊழியனார்,

எண்ட ருங்கடை சென்ற யாமம்
இயம்பு கின்றன ஏழையால்
வண்டு தங்கிய தொங்கல் மார்பன்
மயங்கி விம்மிய வாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கி அஞ்சிறை
யான காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி(று) எற்றி எற்றி
விளிப்ப போன்றன கோழியே.[5]

என்ற பாடலை இசையோடு படிக்கின்றார்; அவருக்கே என்று ஆண்டவன் வழங்கிய வெண்கலத் தொண்டையால் 'கணீர் கணீர்' என்று பாடுகின்றார். கோழி கூவும்போது இறக்கைகளை அடித்துக் கொண்டுதான் கூவும் என்ற இயற்கை நிகழ்ச்சியை.

காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி(று) எற்றிஎற்றி
விளிப்ப போன்றன கோழியே

5. அயோ. கைகேயி சூழ்வினை. 47

என்ற அடிகளால் காட்டும் உலக ஊழியர் தம் கைகளைத் தூக்கி மார்பிலும் வயிற்றிலும் பன்முறை அறைந்து அறைந்து காட்டிய நாடகப் பாணி இன்றும் என் மனத்தில் பசுமையாக உள்ளது. இவர் உரையைக் கேட்ட கூட்டத் தினர் கவிதை யநுபவத்தின் கொடு முடியை எட்டினதை நான் நேரில் கண்ட காட்சி இன்றும் என் மனத்தை விட்டு மறையவில்லை.

இந்தக் காட்சியை முற்றிலும் ஒத்த மற்றொரு காட்சியை 'நளவெண்பா'விலிருந்து காட்டும்போது கூட்டத்தினரின் கவிதையநுபவம் சிறகடித்துப் பறக்கத் தொடங்குகின்றது. கலியின் கொடுமையால் நளன் பட்ட துயரங்களையும் அல்லல்களையும் நாம் அறிவோம். கலிபுருடன் சூழ்ச்சியால் ஆடையை இழந்த நளன் தமயந்தியை இட்டுக் கொண்டு ஒரு பாழ் மண்டபத்திற்கு வருகின்றான். இருவரும் ஓராடையைப் பகிர்ந்து கொண்டு உறங்குகின்றனர். நள்ளிரவில் அவளது ஆடையைவாளால் அரிந்து கொண்டு அவளை விட்டுப் பிரிகின்றான் நளன். பிரிவதற்கு மனம் துணியவில்லை. சிறிது தூரம் போகின் றான்; திரும்பி வருகின்றான். இச் செயல் பலமுறை நடை பெறுகின்றது. இதனைக் கவிஞர் புகழேந்தி,

போயொருகான் மீளும்
　　புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த
　　அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோலும்
　　ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.[6]

என்று காட்டுவர். ஆய மகளிர் தயிர் கடையும்போது அவர்கள் கைகளில் பற்றியிருக்கும் கயிற்றின் நுனிகள் மத்தை நோக்கிப் போவதும் வருவதுமாக இருப்பதுபோல்

6. நளவெண்பா—274

நளனின் மனம் போவதும் வருவதுமாக இருந்தது என்று அழகான உவமையால் காட்டுவர். இறுதியில் நளன் அவளை விட்டுப் பிரிந்தே போய் விடுகின்றான். விழித் தெழுந்த தமயந்தி படுந்துன்பத்தைச் சொற்களால் வருணித்துக்காட்ட முடியாது. எழுகின்றாள்; விழுகின் றாள்; புலம்புகின்றாள்.

வான்முகிலும் மின்னும்
 வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானும் குழலும்
 தனி விழ்ந்தாள்[7]

என்று அவளது ஒரு நிலையைக் காட்டுகின்றார் புகழேந்தி. அவளது பொன் போன்ற திருமேனியை அவிழ்ந்து கிடக் கும் குழல்கள் மூடி மறைக்கின்றன. இந்த நிலையில் நிலத் தில் வீழ்ந்தது, முகில் (கூந்தல்) மின்னலுடன் (மேனி)நிலத் தில் வீழ்ந்தது போல் இருந்தது என்ற உவமையால் காட்டு கின்றார். இந்த இறுக்கமான சூழ்நிலையிலிருந்து நம்மை விடுவிக்கின்றார். இரவு கழிந்து விடிந்தது என்று கூறி. கம்பன் கையாண்ட உத்தியே புகழேந்திக்கும் கை கொடுத்துஉதவுகின்றது. கவிஞர் கூறுகின்றார்:

தையல் துயர்க்குத்
 தரியாது தன்சிறகாம்
கையால் வயிறலைத்துக்
 காரிருள்வாய் வெய்யோனை
வாவுபரித் தேரேறி
 வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்[8]

இந்தப் பாடலில் உள்ள 'தம் சிறகாம் கையால் வயிறலைத்து' என்ற தொடரைக் கூறும்போது சேவல்கள் தம் சிறகால் வயிற்றை அறைந்து கொள்வதைத் தம் கை களால் அறைந்து காட்டுவார் ஊழியர். பாடலை இசை

7, 8. நளவெண்பா 283.

யுடன் படித்துக் கொண்டே தம் கைகளால் வயிற்றி லறைந்து கொண்டு காட்டிய காட்சியால் மேடையின்மீது ஊழியர் வடிவில் ஒரு பெரிய கோழியே தனது இறக்கை களால் அடித்துக் கொள்வது போன்ற ஒருவித மயக்கத்தை உண்டாக்கி விடுவார். இந்தக் காட்சியும் இரண்டு காட்சி களை ஒப்பிட்டுக் காட்டிய திறமும் இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளன; ஊழியரே என் மனத்திலிருந்து தாண்டவமாடுவது போன்ற பிரமை (மயக்கம்) உண்டா கின்றது. காரைக்குடியில் கவிதை கற்பிக்கும் முறையை விளக்கும் போது இக்காட்சிகளை நினைவு கூர்ந்து விளக்கு வதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

1948-ஆம் ஆண்டு வாக்கில் சொல்வன்மையும் ஆழ்ந்த புலமையையுமுடைய இப்பெரும் புலவரை சேலம் நகராண்மைக் கல்லூரியிலிருந்த முதல்வர் இராமசாமிக் கவுண்டர் (தமிழ்ப் பற்றுமிக்க ஒரு கணிதப் பேராசிரியர்) தம் கல்லூரியில் பேராசிரியராக அமர்த்திக் கொண்டார். துறையூரிலிருந்து ஒரு நீதி மன்ற வழக்கின் நிமித்தம் சேலம் சென்றிருந்தபொழுது இவரைச் சந்தித்தேன். என்னைக் கல்லூரிக்கு இட்டுச் சென்று முதல்வர் இராமசாமிக் கவுண்டர் அவர்கட்கும், ஆங்கிலப் பேராசிரியர் அச்சுத நாயருக்கும் அறிமுகம் செய்து வைத்தார். திரு. ஊழியனார் அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்ட ஆங்கிலப் பேராசிரியர்களும் இவர்மீது 'மோகம்' கொண் டனர். சில சமயம் தம் சொற்சிலம்பத்தால் ஆங்கிலப் பேராசிரியர்களின் கவனத்தையும் ஈர்ப்பார். ''தமிழில் ''போர்''என்றால் ஆங்கிலத்தில் நீங்கள் War என்பீர்கள். நீங்கள் ஆங்கிலத்தில் Pour என்று சொல்லும்போது நாங்கள் 'வார்' என்போம்'' என்பதை இப்போது நினைவு கூர முடிகின்றது. ''தமிழில் உள்ள 'சீழ்ப் பிடித்தல்' என்ற தொடர் 'சீப்பிடித்தல்' என்று மருவி

'சீப்பிடி' என்ற வடிவங் கொள்ளும் போது ஆங்கில மொழியில் Septic என்ற சொல்லாக மாறி விட்டது'' என்று சொல்லி அனைவரையும் நகைக்கச் செய்வார்.

1950—சூலை 5ந்தேதி முதல் நான் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணி ஏற்றுக் கொண்டேன். அங்குச் சென்ற பிறகும் இவர் தொடர்பு அறவில்லை. திருமணம் ஆகிப் பதின்மூன்று ஆண்டுகட்குப் பின்னர் துறையூரில் (அக்டோபர் 13, 1949) பிறந்த என் மகன் இராமலிங்கத்திற்கு 1954-இல் ஐந்தாண்டு (அக்டோபர்) முடியும் நிலை. ஒழுக்கமுடையவராயும் பெரும் புலமையுடையவராயும் இறைவழிபாடு செய்பவராயுமுள்ள ஒரு பேராசானைக் கொண்டு கல்வி தொடங்கி வைக்கவேண்டும் என்பது என்ஆர்வம். திரு. ஊழியனாரைத் தேர்ந்தெடுத்தேன். அவருக்கு எழுதிக் கேட்டேன்; ஒப்புக் கொண்டார். கல்வி தொடங்க நாள் குறிப்பிடப் பெற்றது. திரு. ஊழியனார் வருங்கால் 8 முழ வெண்பட்டு, ஓர் பட்டு மேலாடை (அங்கவஸ்திரம்) வாங்கி வருமாறு எழுதினேன். அவ்வாறே வாங்கி வந்தார். சேலம் பட்டாடைக்குப் பெயர் போனதல்லவா? கல்வி தொடங்கும்போது சடங்குகளைத் தவிர்த்தேன். கலைமகள் படத்திற்கு முன்னதாகச் சிறுவனைப் புத்தாடை அணியச் செய்து 'அக்ர முதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு' என்ற குறளை பதம் பதமாக மூன்று முறை சொல்லச் செய்தார். கலைமகளை வணங்கச் செய்தார்; கல்வித் தொடக்கம் இவ்வளவோடு முடிந்தது. திரு. ஊழியனாருக்குக் காணிக்கையாக வெண் பட்டாடைகள், ரூ50/= தட்டில் வைத்துத் தந்து சிறுவனை வணங்கச் செய்தேன். மதியத்தில் ஒரு சிறு விருந்திற்கு ஏற்பாடு செய்திருந்தேன். என் கல்லூரித் தோழ ஆசிரியர்கள், முதல்வர் திரு. எஸ். சீநிவாசன், மாதிரி உயர்நிலைப் பள்ளி ஓவிய ஆசிரியர் திரு வி. முனியாண்டி, (உலக ஊழியரால் பரிந்துரைக்கப்பெற்று, என்மூலம் சா.க.அவர்களைச் சந்திக்கச் செய்து நியமனம்

பெற்றவர்) ஆகியோரும்; ஊர்ப் பெருமக்களில் சா. கணேசன், ராய. சொக்கலிங்கம், சொ. முருகப்பா, இன்னும் சிலரும் விருந்தில் கலந்து கொண்டு சிறுவனை வாழ்த்திச் சென்றனர். அதன்பிறகு ஓரிரு தடவைகள் ஊழியனாரை என் பரிந்துரையின்பேரில் சா. க. கம்பன் திருநாளில் கலந்து கொள்ள செய்தார் என்பதாக நினைவு.

மாதிரிப் பள்ளி ஓவிய ஆசிரியர் முனியாண்டி(ஊழியனாரால் பரிந்துரைக்கப் பெற்றவர்) கூறிய ஒரு செய்தி நினைவிற்குவருகின்றது.உலக ஊழியனார் தம்தமக்கை மகளையே மணந்து கொண்டவர். சிறு வயதில் விளையாடிக் கொண்டிருந்த போது பேசிக் கொண்டது போன்றே 'வா, போ' என்று திருமணமான பின்னரும் பேசிக் கொள்வார்கள். பெண் குடும்பப் பாங்குடைய பெண்ணாக அமைந்தது ஊழியனாரின் நல்லூழேயாகும். நாமக்கல்லில் பணியாற்றிக் கொண்டிருந்த போது அவருடைய மாத ஊதியம் ரூ45/=க்கு மேல் இல்லை. சொற்பொழிவுகளினால் கிடைக்கும் மாத வருமானம் ரூ15/= முதல் ரூ20/= வரை இருக்கலாம். அக்காலத்தில் (1930—40) ஒரு சவரன் விலை ரூ13½ தான். 1940 வரை ரூ20/=க்கு மேல் போகவில்லை என்பது நினைவு. என் திருமணத்தின் போது (1936–37) சவரன் விலை ரூ20/=க்கு மேல் தாண்டவில்லை. ஊழியனாரின் துணைவியாரிடம் ஊழியனார் மாதம் முதல் தேதியன்று ஒரு சவரன் கொண்டு போய்க் கொடுத்து விட வேண்டும். இஃது இல்லாளின் கட்டளை. அப்படியே அவரும் கொடுத்து வந்தார். ஒரு சமயம் என்னிடம் உரையாடிக் கொண்டிருந்தபோது தம் துணைவியாரிடம் 300 சவரன் வரையில் இருக்கும் என்று ஊழியனாரே சொன்னதாக நினைவு. நல்லொழுக்கமுள்ளவர். புகைக்கும் பழக்கம் இல்லாதவர்; பொடி போடாதவர். சில சமயம் வெற்றிலை பாக்கு போட்டு மென்று கொண்டு மகிழ்வார். அப்போது நம்மாழ்வாரிடம் எனக்குப் பழக்கம் இல்லாவிடினும் இப்போது அவர் கூறிய 'தின்னும் வெற்றிலை'

என்ற தொடர் (திருவாய் 6.7:1)நினைவிற்கு வருகின்றது. இதுவே அவர் நுகர்ந்த 'போக்கியம்' ஆகும். எளிய முறையில் சிக்கனமாக வாழ்ந்த குடும்பம்; அளவறிந்து வாழ்ந்தமையால்—ஆசைகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு வாழ்ந்தமையால்—பணத்தட்டுப்பாடு இன்றி வாழ்ந்து வந்ததைக் கண்டு மகிழ்ந்தேன். சவரன்களை ஏறின விலைக்கு விற்று ஒரு சில ஏக்கர்கள் நஞ்சை நிலத்தைத் தஞ்சை மாவட்டத்தில் வாங்கியிருந்ததாகவும் அறிந்தேன்.

1958-இல் திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளை அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராக இருந்த சமயம். அப்பொழுது மூன்று அறிவியல் நூல்களை வெளியிட்டுப் புகழ் பெற்றிருந்தேன். இவற்றுள் மானிட உடல் (பட்டப் படிப்புக்கு ஏற்றது) 'அணுக் கருபெளதிகம்' (பட்டப் படிப்பிறகு இதுவும் ஏற்றது) என்ற இரண்டும் மொழி பெயர்ப்பு நூல்கள். இவற்றுள் பின்னது சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றது. 'அணுவின் ஆக்கம்' என்பது சொந்தப் படைப்பு. இவை தவிர, தமிழ் பயிற்றும் முறை, அறிவியல் பயிற்றும் முறை என்ற இரண்டு நூல்களையும் (பயிற்சி கல்லூரிக்கு ஏற்றவை) வெளியிட்டிருந்தேன். இவை இரண்டும் என் சொந்தப் படைப்புகள். இவற்றாலும் எனக்குப் புகழ் வந்தது. காரணம், இவை முதன் முதலாக என் படைப்புகளாக இருந்தமைபற்றியே துணைவேந்தர் தி. மூ. நாராயணசாமி பிள்ளை, P. U. C. வகுப்பிற்கு அறிவியலைத் தமிழில் கற்பிக்கும் முறைகளை ஆராயவும் இதற்குரிய கலைச் சொற்களைத் தொகுக்கவும் ஓர் ஆறுவாரக் கருத்தரங்கிற்கு ஏற்பாடு செய்து என்னை அதற்குத் தலைவராக நியமித்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் P. U. C. வகுப்பிற்குக் கற்பிக்கும் பலதுறை அறிவியல் ஆசிரியர்களும் இதில் கட்டாயமாகக் கலந்து கொள்ளவும் ஏற்பாடு செய்திருந்தார். நான் 42 நாட்கள்

பல்கலைக் கழக விருந்தினர் விடுதியில் விருந்தினனாகத் தங்கியிருந்தேன்.

நாடோறும் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு காலை எட்டு மணி சுமாருக்குத் துணைவேந்தர் இல்லத்திற்குச் சென்று அவரிடம் நாட்டு நடப்புகள், இலக்கிய ஆராய்ச்சிகள், புதிய உலகில் வாழ்பவர்கட்கு அறிவியலின் அடிப்படைக் கருத்துகளைஅறிந்து கொள்ளும் இன்றியமையாமை போன்ற பல்வேறு விஷயங்களைப் பற்றிய பேச்சு வந்தது. தமிழைப் பற்றிப் பேசிக் கொண் டிருந்த போது திரு உலக ஊழியனாரின் நினைவு வந்தது. அவரது ஆழமான பலமைபற்றியும், அவர் நாட்டார் மாணவர் என்றும், சேலம் மாவட்டம் கழக உயர் நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்றிய இவரை, இவரது தகுதியறிந்து சேலம் நகராட்சியின் கீழுள்ள கல்லூரியின் முதல்வர் திரு. இராமசாமி கவுண்டர் தன் கல்லூரியில் பேராசிரியராக அமர்த்திக் கொண்டார் என்று கூறினேன். தொடர்ந்து இத்தகையவர் இப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் வாய்ப்பு பெற்றால் பல்கலைக் கழகத்தின் பேரும் புகழும் மேலும் உயரக் காரணமாக அமையும் என்றும் கூறினேன். பிறகு நான் இதனை மறந்தே போய் விட்டேன். திரு. ஊழியர் தொடர்பும் அறுவதற்கு நான் திருப்பதி சென்றமையே (1960) காரணமாக அமைந்து விட்டது.

1965 ஏப்ரல் முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலத்தில் பேச்சு மொழிப் படிப்பு (Spoken language corse) நடத்தப் பெற்றது. இது மூன்று மாதப் படிப்பு. பள்ளியிறுதித் தேர்வு முடிந்தவுடன் விடுமுறையில் மாணாக்கர்கள் இப்படிப்பில் சேரலாம். இதில் என் மகன் இராமலிங்கத்தைச் சேர்ப்பதற்காக வந்தேன். அச்சமயத்தில் தமிழ்த் துறைக்குச் சென்றேன்; அப்போது திரு. ஊழியனாரை அங்குக் கண்டேன்; வியந்து

போனேன். திரு. தி.மூ. நாராயணசாமி பிள்ளை (துணை வேந்தர்) கடிதம் எழுதி இங்கு வருமாறு அழைத்ததாகவும் அதனால்தான் வந்து பணியேற்றதாகவும் கூறினார். நான்கைந்து ஆண்டுகட்குமுன் நான் இங்கு இவரை நியமிப்பது பற்றிப் பேசிக் கொண்டிருந்ததைக் கூறினேன். 'காக்கை உட்கார்ந்து பனம் பழம் விழுந்தது போலா'யிற்று (காகதாளீய நியாயம்) என்றேன். கொடுக்கின்ற தெய்வ மிருந்தால் கூரையைப் பொத்துக் கொண்டும் கொடுத்து விடும் என்ற பேச்சில் வழங்கும் பழமொழியை நினைத்துக் கொண்டேன்.

தம் வீட்டில் பகலுணவு கொள்ளுமாறு அழைத்தார் ஊழியர். நான் பையனைப் பல்கலைக் கழகத்திலும் உணவு விடுதியிலும் சேர்த்து விட்டு வருவதாகக் கூறினேன். வீட்டு முகவரி கொடுத்துவிட்டு முன்னதாக வீடு சென்றார். சிதம்பரத்தில் வீடு. என் வேலைகளை முடித்துக் கொண்டு சுமார் 11—30க்கு அவர் வீடு சென்றேன். நான் சென்ற போது வீட்டிற்குள் கணவன்—மனைவிக்குள் ஏதோ வாக்குவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ''ஏ பிள்ளை. (இப்படித் தான் அவர் மனைவியை அழைப்பது) இன்றைக்கு நம் சண்டை வேண்டாம். நம்முடையதுறையூர் ரெட்டியார் வருகின்றார்'' என்று ஊழியனார் சொன்னது எனக்குக் கேட்டது. அந்த அம்மையாரும் ''ரொம்ப ஓட்டாதே. ரெட்டியார் நம்மவர். நம்முடைய குடும்பச் சண்டையை அவர் நன்கு அறிவார். எல்லோர் வீட்டிலும் அடிக்கடி நடப்பது தானே.'' என்று சொல்லுவதும் கேட்டது.

நான் வந்ததைத் தெரிவிக்கும் பாங்கில் ஒலி எழுப்பினேன். 'ரெட்டியார் வந்து விட்டார்' என்று சொல்லிக் கொண்டே ஊழியரும் வெளியே வந்தார். அம்மையாரும் தொடர்ந்து வந்து என்னை வரவேற்றார். சிறிது நேரம் பேசிக்கொண்டிந்தோம். எப்படியோ

கணவன்—மனைவி சண்டை ஓய்ந்துபோய் விட்டது. கணவன்—மனைவியின் ஊடல் விருந்து வரும்போது தீர்ந்துவிடும் என்று சங்க இலக்கிய நூல்களில் படித்ததை நினைத்துக் கொண்டேன். அம்மையார் நன்கு கற்றவர் அல்லர். பண்படாத நாட்டுப்புற அன்பை அவரிடம் கண்டு மகிழ்ந்தேன். பதினைந்து ஆண்டுகட்குமுன் சேலத்தில் இவர் இல்லத்தில் கண்ட சூழ்நிலையை மீண்டும் சிதம்பரத்தில் கண்டேன். இருவர் போக்கிலும் வேறுபாடு அதிகம் காணவில்லை. அதே அன்பு நிறைந்த குடும்பம்தான்.

சேலத்தில் பார்த்த போது மூன்று வயதுடைய மகளைப் பார்த்தேன். அப்போது இவருக்கு மகன் இல்லை. சிதம்பரத்தில் பார்த்தபோது பத்து வயதுடைய மகன் இருந்தான். 'ஆடவல்லான் வேங்கடவரதன்' என்பது இவனுடைய திருப்பெயர். ஆடவல்லான் சோழனையும் வேங்கடம் தம் ஆசிரியர் வேங்கடசாமி நாட்டாரையும் வரதன் காஞ்சி வரதராசனையும் நினைவு கூரும் வகையில் பெயரிட்டதாகக் கூறினார் ஊழியர். இப்போது மகளுக்குத் திருமணம் ஆகி இருந்தது. பெற்றோர் வீட்டிற்கு வந்திருந்தாள். அவள் முகம் சரியாக இல்லை; பேச்சும் வித்தியாசமாக இருந்தது. ஊழியரே சொன்னார்.'' 'இவள் எனக்கு ஒரே மகள். பத்தாவதுவரை படித்தவள். செல்லமாக வளர்த்தேன். சொந்தத்தில் திருமணம் புரிவித்தேன். என் போதாத காலம் இவளுக்குச் சித்தபிரமை ஏற்பட்டு விட்டது. இஃது எப்போது தீருமோ?'' என்று சொல்லிக் கண்ணீர் விட்டார். அம்மையாரும் அருகில் நின்று கொண்டிருந்தார். அவரும் ''இவளுக்கு இறைவன் விட்ட வழி இதுதான் போலும். தில்லைச் சிற்றம்பலவன் எங்கள் வீட்டில் இப்படி ஒரு கூத்தை நடத்துகின்றான். இந்தக் கூத்தை அந்தக் கூத்தாடிதான் நிறுத்தவேண்டும்'' என்று தாரை தரையாகக் கண்ணீர் வடித்தார். ''பையன் ஆறாவது படிக்கின்றான். இவன் படித்து ஆளாகி வயோதிக காலத்தில் எங்களைக் காக்க வேண்டும்.

இறைவன் இவனுக்கு என்ன வழிகாட்டுவானோ?'' என்று மேலும் கூறினார்.

சற்று நேரம் கழிந்ததும் வெளியில் சென்றிருந்த மகனும் வந்து சேர்ந்தான். எல்லோரும் பகல் உணவு கொண்டோம். அம்மையார் அன்பாக உபசரித்தார். பண்படாத பண்பில் அன்பு நெகிழ்ந்தோடுவதைக் கண்டேன். பின்னர் சிறிது நேரம் உரையாடினோம். விடைபெற்றுக்கொண்டு அண்ணாமலைநகர் திரும்பினேன். என் மகன் ஆங்கிலத்தில் பேசுவதைக் கற்றுக் கொள்வதற்கு நல்ல சூழ்நிலை அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். அன்றிரவே காரைக் குடி திரும்பினேன்.

சில ஆண்டுகள் கழிந்தன. ஊழியனார் மறைந்த செய்தி என் காதுக்கு எட்டியது. மிகவும் வருந்தினேன். இவரைத் தில்லையில் கண்டதுதான் கடைசிமுறை.

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்து இவ்வுலகு.

என்ற குறளை (குறள்—336) நினைத்துக் கொண்டேன். நிலையாமையின் 'பெருமையை' இக்குறளிலுள்ள 'பெருமை' என்ற சொல் எவ்வளவு அற்புதமாகக் காட்டுகின்றது!

# 12. தலைமையாசிரியர் பி. ஆர். சுப்பிரமணிய பிள்ளை

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினை
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்துகி டப்பதே[1]

இஃது அப்பர்தேவாரத்தில் புகழ்வாய்ந்த பாடல். அப்பர் பெருமானின் குறிக்கோளை நூற்பாப்போல் விளக்குவது. இத்திருக்குறுந்தொகையில் இறைவன் கடமையையும் தன் நிலையையும் அற்புதமாகத் தெளிவு படுத்துகின்றார் சொல் வேந்தர். இறைவனின் கடமை அடியாரைத் தாங்குதல்; அடியாரின் பொறுப்பு பணி செய்து கிடத்தல். இன்று நடைபெறுவது மக்களாட்சி. மக்களே இறைநிலையிலுள்ளனர். அனைத்து அரசு நிறுவனங்களிலும் பணியாற்றுவோருக்கு மக்கள்தாம் தேர்ந்தெடுத்த சட்ட மன்றங்கள்மூலம் நிதி ஒதுக்கிப் படி அளக்கின்றனர். நல்ல ஊதியம் பெறுகின்றனர் அரசுப் பணியாளர்கள் (Public Servants). தாம் சமூகப் பணியாளர் என்ற உணர்ச்சியுடன் பணியாற்ற வேண்டும். எக்காரணத்தாலும் ஆணவம் மிகுந்து தாம் 'தலைவன்' (Master) என்ற எண்ணமே அவர்களிடம் எழக்கூடாது. அலுவலகத்திற்குத் தேடி வரும் ஓர் ஏழையிடம் கூட

1. அப்பர் தேவாரம் 5:19:9 (கடம்பூர்த் தேவாரம்.)

மரியாதையுடன் நடந்து உதவவேண்டும். இன்றைய நிலை என்ன? அமைச்சர் முதல் கடையூழியர் வரை எப்படி நடந்து கொள்கின்றனர்? அப்பர் பெருமானின் மனநிலை-என் கடன் பணி செய்து கிடப்பதே என்றநிலை—அவர்கள் மனத்தில் இருக்க வேண்டும். இருக்குமா? கயிலை நாதர் தான் இவர்களைத் தடுத்து,—அவரவர்கள் செய்து வரும் அடாத செயல்களுக்கேற்ப—சில சங்கடங்களை அநுபவிக்கு மாறு செய்து, பின்னர் ஆட்கொள்ள வேண்டும்.

திரு பி. ஆர். சுப்பிரமணியம் அப்பர் பெருமானின் கொள்கையை அப்படியே பின்பற்றுபவர்; நூற்றுக்கு நூறு விழுக்காடு கடைப்பிடிப்பவர். இக்கால நிலைக்குச் சிறிதும் ஒவ்வாத பைத்தியம். 1950-60 இடையில் பணியிலேயே காலமானவர். பணியேற்றநாள் தொட்டு (1941) பணிக்காலம் முடியும் வரையிலும் அப்பர் கொள்கையைக் கடைப்பிடித்த பைத்தியங்களுள் அடியேனும் ஒருவன். பணியின் பயனால், சேவையின் கனத்தால், ஒல்லும் வகையெல்லாம் சமூகப் பணி செய்ய என் ஆயுளையும் நீட்டித்துவருகின்றான்இந்தஇறைவன், இரண்டுபைத்தியங் களையும் இறைவன் ஓர் ஒன்பதாண்டுக்காலம் (1941-50) இணைபிரியாத நண்பர்களாக்கி வைத்திருந்தான். நான் துறையூர் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியன் அவர்; நாமக்கல் கழக உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர். எங்கள் இருப்பு 36 கல் தொலைவினால் பிரிக்கப் பெற்றிருந்தாலும் உள்ளத்தால் நெருங்கியிருந்தோம்; செயலாலும் ஒன்றுபட்டிருந்தோம். காரணம், எங்கள்இருவர் கொள்கையும் ஒன்றுபட்டிருந்ததால். ஏன்? ஒன்றேயாக இருந்ததால் என்று சொல்வதில் மிகை இல்லை. இந்த ஒன்பதாண்டுக் காலத்தில் நேரிட்ட நிகழ்ச்சிகள் 'மலரும் நினைவுகளாக' வெளிப்படுகின்றன. இன்பத்திலும் துன்பத்திலும் நாங்கள் பகிர்ந்து கொண்ட முறைகளை இவை விளக்குவானவாக அமைகின்றன.

திரு P.R.சுப்பிரமணியம் ஆத்தூர் (சேலம் மாவட்டம்) கழக உயர் நிலைப்பள்ளியில் பணியாற்றிய காலத்தில் எனக்கும் அவருக்கும் அதிகத் தொடர்பு இல்லை. ஆனால் அங்குத் தமிழாசிரியராகப் பணியாற்றிய திரு அ. சாம்பசிவம் என்பவர்மூலம் திரு.சுப்பிரமணியத்தின் திறமை, நேர்மை, காலத்தைப் பொன்னெனப் போற்றிய சீர்மை, மாணவர்கள்பால் காட்டிவரும் அன்பு, பாசம் முதலியவை பற்றிக் கேள்வியுற்றிருந்தேன். அப்போது சேலம் மாவட்டம் கல்வி அதிகாரியாக இருந்தவர் திரு நெ.து. சுந்தரவடிவேலு அவர்கள். இவரும் சுறுசுறுப்பும், திறமையும், ஆசியர்கள் பால் காட்டிய பரிவு, நேசம், பாசம் இவையும் சொல்லில் அடங்கா. இத்தகைய கல்வியதிகாரி திருச்சி மாவட்டத்திற்கு மாற்றப்படாது போனது என் தவக்குறைவே எனக் கருதுகின்றேன். ஆனால் திரு சாம்பசிவம் பிள்ளை என்ற கல்வியதிகாரியிடம் இவை அனைத்தையும் பெற்றேன்; என் திறமை, நேர்மை, முதலியவற்றைப் பாராட்டும் பேறும்பெற்றேன். திருசுப்பிரமணியமும்திரு. சாம்பசிவமும் மிக நெருங்கிப் பழகுபவர்கள். பிற்காலத்தில் ஒருமுறை (1952—57) சென்னைச் சட்டமன்றப் பேரவைக்கு காங்கிரஸ் கட்சியின் சார்பாக உறுப்பினராகவும், (MLA) அதன் பிறகு இரண்டாண்டு இடைவெளி விட்டு காங்கிரஸ் கட்சியின் சார்பில் சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும் (MLC) தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

மாணவர் நலன்: நாமக்கல் உயர்நிலைப் பள்ளிக்குத் தலைமையாசிரியராக மாற்றப்பட்ட பிறகுதான் திரு பி. ஆர். சுப்பிரமணியத்திக்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது: திரு சுப்பிரமணியம் ஆத்தூரில் பணியாற்றிய பொழுது திருக்குலத்து வகுப்பைச் (அரிசன்) சார்ந்த பிச்சுமணி என்ற மாணவன்பால்அதிக பாசத்தைக் காட்டினார்; பிச்சுமணி அடக்க ஒடுக்கமுள்ள மாணவன், படிப்பில் மிகவும் முன்னேற்றம் காட்டியவன். வகுப்பில்

முதல் மாணவனாகவும் தேர்ச்சி பெற்று வந்தவன். திரு. சுப்பிரமணியம் ஆத்தூரிலிருந்த காலத்திலேயே ஏதாவது உதவி தருமாறு கடிதத்துடன் பிச்சுமணியை என்பால் அனுப்புவது வழக்கம். இதனால் மாணவர்கள் பால்—குறிப்பாக ஏழை மாணவர்கள்பால்—நான் காட்டி வந்த அன்பு, பாசம் முதலியவற்றை கேள்வியுற்றிருந்தமை யால்தான் திரு. சுப்பிரமணியம் பிச்சுமணியை என்னிடம் அனுப்பினார் என்று ஊகிக்கின்றேன். நான் கல்லூரியில் படித்த காலத்திலிருந்து என்பால் பரிவும் பாசமும் காட்டி வந்த திரு. சாம்பசிவமே என்னைப் பற்றித் திரு. சுப்பிரமணியத்திடம் பேசியிருக்க வேண்டும் என்றும் கருதுகின்றேன். அந்தக் காலத்தில் திரு. சுப்பிரமணியம் சட்டப்படி நல்ல ஊதியம் பெற்றுவந்தவர். நானோ தனியார் பள்ளியில் குறைந்த ஊதியத்துடன் பணியாற்றி வந்தவன். பிச்சுமணிக்கு நான் என்ன செய்ய முடியும்? தவிர, பிச்சுமணி ஆண்டுதோறும் ஜூன்—ஜூலை மாதங் களில் தான் என்னிடம் வருவான்.

உதவ வேண்டும் என்ற உந்தல் என் உள்ளத்தில் இருந் தமையால் என் மனம் அற்புதமாகச் செயற்பட்டது. அக் காலத்தில் பாடநூல்கள் பதிப்பித்து வினியோகம் செய்யும் பொறுப்பு தனியார் நிறுவனங்களிடம் இருந்து வந்தது. எத்தனையோ நிறுவனங்கள் சார்பாக ஏஜண்டுகள் வந்து எல்லாப் பாடங்களிலும் தாம் பதிப்பித்த பாடநூல்களை மாதிரிக்காகக் கொடுத்துப்போவது வழக்கம். நானும் கம்பெனிக்கு ஒரு பாடநூலாகத் தேர்ந்தெடுப்பதை வழக்க மாகக் கொண்டிருந்தேன். இவற்றைத் தனியாக ஒரு சிற்றறையில் சேமித்து வைத்திருந்தேன். பிச்சுமணியை அந்த அறைக்கு அனுப்பி அவனுக்குப் பாடமாகவுள்ள பாடநூல்களைப் பொறுக்கி எடுத்துக் கொள்ளுமாறு பணிப்பேன். இம்முறையில் அவனுக்கு ரூ. 20 முதல் ரூ. 25/- வரை உதவுவதாக இருக்கும். என் இல்லத்தில் உணவும் படைத்து பேருந்துக்குரியகட்டணத்தையும் தந்து

அவனைத் திருப்பியனுப்புவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். திரு. சுப்பிரமணியம் நாமக்கல்லுக்கு மாற்றப்பட்ட பிறகும் பிச்சுமணி வழக்கமாக என்னிடம் வந்து கொண்டிருந்தான். என் உதவியும் தொடர்ந்து அவனுக்குக் கிடைத்தது. மாணவர்க்குத் தேவையான குறிப்பேடுகளையும் குறைந்த விலைக்கு அரசுமூலம்தாள்கள் வாங்கித் தயாரித்து வழங்கும் முறையும் பள்ளியில் இருந்து வந்தது. சந்தையில் தாள் கிடைக்காத காலம் அது. இந்தப் பணி திரு V. S. உமாபதி, திரு. T. S.இராமய்யா (இடைநிலை ஆசிரியர்கள்) பொறுப்பிலிருந்து வந்தது. அவர்களிடம் சொல்லி பிச்சுமணிக்குத் தேவையான குறிப்பேடுகளை பள்ளிக்கணக்கில் இலவசமாகவும் வழங்கச் செய்தேன். பிச்சுமணி பள்ளியிறுதித் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்றான். கல்லூரியிலும் முதல் நிலை. பொறியியல் கல்லூரியில் சேர்ந்து B.E. பட்டம் பெற்று தில்லி மாநகரில் நடுவண் அரசுப் பணியில் அமர்ந்து நல்ல ஊதியமும் பெற்றுக்கொண்டிருந்தான். அரசு மூலம் அமெரிக்காவுக்கும் அனுப்பப் பெற்றான். இப்போது பணத்தில் மிதக்கின்றான். பொன் மனச்செம்மல் எம். ஜி. ஆர். அமெரிக்காவுக்குச் செல்லும்போதெல்லாம் அவரிடம் தொடர்பு கொண்டிருப்பதாகவும் செவி வழிச் செய்தி என்னை எட்டுகிறது! இப்போது ஓய்வு பெற்று ஏதாவது சுயத்தொழிலில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது என் கணிப்பு. இப்படி நானும் பிள்ளைஅவர்களும் எத்தனையோ பேர்கட்கு உதவியிருக்கின்றோம்.

நாமக்கல் வந்த பிறகு திரு. பி. ஆர் சுப்பிரமணியமும் நானும் அடிக்கடிச் சந்திக்கும் வாய்ப்புகள் இருந்தன. கடிதத் தொடர்புகளும் அதிகமாக இருந்து வந்தன. திரு. சுப்பிரமணியம் நாமக்கல்லில் இருந்தவரை பள்ளியிறுதித் தேர்வு மாணவர்க்காக ஆங்கிலம்—2 தாள்கள், பொதுக்கணிதம், சிறப்புக் கணிதம் (Optional) சமூக இயல், பொது அறிவியல் பாடங்களில் நான்கு மாதிரித்

தாள்கள் அவர்மூலம் தயார்செய்யப்பெற்றன; துறையூரில் பொதுக் கணிதம், சிறப்புக் கணிதம், பொது அறிவியல் இவை பற்றிய மாதிரித்தாள்கள் என்னால் தயார் செய்யப் பெற்றன. இவற்றை அச்சிடும் பொறுப்பை நான் மேற் கொண்டிருந்தேன். கணிதம், அறிவியல் இவற்றைக் கற்பிப்பதில் சிறந்த வல்லுநன் என்ற பெயர் பெற்றிருந்தவ னாதலால் எனக்கு இவற்றில் பொறுப்புகள் தரப்பெற்றன. எங்கட்கு 100 படிகள் தேவைப்பட்டன; நாமக்கல் பள்ளிக்கு 200 படிகள் தேவைப்பட்டன. செலவை 1:2 விகிதத்தில் பகிர்ந்துகொண்டோம். சனவரி, பிப்பிரவரியில் இத் தேர்வுகள் நடத்தப்பெற்றன. இத்தேர்வுகளினால் மாணவர்களிடம் நல்ல முன்னேற்றம் கண்டோம். பள்ளியிறுதித் தேர்வில் இரண்டு பள்ளிகளிலும் மாணவர் கள் அதிகமான மதிப்பெண்கள் பெற்றதைக் கண்டு மகிழ்ந் தோம்.

மாவட்ட ஆசிரியுர் மாநாடு: 1949-பிப்ரவரி என நினைக்கின்றேன். சேலம் மாவட்ட ஆசிரியர் சங்க மாநாடு ஒன்று நாமக்கல்லில் நடைபெற்றது. திரு. சுப்பிரமணியம் தான் இப் பொறுப்பை ஏற்று நடத்தினார். சுமார் 12 ஆசிரியர்கள் மிகச் சிறப்புடன் உதவியதால் மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அந்த மாநாட்டில் ஆசிரியர்கள் திரு. சுப்பிரமணியத்திடம் எவ்வளவு அன்பு காட்டினார் கள் என்பதை நேரில் கண்டேன். இதனால் திரு. சுப்பிரமணியம் ஆசிரியர்களிடம் எப்படிப் பழகி யிருக்கவேண்டும் என்பதையும் கணிக்க முடிந்தது; இந்த மாநாட்டில் சிறப்புச் சொற்பொழிவாற்றியவர் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள். சென்னை விவேகாநந்தா கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகப் பெரும் புகழுடன் பணியாற்றியவர். பள்ளி நிர்வாகத் திடம் ஏற்பட்ட கருத்து வேற்றுமையினால் பதவியைத் துறந்து 'சிந்தனை' என்ற மாத இலக்கிய இதழின் ஆசிரிய ராக இருந்து பலரைச் சிந்திக்கவைத்தவர். நான் துறையூரி

விருந்த போது இந்த இதழில் வெளியான கட்டுரைகளைப் படித்து அநுபவித்து மகிழ்ந்ததுண்டு. பேராசிரியர் இராகவன் அவர்களின் ஆழ்ந்த தமிழ், ஆங்கிலப் புலமைகளை நன்கு அறிந்தவராதலால் திரு. பி.ஆர். சுப்பிரமணியம் அவர்கள் பேராசிரியர் இராகவனை வரவழைத்து மாவட்ட ஆசிரியர்கட்கு அறிமுகம் செய்து வைத்த பெருமையை இன்றும் (28-10-1989) நினைந்து நினைந்து மகிழ்கின்றேன். இந்த மாநாட்டிற்கு நானும் சென்றிருந்தேன். என்னையும் திரு. சுப்பிரமணியம் பேராசிரியர் இராகவனுக்கு அறிமுகம் செய்து வைத்தார். இக் காலத்தில் போடப்பெற்ற அறிமுக விதை நான் காரைக்குடிக்குச் சென்ற பிறகு (1950-60) தழைத்து வளர்ந்தது; அருகு போலும் வேரூன்றியது. இந்த மாநாட்டில் எனக்குக் கிடைத்த செல்வம் பல ஆசிரியர்களின் நட்பு; தோழமை.

பள்ளிக் குடும்பங்கள் : நாமக்கல் கழக உயர் நிலைப் பள்ளி, துறையூர் சமீந்தார் உயர்நிலைப் பள்ளி இவை இரண்டும் அக்காலத்தில் முறையே திரு. சுப்பிரமணியமும் நானும் குடும்பத் தலைவர்களாக இருந்தவரை நெருங்கி இணைந்த குடும்பங்களாகத் திகழ்ந்தன. பள்ளி ஆண்டு விழாக்களை ''பிரம்மோற்சவம்'' (பெருவிழா) போல் நடத்தி வந்தோம். நாமக்கல் விழாவிற்குப் போகும்போது நானும் சில ஆசிரியர்களும் சென்று பெருமை பெறுவோம். துறையூர் விழாவிற்குத் திரு. சுப்பிரமணியமும் சில ஆசிரியர்களும் வந்து எங்களைப் பெருமைப்படுத்துவார்கள். இக்காலத்தில் பெரிய மாநாட்டுப் பந்தலில் பிரமுகர்கட்கு இட ஒதுக்கீட்டைக் காட்டும் போக்கில் பெயரட்டைகளைப் பொருத்துவதுபோல், நானும் 'சிறப்பு விருந்தினர்கள்', 'பெற்றோர்கள்', 'மாணவர்கள்', 'மாணவிகள்', 'விழாச் செயலகம்' என்ற பெயர்களை வெள்ளைத்தாள் ஒட்டிய அட்டைகளில் மாணவர்களைக் கொண்டே நல்ல வண்ணங்களில் அழகாக எழுதச் செய்து அவற்றை விழாக் கொட்டகையில் தூண்களில்—

பொருத்தி இட ஒதுக்கீட்டை குறிப்பிடுவோம். இத்தகைய விழாக்களில் மாணவர்களின் பங்குதான் அதிகமாக இருக்கும். திரு ஈய்ங்கோய் மலையில் குடியிருந்த டாக்டர் T.S.S இராஜன் (முன்னாள் மக்கள்நலவாழ்வு அமைச்சர்) திருச்சி பிரபல வழக்குரைஞர் திரு கயிலை அனந்தர் (சோமசுந்தரம் பிள்ளை), மாவட்ட நீதிபதி (District Munsif) திரு சாரங்கபாணி, இவர்கள் தலைவராகவும், திரு மு. வ ர த ர ா ச ன், திரு வே.வேங்கடராஜுலு ரெட்டியார் (பன்மொழிப் புலவர்), திரு சி.இலக்குவனார் போன்றவர்கள் சிறப்புச் சொற்பொழிவாளர்களாகவும் அமைந்த ஆண்டு விழாக்களுக்குத் திரு சுப்பிரமணியம் அவர்கள் வந்து சிறப்பித்தது, என் குடிலில் விருந்துண்டது ஆகியவை இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளது. நான் நாமக்கல் விழாக்களுக்குப் போகும்போது அந்த விழாக்களில் தலைமை வகித்தவர்கள், சிறப்புச் சொற் பொழிவாளர்கள், ஆகியோரை நினைவு கூர முடிய வில்லை.

ஒரு மாணவனைத் திருத்துதல் : உயர்நிலைப் பள்ளி மேல் வகுப்புகளில் பயிலும் மாணாக்கர்களில் பெரும் பாலோர் முன்—குமரப் பருவத்தைச் (Pre–adolescent) சேர்ந்தவர்கள். இப்பருவத்தில் இனப்பெருக்க உறுப்பு களின் தொழில் விரிவடைகின்றது. அழகிலும் வனப்பிலும் கவர்ச்சியிலும் இப்பருவத்தினர் ஈடுபடுகின்றனர். சிலரிடம் எதிர்பால் கவர்ச்சியும் தோன்றுவதுண்டு. இந்நிலையில் இத்தகைய மாணவர்களிடம் ஆசிரியர்கள் தனிக்கவனம் செலுத்த வேண்டும். பெரிய இடத்துப் பிள்ளைகளிடம் மனக்கோளாறுகளும், புரட்சி மனப்பான்மையும் தோன்ற லாம். திரு சுப்பிரமணியத்தின் முன்னர் இத்தகைய பிரச்சினையுள்ள மாணாக்கன் ஒருவன் கொண்டு வரப் பெற்றான். பெண்களைப் பரிகசித்தல், கிண்டல் செய்தல் போன்ற செயல் மேட்டுக் குடியைச் சார்ந்த ஒரு மாணவ னிடம் காணப்பட்டது. இதற்கு உட்பட்ட பெண்பிள்ளை

இதனைத் தன் தமையனிடம் சொன்னாள். பள்ளி மாணாக்கர்கள் வீடு திரும்பும் போது அம் மாணாக்கனையும் அடையாளம் காட்டினாள். அவனுக்குப் பாடம் புகட்டுவதற்குத் தயாராகச் செருப்பும் கையுமாகப் புறச் சுவருக்கு வெளியே காத்திருந்த அப் பெண்பிள்ளையின் தமையன் (தன் முரட்டுத் தன்மையை முழுமையாகக் காட்டும் நிலையில்) அம்மாணாக்கனின் குடுமியையும் கைகளையும் எட்டிப் பிடித்துக் கொண்டான். தன் கைகளிலுள்ள செருப்பினால் நையப் புடைத்தான். சுமார் ஒன்றரை ஃபர்லாங்க் தொலைவிலுள்ள வீடுவரையிலும் செருப்படிகளையும் அறிவுரைகளையும் மாறிமாறி வழங்கிய வண்ணம் அம் மாணவனை வீடு வரையிலும் நடத்திச் சென்று தந்தையிடம், ‘பெரியீர், நும் மகனைக் கவனத்துடன் வளர்த்துவாருங்கள். நெறிபிறழ்ந்தநடத்தையைத் தவிர்க்க வழி காணுங்கள்’ என்று கூறிவிட்டு அவருடைய மறு மொழிக்குக் காத்திராமல் வேகமாகத் திரும்பி விட்டான்.

இம்மாணவனின் தந்தை அதிர்ந்து போனார். பெண் பிள்ளையும் பெரிய இடத்தைச் சார்ந்தவள் என்பதையும் அறிந்து கொண்டார். செயலற்றுப் போனார். இவருக்கு அரசியல் செல்வாக்கு உண்டு. அப்பொழுது மாண்புமிகு கல்வியமைச்சராக இருந்தவர் திரு. தி.சு. அவினாசிலிங்கம் செட்டியாரவர்கள். மாவட்டப் பள்ளிகளின் பொறுப்பு (தேர்தல் நடைபெறாததால்) ஒரு தனி அலுவலர் கையிலிருந்தது. பையனின் தந்தை ஏதோ ஓர் அலுவல் நிமித்தம் கரூரில் இருக்க நேரிடுகின்றது. மாணவனின் அடிபட்ட நிலை தலைமையாசிரியர் காதுக்கும் எட்டி விடுகின்றது. இப்படிப் பல நிகழ்ச்சிகள். எல்லாம் பள்ளி ஒழுங்குமுறையை எதிர்ப்பவை.

பையன் பள்ளியிறுதித் தேர்வில் தவறிவிட்டான். தேர்ச்சி பெற்றவர்கள், தேர்ச்சி பெறாதவர்கள் எல்லோரையுமே இடமாற்றுச் சான்றிதழ்களுடன்

வெளியே அனுப்பப் பெறுகின்றனர். இந்தக் குறிப்பிட்ட மாணவன் மீண்டும் பள்ளியில் சேர விரும்புகின்றான். தலைமையாசிரியர் தேர்ச்சியடையாத மாணவர்களை மீண்டும் சேர்த்துக் கொள்வதில்லை எனக் கூறுகின்றார். செல்வாக்குள்ள தந்தை-காங்கிரஸ் கட்சியில் நாடளாவிய புகழ்பெற்றவர்—மாண்புமிகு கல்வி அமைச்சருக்கே இது குறித்துக் கடிதம் எழுதுகின்றார். இக்கடிதம் மாவட்டத் தனி அதிகாரிக்கு அனுப்பப்பெறுகின்றது. இந்த அதிகாரி நாமக்கல்லுக்கு முகாம் போடுகின்றார். பயணியர் விடுதி யில் தங்கிக் கொண்டு தலைமையாசிரியருக்குச் சொல்லி யனுப்புகின்றார். பையனைச் சேர்த்துக் கொள்ளுமாறு வாய்மூலம் ஆணையிடுகின்றார் தனி அதிகாரி. தலைமை யாசிரியர் பையனுடைய திருவிளையாடல்களை எடுத்துக் கூறி, இப்படிப்பட்ட பையனை, அதுவும் அதிகார பலத் தால், சேர்த்துக் கொண்டால் பள்ளி ஒழுங்கு முறை மேலும் கெடுவதற்கு வாய்ப்பு நேரிடும் என்பதை விளக்கு கின்றார். ஆகவே, பையனைச் சேர்த்துக் கொள்வதில்லை என்று கூறி விடுகின்றார். அதிகாரி மேலும் மேலும் வற்புறுத்த, பெற்றோர் அமைச்சருக்கு எழுதிய கடிதத் தின்மீது பையனைச் சேர்த்துக் கொள்ள எழுத்து மூலம் ஆணை பிறப்பித்தால் சேர்த்துக் கொள்ள யோசிக்கலாம் என்று தலைமையாசிரியர் கூறுகின்றார். அதிகாரிக்கு ஆணை பிறப்பிக்கும் துணிவு இல்லை. விவரம் அறிந்த பிறகு எப்படித் துணிவு பிறக்கும்? செயலாற்ற முடியாமல் வாளா திரும்பி விடுகின்றார்.

அடுத்து, ஊரிலுள்ள சில பிரமுகர்கள் பையனை எப்படியாவது சேர்த்துக் கொள்ளுமாறுவேண்டுகின்றனர். இம்மாதிரி பரிந்துரைகட்கு இடம் அளித்தால் பள்ளி திறம் பட இயங்குவதற்குக் குந்தகம் விளையும் என்று கூறி, பையனே தன்னைத் தனிமையாகச் சந்தித்துத் தான் இது காறும்பள்ளியின் ஒழுங்குமுறைக்குமாறாகநடந்துகொண்ட தற்கு வருந்துவதாகவும் இனி பள்ளி ஒழுங்கு முறைக்குக்

கட்டுப்பட்டு நடப்பதற்கு உறுதி கூறுவதாகவும் அப்படி ஏதாவது பள்ளி நெறிமுறைகட்கு மீறி நடந்து கொண்டால் பள்ளித் தலைமையாசிரியர் தன்னை பள்ளியிலிருந்து வெளியேற்றுவதற்குத் தான் ஒப்புவதாகவும் எழுதிக் கொடுத்தால் பையனுக்கு இடந்தரலாம் என்று அவரிகளிடம் தெரிவிக்கின்றார். ஒரு நாள் பையன் தனிமையில் சந்தித்து இதைச் செய்ய, பையன் சேர்த்துக் கொள்ளப் படுகின்றான். இப்படிப் பள்ளி ஒழுங்கு முறையைக் கண் போல் காக்கின்றார் தலைமையாசிரியர்.

இன்னொரு நிகழ்ச்சி: இந்தப் பெற்றோருக்கு மிகவும் வேண்டப்பட்ட ஒரு தமிழாசிரியர் பள்ளி ஒழுங்கு முறைக்குக் குந்தகம் விளையும் போக்கில் நடந்து கொள்ளுகின்றார். தலைமையாசிரியரின் கட்டளைகட்குப் பணியாமை, பையன்களைத் தலைமையாசிரியருக்கு எதிராகத் தூண்டி விடுதல், நேரத்துக்குப் பள்ளிக்கு வராமை, வந்தாலும் சரியாக வகுப்பிற்குப் போகாமை, அப்படிப் போனாலும் பாடத்தை நடத்தாமல் 'அரசியல் பேச்சுகளைப்' பேசி காலத்தை வீணடித்தல் போன்ற செயல்களில் ஈடுபடுபவர். இவர்மீது மேலிடத்திற்குப் புகார் எழுதி இவரை வேற்றூருக்கு மாற்றி விடுகின்றார் பி.ஆர்.சுப்பிரமணியம். இந்தத் தமிழாசிரியரை மீண்டும் நாமக்கல்லுக்குக் கொண்டுவரும் திருப்பணியில் ஈடுபடுகின்றார் மேற்குறிப்பிட்ட பையனின் தந்தையார். இதில் பகீரதப் பிரயத்தனம் செய்கின்றார். மாவட்டத் தனி அதிகாரி பள்ளியைப் பார்வையிடும் போக்கில் நாமக்கல்லில் முகாம் போடுகின்றார். தலைமையாசிரியரைத் தனிமையில் சந்தித்துத் தமிழாசிரியர் மீண்டும் நாமக்கல்லுக்கு மாற்றம் செய்ய ஒருப்படுமாறு 'வேண்டுகின்றார்'. 'ஐயா, நான் திருநெல்வேலிக்காரன். என் ஊரில் இருந்தால் எனக்கு சௌகர்யம். பிழைப்பிற்காக ஊரை விட்டு வந்து விட்டேன். எனக்கு 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்'. தமிழாசிரியர் இங்கு வருவதற்குப் பிறப்பிக்கும்

ஆணையில் என்னையும் வேற்றூருக்கு மாற்றுவதற்கான ஆணையையும் சேர்த்து விடுங்கள்' என்று துணிவாகக் கூறவும் தனியதிகாரி செயலற்றுப் போய் வாளா திரும்பி விடுகின்றார். இப்படியும் பி.ஆர்.சுப்பிரமணியம் பள்ளி ஒழுங்கு முறையைக் காக்கின்றார்.

நாமக்கல் கழக உயர்நிலைப் பள்ளிக்கு மேற்புரத்தில் இருப்பது சந்தைப்பேட்டை புதூர். அப்பக்கத்திலிருந்து வரும் ஆசிரியர்கள், மாணாக்கர்கள் பள்ளிக்கு வரவேண்டுமானால் இரண்டு ஃபர்லாங்க் சுற்றி வர வேண்டும். இவர்கள் மேற்புறமும் வடபுறமும் உள்ள சுற்றுப்புறச் சுவர்கள் சேரும் மூலையில் சுவரைச் சிறிது உடைத்து விட்டுக் கொண்டார்கள். உடைத்துவிட்ட வழியாக இவர்கள் வந்து கொண்டிருந்தனர். நகர மக்களும் இதனைத் தெரிந்து கொண்டு இதன் வழியாக வந்து இதனைப் பொது வழியாக்கிக் (Thorough-fare) கொண்டனர். பள்ளி ஒழுங்குமுறைக்கு இஃது இடையூறினை விளைவிப்பதாக இருந்ததால் இதனை முதலில் அடைத்து விட ஏற்பாடு செய்து விட்டார் தலைமையாசிரியர். இதனால் பள்ளி ஒழுங்குமுறைக்குக் குந்தகம் விளைவிக்கும் பிரச்சினைகளில் சிறிது குறைந்தது. முதலில் இச்செயல் சிலருக்குச் சினத்தைத் தூண்டுவதாக இருந்தாலும் நாளடைவில் சரியாகி விட்டது?

இராசிபுரத்திற்கு மாற்றம்: தேர்தல் முடிந்து திரு. நாச்சியப்பக்கவுண்டர் மாவட்டக் கழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார். தமிழகத்தில் நீதி, நிர்வாகம், எதிலும் ஒழுங்கு முறை, கல்வியில் அக்கறை இவற்றில் கவனம் செலுத்துவதில் பேர் பெற்றவர் திரு நாச்சியப்பக் கவுண்டர். சென்னை மாநிலத்திலுள்ள மாவட்டக் கழகத் தலைவர்களில் தலை சிறந்த ஒரு சிலரில் தலைமையாகத் திகழ்ந்தவர். நாமக்கல் உயர்நிலைப் பள்ளியைவிட மாணவர்களின் எண்ணிக்கையைப் பொறுத்த மட்டில் இரண்டு மடங்கு பெரியது இராசிபுரம்

கழக உயர்நிலைப் பள்ளி. அப்பள்ளியின் ஒழுங்குமுறை மிகவும் சீர்கேடடைந்திருந்தது. பல்வேறு புகார்க் கடிதங்கள் திரு நாச்சியப்பக் கவுண்டருக்குப் பொது மக்களிடமிருந்து வந்து குவிந்திருந்தன. அப்போது அங்குத் தலைமையாசிரியராகப் பணியாற்றிய திரு சேஷகிரி ராவ் மிக நல்லவராக இருந்தாலும் நிர்வாகத் திறமை போதாதவர். பள்ளி ஒழுங்கு முறையை நிலை நாட்டுவதில் பேரும் புகழும் பெற்றிருந்த திரு பி. ஆர். சுப்பிரமணியத்தை அங்கு மாற்றல் செய்தார் திரு கவுண்டர். ஒழுங்கு முறையை நிலை நாட்டுவதற்காகவே திரு பி.ஆர்.எஸ்ஸை அங்கு மாற்றியிருப்பதாகக் கூறினார் கழகத் தலைவர். திரு சுப்பிரமணியமும் சில வசதிகளைச் செய்து தந்தால் தம்மால் இயன்ற அளவு சீர்திருத்தம் செய்வதாக ஒப்புக் கொண்டார்; தலைவரும் இவற்றைச் செய்து தருவதாக வாக்களித்தார்.

திரு பி. ஆர். சுப்பிரமணியமும் இராசிபுரம் பள்ளியின் தலைமையாசிரியராகப் பொறுப்பேற்றதும் ஒரு திங்கள் வரை பள்ளி ஒழுங்குமுறை சீர்கெட்டதற்கான காரணங்களை ஆராய்ந்தார். இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட மாணவர்களையும் அதற்கேற்றவாறு ஆசிரியர் தொகை அதிகமாக இருப்பதையும் கண்டார். படிப்படியாகச் சீர்திருத்தம் செய்யும் பணியில் இறங்கினார். ஒழுங்கு முறை சீர்கேட்டிற்குக் காரணமாக இருந்த சில ஆசிரியர்களை வேற்றூர்கட்கு மாற்றலாகும் படி செய்தார். மூன்று உதவித் தலைமையாசிரியர் நியமனத்திற்குப் பரிந்துரை செய்து சில முக்கியமான பணிகளை அவர்களிடையே பிரித்து வழங்கித் தம் பணியின் பளுவினைக் குறைத்துக் கொண்டார். சுற்றுப் புறச்சுவர்கள் இரண்டு மூன்று இடங்களில் உடைக்கப் பெற்று அவற்றின் வழியாக சில ஆசிரியர்களும் மாணவர்களும் வருவதும் போவதுமாக இருந்தனர். முதலில் அவற்றை அடைக்கச் செய்து அவற்றின் வழியாக வருவதையும் போவதையும் தடுத்தார். முதல் மணி

அடித்ததும் எல்லோரும் வந்து விடவேண்டும்; அதற்குமேல் தலைமையான வழி மூடப்படும் என்பதைத் தெரிவித்து இப்பழக்கத்தை நடைமுறைக்குக் கொணர்ந்தார். முதல் மணி அடித்ததும் தலைமை வாசலின் வழியாகத் தாமதமாக வருபவர்களைத் தாமே நேராகக் கவனித்தார். இதனால் தாமதமாக வருவோர் தொகை குறைந்தது. இதனால் பவருக்குச் சிரமமாக இருந்தது; பலர் மனம் குமுறினர்.

இராசிபுரத்தில் சாதிப்பேரில் சங்கங்கள், இலக்கியத்தின் பேரில் சங்கங்கள், பொதுநலம் பற்றிய சங்கங்கள், அரசியல் சங்கங்கள் முதலியவை ஐம்பதிற்கும் அதிகமாக இருந்தன. சில ஆசிரியர்கள், பெற்றோர்கள் இச்சங்கங்களைத் தூண்டி முன்போலவே பல வழிகளை ஏற்படுத்தத் தீர்மானங்கள் போடச் செய்து மாவட்டக் கழகத் தலைவருக்கு அனுப்பச் செய்தனர்; பல மகஜர்கள் அனுப்பச் செய்தனர். பல சங்கங்கள் தலைமையாசிரியரின் போக்கும் செயலும் அடாவடித்தனமானவை என்று வருணித்தன. சுவரொட்டிகள் ஒட்டச்செய்தன. இவற்றைக் கவனித்த திரு நாச்சியப்பக் கவுண்டர் பழைய நிலையே இருக்கட்டும் என ஆணை அனுப்பினார். தமது செயலில் தலையிட்டால் ஒழுங்கு முறையை ஏற்படுத்த முடியாது என்றும், தம்மை இப்பொறுப்பினின்றும் விலக்கித் தம்மை வேற்றூருக்கு மாற்றலாகும்படி ஆணை பிறப்பிக்குமாறு கோரினார் பி. ஆர். எஸ். தலைவர் தர்மசங்கடத்திற்குள்ளானார். பிறகு தமது ஆணையை மாற்றிக் கொண்டார். ஓராண்டிற்குள் பள்ளி ஒழுங்குமுறை கட்டுக்குள் வந்தது. மாவட்டக் கழகத் தலைவரைப் பார்வையிடும்படி கடிதம் எழுதினார். தலைவரும் பள்ளிக்கு வருகை புரிந்து நிலையைக் கவனித்து மகிழ்ச்சிக்குள்ளானார். இங்ஙனம் நன்முறையில் பணியாற்றிப் பல்லோர் புகழுரைக்குக் காரணமானார் பி. ஆர். எஸ். சேலம் மாவட்டக்கழகப் பள்ளிகளில் இவருடைய பேரும் புகழும் கொடி கட்டிப் பறந்தன.

நல்ல உடல்நிலைதான், எக்காரணத்தாலோ உடல் நலம் குன்றியது. இஃது அதிக உழைப்பின் காரணமாக இருக்கலாம்; பள்ளியின் ஒழுங்கு முறை என்ற பளுவை தமது மனத்தில் போட்டுக் கொண்ட காரணத்தால் மன நிலை கெட்டு அதன் காரணமாக உடல் நிலையும் கெட்டி ருக்கலாம். அப்போது நான் துறையூர்ப் பணியினின்றும் விலகி காரைக்குடிப் பணியை ஏற்றிருந்தேன். 'உங்கள் உழைப்பினால் உயர்ந்தீர்கள்; எனது பாராட்டுகள். உழைப்பே மனிதனை உயர்த்தும். மேலும் மேலும் உழைத்து மேன்மேலும் உயர்க' என்று வாழ்த்துக் கடிதமும் எழுதினார். நானும் இராசிபுரம் பள்ளியைச் சீர்திருத்தம் செய்தமை கேட்டுப் பாராட்டி வாழ்த்துக் கடிதம் எழுதினேன். இவைதாம் எங்களிடையே எழுந்த கடைசிக் கடிதங்கள்.

சில திங்களில் பி. ஆர். எஸ். உடல்நிலை மிகவும் சீர்கெட்டது. ஒருநாள் மாரடைப்பில் காலமானார் என்ற செய்தியை நாளிதழ்களில் கண்டு கலங்கினேன்.

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் உலகு (குறள்—336)

என்ற குறளை நினைத்துக் கொண்டேன். சில நாட்களில் நகரப் பெருமக்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் இவர்கள் ஒன்று கூடித் திரு சுப்பிரமணியத்தின் உழைப்பையும் பணி யையும் பாராட்டிப் பெரிய அளவில் இவரது திருவுருவப் படத்தைப் பள்ளியில் திரு நாச்சியப்பக் கவுண்டாரின் திருக்கைகளால் திறந்து வைத்த செய்தியையும் நாளிதழ் களில் கண்டு மனம் உவந்தேன்.

வசைமொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். (குறள்—240)

# 13. பாவேந்தர் பாரதிதாசன்

ஒரு பயில்வான் போன்றசெம்மையான உடற்கட்டு, அகன்ற நெற்றி, அகன்ற அரை (இட்லர்) மீசை, எடுப்பான முகத்தோற்றம், வீரப்பொலிவு, கூரிய வீரப்பார்வை இவை யாவும்உருண்டுதிரண்ட உருவமேபாவேந்தர்பாரதிதாசன். இந்த உருவத்தின் மண்டையின் உள்ளே அடங்கிக் கிடந்தவை தமிழ்பற்று(வெறி என்று கூடச் சொல்லலாம்), சமுதாயக் கேடுகள் பற்றிய சீற்றம், தோசை மாவு புளித்துக் கொண்டிருப்பது போன்ற கவிதை உணர்வுகள், இசைப்பண்பு ஆகியவை. இவை இவருடன் சாதாரணமாக உரையாடும் போதே வெளிப்படுபவை. இங்ஙனம் புறத்தோற்றமும் அகத்தோற்றமும் அடங்கிய மனிதரே புதுச்சேரி தமிழகத்திற்குத் தந்த கனக சுப்புரத்தினம். ஆம்; தமிழர்களைப் பொறுத்தவரை இரத்தினமே; விலை மதிப்பற்ற மாணிக்கமே.

இந்தக் கம்பீரமான உருவத்தையுடைய மனிதர் ஒருநாள்—1947 பிப்பிரவரி என்பதாக நினைவு—முற்பகல் பதினொரு மணி இருக்கும்; அப்போது என் பள்ளிக்கு வந்து சேர்ந்தார். அக்காலத்தில் வித்துவான் தேர்விலும் வெற்றியடைந்திருந்தேன். பாரதியார், பாரதிதாசன், கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை என்ற முப்பெருங் கவிஞர்களின் பாடல்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்திருந்த காலம். அப்போது பாரதிதாசன் கவிதைகள் (முதற்றொகுதி), எதிர்பாராதமுத்தம், அழகின்

சிரிப்பு, குடும்ப விளக்கில் முதல் மூன்று பகுதிகள்—இவை மட்டுமே வெளி வந்திருந்தன. இவற்றைப் படித்து இவர் கவிதைகளில் உள்ளத்தைப் பறி கொடுத்திருந்த காலம். கவிதைத் தொகுதியில் கண்ட கவிஞரின் ஒளிப் படத்தை முன்னரே பார்த்து அறிமுகப்பட்டிருந்தபடியால் என் பள்ளிக்கு எழுந்தருளிய மனிதர் பாரதிதாசனே என்பதை என்னால் எளிதில் புரிந்து கொள்ள முடிந்தது. அளவற்ற பெருமையும் மகிழ்ச்சியும் கொண்டேன். ஏதோ காணாத பொருளைக் காண்பது போன்ற மகிழ்ச்சிப் பெருக்கு என்னை ஆட் கொண்டது. சுமார் அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். பின்னர் ஆசிரியர் அறைக்கு இட்டு ஓய்வாக இருந்த ஒரு சில ஆசிரியர்கட்கு அறிமுகப்படுத்தி வைத்தேன். என் இல்லத்தில் தயாராகி யிருந்த எளிய பகலுணவைக் கொண்ட பிறகு பள்ளியில் தலைமையாசிரியர் அறை என்ற எனக்குரிய அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது ஆசிரியர்கள் ஒவ்வொருவராக வந்து கவிஞரைக் கண்டு மகிழ்ந்தனர். அன்று மாலை மூன்றரை மணிக்கு பள்ளியில் ஒரு கூட்டத் திற்கு ஏற்பாடு செய்து அதில் கவிஞரைப் பேசுமாறு வேண்டினேன். கவிஞரும் அதற்கு இசைந்தார்.

பின்னர் கவிஞரை என் இல்லத்தில் ஓய்வு கொள்ளச் செய்து விட்டு என் அலுவல்களைக் கவனித்தேன். அந்தக் காலத்தில் பள்ளியிலேயே என் வீடும் அமைந்திருந்த படியால் என் குடும்பமும் பள்ளியும் ஒன்றாகவே இணைந் திருந்தன. பள்ளியும் என் குடும்பம்போல் ஆகிவிட்டது. ஒன்பதாண்டுக் காலம் பள்ளியின் வளர்ச்சியும் தமிழ் இலக்கியங்களில் ஈடுபாடும் அநுபவமும் சேர்ந்தே பெருகி வந்தன. வழக்கம்போல் வகுப்புகட்குச் சுற்றறிக்கை மூலம்கூட்டம்பற்றிய அறிவிப்புடன் கடைத் தெரு, முதலியார் தெரு, உடையார் தெரு, தேவாங்கர் தெரு ஆகிய இடங்களிலுள்ள பிரமுகர்கட்கும் கவிஞர் வருகையைப் பற்றியும், அவர் பள்ளியில் பேசுவது

பற்றியும் செய்தியைப் பரப்பினேன். இக்கூட்டத்திற்கு மிக அதிகமான மக்கள் (சுமார் 50 பேர்) திரண்டு வந்திருந்தனர். ஆசிரியப் பெருமக்கள், ஊர் பெருமக்கள், உயர் வகுப்பு மாணவர்கள் ஆகியவர்கள் சேர்ந்த கூட்டம் சுமார் 300 பேருக்கு மேல் தாண்டியது. பேசுவோருக்கு கூட்டத்தின் திரள் உற்சாகத்தை அளிக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

எதுபற்றி வேண்டுமானாலும் கவிஞர் பேசலாம் என்ற சுதந்திரம் உண்டு என்று கூறிவிட்டோம். தமக்கும் பாரதியாருக்கும் நட்பு; தமக்கு இயல்பாகவே இயல், இசை, நாடகம் இவற்றில் ஈடுபாடு இருந்தமை ஆகியவற்றை விளக்கினர். ஒரு சமயம் கனக. சுப்புரத்தினம் நண்பர் ஒருவரின் திருமணவிருந்திற்குப் போயிருந்தாராம். விருந்திற்கு பாரதியாரும் வந்திருந்தார். விருந்திற்குப் பிறகு கனக சுப்புரத்தினம் ஒரு நாட்டுப் புறப்பாடலைப் பாடினாராம். பாரதியார் அப்பாடலைக் கேட்டுக் கொண்டிருந்ததைச் சுப்புரத்தினம் அறியார். இப்பாடலேஇவரைப் பாரதியாருக்கு அறிமுகப்படுத்தியதாகக் கூறினார். ஒரு சமயம் பாரதியார் 'சுப்பு ரத்தினம் ஒரு கவிஞன்'— 'அதற்குரிய தன்மை அவருக்கு உண்டு' என்ற எண்ணம் பாரதியாருக்கு அவரைக் கண்டபோதே தோன்றியிருக்க வேண்டும். ஓருநாள் நண்பர்களிடம் இதைத் தெரிவிக்க விழைந்தாராம். 'சுப்புரத்தினம் கவிதை இயற்றவல்லவன்' என்று அனைவர் நடுவில் கூறினாராம். நண்பர்கள் 'பாடச் சொல்லுங்கள் பார்ப்போம்' என்று பாரதியாரை வேண்ட, அவரும் 'தம்பீ, ஒரு பாடலைப் பாடிக் காட்டு' என்றாராம். உடனே கனக. சுப்புரத்தினமும்,

'எங்கெங்குக் காணினும் சக்தியடா!—தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா!—அங்குத்
தங்கும் வெளியினில் கோடியண்டம்—அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமடா— ஒரு

கங்குலில் எழுமுகி லினமும்—வந்து
கர்ச்சனை செய்வது கண்டதுண்டோ?—எனில்
மங்கை நகைத்த ஒலியெனலாம்—அவள்
மந்த நகையங்கு மின்னுதடா!



காளை யொருவன் கவிச்சுவையைக்—கரை
காண நினைத்த முழுநினைப்பில்—அன்னை
தோளசைத் தங்கு நடம்புரிவாள்—அவன்
தொல்லறி வாளர் திறம்பெறுவான்—ஒரு
வாளைச் சுழற்றும் விழியினிலே—இந்த
வையமுழுவதும் துண்டு செய்வேன்—என
நீள இசையின்றி நீ நினைத்தால்—அம்மை
நேர்படுவாள் உன்றன் தோளினிலே

என்று ஒரு பாடலைப் பாடி அனைவரையும் மகிழ்வித்த தாகக் கூறினார் தம் பேச்சில். இப் பாடல், பாரதியாரின் 'தாருக வனத்தினிலே' என்று தொடங்கும் 'கோமதியின் மகிமை' என்ற பாடலின் சாயலை ஒத்துள்ளதைக் கண்டு மகிழலாம். இந்தப் பாடல்தான் பாடிய இளங்கவிஞரைப் 'பாரதிதாசன்' என்று தமிழ் உலகிற்கு உணர்த்தியதைக் கவிஞர் வாக்காலேயே உணர முடிகின்றது. இப்பாடல்—முதற்பாடல்—பாரதியாராலேயே 'ஸ்ரீசுப்பிரமணிய பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனக. சுப்புரத்தினம் எழுதியது' என்று எழுதப்பெற்று 'சுதேச மித்திரன்' இதழில் வெளி வந்ததாம்.

பள்ளியில் பேசின பேச்சில் சாதிபேதம், சமயபேதம் இல்லாதவர் என்பதையும், உயர்ந்த எண்ணமும் விரிந்த அறிவும் உடையவர் என்பதையும், கொள்கைக்காகப் போராடும் குணமும் கொண்டவர் என்பதையும் தெளிவாக உணர்த்திற்று. தந்தை பெரியார் கொள்கைகளை முற்றிலும் போற்றுகின்ற கவிஞர்என்பதும் தெளிவாகியது.

ஆனால் பாரதியார் பல தேச பக்தர்களைப் பாடியதைப் போல் 'வெண்தாடி வேந்தரை'ப் பாரதிதாசன் பாடவில்லை; வேறு எவரையும் பாடியதாகவும் தெரியவில்லை.

அக்காலத்தில் பாரதியார் பாடல்களையும் பாரதிதாசன் பாடல்களையும் புலவர் பெருமக்கள் அதிகமாக மதிப்பதில்லை. இவை பெரும்பாலும் 'கோடி வேட்டி' நடையில்—புளியங்கஞ்சி போடப் பெற்று 20-ம் நம்பர் நூலில் நெய்யப் பெற்ற துண்டுபோல்—அமையாததே காரணம் என்று கருதத் தோன்றுகின்றது. இதனை விளக்கும் போக்கில் புதுச்சேரியில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியைக் கவிஞர் விளக்கியதில் புலவர்களின் போக்கை அறிந்து கொள்ள முடிந்தது.

யாரோ ஒரு புலவர்—கவிஞர் கூட்டத்தில் பெயரைச் சொன்னாலும் நான் சொல்ல விரும்பவில்லை—அப்புக்குட்டிப் புலவர் என்று கொள்வோம்—புதுச்சேரியில் ஒரு பெரிய கூட்டத்தில் பேசினாராம். அந்தக் கூட்டத்திற்குப் பாரதிதாசனும் போயிருந்தாராம். கூட்டத்தில் பேசிய புலவர் இக்காலக் கவிதைகளை வெறுக்கும் போக்கில்,

வெள்ளக்காரப் பணம் சின்னப் பணம்
வேடிக்கை பாக்குதாம் வெள்ளிப் பணம்

என்பது போன்ற வெள்ளைப்பாடல்களைப் பாடுவார்களேயன்றி ஆழ்ந்த கருத்தும் சொல்வளமும் உள்ள பாடல்களைப் பாடுவதில்லை, பாடவும் தெரியாது என்று கூறி கூட்டத்தினரிடையே கையொலியும் பெற்றாராம்.

இதைக் கேட்ட கவிஞர் பேசுகின்றார்: எனக்கு இதைக் கேட்டுத் தாங்க முடியாத கோபம் வந்தது. ஓர் ஐந்து மணித் துளிகள் நான் பேச விரும்பிக் கூட்டத் தலைவருக்கு ஒரு சீட்டு அனுப்பினேன். நான் பேசினால் கூட்டத்தில் குழப்பம் ஏற்படும் என்று கருதி தலைவர் அனுமதி வழங்க மறுத்தார். ''எங்கள் பாரதிதாசன் பேசு

வதற்கு அனுமதி மறுத்தால் நாங்கள் கூட்டத்தைத் தொடர்ந்து நடத்த அனுமதியோம்'' என்று ஒருமித்த குரல்கள் எழுந்தன. பாவம், என்ன செய்வார் தலைவர்? வேறு வழியின்றி தலைவர் அனுமதிவழங்கினார். ''நானும் பேசினேன்'' என்று விளக்கிய கவிஞர் தான் பேசிய விவரத்தை அற்புதமாகச் சித்திரித்து கூட்டத்தினரின் கையொலியைப் பெற்றார்.

கவிஞர் பேசியது: 'நம் மதிப்பிற்குரிய அப்புக்குட்டிப் புலவர்,

வெள்ளைக்கா ரப்பணம் சின்னப் பணம்
வேடிக்கை பாக்குதாம் வெள்ளிப் பணம்

என்பன போன்ற இக்காலக் கவிதைகளை குறைவாக மதிப்பிட்டுப் பேசினது எனக்கு வருத்தத்தை விளைவிக்கின்றது. போகட்டும்; அவர் கருத்துப்படி இதனை 'வெள்ளைக் கவிதை' என்றே வைத்துக் கொள்வோம். இத்தகைய கவிதையையாவது இவருக்கு இயற்றத் தெரியுமா? அல்லது, இதன் பொருளையாவது இவரால் உணர முடியுமா? அல்லது, இவரால் பிறர்க்கு இதன் பொருளை உணர்த்தத்தான் தெரியுமா? 'சின்னப்பணம்' என்பது 'சிறிய பணம்' அல்ல. பழைய ஒரு தம்படி அளவு உள்ள 'வெள்ளிப் பணம்' என்பதே இவர் பேசிய 'தொனி'யினாலே இவர் உணர்ந்ததாகத் தெரியவில்லை. 'ஏழாம் எட்வர்ட்' சின்னம் பொறித்த ஒரு ரூபாய், அரை ரூபாய், கால்ரூபாய், அரைக் கால்ரூபாய் (பழைய இரண்டணா) இவை யாவும் சுத்தமான வெள்ளியாலானவை. இவற்றை உருக்கி வெள்ளி உலோகமாக்கினால் இவற்றின் மதிப்பு பாதியாகிவிடும். வெள்ளியும் உயர்தரமான வெள்ளியாகும். வெள்ளைக்காரனின் 'சின்னம்' பொறித்திருப்பதால் இதன் மதிப்பு இரண்டு மடங்கு ஆகிறது. இந்தப் பொருளை இனியாவது இப் புலவர் போன்ற 'தலைக்கனம்' உள்ளவர்கள் தெரிந்து கொள்ளட்டும்.''

மேலும் தொடர்கின்றார் கவிஞர்: ''அன்பர்களே, நான் புதுச்சேரியில் ஈசுவரன் கோயில் தெருவில் ஓர் இல்லத்தில் குடியிருக்கின்றேன். ஒரு நாள் பத்துவயது சிறுவன் ஒருவன் பட்டம் விட்டுக் கொண்டிருந்தான். பட்டம் சரியாகப் பறக்காமல் தவித்தது. பட்டத்தின் 'வால்' நீளம் போதாமையால்தான் அது சரியாகப் பறக்கவில்லை என்பதை உணர்ந்து கொண்டான் சிறுவன். பழைய துணிவேண்டும்; அதற்கு வீடு போய்வரவேண்டும். பையன் அதை விரும்பவில்லை. ஏழைப் பையன்; கோவணம்தான் அவன் 'உடுத்தி'யிருந்தான். ஒரு யோசனை தோன்றியது. கோவணத்தை அவிழ்த்தான். அதனைச் சிறு சிறு நீளத்துண்டுகளாக்கினான்; அவற்றைத் தேவையான அளவுக்குப் பட்டத்தின் வாலில் பொருத்தினான். இப்போது பட்டம் நன்கு பறந்தது; மன நிறைவு பெற்றான். ஆனால் அது பறந்து கொண்டே போய் ஈசுவரன் கோயில் விமானத்தின் (கருவறைக்கு மேல் உள்ள கோபுரம் போன்ற பகுதி) தங்கக் கலசத்தில் அதன் வால் சுற்றிக் கொண்டது. இதனால் பட்டத்தை மீட்க முடியாததுபற்றி வருத்தம் ஒரு பக்கம் இருந்தாலும் 'என் கோவணத்தின் பெருமையே பெருமை; அது ஈசுவரன் கோயில் தங்கக் கலசத்தில் சுற்றிக் கொண்டதே!' என்று மகிழ்ச்சிக் கடலில் மிதந்தான். இதனை மனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

''நான் குறிப்பிட்ட அப்புக்குட்டிப் புலவருக்கு கவிதை இயற்றும் திறன் இல்லை. பெரிய புராணம் கந்தபுராணம் திருத்தணிகை புராணம் போன்ற நூல்களை ஆங்காங்கு சில அடிக்குறிப்புகளுடன் வெளியிடுவார். முகப்புப்பக்கத்தில் 'சேக்கிழார் பெருமான் இயற்றிய திருத்தொண்டர் புராணம் எனப்படுகின்ற பெரியபுராணம் அடிக்குறிப்பு—அப்புக்குட்டிப் புலவர்' என்று போட்டுக்கொள்வார். தம்முடைய பெயரும் சேக்கிழார் பெயருடன் சேர்ந்தேவருகின்றது என்று

மகிழ்ச்சிகொள்வார். இது எப்படியிருக்கின்றது என்றால் பட்டம் விட்ட சிறுவன் தன்னுடைய கோவணமும் ஈசுவரன் கோயில் தங்கக் கலசத்துடன் இணைந்து கொண்டதே என்று மகிழ்ந்ததைப் போன்றது இப் புலவரின் மகிழ்ச்சி'' என்று கிண்டல் செய்தார். கூட்டத் தினரின் கையொலி அடங்க ஒரு மணித்துளி நேரம் ஆயிற்று. இந்த நிகழ்ச்சி இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது.

  

நான் வித்துவான் பட்டம் பெற்ற பிறகு பாரதியார், பாரதிதாசன், கவிமணிதேசிக விநாயகம் பிள்ளை இவர் கள் படைத்த கவிதைகளில் பேரார்வம் கொண்டு படித்து அநுபவித்துக் கொண்டு வந்தேன்; இவற்றில் என் மனத் தைப் பறிகொடுத்தேன் என்று கூடச் சொல்லலாம். கம்பனிலும் சிந்தாமணியிலும் பெரிய புராணத்திலும் நான் ஈடுபட்டுப் படித்தபோது பெற்ற கவிதையநுபவத் தையே இம்மூவர் இயற்றிய கவிதைகளைப் படித்த போதும் பெற்றேன். ஏன்? இன்னும் அதிகமாகவும் பெற் றேன் என்று கூடச் சொல்லலாம்.

ஒரு கவிஞரின் மனத்தில் சுயம்புவாக உருவான கவிதையின் பண்புகள் காலத்தால் மாறுபாடு அடைவ தில்லை. கவிதையின் உறுப்புகளும், அவற்றின் இலட்சியங் களும், பாடப்பெறும் பொருள்களும் காலத்திற்கேற்ற வாறும், கவிஞர்களின் படைப்பாற்றலுக் கேற்றவாறும் மக்களின் கலைச் சுவைக்கு ஏற்றவாறும் மாறுகின்றன. இவை கவிதைக்குக் கால, தேச, வர்த்தமானங்களை யொட்டியே அமைகின்றன. நிரந்தரமான உறுப்பில் கவிதை இசையுடன் ஒளிரும் கற்பனையின் வாசகம்; இந்த அகிலத்தின் எல்லையற்ற எழிலும், கவிஞர்களின் உள்ளம் ஆழங்கால் பட்டு அநுபவிக்கும்போது ஏற்படும் ஆவியின் மலர்ச்சி. இந்தப் பண்புகளைப் பண்டைக் காலத்தில்

தோன்றிய பெருங்கவிஞர்களின் படைப்புகளில் கண்டு மகிழலாம். ஆனால், புதிய கற்பனை முறைகளையும், சந்தங்களையும், காலத்திற்கேற்ற கருத்து இலட்சியங் களையும் மேற்கொள்ளும் ஆற்றல் கவிஞர்கட்கு இன்றி யமையாதது. தன் காலத்து ஆற்றல்களால் ஒரு கவிதை படைக்கப்பட்டபோதிலும், கவிஞன் தன் காலத்திற்கு அப்பாற்பட்ட இலட்சியங்களையும் எடுத்துக் காட்ட வல்லவன். இந்த இரண்டு நோக்கங்களையும் வைத்துக் கொண்டு பார்த்தால் பாரதி, பாரதிதாசன், கவிமணி இவர்களை மாபெரும் கவிஞர்கள் என்றே சொல்ல வேண்டும்.

ஈண்டுப் பாரதிதாசனை மட்டிலும் நோக்குவோம். அந்தக் காலத்தில் பாரதிதாசனின் இரண்டு மூன்று நூல்கள் தாம் வெளி வந்திருந்தன. பாரதிதாசன் கவிதைகள், அழகின் சிரிப்பு, குடும்ப விளக்கு (மூன்று பகுதிகள்) என்ப தாக நினைவு. பேரறிஞர் அண்ணா அவர்கள் இவற்றி லுள்ள பல பாடல்களையும் புரட்சிகரமான புதுவகை உவமைகளையும் தமது பேச்சில் எடுத்துக் காட்டித் தமது பேச்சை சுவையுடையதாகவும் இலக்கிய நயமுடைய தாகவும் செய்து கொண்டார். இதனால் அறிஞர் அண்ணாவின் புகழோங்கியது. பாவேந்தரின் புகழும் பட்டி தொட்டிகளிலெல்லாம் பரவக் காரணமாக அமைந்தது. அவரும் பாரதியாரைப்போல் பொது மக்களின் கவிஞராகி விட்டார்.

நான் பாவேந்தரின் பாடல்களைப் படிக்கும்போது அவற்றில் என் உள்ளத்தைப் பறிகொடுத்தேன். 'சஞ்சீவி பர்வதத்தின் சாரல்' என்ற ஒரு பாடலைக் காவிய பாவனையில் தம் கொள்கைகளை விளக்கும்போக்கு என் மனத்தை மிகவும் கவர்ந்தது. இது வேகத்துடனும் ஆவேசத்துடனும் எழுதப்பெற்றுள்ள ஒரு கற்பனை ஓவியம். கவிஞரின் கவித்துவத்திற்கும் ஆவேசத்திற்கும்

பொங்கி எழும் உணர்ச்சிப் பெருக்கிற்கும் இப்பாடல் நல்லதோர் எடுத்துக்காட்டு. இந்தக் கற்பனை ஆற்றலுடன் எழுதப் பெற்றிருப்பினும் செம்மையான கட்டு தளர்ந்து போயிற்று; ஓசை வளமும் குன்றிவிட்டது; நடையழகும் தேய்ந்து விட்டது. கவிஞரின் வேகமும் ஆவேசமும் இவற்றை விழுங்கிவிட்டன. கவிதையில் இலக்கியச் சுவையுள்ள சொற்கள், சாதாரண சொற்கள், கொச்சை மொழிகள் இவை யாவும் பல்வேறு போக்கில் கலந்து ஓர் ஆற்றலைப் பெறுகின்றன. தம் நூதனக் கருத்துகளையும் இலட்சியங்களையும் பிரசாரம் செய்ய வேண்டும் என்ற ஆவேச வெறியிலிருப்பதால் அவை படிப்போர் மனத்தில் ஆணித்தரமாய்ப் பதிவதற்கேற்பப் பாங்குடன் அமைந்துள்ளன. கவிஞரின் தெளிவான மனப்போக்கு சில இடங்களில் வசன நடைக்குக் கொண்டு செலுத்தினாலும் மொத்தத்தில் கவிதை சிரஞ்சீவித் தன்மையைப் பெற்றுவிடுகின்றது.

குப்பன் இரண்டு மூலிகைகளைக் கொணர்கின்றான். குப்பனும் அவன் காதலி வள்ளியும் ஒரு மூலிகையை தின்கின்றனர்: இது மற்றவர்கள் பேசும் பேச்சை அவர்கள் எந்த மொழியில் பேசினாலும் தமிழிலேயே கேட்கும் ஆற்றலைத் தருகின்றது. நம்நாடு அடிமைப்பட்டிருந்த போது ஆங்கிலேயன் ஒருவன் இந்தியர்களின் நிலைமையைப் பற்றிப் பேசியதை இருவரும் 'செந்தமிழில்' செவிமடுக்கின்றனர். அவன் பேசுவது:

'ஓஒ என்' சகோதரரே ஒன்றுக்கும் அஞ்சாதீர்!
நாவலந் தீவு நம்மைவிட்டுப் போகாது.
வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி[1] மக்கள் என்றால்
சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகையிருக்கும்;
ஆகையால் எல்லாரும் அங்கே தனித்தனிதான்.

---

1. இப்போது (1989) இத்தொகை 70 கோடிக்கு மேல் தாண்டிப் போய் விட்டது.

ஏக மனதாகி அவர் நம்மை எதிர்ப்பதெங்கே?
பேதம் வளர்க்கப் பெரும்பு ராணங்கள்!
சாதிசண் டைவளர்க்கத் தக்கஇதி காசங்கள்!
கட்டிச் சமூகத்தின் கண்ணவித்துத் தாமுண்ணக்
கொட்டி அளக்கும் குருக்கள் கணக்கற்றார்.
தேன்சுரக்கப் பேசிஇந்து தேசத்தைத் தின்னுதற்கு
வான்சுரக்க விட்டுவந்த பூசுரரும் வாழ்கின்றார்.
இந்த உளைச்சேற்றை ஏறாத ஆழத்தை
எந்த விதம்நீங்கி நம்மைஎதிர்ப்பார்? இன்னமும்
சிந்தனா சக்தி சிறிதுமின்றி மக்களுக்குத்
தம்தோள் உழைப்பிலே நம்பிக்கை தானு மின்றி
ஊறும் பகுத்தறிவை இல்லா தொழித்துவிட்டுச்
சாரற்ற சக்கையாய்ச் சத்துடம்பைக் குன்றவைத்துப்
பொற்புள்ள மாந்தர்களைக் கல்லாக்கி யேஅந்தக்
கற்கள் கடவுள்களாய்க் காணப் படும்அங்கே
இந்த நிலையிற் சுதந்திரப் போரெங்கே?
கொந்தளிப்பில் நல்லதொரு கொள்கை
முளைப்பதெங்கே?
'தேகம் அழிந்துவிடும்; சுற்றத்தார் செத்திடுவார்;
போகங்கள் வேண்டா; பொருள்வேண்டா
மற்றுமிந்தப்
பாழுலகம் பொய்யே! பரமபதம்போ' என்னும்
தாழ்வகற்ற எண்ணுங்கால் சாக்குருவி வேதாந்தம்.
சாதிப் பிரிவு சமயப் பிரிவுகளும்,
நீதிப் பிழைகள் நியமப் பிழைகளும்,
மூடப் பழக்கங்கள் எல்லாம் முயற்சிசெய்தே
ஓடச் செய்தால்நம்மையும் ஓடச்செய்வார் என்பேன்.

என்பது. அடுத்த மூலிகையைத் தின்றதும் பூவுலகில் இராமாயணக் காலட்சேபம் நடந்து கொண்டிருப்பதை இருவரும் நேரில் காண்கின்றனர். இப்படிக் கவிஞரின் கற்பனை சுவை குன்றாமல் போகின்றது இந்தப் பாடலில்.

இந்தக் கற்பனையை நான் 'இளைஞர் வானொலி' (1962) 'இளைஞர் தொலைக்காட்சி' (1966) இவை பற்றி சிறுவர்கட்கு நூல் எழுதும் போது வானொலிக்கு முதல் மூலிகையையும் தொலைகாட்சிக்கு இரண்டாவது மூலிகையையும் எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம் என்று விளக்கியுள்ளேன்.

கவிஞரின் 'புரட்சிக் கவி' என்ற சிறு காவியத்தில் நிலவைப் பற்றி உதாரன் கூறுவனவாக வந்துள்ள,

நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தைக்
கோலமுழு தும்காட்டி விட்டால் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ! வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்
சொக்கவெள்ளிப் பாற்குடமோ அமுதஊற்றோ!
காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல்மாரிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ!

அந்தியிருளால் கருகும் உலகு கண்டேன்
அவ்வாறே வான்கண்டேன்; திசைகள் கண்டேன்;
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?
பெருஞ்சிரிப்பின் ஒளிமுத்தோ நிலவே நீதான்?
சிந்தாமல் சிதறாமல் அழகை யெல்லாம்
சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி
இந்தாவென் றே இயற்கை அன்னை வானில்
எழில்வாழ்வைச் சித்திரித்த வண்ணந் தானோ?

என்ற இரண்டு பாடல்கள் கற்பனையின் கொடுமுடியை எட்டியனவாக என் மனத்திற்குப் பட்டன. இப்படி எத்தனையோ பாடல்கள் இத்தொகுதி என் உள்ளத்தைக் கவர்ந்தன.

'அழகின் சிரிப்பு' என்ற நூலில் எல்லாப் பாடல்களும் இயற்கையின் எழிலைக் காட்டுகின்றன. ஒவ்வொன்றும்

தேனில் தொட்ட பலாச்சுளைகள். இப்பாடல்களைத்தான் அறிஞர் அண்ணா தம் சொற்பொழிவுகளில் அடிக்கடி எடுத்தாளுவதைக் கேட்டுள்ளேன். இந்த நூலிலுள்ள சில பாடல்கள் இன்னும் என் மனத்தில் ஒலித்துக் கொண் டுள்ளன. சிலவற்றைக் காட்டுவேன்.

காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்;
    கடற்பரப்பில், ஒலிப்புனலில் கண்டேன்; அந்தச்
சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்
    தொட்டஇடம் எலாம் கண்ணில் தட்டுப் பட்டாள்!
மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற
    மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள் ஆலஞ்
சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்
    தனில் அந்த 'அழகெ'ன்பாள் கவிதை தந்தாள்

சிறுகுழந்தை விழியினிலே ஒளியாய் நின்றாள்
    திருவிளக்கில் சிரிக்கின்றாள் நாரெ டுத்து
நறுமலரைத் தொடுப்பாளின் விரல்வ ளைவின்
    நாடகத்தைச் செய்கின்றாள்; அடடே செந்தோள்
புறத்தினிலே கலப்பையுடன் உழவன் செல்லும்
    புதுநடையில் பூரித்தாள்; விளைந்த நன்செய்
நிறத்தினில் என்விழியை நிறுத்தி னாள்;என்
    நெஞ்சத்தில் குடியேறி மகிழ்ச்சி செய்தாள்.[1]

இவை இரண்டும் அழகுபற்றிய கவிதைகள். இந்தத் தொகுப்பிலுள்ள எல்லாக்கவிதைகளும் இயற்கை அன்னை யின் எழிலைக் காட்டி நிற்பவை. பாடியவாய் தேனூறும் பான்மையவை.

அக்காலத்தில் 'குடும்ப விளக்கு' என்ற நூலின் ஐந்து பகுதிகளும் வெளிவரவில்லை. மூன்று பகுதிகளே வெளி வந்ததாக நினைவு. ஐந்து பகுதிகளையும் படித்து உணர் வோர் 'நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்' என்ற

1. அழகின் சிரிப்பு—அழகு 1, 2

உண்மையைத் தெளியலாம். அந்தக் காலத்தில்—துறையூர் வாழ்வின்போது சாதாரண மக்களும் அறிந்து கொள்ளும் பாங்கில் பத்துக் கட்டுரைகளை திரு. பெ. தூரனை ஆசிரியராகக் கொண்டு கோவையிலிருந்து வெளிவந்த 'காலச் சக்கரம்' என்ற திங்கள் இதழில் வெளியிட்டேன். அவற்றில் ஒன்று,

கட்டுக்குள் அடங்கா தாடிக்
களித்திடும் தனது செல்வச்
சிட்டுக்கள் சுவடிக் குள்ளே
செந்தமிழ் தீனி உண்ண
விட்டுப்பின் அடுக்க ளைக்குள்
அமுதத்தை விளைவு செய்தாள்

என்ற 'குடும்ப விளக்கின்' ஒரு பகுதியை விளக்குவதாக அமைந்தது. கட்டுரை அச்சில் நாலு பக்கமாக நீண்டது. 'சர்பத் கலக்குவதைப்போல்' எளிமையாக்கினால் தான் பொது மக்களுக்குச் செரிமானம் ஆகும் என்பது எழுத்தாளர்கள் கண்ட உண்மை. கோழிக் குஞ்சுகள் தானிய மணிகளை ஒவ்வொன்றாகக் கொத்தி உண்ணும். அரை வகுப்பில் (முதல் வகுப்புக்குக் கீழ் வகுப்பு) படிக்கும் சிறுவர்களும் சுவடிகளில் எழுத்தை ஒவ்வொன்றாகத் தான் ஒலித்துப் படிப்பர். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் கவிஞர் உள்ளத்தில் ஒன்று சேர்ந்து ஒரு கவிதையாக உருவெடுக்கின்றன. சிட்டுகளுக்குத் தீனியிட்ட சேடியின் செயலும் பிள்ளைகட்குச் செந்தமிழ்த் தீனியிட்ட தலைவியின் செயலும் ஒன்று சேர்ந்து 'பாலொடு தேன் கலந்தது போல்' சுவை மிகுந்து ஓர் அழகான சொல்லோவியமாக வெளிப்பட்டிருப்பதைக் கட்டுரையில் விளக்கியிருந்தேன்.

கவிஞர் துறையூரில் என் இல்லத்தில் தங்கியிருந்தபோது இக்கட்டுரையை அவரிடம் காட்டினேன். படித்து அதிசயித்துப் போனார். அந்த அதிசயத்தால் என்னை

கட்டி அணைத்துக் கொண்டார். அவர் என்னை நெருங்கிய போது என் எலும்புகள் நொருங்கி விடுமோ என்று கூட அஞ்சினேன்! உடும்புப் பிடி. சிறந்த பயில்வான் அல்லவா? ''நான் இக்கவிதையைப் படைக்கும்போது கூட இக் காட்சிகள் என் மனத்தில் தோன்றவில்லை. உங்கள் கட்டுரையால் என் கவிதையின் 'மாற்று' தெரிகின்றது. கோலார் தங்க வயலில் எடுக்கப் பெற்றுத் தூய்மையாக்கப் பெற்ற தங்கத்தின் மாற்று 'கட்டளைக் கல்லில்' உரைக்கப் படும் போதுதானே தெரிகின்றது!'' என்று சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்.

துறையூரில் இருந்தபோது காலையில் காஃபி அருந்திய பின் ஓர் அரைமணி நேரம் உலாவச் செல்வோம். அப்போது மூடப் பழக்கங்களை ஒழிக்கும் பல திட்டங் களைக் கூறுவார். அவை அனைத்தும் பயங்கரமானத் திட்டங்கள். அவை யாவும் சமூக விரோதமான செயல்கள். ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரை அவமானப்படுத்தும் செயல்கள். அவை செயற்பட்டால் திட்டத்தில் ஈடுபடு வோர் அனைவருக்கும் சிறைவாசம்தான் கிடைக்கும் என்று கவிஞருக்கு எடுத்துச் சொன்னேன். 'ரெட்டியார், எனக்கு மட்டிலும் இது தெரியாதா? பொதுமக்களிடம் நிதி திரட்டி அந்த நிதியைக் கொண்டு சிறைத் தண்டனை அநுபவிப்போர் குடும்பத்தினரைக் காக்க வகை செய்ய வேண்டும். மூலத்தைக் களையும்போது பல்வேறு இக் கட்டுகளைச் சந்திக்க நேரிடும். அவற்றைச் சமாளிக்கத் தான் வேண்டும்' என்று சொல்லுவார்.

துறையூரிலிருந்த காலத்தில் ஐந்து நாட்களில் மாலை யில் நான்கு இடங்களில் நான்கு கூட்டங்கட்கு ஏற்பாடு செய்து கூட்டத்திற்குப் பதினைந்து ரூபாய் வீதம் சன்மானமாக வாங்கித் தந்ததாக நினைவு. அக்காலத்தில் ரூ60/= ஒரு கணிசமான தொகையே. ஐந்து நாட்கள் ஐந்து மணி போல் உருண்டோடின. என் அருமை நண்பர் மணவாளன் ஓட்டிச் செல்லும் பேருந்தில் ஏற்றித்

திருச்சிக்கு அனுப்பி வைத்தேன். இதற்கெல்லாம் என் தோழ ஆசிரியர் திரு. P. மாத்ருபூதம் தான் உதவி செய்தார்.

இதன் பிறகு சுமார் இருபதாண்டுக் காலம் கவிஞரைச் சந்திக்கவில்லை. காரைக்குடியில் பணியாற்றியபோது (1950—60) கவிஞரின் பல நூல்கள் வெளி வந்து விட்டன. அவற்றையெல்லாம் நன்கு படித்துச் சுவைத்தேன். என் அருமை நண்பர் திரு. நாராயணன் செட்டியார் (கலைமகள் அச்சக உரிமையாளர்) நடத்தி வந்த 'வாரச் செய்தி' என்ற வார இதழில் தொடர்ந்து என் கருத்துகளை கட்டுரைகளாக வெளியிட்டேன். சுமார் இரண்டாண்டுக் காலம் கட்டுரைகள் வெளி வந்து கொண்டிருந்தன. அவற்றைச் சேமித்து வைத்திருந்தேன். இடமாற்றத்தால் அவை எப்படியோ காணாமற் போயின. இப்போது கவிஞரின் நூல்களைத் திறனாய்ந்து நூலொன்று வெளியிட நினைக்கின்றேன். இறையருளால் என் எண்ணம் நிறைவேறும் என்று கருதுகின்றேன்.

திருப்பதியில் பணியாற்றிய போது (1960—77), 1965 இல் 'திருமால் திருநெறி மன்றம்' அழைப்பை ஏற்று புதுச்சேரிக்குச் சொற்பொழிவாற்றச் சென்றிருந்தேன். இதற்குப் பூதூர் சுவாமிகள்தான் புருஷகாரமாக அமைந்தார். தமிழறிஞர் திரு. R. தேசிகம் பிள்ளை அவர்களின் விருந்தினனாக அவர் வீட்டில் அனைவரும் தங்கியிருந்தோம். அப்போது கவிஞரைப் பார்க்கச் சென்றேன். ஈசுவரன் கோயில் தெருவிலிருந்து அவர் இல்லம் இப்போது பெருமாள் கோயிலுக்கு மாற்றப் பெற்றிருந்தது. அங்குச் சென்று ஒரு மணி நேரம் கவிஞருடன் அளவளாவிக் கொண்டிருந்தேன். அதன் பிறகு கவிஞரைச் சந்திக்கவில்லை, கவிஞரும் திருநாடு அலங்கரித்து விட்டார்.

ஓய்வு பெற்ற பிறகு சென்னையில் வாழ்கின்றேன். சென்ற ஆண்டு (பிப்பிரவரி, மார்ச்சு, ஏப்பிரல் திங்களில்),

புதுவைப் பல்கலைக் கழகப் பணியாக மும்முறை புதுச்சேரிக்குச் சென்றிருந்தேன். அப்போது என் அரிய நண்பர் திரு. அருணகிரி (செயலர், புதுச்சேரிக் கம்பன் கழகம்) புதுச் சேரியில் பல இடங்களைக் காட்டிச் செல்லும்போது பாரதியார், பாரதிதாசன் நினைவு இல்லங்கட்கும் இட்டுச் சென்றார். பாரதிதாசன் நினைவு இல்லத்தில் கவிஞரின் புதல்வி பணியாற்றிக் கொண்டிருக்கின்றார். அவர்களோடு உரையாடி மகிழ்ந்தோம்.

□ □ □

இவருடைய சிறு பாட்டுகளில் சில நல்ல கவர்ச்சியைப் பெற்றுள்ளன. அவற்றில் கற்பனை அழகும் ஓசையின்பமும் ததும்பி நிற்கின்றன. கருத்துப்பான்மைக்கும் இலட்சியப் பொலிவுக்கும் முக்கியத்துவம் உள்ளதேயன்றி வெறும் இலக்கியச் சுவைக்கும், பரம்பரையாகப் புலவர்கள் கையாளும் ஏட்டுக் கற்பனைக்கும், இலக்கு இல்லாத உணர்ச்சிக்கும் முக்கியத்துவம் இல்லை. இந்தக் கூறு பாவேந்தரின் கவிதைக்குள்ள கவனிக்கத் தக்க தனிப் பண்பாகும். இவருடைய காதல் பாட்டுகளில் சில கனிந்த உணர்ச்சி ஓவியங்களாகத் திகழ்கின்றன. ஆனால் பல பாடல்களின் சுவையையும் கவிதை எழிலையும் பிரசார ஆவேசம் மங்க வைத்துள்ளது எனலாம். உலகம் தோன்றின நாள் முதல் பெருங் கவிஞர்கள் போற்றி வந்த காதல் தத்துவத்தின் அகண்ட தன்மையும் தெய்விக மாட்சியும் இவர் கவிதைகளில் காண முடியவில்லை.

தற்கால நடைமுறையிலுள்ள பல பொருள்களைப் பற்றிப் பாடப் பெற்ற விடுபாட்டுகள்—தனிப் பாடல்கள் சுவையுடன் மிளிர்கின்றன. தமிழ் மொழிபற்றிய சில பாடல்களின் அடிகள்; உலகப்பன் பாட்டில் சில அடிகள், தாலாட்டும் பாடல்களில் சில கண்ணிகள், தமிழ் நாட்டில் சினிமா, புத்தகசாலை, பத்திரிகை இவற்றில் சில பாடல்களின் அடிகள் படிப்போரின் மனத்தில் எப்போதும் ரீங்காரம் செய்து கொண்டேயிருக்கும். இந்த அநுபவம் எனக்கும் உண்டு.

# 14. கவிராசபண்டிதர் செகவீர பாண்டியனார்

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில் (குறள்—394)

1945-என நினைக்கின்றேன்; என்அருமைநண்பர் திரு. K.S. முத்துவேல் பிள்ளை (சிலோன் லேபர் கமிஷன் ஏஜண்ட்) அவர்கள்மூலம் செகவீரபாண்டியனார் துறை யூருக்குச் சுமார் ஒன்பது கல் தொலைவிலுள்ள புலிவலம் என்ற ஊருக்கு வந்து ஒரு திருமணத்தில் கலந்து கொள்ளு கின்றார் என்று கேள்வியுற்றேன். புலிவலத்திலுள்ள திரு. சுப்பிரமணியம் செட்டியார் என்பவர் துறையூரில் ஒரு பெரிய துணிக்கடை வைத்திருந்தார். கடை புகழ் பெற்ற கடை. இதனால் செட்டியார் எல்லோருக்கும் நன்கு அறிமுகமானவர். அவர் தம் மகள் திருமணத்தைப் புலிவலத்தில் நடத்தினார். எனக்கும் அழைப்பு வந்திருந்தது. இந்தத் திருமணத்தில் செகவீர பாண்டியனார் இரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்துவதற்கு ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. திருமணத்தன்று பிற்பகல் 2-30க்கு 'சீதைத் திருமணம்' என்ற தலைப்பில் பேசுகின் றார் என்று அறிவிக்கப்பெற்றிருந்தது.

திரு.முத்துவேல் பிள்ளையும் நானும் திருமணத்தில் கலந்து கொண்டோம். இவ்வளவு தொலைவு வந்திருந்த திரு.செகவீர பாண்டியனாரை என் பள்ளிக்கு எப்படி

யாவது அழைத்து வந்து பள்ளி மாணவர் இலக்கியக் கழகத்தில் பேச வைக்க வேண்டும் என்பது என் ஆசை. இந்த ஆசையுடன் தான் நான் புலிவலம் சென்றிருந்தேன். திரு.முத்துவேல் பிள்ளையும் நானும் இதற்காக ஒரு காரில் சென்றிருந்தோம். காலையிலேயே திரு.செகவீர பாண்டியனாரிடம் பேசி அன்று மாலை புலிவலத்தில் சொற்பொழிவு முடிந்தவுடன் துறையூர் நிகழ்ச்சியை நிறைவேற உறுதி செய்தோம். நானும் என் பள்ளி ஆசிரியர்களுடன் கலந்து பேசி சுமார் மாலை நான்கு மணிக்கு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தேன்.

பிற்பகல் சுமார் 2-மணிக்கு கூட்டம் தொடங்கியது. சுமாரான கூட்டம். 100 பேர் வரை கூடியிருந்தனர். திருமணத்திற்கு வந்திருந்த பெரும்பாலோர் இலக்கியத்தைச் சுவைக்கத் தெரியாதவர்கள். திரு. செட்டியார் இலக்கிய சுவைஞர்தான். அதனால்தான் புலவரைத் திரு K.S. முத்துவேல் பிள்ளையவர்கள்மூலம் இந்த ஏற்பாடு செய்திருந்தார். திரு. பாண்டியனார் 'சீதை திருமணம்' என்ற தலைப்பில் பேசிய பேச்சு அற்புதமாக அமைந்திருந்தது. ஆனால் கூட்டம் இரசிகர் கூட்டமாக இல்லை. பேச்சு நடைபெற்றுக் கொண்டு இருக்கும் பொழுதே 2-45க்கு 'சிற்றுண்டிக்கு இலை போட்டாய் விட்டது' என்ற அறிவிப்பு செய்யப்பட்டது. ஒரு பத்து பேரைத் தவிர அனைவரும் சிற்றுண்டிக்காக எழுந்து சென்று விட்டனர். திரு பாண்டியனாருக்கு உற்சாகம் தளர்ந்து விட்டது. ஒரு பதினைந்து மணித்துளிகளில் தம் சொற்பொழிவை முடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார் திரு. பாண்டியனார்.

சிற்றுண்டி முடிந்ததும் அனைவரும் வந்து மீண்டும் கூடினர். திரு.சுப்பிரமணியம் செட்டியார் மீண்டும் சொற்பொழிவைத் தொடங்குமாறு திரு. பாண்டியனாரைக் கேட்டார். திரு பாண்டியனர் சொன்னார்:

''இன்றைய பேச்சு இவ்வளவு தான். ஒரு முறை தான் சீதைத் திருமணம். இனி நாளைக்குத்தான் பேச்சு. 4-மணிக்குத் துறையூரில் பேசவேண்டும்.'' என்று கண்டிப் பாகச் சொல்லிவிட்டார். 'திருப்பூட்டு முடிந்து திருமணத் திற்குத் தாமதமாக வந்தவர்கட்காக மீண்டும் ஒரு முறை திருப்பூட்டு நிகழ்ச்சியை மேற்கொள்ள முடியுமா?' என்றே கேட்டுவிட்டார் நேராகச் செட்டியாரையே. பாவம், திரு.சுப்பிரமணியம் செட்டியார். தம் திருமணத் திற்கு வந்திருந்தோரைப் பேச்சைச் சுவைக்க வைக்க முடிய வில்லை. கோவில் மேளம்போல் இதனை ஏற்பாடு செய்து விட்டார். மேளக்காளர் 'தட்டு' என்றால் தட்டுவார்கள்; 'நிறுத்து' என்றால் நிறுத்தி விடுவார்கள். திரு. பாண்டிய னாரை மேளக்காரரைப்போல் நினைத்துக் கொண்டது தான் துரதிர்ஷ்டமானது; அவருக்குத் தெரிந்தது அவ்வளவுதான்!

அக்காலத்தில் செகவீரபாண்டியனாரின் 'திருக்குறள் குமரேச வெண்பா' வெளிவந்திருந்தது. சிறந்த நூல், புத்தக சந்தையில் அதிக விற்பனை இல்லை. பள்ளிக் கூடங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் மிக்கப் பரிந்துரை யுடன் வலிந்து கட்டவேண்டியிருந்தது அம்மாமி சுண்டல் விற்பது போல். இது தவிர 'புலவர் உலகம்' என்ற திங்கள் இதழ் ஒன்றையும் வெளியிட்டு வந்தார். அது பெரும் பாலும் கம்பராமாயணத்தின் விரிவுரையாகவே அமைந் திருந்தது. 'திருக்குறள் குமரேச வெண்பா' ஒரு செட்டு பள்ளிக்காக வாங்கிக் கொண்டேன். மூன்று வருடத்திற்கு புலவர் உலகத்திற்குச் சந்தாவும் செலுத்தினேன் இதனால் தான் துறையூருக்கு வர ஒப்புக் கொண்டார் பாண்டிய னார். இந்த இரகசியத்தை நன்கு தெரிந்து வைத்திருந் தார் திரு K.S.முத்துவேல் பிள்ளை. அரைமணி நேரத்தில் திரு முத்துவேல் பிள்ளையின் கார் எங்களைத் துறையூர் பள்ளியில் கொண்டு வந்து சேர்த்தது. மாணவர்களும்

ஆசிரியர்களும் திரு பாண்டியனாரின் பேச்சினைச் செவி மடுக்கத் தயாராக இருந்தனர்.

துறையூர் கூட்டத்திற்கு செய்திருந்த ஏற்பாடு திரு பாண்டியனாருக்கு மிக்க மகிழ்ச்சியைத் தந்தது. 'கவிதை இன்பம்' என்ற தலைப்பில் மிக அற்புதமாகப் பேசினார். என் ஐந்து வருடப் பயிற்சியினால் துறையூர் கூட்டம் நன்கு சுவைக்கும் பழக்கம் பெற்றிருந்தது. ஊர்ப்பெரு மக்களும் ஓர் இருபது பேருக்குக் குறையாமல் வந்திருந்தது திரு பாண்டியனாருக்கு மிக்க உற்சாகத்தை அளித்தது. சுவையாக அமைந்த இந்தப் பேச்சில் குறிப்பிட்ட சிந்தாமணி பாடல் ஒன்றின் விளக்கமும் கம்பராமாயணப் பாடல் ஒன்றின் விளக்கமும் இங்கு மலரும் நினைவாக வெளிவருகின்றது.

சிந்தாமணியில்: திரு பாண்டியனார்பேச்சு. ''அக்காலத்தில் தமிழகம் மிக்க வளம் பெற்றிருந்தது. பல பாவலர்கள் தமிழகத்தில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் ஏராளமான பாக்களைப் பாடி மக்களுக்குச் செவியுணவு நல்கி வந்தனர். தமிழர்களது வாழ்க்கைக்கு உயிராக இருந்த தமிழ் மொழியும் இவர்களால் வளம் பெற்றது. பொதுவாகப் பாவலர்களைக் கற்பனைக் 'களஞ்சியம்' என்று சொல்லலாம். இழிந்த உலோகங்களையும் உயர்ந்த பொன்னாக்கும் இரதவாதிகள் போன்றவர்கள் இவர்கள். பொது மக்களின் எண்ணங்களையும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லக் கூடிய ஆற்றல் பெற்றவர்கள். இத்தகைய சிறந்த பாவலர்களுள் திருத்தக்கதேவர் என்பவர் ஒருவர். சீவகசிந்தாமணியைப்படைத்து அதனைத் தமிழ்த் தாய்க்குக் காணிக்கையாகத் தந்துபெருமை படுத்தியவர்''

''ஒருநாள் தேவர் ஒருவயல் வழியாகச் செல்ல நேர்ந்தது. மருத நிலத்தில் வாழும் மக்கள் நல்ல மாடுகளை வைத்திருப்பர் என்பதை நாம் அறிவோம். பாவலர் சென்ற வயலுக்குரியவன் இரண்டு காளைகளைச் சோடி

சேர்த்து வைத்திருந்தான். இக்காலத்துக் காங்கேயன் காளைகள்போல் அவை மிகவும் அழகாக இருந்தன. இரண்டையும் அப்போதுதான் எங்கோ இரண்டிடங்களில் வாங்கிச் சோடி சேர்த்திருந்தான்.

''காளைகள் நின்ற காட்சி தேவரின் மனத்தைக் கவர்ந்தது. அவை நின்ற கம்பீரமான நிலை பாவலரின் மனத்தில் நிலைபெற்றது. அவற்றின் உருவப்பொலிவும், ஒரே விதமான கொம்புகளின் அழகும், அவரது மனத்தைக் கொள்ளை கொண்டன என்று சொல்லலாம். ஒன்றை யொன்று முகர்ந்து கொண்டும், ஒன்றோடென்று சாய்ந்து கொண்டும், நக்கிக்கொண்டும், ஒன்றையொன்று அன்பு காட்டிக்கொண்டும் நின்ற காட்சிகள் எவர் மனத்தையும் கொள்ளை கொள்ளாமல் இருத்தல் முடியாது. இதனை இப்படியே மனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார் பாண்டியனார்.

தொடர்ந்து ''அடுத்த நிகழ்ச்சியொன்றைச் சிந்திப் போம். பெண்ணை மணந்து கொண்டதனால் மாமன் மருகர்களிடையே நிலவி வரும் அன்பு தனிப்பட்ட ஒன்று. புதிதாக மணந்த மாப்பிள்ளை, மாமனார் வீட்டார்மீது (மைத்துனன் மீது) ஒரு தனியான அன்பை வைத்திருப்பது இன்றைய உலகில் நாம் கண்கூடாகக் காணும் நிகழ்ச்சி. மாப்பிள்ளை சிலசமயம் ஈன்று வளர்த்த தாயையும் இகழ்கின்றான்; கல்வி பயிற்றித் தன்னைச் சான்றோ னாக்கிய தந்தையையும் இகழ்கின்றான். இஃது இகழ வேண்டும் என்ற எண்ணத்தினாலன்று; மாமனார் வீட்டார்மீது வைத்துள்ள 'மோகமே' இதற்குக் காரணம்.

திருத்தக்க தேவர் சிந்தாமணியைப் பாடுங்கால் காளைகளின் காட்சியும் மாமன் மருகரது தொடர்பும் அவரது நினைவிற்கு வந்தன. ஏமாங்கத நாட்டு வளத்

தைப் பாடுங்கால் இக்கருத்துகள் அடங்கிய சொல் லோவியம் வெளிப்படுகின்றது.''

மாமனும் மருகனும் போல அன்பின;
காமனும் சாமனும் கலந்த காட்சிய;
பூமனும் அரிசிப்புல் லார்ந்த மோட்டின;
தாமினம் அமைந்துதம் தொழிலின் மிக்கவே.[1]

[சாமன் — காமன் தம்பி; மோடு—வயிறு]

இனி கவிதையிலுள்ள உவமை அழகினை விளக்கத் தொடங்குகின்றார் திரு. செகவீர பாண்டியனார். ''எல்லா அன்பையும் விடத் தாயன்பு சிறந்ததாயிற்றே. அதனைக் கையாளாது விட்டது என்ன காரணம் என்று கேட்கலாம். சேர்ந்து நின்ற இரண்டும் ஆண்கள். தாய் பெண்பாலாதலால் அவ்வுண்மையைக் கொள்ளவில்லை.''

''சரி; தாயன்புக்கு அடுத்த படியாக இருப்பது தந்தை யன்பு. அதையாவது எடுத்துக் கொள்ளலாமே என்றால், அங்குக் கட்டுப்பட்டிருந்த காளைகளில் ஒன்று மற்றொன்றி லிருந்து பிறக்கவில்லை; உழவன் இரண்டு காளைகளையும் வெவ்வேறு இடத்தில் வாங்கிச் சோடி சேர்த்திருந்தான். ஆகவே, அந்த உவமையையும் கொள்ளவில்லை.''

''அதற்கடுத்த படியாக உடன் பிறப்பைக் கூறியிருக்க லாம்; அண்ணனும் தம்பியும்போல் அன்பு காட்டி நின்றன என்று சொல்லியிருக்கலாம். அப்படியும் சொல்லவில்லை. இரண்டும் பிறந்த இடம் வெவ்வேறாதலால்—ஒரே வயிற்றில் பிறக்கவில்லையாதலால்—அவ்வுவமையும் கை விடப் பெற்றது''

''அதற்கும் அடுத்த படியாக 'ஆசிரியனும் மாணவ னும் போல' என்ற உவமையை அமைத்திருக்கலாம்.

1. சீவக சிந்தாமணி—நாமகள் இலம்பகம்-14

அப்படியும் அமைத்துக் கூறவில்லை. இரண்டு காளைகளும் ஒத்த பருவங்களுடையன. இவ்வுவமையைக் கொண்டால் பருவ வேறுபாடு என்ற குற்றம் நிகழும். ஆகவே அந்த உவமையையும் நீக்கி விட்டார்''

''வெவ்வேறு இடங்களில் பிடித்து வந்த காளைகள் அன்புடன் ஒன்றுபட்டிருக்கும் நிலை வெவ்வேறு இடங்களிலிருந்தவர்கள் பெண் கொண்டதால் புதிய அன்புடன் பொருந்தியிருக்கும் நிலைதான் பொருந்தும். இவ்வாறு ஆழ்ந்த சிந்தனையுடன் அமைத்த செய்யுள் நமது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றதன்றோ?'' என்று கூறி தமது நுண்மாண் நுழைபுலத்தையே காட்டிக் கூடியிருந்தோரின் மதிப்பைப் பெற்றார் திரு பாண்டியனார்.

கம்பராமாயணத்தில் : கம்பராமாயணத்தில் ஒரு பாடலைக் காட்டி அதன் விளக்கம் தரும்போது புலமையின் கொடு முடியிலிருந்த ஒரு புலவர் பெருமானைக் காண முடிந்தது. ''கவிநாயகனான அநுமனைக் கவிக்கு நாயகனான கம்பன் 'ஆணியாய் உலகுக்கு எல்லாம் அறம் பொருள் நிரப்பும் அண்ணல்' என்று சிறப்பிப்பான். அறம் என்ற பொருள் தழைப்பதற்கு அநுமனே முதற்காரணன் என்பது கவிஞனின் குறிப்பு. இத்தகைய சீரும் சிறப்பும் மிக்க அஞ்சனைக் குமாரனைக் கம்பநாடன் பல அழகிய சொற்றொடர்களால் சிறப்பித்துப் பாராட்டுவான். கிட்கிந்தா காண்டம் மராமரப் படலத்திலிருந்து காவியம் நிறைவு பெறும் வரையிலும் கவிநாயகனது சிறப்பைக் கவிக்கு நாயகன் ஆங்காங்குக் குறிப்பிட்டுச் சொல்லுகின்றான்.

செவிக்குத் தேனென இராகவன்
    புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன்[2]

2. சுந்தர. ஊர்தேடு—132

என்று ஓரிடத்தில் சிறப்பிப்பான். இந்தச் சுவையான கவிதைப் பகுதியினை எண்ணும்போது கம்பனைச் சுவைத்துத் தேக்கிட்ட நம் மனக்கண் முன்பு எண்ணற்ற காட்சிகள் தோன்றுகின்றன.''

இராகவன் புகழினைச் ''செவிக்குத் தேனாக இனிக்கும் வண்ணம் திருத்திய பெருமையை இரு கவிநாயகரிடத்திலும் கண்டு களிக்கலாம். வான்மீகத்திலுள்ள சிலவற்றைத் திருத்தித் தமிழர்களின் மரபுக்கும் நாகரிகத்திற்கும் ஏற்றவாறு இராமகாதையை அமைத்த பெருமை கவிநாயகனாகிய கம்பனுக்கு உரியது. இராமனது காடுறை வாழ்க்கையின் வரலாற்றில் நிகழ்ந்த சில பேராபத்துகளை நீக்கி அதனைச் செம்மையாக மாண்புறுத்திய பெருமை கவிநாயகனாகிய வாயுபுத்திரனைச் சாரும். காடுறை வாழ்க்கைக் காலத்தில் காவிய நாயகனாகிய இராமனது வரலாற்றில் எழுந்த கோணல்கள் எவை என்பதையும் அவற்றை நிமிர்த்தின அநுமனின் திறத்தினையும் உங்கட்குக் காட்டுவேன்'' என்று கூறி அவற்றை விளக்கத் தொடங்கினார் புலவர் பெருமான்.

முதலாவது: சீதாப்பிராட்டி பல திங்கள்களாக அரக்கியர்களால் நெருக்குண்டு மிகவும் 'மென்மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்து' கிடக்கின்றாள். புலிக்குழாத்தகப்பட்ட மானிளம் பேடைபோல் கண்கள் இமைத்தலையும் முகிழ்த்தலையும் துறந்து வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யுடன் விளங்குகின்றாள். இந்நிலையில் இராவணன் பலவித விருதுகளுடன் பிராட்டியிருக்கும் இடம் வந்து பலவிதமாகப் பேசித் தன் கருத்தை முற்றுவிக்குமாறு வேண்டியதையும், பின்னர் இலங்கை வேந்தனின் ஆணைப்படி அரக்கிமார் பலவாறு பயமுறுத்தியதையும் திரிசடை பிராட்டியாரைத் தேற்றியதையும் மரத்தின்மீது மறைந்து நிற்கும் மாருதி காண்கின்றான். பிறகு மந்திர வலியால் அரக்கிமார்களை உறங்கச்

செய்கின்றான். அவர்கள் உறங்கவே, சீதாப் பிராட்டி சந்திரனையும் இரவையும் இருளையும் பூங்கொடிகளையும் பலவாறு விளித்துப் புலம்புகின்றாள். சென்ற நிகழ்ச்சி களையெல்லாம் மனத்திற்குக் கொண்டு வந்து அசை போடுகின்றாள். நஞ்சனையான் அகம் புகுந்தமைக்கு நைந்து நைந்து 'மருந்தும் உண்டுகொல் யான் கொண்ட நோய்க்கு' என மயங்குகின்றாள்.

பொறையிருந் தாற்றியென்
உயிரும் போற்றினேன்
அறையிருங் கழலவன்
காணும் ஆசையால்[3]
[பொறை—பொறுமை; அறை—ஒலிக்கின்ற]

என்று பேசுகின்றாள். இராமன் தன்னை மீட்டபிறகு 'இற்புகத் தக்கவள் அல்லை' என்று கூறினால் தன் கற்பு நிலையை எங்ஙனம் காட்டி மெய்ப்பிப்பது என ஏங்கு கின்றாள்.

ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறெனச்
சாதல்காப் பவரும்என் தவத்தின் சாம்பினார்
ஈதலாது இடமும்வேறு இல்லை என்(று)ஒரு
போதுலா மாதவிப் பொதும்பர் எய்தினாள்[4]

[ஆறு—வழி; தவம்—நல்வினை; சாம்பினார்—உறங் கினார்; பொதும்பர்—தோப்பு]

இங்ஙனம் பிராட்டி தன்னை முடித்துக் கொள்ள முயலும் தருணத்தில் இராமநாமத்தைச் சொல்லித் தன்னை அண்டர் நாயகன் தூதன் என்று கூறி அவளது செயலைத் தடுத்து நிறுத்துகின்றான் அநுமன். இங்ஙனம் அநுமன்

3. சுந்தா. உருக்காட்டு—11
4. ஷை ஷை—21

உற்ற சமயத்தில் செயத் தக்கதைச் செய்யாதிருப்பின் பிராட்டியாரின் நிலை என்ன ஆயிருக்கும் என்பதை நாம் அறிவோம். இராமனது பரக்கும் தொல்புகழும் அழிந்து பட்டிருக்கும். இங்ஙனம் அழியாது முதற்கோணலை நிமிர்த்தின பெருமை அஞ்சனைச் சிறுவனைச் சாரும்'' என்று விளக்குவார் கவிராசபண்டிதர்.

இரண்டாவது: ''இந்திரசித்து தொடுத்து விடுத்த அரவக்கணையால் அல்லோலகல்லோலப்பட்டுப் போயிற்று வானரசேனை. இலக்குவனும் நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்கின்றான். வீடணன் புலம்புகின்றான்; இராமனும் சோர்வுற்றுப் பேசாத நிலையை அடைகின்றான். ஆயின் இந்த அவலநிலையெல்லாம் கருடன் வரவால் மாறிவிடுகின்றது. வானரசேனையினிடையே ஆரவாரம் கிளம்புகின்றது. படைத் தலைவர்களைப் போருக்கு அனுப்புகின்றான் இராவணன். அவர்களும் அழிந்து படுகின்றனர். அடுத்து இராவணன் அநுமதி பெற்றுக் கரன் புதல்வன் மகரக்கண்ணன் போர் அரங்கில் தோன்றுகின்றான். அவனும் இராமனது கணையால் மாய்ந்தொழிகின்றான். மீண்டும் இந்திரசித்து போர் அரங்கில் தோன்றுகின்றான். இம்முறையும் கடும்போர் நிகழ்கின்றது. இந்திரசித்து விண்ணில் மறைந்து மலரவன் படையை ஏவுகின்றான். அதன் விளைவால் இலக்குவன் அயர்ந்துபோகின்றான். அநுமனும்சோர்ந்துவீழ்கின்றான். அருக்கன் மகன், வாலி காதலன், நீலன், இடபன் பனசன் குமுதன் முதலிய வானர வீரர்கள் உயிர் துறக்கின்றார். இங்ஙனம் இறந்துபட்ட வீரர்களையெல்லாம் கண்ட இராமன் பெருந்துயருறுகின்றான். தம்பியின் நிலையைக் கண்டு உளம் துடித்து உயிர் பதைத்து ஒன்றும் பேசாது தன்னை மறந்து துயில்கின்றான். அரக்கர்கள் இலங்கையில் வெற்றி விழா கொண்டாடுகின்றனர்; இந்நிலையில் வீடணன் அநுமன்மீதுள்ள அம்புகளைக் களைந்து அவனுடைய அயர்ச்சியைப் போக்குகின்றான். அடுத்து,

சாம்பவன் மூலம் உயிர் பிழைப்பிக்கும் சஞ்சீவி மருந்தினை அறிகின்றனர். சாம்பவானே மருந்திருக்கும் இடத்தைக் கூறி அதற்கு வழியையும் செப்புகின்றான். அநுமனும் பேருருவம் கொண்டு விரைந்து சென்று மருந்திருக்கும் மலையையே கொணர்ந்து விடுகின்றான். யாவரும் உயிர் பெற்றெழுகின்றனர். இராமனும் மாருதியை நோக்கி உள்ளம் உருகப் பேசுகின்றான். இங்ஙனம் இராமன் வாழ்வில் நேர்ந்த இரண்டாவது கோணலை நிமிர்த்தினான் கவிநாயகன்.'' என்பார் செகவீர பாண்டியனார்.

மூன்றாவது : ''வீணைக் கொடியோனை வீழ்த்தி மிதிலைச் செல்வியை மீட்டிக் கொண்டு இராமன் அயோத்திக்கு மீண்டு வருங்கால் இடையே பரத்துவாசரது ஆச்சிரமத்தில் தங்க நேரிடுகின்றது. காடுறை வாழ்க்கையின் தொடக்கத்தில் கொடுத்த வாக்கினையொட்டி முனிவனின் விருந்தினனாகத் தங்கி விடுகின்றான். எல்லோரும் விருந்துண்ணத் தொடங்குங்கால் விரைசெறி கமலக்கண்ணன் அநுமனை விளித்துச் சொல்லுகின்றான்.

''இன்று நாம்பதி வருதுமுன்
மாருதி! ஈண்டச்
சென்று தீதன்மை செப்பிஅத்
தீயவித்து இளையோன்
நின்ற நீர்மையும் நினையும்நீ
தேர்ந்து எம்மின்நேர்தல்
நன்று''[5]

என்று இராகவன் கூறியதைக் கேட்டு அநுமனும் கணையாழியைக் கைக்கொண்டு தந்தை வேகமும் தனது நாயகனது தனிச் சிலையினின்று புறப்படும் அம்பின் வேகமும் பின்னிடும்படி விரைவாகச் சென்று இராமன் வருகையை வழிமீது விழி வைத்துக் காத்திருந்த குகப் பெருமானுக்குச் சேயோன் வந்த வாசகத்தைக் கூறி

5. யுத்த—மீட்சி. 202

வான்வழிச் செல்லுகின்றான். பதினான்கு ஆண்டுகள் முடிந்தும் இராமன் வரவில்லையே என்று தீ மூட்டி அதில் விழுவதற்குத் தயாராக இருந்த பரதன்முன் குன்றுபோல் நெடு மாருதி சென்று,

ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்றுயிர் வீட்டினால்
உய்யி மேயவன் என்றுரைத் துட்புகாக்
கையி னால்எரி யைக்கரி யாக்கினான்.[6]

[வீட்டினால் – ஒழிந்தால்]

''தலைவனான இராமன் வந்தான்; பெரியோன் வந்தான். உண்மை தவறாத உன் உயிர் ஒழிந்தால் இராமன் உயிர் வாழ்வானா?'' என்று உரைத்துக்கூடியிருந்த கூட்டத்தினுட் புகுந்து நெருப்பைப்பிசைந்து அவித்துக்கரியாக்குகின்றான். இங்ஙனம் மாருதி உற்ற சமயத்தில் வந்து எரியை அவியா திருப்பின் பரதனின் நிலை யாதாயிருக்கும்! இறந்து போயிருப்பானன்றோ? இதனைக் கண்ணாலும் காணச் சகிக்காத—இராமன் முதலிய அனைவரும் அத்துயர் தாங்காது பரதன் வழியையே பின்பற்றியிருப்பர். அவ்வித முடிவு ஏற்படுமாயின் இராமசரிதமும் வேறுவிதமாயிருக்கும். இராகவன்புகழும் இனித்திராது'' என்று கூறி முடித்தார் திரு. பாண்டியனார்.

தொடர்ந்து, ''இவ்வாறு புகழ் மணக்கும் இராம காதையின் இடையே புகுந்த மூன்று கோணல்களையும் நிமிர்த்திச் செப்பஞ் செய்த பெருமை அநுமனைச் சார்ந்துள்ளதனால், கவிக்கு நாயகனாகிய கம்பநாடன் கவி நாயகனாகிய அநுமனைச் 'செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்' எனச் சுவையாகச் சுட்டியுரைத்தனன். 'கவிக்கு நாயகன்' கவிநாயகன்' என்ற அருமையான இரண்டு சொற்றொடர்

6. யுத்த மீட்சி-249

களும் கம்பனையும் மாருதியையும் குறிப்பதை அறிந்து மகிழ்கின்றோம். இவை இரண்டும் படிப்போரின் சிந்தையில் தேன்பிலிற்றும் சிறப்பான சொற்றொடர்களாக நின்று சிந்தைக்கும் செவிக்கும் இன்னமுது ஊட்டி நிற்பதையும் நாம் உணர்கின்றோம்'' என்று கூறி உரையைத் தலைக் கட்டினார் புலவர் பெருமான்.

நான் ஆர்வத்தனாகத் தமிழ் இலக்கியத்தில் ஈடுபட்டிருந்த காலத்தில் துறையூருக்கு வந்தார் பாண்டியனார். இவர் எனக்கு அடிக்கடிச் சந்திக்கக்கூடிய தொலைவில் இருந்திருப்பாரேயானால் இவரிடம் எவ்வளவோ நன்மையடைந்திருப்பேன். கூட்டம் முடிந்து திரும்பவும் மறுநாள் பேச்சுக்குப் புலிவலத்திற்கு அனுப்பியபோது உண்மையிலேயே ''உள்ளப் பிரிந்தேன்.'' அந்தக் காட்சி இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது.

இன்று கவிராசபண்டிதர் நம்மிடையே இல்லை. இவருடைய சொற்பொழிவுகள் அக்காலத்தில் ஒரு கல்விப் பணியாகவே இருந்து வந்தன. இவருடைய மிடுக்கான வாக்கு சில சமயம் கட்டபொம்மனின் வீர வாக்குகளை நினைவூட்டும் என்றும் வேறு சில சமயங்களில் இவர் சொற்பொழிவுகளை வீசி வெஞ்சமர் புரியாது ஊமைத்துரைபோல் பேசாத பேச்சாகத் தம் உணர்ச்சிகளைப் புலப்படுத்துவதும் உண்டு என்றும் இவருடைய பேச்சுகளை அடிக்கடிக் கேட்டவர்கள் மூலம் கேள்வியுற்றதுண்டு. கட்டபொம்மனின் மரபில்வந்த பெண்மணியைத் தம் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டவரல்லவா?

## 15. டாக்டர் மு. வரதராசனார்

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம்
வாய்மையொ(டு)
ஐந்துசால் (பு) ஊன்றிய தூண். (குறள்-983)

*1948* என நினைக்கின்றேன். டாக்டர் மு. வரதராசனாரை அவர் இல்லத்தில் சந்தித்ததாக நினைவு. அப்போது சேத்துப்பட்டில் ஒரு வாடகைவீட்டில் குடியிருந்தார். ஏதோ ஓர் அலுவல் நிமித்தம் சென்னைக்கு வந்திருந்தபோது அவரை மரியாதைக்காகச் சந்தித்தேன். அப்போது நான் துறையூர் உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியன். டாக்டர் மு.வ. பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர்., நானே பெருமுயற்சி கொண்டு நடுநிலைப் பள்ளியை உயர்நிலைப்பள்ளியாக்கின வரலாற்றை எடுத்துக் கூறினேன். ஆண்டு விழாவிற்கு மிகப் பெரியவர்கள் தலைமையில் தமிழ்ப் பேரறிஞர்கள் கலந்து கொண்டு வருகின்றார்கள்என்றும்,அவரையும்இந்த ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் வாரத்தில் நடைபெறும் ஆண்டு விழாவில் கலந்து கொண்டு மாணவர்கட்குப் பொருத்தமாக ஏதோ ஒரு பொருள் பற்றிப் பேச வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டேன். அவரும் தாம் பொதுவாகப் பொதுக் கூட்டங்களுக்குப் போவதில்லை என்றும், ஆனால் பள்ளியாக இருப்பதாலும் நான் நேரில் வந்து கேட்பதாலும் ஒப்புக் கொள்வதாகக் கூறினார். நான் துறையூர் திரும்பியதும் ஆண்டு விழா நாள் உறுதி

யானதும் எழுதுவதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டேன்.

ஆண்டு விழா நாள் உறுதியாயிற்று. திருச்சியில் புகழ் பெற்ற வக்கீல் கைலை அனந்தர் (சோமசுந்தரம் பிள்ளை) தலைமை ஏற்க ஒப்புக் கொண்டார். டாக்டர் மு. வ.வும் அந்த நாளுக்கு ஒப்புக்கொண்டு தமது வருகையை உறுதிப் படுத்தினார்; தூத்துக்குடி விரைவு இருப்பூர்தியில் வருவ தாகவும் எழுதியிருந்தார். நானும் மேல் வகுப்புப் பயணி கள் தங்கும் அறையில் காத்திருக்குமாறும் நான் ஒரு மாணவனை அனுப்புவதாகவும் எழுதியிருந்தேன். அவரை மாணவனுக்கு அடையாளம் தெரிய வேண்டுமே. ஏதோ ஓர் ஆண்டறிக்கையின் அட்டையில் டாக்டர். மு. வ., பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை ஆகிய இருவர் ஒளிப் படங்கள் (பாஸ்போர்ட் அளவில்) இருந்தன. அப்போது பள்ளியிறுதி வகுப்பில் படித்துக் கொண்டு இருந்த இராச மாணிக்கம் (மகாதேவி என்ற ஊரைச் சேர்ந்தவன்) என்ற மாணவனை இந்த அறிக்கையைக் கொடுத்து அடையாளம் கண்டு கொள்ளுமாறு அனுப்பியிருந்தேன். டாக்டர் மு. வ. சிரமமின்றித் துறையூர் வந்து சேர்ந்தார் முற்பகல் 8-30க்கு.

அந்தக் காலத்தில் பள்ளியின் ஆண்டுவிழா கோவில் பெருவிழா (பிரம்மோற்சவம்) போல் நடைபெறும். கொட்டகை அமைத்து ஒரு மாநாட்டுக்கு ஏற்பாடு செய்வது போல் செய்வேன். திருச்சியிலேயே காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு வந்திருந்தபடியால் குளிர்பானம் வழங்கிப்பள்ளியைச் சுற்றிபார்க்கஅழைத்துப் போனேன். பள்ளி வளர்ந்த வரலாற்றை எடுத்துக் கூறி னேன். சிற்றூரில் இவ்வளவு சிறப்பாகவும் உற்சாகமாகவும் கல்வித் தொண்டில் ஈடுபட்டிருந்த என்னை மிகவும் பாராட்டினார். ஒவ்வோர் ஆண்டுவிழாவிலும் பள்ளி ஆண்டு அறிக்கை அச்சிட்டு வழங்குவதை வழக்கமாகக்

கொண்டிருந்தேன். அதில் பள்ளித் தொடக்கம் முதல் அன்று வரை அது வளர்ந்த வரலாறு கூறப் பெற்றிருக்கும். சென்னையில் கூட பள்ளி ஆண்டுவிழாக்களில் இத்தகைய ஏற்பாடுகளைக் கண்டதில்லை என்று வியந்து கூறினார். ஆண்டுவிழாவில் திருமணத்திற்கு வருவது போல்— இல்லை ஓர் மாநாட்டிற்கு வருவது போல்—ஊர்ப் பெருமக்கள் திரண்டு எழுந்தருளியிருப்பதைக் கண்டு வியந்து போனார். அறிக்கை படித்தல், பரிசுகள் வழங்கல், சொற்பொழிவுகள் நிறைவு பெறுதல்—இவை நடைபெற்ற வுடன் நாடகம் ஒன்று நடைபெறும். இவை எல்லாம் (4-30—7-30)க்குள் நடைபெற்று முடிந்து விடும். உணவு முடிந்து (என் வீட்டில்தான் பத்து பேருக்கு) இரவு ஒன்பது மணிக்குள் திருச்சி சந்திப்பில் கொண்டு சேர்க்குமாறு என் அருமை நண்பர் திரு மணவாளனிடம் (பேருந்து ஓட்டி) சொல்லியிருந்தேன். அவரும் அங்ஙனமே கொண்டு சேர்த்து விட்டார். இப்படி டாக்டர் மு. வ. விடம் ஏற்பட்ட தொடர்பு அவர் திருநாடு அலங்கரிக்கும் வரைதொடர்ந்து நடைபெற்றது.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடையாளர் தொடர்பு (குறள்—783)

என்ற குறளின் உண்மையை இருவருமே அறிந்து கொண் டோம். 'நிறை நீர நீரவர் கேண்மை பிறை' (குறள்—783) என்ற வள்ளுவர் கூற்றுக்கிணங்க எங்கள் நட்பு வளர்ந்தது. ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டோம்.

1950-ஜூலை முதல் காரைக்குடியில் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக என் பணி தொடங்கியது. 1953 முதல் சென்னைப் பல்கலைக் கழக கல்வி ஆலோசனைக் குழுவிலும் (Academic Council), பேரவையிலும் (Senate) உறுப்பினனாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றேன். மூன்றாண்டுகள் இப்பதவிகள் நீடித்தமையால் 1956-மார்ச்சு முடிய அடிக்கடிச் சென்னை

வந்து போகும் வாய்ப்புகள் ஏற்பட்டன. சென்னைக்கு வரும் போதெல்லாம் சில சமயம் டாக்டர் மு. வ. வைக் கல்லூரியில் சந்தித்து அளவளாவுவதுண்டு. இக்காலத்தில் செனாய்நகர் செல்லம்மாள் தெருவிலுள்ள அவர் சொந்த இல்லத்தில் வாழ்ந்து வந்தார். அங்குச் சந்தித்த போது 'கயமை' என்ற புதினத்தை எனக்கு அன்பளிப்பாக வழங்கினார். தமிழ்ப் பேராசிரியர்களில் இக்காலத்திற்கேற்ற புதினங்களைப் படைத்து வழங்கிய முதல் பேராசிரியர் இவர். இக்காலத்தில் 'குமரிமலர்' என்ற திங்கள் இதழில், இலக்கியம், சமயம், ஆராய்ச்சி மொழி வரலாறு போன்ற துறைகளில் என்னுடைய கட்டுரைகள் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தன. நானும் மு. வ அவர்களின் புதினங்களை ஆவலுடன் படித்து வந்த காலம் அது. குமரிமலரில் வெளியிட்ட 'தமிழில் புதினங்களின் வளர்ச்சி' என்ற கட்டுரையில் மு. வ. வின் சில புதினங்களைக் குறிப்பிட்டு விளக்கியுள்ளேன்.

டாக்டர் மு. வ. போல் கடமையைக் கருத்துடன் ஆற்றி வருபவர்கள் ஒரு சிலரே. தாம் முதுகலை வகுப்பிற்குக் கற்பித்த அநுபவத்தைக் கொண்டு 'இலக்கிய ஆராய்ச்சி', 'இலக்கியத் திறன்', 'இலக்கிய மரபு' போன்ற திறனாய்வு நூல்களையும், 'மொழியியல்', 'மொழி வரலாறு' போன்ற மொழிபற்றிய நூல்களையும் முதன் முதலாகப் படைத்து வழங்கியவர். எத்தனையோ ஆங்கில நூல்களைப் படித்து இந்த நூல்களை உருவாக்கிய விவரங்களை அந்தந்த நூல்களில் குறிப்பிடப் பெற்றுள்ள மேற்கோள் நூல்களின் பட்டியலிலிருந்து அறிந்து கொள்ளலாம். இத்தகைய சிரமத்தை பின் வந்தோர் மேற்கொள்ளவில்லை; முதுகலை மாணவர்களும் ஆங்கில நூல்களைக் கண்ணெடுத்தும் பாராது மு. வ. வின் நூல்களின் துணை கொண்டே தேர்வுகள் எழுதுகின்றனர். இதனால் இத்துறைகளில் புதிய நூல்கள் தோன்றுவதில் ஒரு தேக்கம் நிலவுகின்றது. நானும் இவருடைய வழியைப் பின்பற்றிக்

காரைக்குடி பயிற்சிக் கல்லூரியில் கற்பித்த அநுபவத்தை யொட்டி கடுமையான உழைப்பினால் 'தமிழ் பயிற்றும முறை' 'அறிவியல் பயிற்றும் முறை', 'கல்வி உளவியல் கோட்பாடுகள்', 'கவிதை பயிற்றும் முறை' போன்ற ஆசிரியர்கட்குப் பயன்படும் நூல்களை பெரிய அளவில் எழுதி வெளியிட்டேன். எனக்குப் பிறகு எத்தனையோ பயிற்சிக் கல்லூரிகள் தோன்றியிருந்தும் இத்தகைய எழுதி வெளியிடுவதில் ஒரு தேக்கம் ஏற்பட்டு விட்டது.

டாக்டர் மு.வ.வின் பிஎச்.டி. ஆய்வுக் கட்டுரை 'சங்க இலக்கியங்களில் இயற்கை' என்ற பொருள் பற்றியது. கட்டுரை ஆங்கிலத்தில் அமைந்தது. இந்த ஆய்வு நடத்திக் கொண்டிருந்த பொழுது (1945-50) என்பதாக நினைவு. சங்க இலக்கியங்கள் பொது மக்களுக்கு அறிவிக்கும் பாங்கில் 'குறுந்தொகை விருந்து', 'நற்றிணை விருந்து', 'நெடுந் தொகை விருந்து'களும், இதே நூல்களின் விளக்கங்களும் அமைந்தன. இக்காலத்தில்தான் 'கவிஞன் உள்ளம்' (1949) என்ற என்நூலும் தோன்றியது. இதனைப் படித்துப் பார்த்த டாக்டர் மு.வ. அவர்கள் 'நன்றாகச் சுவைக்கும் பாங்கில் சங்கப் பாடல்களின் விளக்கம் அமைந்துள்ளன. தொடர்ந்து எழுதுங்கள். சொற்பொழிவுகட்குப் போகும் வேலையைக் குறைத்துக் கொள்ளுங்கள்' என்று எனக்குக் கடிதமும் எழுதினார். நான் காரைக்குடியில் பணியாற்றியபோது சங்கப் பாடல் களை விளக்கும் பாங்கில் பல கட்டுரைகள், மதுரையி லிருந்து வெளிவந்த 'தமிழ்நாடு' (ஞாயிறு மலரில்) வெளி யாயின. இவற்றைத் தொகுத்து நூல் வடிவம் பெறச் செய்யுமாறு பல நண்பர்களும் சுவைஞர்களும் பல கடிதங் கள் எழுதியதைக் கண்டு இக்கட்டுரைகளைத் தொகுத்து 'காதல் ஓவியங்கள்' (1961) என்ற தலைப்பில் நூல் வடிவம் பெறச் செய்தேன். இக்காலத்தில்தான் கி. வா ஜகந்நா தனின் 'சங்க நூல் காட்சிகள்' என்ற தொடரில் எட்டு நூல் கள் வெளி வந்தன. இவை யாவும் சங்க இலக்கியங்களைப்

பொதுமக்கட்கு விளக்கும் பாங்கில் அமைந்தன; இத்துறையில் என் பணி மு வ. வின் 'அடிச்சுவட்டை யொட்டி' அமைந்தது என்பேன்,

இக்காலத்தில் பிஎச்.டி. பட்டம் பெற்றவர்கள் தாம் எடுத்துக் கொண்ட தலைப்பில் தொடர்ந்து பொது மக்களுக்குப் பயன்படும் பொருட்டு நூல்கள் எழுதுவ தில்லை. டாக்டர் மு. வ. வின் வழியை எவரும் பின்பற்ற வில்லை. தாமாகவும் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்துவதில்லை. பட்டம் பெற்றவுடன் 'எல்லாம் தமக்குத் தெரியும்' என்ற மனநிலை பெரும்பாலோருக்கு வந்து விடுகின்றது போலும். நான் பிஎச்.டிக்கு ஆராய்வதற்கு எடுத்துக் கொண்ட தலைப்பு 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வாரின் தத்துவம்' என்பது. என் கட்டுரையும் (மிகப் பெரிய அளவில்— அச்சில் 900 பக்கங்கட்கு மேல்) ஆங்கிலத்தில் தான் அமைந்தது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் முதன் முதலாக டாக்டர் பட்டம் பெற்றவர் டாக்டர் மு. வ. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் முதன் முதலாக டாக்டர் பட்டம் பெற்றவர் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார். இவர்கள் இருவரும் துறைத் தலைவர்களாக எளிதில் முடிசூட்டப் பெற்றவர்கள். டாக்டர் செட்டியா ரின் ஆய்வுக் கட்டுரையும் ஆங்கிலத்தில் தான் அமைந்திருந் தது. திருப்பதியில் துறைத் தலைமை எனக்குக் கிடைக்கா மலிருக்கும் பொருட்டுச் சில தமிழ்ப் பேராசிரியர்கள் வல்லுநர்குழுஉறுப்பினர்களாகவந்து கட்டியங்காரர்களாக வும் 'குடிலன்'களாகவும் மாறிச் செய்து வந்த சூழ்ச்சியை முறியடிப்பதற்கு நான் மேற் கொண்ட முயற்சி பகீரதப் பிரயத்தனத்திற்கும் மேற்பட்டது. என் துறையிலேயே பணியாற்றி வந்த என் நண்பரே ஆந்திர அரசில் என். டி. ராமராவுக்கு எதிராகத் தோன்றிய ஒரு பாஸ்கரராவ்போல் எனக்கே குழி பறித்தார். சாதிப்

பின்னணி இவருக்கு இருந்தது. நான் இதை எப்போதும் விரும்பாதவன். ஏழுமலையானின் திருவருளால் தன்னந் தனியனாக நின்று இக்குழி பறிக்கும் செயலைத் தடுத்து நிறுத்தி வாகை சூடினேன். ஒரு சமயத்தில் டாக்டர் மு. வ.வின் துணையும் ஓரளவு எனக்கு உதவியாக இருந்த தையும் நினைவு கூர்கின்றேன்.

நம்மாழ்வார் தத்துவத்தை ஆய்ந்து பட்டம் பெற்ற பிறகு யான் வாளா இருக்க வில்லை. அதனைத் தொடர்ந்து மேற்கொண்டு என் ஆராய்ச்சி பொது மக்களுக்குப் பயன்படும் முறையில் அமைய வேண்டும் என்று கருதினேன். 1964-இல் என் ஆய்வைத் தொடங்கும் போதே 108 வைணவத் திருத்தலங்களைச் (திவ்விய தேசங்களைச்) சேவிக்க வேண்டும் என்று திட்டம் போட்டு 1970-க்குள் இத்திட்டத்தை நிறைவேற்றினேன். இத்திருத் தலங்கள் பற்றி ஆழ்வார் பாசுரங்களின் விளக்கங்களுட னும் சில வைணவ தத்துவங்களைச் சுட்டும் பாங்கிலும் ஆறு நூல்களை வெளியிட்டேன். இவைத் தவிர 'முத்தி நெறி,' 'சில நோக்கில் நாலாயிரம்' 'ஆன்மிகமும் அறிவிய லும்' என்ற நூல்களையும் வெளியிட்டேன். தொடர்ந்து 'விட்டு சித்தன் விரித்த தமிழ்,' 'ஆழ்வார்களின் ஆரா அமுது', 'சடகோபன செந்தமிழ்', 'கலியன்குரல்' என்ற நூல்களும் ஒன்றன் பின் ஒன்றாக வெளிவந்தன. இவை யாவும் பொது மக்கள் படிக்க வேண்டும் என்ற கருத்தில் ஏழுமலையான் திருவருளால் வெளி வந்தவை.

நான் திருப்பதிக்குச் சென்ற பிறகு (1960), டாக்டர் மு. வ. வும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகவும் துறைத் தலைவராகவும் (1960 முதல் என்பதாக நினைவு) பணியேற்றார். திருப்பதியில் தமிழ்த் துறையில் எம். ஏ., பிஎச். டி படிக்கும் வசதிகள் 1970 முதல் தான் தொடங்கின, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் 1960-முதல் பாட நூல் குழுவின் (Board of studies) தலைவராகவும்

கல்வி ஆலோசனைக் குழுவின் உறுப்பினராகவும் இருந்து வந்தார். எனக்குப் பாடத் திட்டக் குழுவின் தலைவர் பதவி கிடைக்கும் வரை அவரைத் தலைவராக இருக்கு மாறு வேண்டினேன். பல்கலைக் கழகத்திலும் உரியவர் களைக் கண்டு பேசி இதற்கு ஆவன செய்து வந்தேன். டாக்டர் மு. வ. சொன்னார். 'டாக்டர் ரெட்டியார், உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவேன். என் தாத்தா வின் பெயர் 'வரதராசன்' என்பது; அவரை நினைவு கூரும் பொருட்டு எனக்கும் 'வரதராசன்' என்ற பெயர் சூட்டப் பெற்றது. குழப்பம் நேராதிருக்கும் பொருட்டும், ஒரு மரியாதைக்காகவும் என்னை 'வரதராசன்' என்று அழைக்காமல் 'திருவேங்கடம்' என்றே அழைத்து வந்தார் கள். உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதில் 'திருவேங்கடம்' என்ற பெயரும் தொடர்ந்து என் மனத் தில் இருக்கும் என்று உணர்ச்சி பொங்கக் கூறியது (1962) இன்றும் (1989) என் நினையில் பசுமையாகவே உள்ளது. 1974-இல் அவர் திருநாடு அலங்கரிக்கும் வரை திருவேங்கடவன் பல்கலைக் கழகத்துடன் ஏதோ ஒரு வகையில்—எல்லா வகையிலும் என்று கூடச் சொல்லலாம் —அவருடைய தொடர்பு இருந்து கொண்டே இந்தது.

1964-இல் 'முத்தொள்ளாயிர விளக்கம்' என்ற ஒரு நூல் எழுதினேன். அதைப் பல்கலைக் கழக வெளியீடாக வெளிவரச் செய்ய முயன்றேன். அப்போது துணைவேந்த ராக இருந்த திரு. எஸ். கோவிந்த ராஜுலு நாயுடு அவர் கள் இதன் படியை வல்லுநர் கருத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு பாடத் திட்டக் குழுவின் தலைவ ராக இருந்த டாக்டர் மு. வ.விற்கு அனுப்பி 'இந்த நூலைப் பல்கலைக் கழக வெளியீடாக வெளியிடத் தகுதி உண்டா?' என்ற கருத்தைக் கேட்க, டாக்டர் மு. வ. வும் ''இது சிறந்த நூல். உரை சாதாரண மக்கள் அறிவதற்கும் கவிதைச் சுவையை அநுபவிப்பதற்கும் ஏற்றதாக உள்ளது. ஆகவே இதனைப் பல்கலைக் கழகம் வெளியிடுவதில்

துறைக்கும் பெருமை சேர்வதாக அமையும்' என்று எழுத, நூலும் 1965-இல் பல்கலைக் கழக வெளியீடாக வெளி வந்தது.

1950-வாக்கில் பச்சையப்பன் கல்லூரியிலிருந்து விடுப்பும் மீள்உரிமையும் (Lien) பெற்று சென்னைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக (Senior Lecturer) பணியாற்றினார் டாக்டர் மு.வ. அப்பொழுது தான் அவருடைய புதினங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வெளிவந்த காலம். அப்பொழுது ரா.பி. சேதுப்பிள்ளை இணைப்பேராசிரியராக இருந்தார். டாக்டர் ஏ.இலக்கு மணசாமி முதலியார் துணைவேந்தர். திரு.பிள்ளையவர் கள் உருப்படியான ஆராய்ச்சி என்று சொல்லத்தக்கதாக ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லை. பேச்சில் சதுரர்; கவர்ச்சிகரமாக சொல்நயத்துடன் சொற்பொழிவுகள் ஆற்றி 'சொல்லின் செல்வர்' என்ற விருதையும் பெற்றுத் திகழ்ந்தவர். பல்கலைக்கழக நிர்வாகம் 'புதினங்கள் ஆராய்ச்சியில் சேரா; ஆகவே, அவற்றை எழுதுவதை நிறுத்தி ஆராய்ச்சியில் இறங்கவேண்டும்' என்ற கருத்தைக் குறிப்பாக உணர்த்தியது. புதிய படைப்புகளைச் செய்து வந்த டாக்டர் மு.வ.வின் திறமையை—புதுப்போக் குடைமையை—பல்கலைக் கழகம் உணர்ந்ததாகத் தெரிய வில்லை. நிலைமையை நன்கு உணர்ந்த டாக்டர் மு.வ. தனது உடல் நிலைக்குக் கடற்காற்று ஒத்துவரவில்லை என்று காரணம் காட்டி பல்கலைக்கழகப் பணியைத் துறந்து மீண்டும் (மீள்உரிமை இருந்ததால்) பச்சையப்பன் கல்லூரிப் பணியிலேயே வந்து சேர்ந்து விட்டார். பல்கலைக்கழக நிர்வாகம் பாயின் அடியில் பாய, டாக்டர் மு.வ. கோலத்தில் அடியில் பாய்ந்து விட்டார்! ரா.பி. சேதுப்பிள்ளை பணியாற்றிய காலத்தில் இந்திப் பேராசிரியர் எஸ்.சங்கராஜு நாயுடு அவர்களைத் தவிர, பிஎச்.டி பட்டம் ஒருவரும் பெறவில்லை. சிலர் எம்.லிட், பட்டங்கள் பெற்றனர். அக்காலத்தில் ஆராய்ச்சிப்பட்டத்

தில், இப்போதிருப்பதைப் போல, மோகமும் அதிகம் இல்லை.

இந்தக் காலத்தில் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலம்—தமிழ் அகராதித்திட்ட வேலை தொடங்கப் பெற்று விறுவிறுப்பாக நடைபெற்று வந்தது. டாகடர் அ.சிதம்பர நாதன் செட்டியார் அதன் பதிப்பாசிரியராகப் பணியாற்றி வந்தார். இந்தப் பணி ஒருவாறு நிறைவு பெற்றது. டாக்டர் செட்டியாருக்கு இனி ஒரு வேலை வேண்டும். ரா.பி.சேதுப்பிள்ளையும் ஓய்வு பெற்றார். டாக்டர் செட்டியாருக்குப் பிள்ளையவர்கள் வகித்த பதவியின் மீது குறியிருந்தது. துணைவேந்தர் டாக்டர் முதலியாரைப் பார்த்து தான் பேராசிரியர் வேலைக்கு விண்ணப்பிக்க லாமா? என்று இசைவு கேட்டார். எதிர் மறையில் மறுமொழி பெற்றார். பின்னர் மதுரைத் தியாகராாசர் கல்லூரியில் முதல்வர் பணி ஏற்றார். துணைவேந்தர் முதலியார் ரா.பி.சேதுப்பிள்ளையவர்களை டாக்டர் மு.வ.விடம் தூது அனுப்பி பேராசிரியர் பதவிக்கு விண்ணப்பிக்குமாறு செய்து அவருக்கு அப்பதவியை நல்கினார். டாக்டர் மு.வ.வும் அப்பணியில் வந்து அமர்ந்தார்.

ஒரு காலத்தில் புதினப் படைப்புக்குத் தடை விதித்த அதே துணைவேந்தர் பின்னர் மு.வ.விற்கு அழைப்பு அனுப்பியதன் காரணம் என்ன? கடற்காற்று தன் உடல் நிலைக்கு ஒத்துவராது என்று சொல்லிச் சென்ற டாக்டர் மு.வ திரும்பவும் பல்கலைக் கழகத்தில் பணியேற்றதன் காரணமென்ன? இது தான் உலகியல். சமய சந்தர்ப்பங் களை அனுசரித்து வாழவேண்டும் என்பது நாம் இந்த சூழ்நிலையிலிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பாடம். தன்னம்பிக்கையையும் தகுதித் திறனையும், கடுமையான உழைப்பையும் இயல்பாகப் பெற்ற டாக்டர் மு.வ.வால் இதை அனுசரிக்க முடிந்தது. இத்தகைய பண்புகள் வாய்க்கப் பெற்றவர்கள் இக்காலத்தில் மிக அரியராயினர்.

தவிர, டாக்டர் மு.வ.விற்கு ஆகூழும் துணை நின்றது என்பதை நாம் மறத்தற்கில்லை. இந்த ஊழ் செயல் பட்டால் 'வருவது தானே வரும்'. இவ்விடத்தில்,

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்,—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.[1]

என்ற சமண முனிவரின் திருவாக்கை நினைத்தல் தகும்.

டாக்டர் மு.வ. தற்காலிகமாக இருந்து வந்த பல்கலைக்கழகப் பணியைத் துறந்தார்; நம்மால் முடியுமா? முடியாது. நாற்காலிக்கு அலங்கார புருஷர்களாக அப்படியே ஒட்டிக் கொள்வோம். கிடைத்தற்கரிய பேறு என்று கருதி அப்படியே இருந்து கொள்வோம். நம்மிடம் தான் முயற்சி இருக்கவேண்டிய முறையில் இல்லையே; கடின உழைப்பும் இல்லையே. இவை இரண்டும் இல்லை யெனில் தன்னம்பிக்கைக்கும் இடம் ஏது? திரும்பவும் பச்சையப்பன் கல்லூரிக்கு வந்த பிறகு பல புதினங்களை அணிஅணியாக வெளியிட்டார். பொது மக்களுக்கும் அறிமுகம் செய்யும் போக்கில் பல இலக்கிய நூல்களும் ஒன்றன்பின் ஒன்றாக வெளிவந்தன. எங்கும் மு.வ. வின் புகழ் பரவியது. இந்நிலையில் தி.மு.க. ஆட்சியும் வந்தது. அமைச்சர்களில் ஒருவர் பணித்தோழர்; மற்றவர் மிகவும் நெருங்கிய நண்பர். எந்தவித முயற்சியுமின்றி மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவி தானா கவே இவரை வந்தடைந்தது. இவ்விடத்தில்,

ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்டு, ஒன்றாகும்;
அன்றி அதுவரினும் வந்தெய்தும்; ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்;
எனைஆளும் ஈசன் செயல்.[2]

1. நாலடியார்—248 (அறிவுடைமை)
2. நல்வழி—27,

என்ற ஔவைப் பாட்டியின் திருவாக்கும் நினைவிற்கு வருகின்றது.

1967 பிப்பிரவரி என்பதாக நினைவு. திருப்பதியில் நடைபெற்ற திருமணம் ஒன்றிற்கு டாக்டர் மு. வ. வந்திருந்தார். பெங்களூரிலிருந்து திரு. தன். கி. வேங்கடாசலம் (தமிழ்ப் பேராசிரியர், பெங்களூர் புனித சூசையப்பர் கல்லூரி) என்பாரும், சித்தூரிலிருந்து திரு பொன். சௌரிராசனும் (தமிழ்ப் பேராசிரியர் சித்தூர் அரசினர் கல்லூரி) அதே திருமணத்திற்கு வந்திருந்தனர். டாக்டர் மு. வ. விற்கு அருவியில் நீராடுவதில் கொள்ளை ஆசை. சென்னையில் குழாய் நீரில்— நீர்த்தாரையில் (shower) குளித்தாலும்—அருவியில் நீராடும் சுகம் கிடைக்குமா? அதுவும் சங்க இலக்கியத்தில் தோய்ந்த டாக்டர் மு. வ. வின் தமிழ் உள்ளம் தோழியும் தலைவியும் நீராடிய எண்ணற்ற அருவிகளைக் கற்பனையில் கண்டிருக்குமல்லவா? ஆகவே, இந்த உள்ளம் திருப்பதியில் கபில தீர்த்தத்தில் நீராட விரும்பியதில் என்ன வியப்பு?

நான் அப்போது கபில தீர்த்த சாலையில் உமா மகேசுவரெட்டி குடியிருப்பில் குடும்பத்துடன் தங்கியிருந்தேன். டாக்டர் மு. வ. ‘திரு. ரெட்டியார் அதிகாலையில் நான்கு மணிக்கே துயிலெழும் வழக்கமுள்ளவர். இப்போது சென்றால் கதவைத் தாழிட்டுக் கொண்டு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிக் கொண்டிருப்பார்; அல்லது தம் இளைய மகனுக்குப் பாடம் பயிற்றிக் கொண்டிருப்பார். நாம் நம் வருகையை திருப்பாவை பாடி வியக்க வைப்போம்’ என்று திட்டமிட்டார் போலும். ஆகவே ஏனைய இரு நண்பர்களுடன் சுமார் அதிகாலை 4-30க்கு என் இல்லம் அடைந்து,

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்குபெருஞ் செந்நெலூடு கயல் உகளப்

பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளற் பெரும் பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்து ஏலோர் எம்பாவாய் [3]

என்ற திருப்பாவை பாடினார்கள். முதலில் இந்தப் பாசுர ஒலி என்னை வியக்க வைத்தாலும், இந்தக் கூட்டொலியிலும் டாக்டர் மு. வ.வின் குரலும் திரு சௌரிராசனின் குரலும் தனித்து வேறுபடுத்திக் காட்டின. ஆதலால் பாசுரம் முடியும்வரையில் காத்திருந்து பின்னர்க் கதவைத் திறந்தேன். அனைவரும் மகிழ்ந்தோம். நானும் அவர்களுடன் சென்றேன். எல்லோரும் ஆனந்தமாக அருவியில் நீராடித் திரும்பினோம். இந்தக் காட்சி இன்று நடப்பது போல் உள்ளது.

தமிழக அரசுக்குப் பத்தாண்டு நான் காவடி எடுத்த பிறகு திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்குத் தமிழ் வளர்ச்சிக்கென ஆண்டொன்றுக்குப் பத்தாயிரம் ரூபாய் வீதம் ஓர் ஐந்தாண்டிற்கு நிதி வழங்கியது. இஃது அரசுக் கொள்கையாக இருந்ததால் இதை நம்பி திருப்பதியில் தமிழ் வளர்க்கலாம் என்ற நல்லெண்ணத்தால் காரைக்குடியில் பேராசிரியர் பதவியைத் துறந்து திருப்பதிக்குச் சென்றேன். ஆசூழ் எனக்கு இல்லை. என் சாதகத்தில் ஒரு குண்டூசியை எடுக்க வேண்டுமானாலும் ஒரு யானையைக் கூட்டிக் கொண்டு வரவேண்டும். யானையும் கிடைப்பதில்லை; குண்டூசியும் கிட்டுவதில்லை! திருப்பதிக்கு வந்த பிறகு கடினமாக உழைத்தேன்; ஏற்கெனவே ஏழு பெரிய நூல்களைப் படைத்திருந்த நான் திருப்பதிக்கு வந்த பிறகு மூன்று பெரிய நூல்களையும் பத்துக்கு மேற்பட்ட சிறிய நூல்களையும் படைத்தேன். நூற்றுக்கணக்கான ஆய்வுக் கட்டுரைகளை எழுதிக் குவித்தேன். இருபதாண்டுக் காலம் பிஎச். டிக்கு பதிவு பெறுவதில் முயன்று பயனற்றுப் போனதால் திருப்பதியிலும் நான்கு ஆண்டுகள் பகீரதப் பிரயத்

3. திருப்பாவை—3

தனத்திற்குப் பிறகு ஆய்வு செய்ய இசைவு பெற்று டாக்டர் பட்டமும் பெற்றேன். இவற்றையெல்லாம் டாக்டர் மு. வ. நன்கு அறிவார்—நான் அவரிடம் தொடர்பு வைத்துக் கொண்டிருந்ததால்.

தமிழக அரசு 1969 நவம்பரில் நிதி வழங்கியதால் அந்த ஆண்டு திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலை வகுப்பு தொடங்க முடியவில்லை. 1970-ஜுன் முதல்தான் வகுப்புகள் தொடங்கப் பெற்றன. இதை எதிர் பார்த்து மார்ச்சு—ஏப்பிரலிலேயே தமிழ்த் துறைக்கு ஒரு பேராசிரியர், ஓர் இணைப்பேராசிரியர் (Reader), ஒரு விரிவுரையாளர் பதவிகட்கு விளம்பரம் செய்யப்பெற்றது. பேராசிரியர் பதவிக்கு விண்ணப்பிப்போர் பிஎச்.டி. பட்டம், பத்தாண்டுகள் முதுகலை வகுப்புகட்குக் கற்பித்த அநுபவம், பிஎச்.டிக்கு வழிகாட்டிய அநுபவமும்; இணைப் பேராசிரியருக்கு விண்ணப்பிப்போர் பி எச். டி. பட்டம், ஐந்தாண்டுகள் முதுகலைவகுப்புக்குக் கற்பித்த அநுபவம், பிஎச்.டிக்கு வழிகாட்டிய அநுபவமும்; விரிவுரையாளருக்கு விண்ணப்பிப்போர் எம். ஏ., குறைந்தது இரண்டாம் வகுப்பில் (B+) தேறியவராகவும், சில ஆண்டுகள் கற்பித்தல் அநுபவமும் பெற்றிருத்தல் வேண்டும் என்ற விதிகளுடன் விளம்பரம் வந்திருந்தது. இத்தகுதிகள் அக்காலத்தில் டாக்டர் மு. வ. வுக்கு மட்டிலும் தான் இருந்தது. விண்ணப்பித்தவர்களுள்ளும் ஒருவருக்கும் இத்தகுதிகள் இல்லை. அக்காலத்தில் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருந்தவர் டாக்டர் D. செகந்நாதரெட்டி. விண்ணப்பங்களைப் பரிசோதித்து ஒருவருக்கும் விளம்பரத்தில் குறிப்பிட்ட தகுதிகள் இல்லாமையை அறிந்தார்.

1970- மேதிங்களில் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழா சிரியர்களின் மாநாடு திருச்சியில் நடைபெற்றது. இதற்குப் புனித சூசையப்பர் கல்லூரியில் ஏற்பாடு செய்யப் பெற்றி

ருந்தது. உண்டி, உறையுள் முதலிய வசதிகள் புனித சூசையப்பர் கல்லூரி உணவு இல்லத்தில்(Boarding House) வசதிகள் செய்யப்பெற்றிருந்தன, டாக்டர் மு. வ. ((அப்போது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்) வந்திருந்தார். நானும் திரு T. J. இரகுபதியும் (சித்தூர் அரசினர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்) மாநாட்டிற்கு வந்திருந்தோம். இந்த மாநாட்டைத் தொடங்கி வைத்தவர் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள். இஃது இரண்டாவது மாநாடு. அப்பொழுதுதான் டாக்டர் D செகந்நாத ரெட்டி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1970—71இல் தொடங்க இருக்கும் முதுகலை. வகுப்பிற்கு பேராசிரியராக நியமனம் பெறுவதற்குத் தக்கார் ஒருவரைப் பரிந்துரைக்குமாறு திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்கட்கு எழுதியிருந்ததாகவும், அவரும் திரு மு. வ. வைக் கலந்து திருவேங்கடவன் பல்கலைக் கழகம் கருதுகிற அளவிற்கு ஒருவரும் இலர் என்றும் அங்குப் பணியாற்றும் நானே அதற்குத் தகுதியானவர் என்றும், எழுதிவிட்டதாக அறிந்தேன்.

திருச்சியில் நாங்கள் தங்கியிருந்த போது டாக்டர் மு.வ.விற்குக் காவிரியில் நீராட வேண்டும் என்று விரும்பினார்; விருப்பத்தை என்னிடம் தெரிவித்தார். நானும் திரு N. இராசகோபாலனும் (திருச்சி தேசியக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்) இன்னும் பல தமிழாசிரியர்கள் புடைசூழ அதிகாலை ஐந்து மணிக்கே புறப்பட்டு காவிரிக்குச் சென்றோம். வெள்ளம் பெருக்கெடுக்காத காலமாக இருந்ததால் ஆற்றின் நடுவில் ஓடிக் கொண்டிருந்த தெளிந்த நீரோடைக்குச் சென்றோம். ஆனந்தமாக நீராடினோம். அடிக்கடி டாக்டர் மு.வ. என்னைச் சீண்டுவார்; நானும் பல நகைச்சுவை நிகழ்ச்சிகளை உதிர்ப்பேன். அனைவரும் மகிழ்வார்கள். ஆற்றில் நடைபெற்ற உரையாடலில் அதிகமாகப் பங்கு பெற்றவர்கள் நானும்

திரு. இராசகோபாலனும் தான். சென்னையில் குழாய் நீரில் குளித்த டாக்டர் மு. வ. ஆற்று நீரில் மிக்க மகிழ்ச்சியுடன் நீராடியதைக் கண்டோம். இடுப்பளவு ஆழம் உள்ள இடத்திற்குச் சென்று முழுகி முழுகி நீராடியதைக் கண்ட போது

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்து [4]

என்ற மணிவாசகப் பெருமானின் திருவெம்பாவை அடிகள் நினைவிற்கு வரும். நாங்கள் நீராடின காலம் கோடையாதலால் அதிக நேரம் நீரில் விளையாடினோம்.

குறிப்பிட்ட நாளில் (ஆகஸ்டில் என்பதாக நினைவு) பேட்டி நடைபெற்றது. பேட்டியின் விவரங்கள் பிறிதோரிடத்தில் கூறப் பெற்றுள்ளன. வல்லுநர் குழுவில் டாக்டர் மு.வ. (அப்போது சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்), திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் (மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்) இடம் பெற்றிருந்தனர். டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி (கோவை பூ. சா. கோ. கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்), திரு. கு. தாமோதரன் (அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர்). நான் (திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பத்து ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளர்) ஆகிய மூவர்தாம் பேட்டியில் கலந்து கொண்டோம். எங்களைப்பற்றியும் சிறிது சொல்ல வேண்டும்.

டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்திக்கு ஆறு திங்கள் முதுகலை வகுப்பு கற்பிக்கும் அநுபவம் இருந்தது. இன்னும் ஆறு திங்களில் ஓய்வு பெற வேண்டியவர். நூல்கள் வெளியிட்டதாகத் தெரியவில்லை. திரு. கு.தாமோதரன் எம்.ஏ. வகுப்புகள் உள்ள அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்து வந்தவராதலால் பதினோர்

4. திருவெம்பாவை—11

ஆண்டுகள் எம்.ஏ.வகுப்பு கற்பித்த அநுபவம் இருப்பதாகச் சொல்லிக் கொள்ளுகின்றார். (இஃது ஏழுமலையானுக்கு தான் வெளிச்சம்). இவருக்கு டாக்டர் பட்டம் இல்லை; எம்.லிட். பட்டம் இருந்தது. ஒரு நூல் கூட வெளியிட வில்லை. திரு. தெ. பொ. மீ. ஞானமூர்த்தியை ஐந்து ஆண்டுகள் ஒப்பந்த முறையில் பேராசிரியராக அமர்த்தி விடலாம் என்றும், திரு. கு. தாமோதரனை இணைப் பேராசிரியராக்கி விடலாம் என்றும் முடிவுடன் வந்திருந்த தாகப் பின்னர்தான் அறிய முடிந்தது. பேராசிரியர் நியமனத்திற்கு வல்லுநர் குழுவில் மூவர் இருக்க வேண்டும் என்பது பல்கலைக் கழகத்தின் விதி. குழுவில் இருவரே இருந்ததால் பேராசிரியருக்குரிய இடம் நிரப்பப் போவ தில்லை என்பது எனக்குத் தெளிவாயிற்று. ஆனால் திரு. தெ.பொ.மீ. க்குத் தெளிவாக வேண்டுமே. 'வாயடி கையடியால்' டாக்டர் D.செகந்நாத ரெட்டியை மயக்கித் தன் குறிக்கோளை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்ற தீர்மானத்தில் இருந்தார். ஆனால் டாக்டர் D.செகந்நாத ரெட்டி சட்ட வரம்பை மீறாதவர். பேராசிரியர் பதவியை நிரப்பப் போவதில்லை என்று உறுதியாகச் சொல்லி விட்டார். ஆனால் டாக்டர் ஞானமூர்த்தி துணைப் பேராசிரியர் பதவி தமக்கு வேண்டியதில்லை என்ற உறுதி யுடன் இருந்தார். துணைப் பேராசிரியர் ஊதியத் திட்டம் 700—1250. இதில் 1250/- தருவதாகக் கூட ஆசை காட்டியும் அவர் அதற்கு ஒருப்படவில்லை.

பேட்டி முடிந்து வெளி வந்ததும் நேராக என்னிடம் வந்து கை குலுக்கி தாம் வரப் போவதில்லை என்றும் ''நீங்களே தலைமைப் பதவி வகித்து திறம்பட நடத்துங்கள்'' என்று வாழ்த்தி விட்டுப் போனார். ''வரவில்லை என்பதாக ஒரு கடிதம் தந்து விடுங்கள்'' என்றேன். கோவை சென்று அங்கிருந்து எழுதுவதாகச் சொல்லிச் சென்றார். (திரு. தெ. பொ. மீ. கோவை சென்று மனைவியுடன் கலந்து யோசித்து எழுதும்படி

வற்புறுத்தியதாகப் பின்னர் அறிந்தேன்). என்னுடைய பேட்டியும் திரு. தாமோதரன் பேட்டியும் முடிந்தன. தீர்மானம் போடும்போது (1) டாக்டர் தா. ஏ. ஞான மூர்த்தியை இணைப் பேராசிரியர ாகவும் துணைத் தலைவ ராக நியமிப்பதென்றும்,அவர் வராவிட்டால் (2) என்னை யும் (3) திரு. தாமோதரனையும் இணைப் பேராசிரியர் களாகவும் நியமித்து திரு. தாமோதரனைத் துறைத் தலைவராக ஆக்க வேண்டும் என்று திரு. தெ. பொ. மீ. வற்புறுத்தினாராம். ஆனால் டாக்டர் மு. வ. அதை மறுத்து, ''டாக்டர் ரெட்டியார் இல்லாவிட்டால் இங்குத் தமிழ்த் துறையே ஏற்பட வாய்ப்பிராது. நாம் கூடி யிருக்கும் இந்தக் குழுவிற்கும் வேலையிராது. டாக்டர் ரெட்டியார் காரைக்குடியில் பேராசிரியர் பதவியைத் துறந்து (முதல்வராக வரக்கூடிய வாய்ப்பையும் விட்டொழித்து) தமிழக அரசின் கொள்கையைப் பயன் படுத்தித் தமிழ் வளர்ச்சிக்கென்று வழங்கப்பெறும் மானியத்தைப் பெற்று முதுகலை வகுப்பு தொடங்கலாம் என்று வந்தார். அப்பொழுது கல்வி – நிதி அமைச்சராக இருந்த திரு.சி. சுப்பிரமணியம் வழங்குவதற்குத் தயாராக வும் இருந்தார். ஏதோ ஒரு காரணத்தால் துணைவேந்தர் எஸ். கோவிந்தராஜுலு நாயுடு விண்ணப்பம் அனுப்பு வதற்கே தயங்கினார். இதற்குள் திரு. சி. சுப்பிரமணியம் நடுவண் அரசின் அமைச்சராகப் போய்விட்டார். டாக்டர் ரெட்டியார் விடாது வற்புறுத்தவே, தாம் கல்வி-நிதி அமைச்சராக இருந்த திரு. M. பக்தவத்சலத்தை நேரில் பார்த்து ஆவன செய்வதாகக் கூறி டாக்டர் ரெட்டி யாரின் வேண்டுகோளைத் தட்டிக் கழித்துவிட்டார். அடுத்து துணைவேந்தராக வந்த டாக்டர் V. C. வாமன் ராவ் அவர்களைச் சந்தித்து நிலைமையை விளக்கி (பதிவாளர் மறுத்ததையும் பொருட்படுத்தாது) விண்ணப்பம் அனுப்பச் செய்தார். பல ஆண்டுகள் தலைமைச் செயலகத்தில் (Secretariet) காவடி எடுத்து

வட்டம் போட்டார். ரூ. 2000/- வரைச் செலவழித்த விவரங்களையும் என்னிடம் சொன்னார். சென்னை வரும் போதெல்லாம் பல்கலைக் கழகத்தில் என்னைச் சந்திக்காமல் திருப்பதி திரும்பார். இந்தக் காலத்தில் கடுமையாக உழைத்து பிஎச்.டி. பட்டமும் பெற்றார். பிஎச்.டிக்கு பதிவு செய்து கொள்ள முடியாது (விதி இடம் கொடுக்காததால்) 25 ஆண்டுகள் தவித்ததை யான் அறிவேன். பெரியனவும் அருமையானவுமான இருபதிற்கு மேற்பட்ட நூல்களையும் வெளியிட்டிருக்கின்றார். திரு. தாமோதரனுக்குப் பிஎச்-டி. பட்டமும் இல்லை; நூல் வெளியீடுகளும் இல்லை. வயதிலும் ஐந்தாறு ஆண்டுகள் இளையவரும் கூட. திரு. கு. தாமோதரனைத் துறைத் தலைவராக நியமிப்பதை வற்புறுத்தித் தீர்மானம் போட்டால் நான் கருத்து வேறுபாட்டுக் குறிப்பை (Dissenting note) தீர்மானத்தின் கீழ் எழுத வேண்டி வரும். இந்த விவரம் தெரிந்ததும் டாக்டர் ரெட்டியார் மனமுடைந்து உயர்நீதி மன்றத்தில் 'ரிட்மனு' போட்டு நம் தீர்மானத்தை உடைத்தெறிவார். நியாயத்தையும் மனிதாபிமானத்தையும் புறக்கணிப்பது அடாத செயலாகும்'' என்று கூறவே என்னைத் துறைத் தலைவராகப் போடுவதென்று தீர்மானம் எழுதப் பெற்றது.

மேலும் டாக்டர் மு. வ. சொன்னது: ''இரண்டு துணைப் பேராசிரியர்கள் (பேராசிரியர் இல்லாத நிலையில்) ஒரு துறையில் பணியாற்றுவது சரியன்று. திரு. தாமோதரனின் திறமையைக் கணிப்பதற்கு (பதினோர் ஆண்டுகள் முதுகலை வகுப்பு கற்பித்ததாகச் சொல்லிக் கொள்வதைத் தவிர) எந்த அளவுகோலும் இல்லை. இந் நிலையில் அவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வாங்கும் ஊதியத்திற்குமேல் ஓர் உயர்வுப்படி (Incremcnt) தந்து விரிவுரையாளராக நியமிக்கலாம். எந்தத் தேதியில் அவர் டாக்டர் பட்டம் பெறுகின்றாரோ அந்தத்

தேதியிலிருந்து (விண்ணப்பிக்காது—பேட்டியுமின்றி) இணைப் பேராசிரியராக உயர்த்தப்படுவார் என்ற குறிப்பையும் ஆணையிலேயே காட்டி ஆணை பிறப்பிக்க லாம்'' என்று கூறினாராம். இதனால் எந்தச்சச்சரவுமின்றி துறையும் ஒழுங்காக இயங்கும் என்று கூறினாராம். தெ.பொ.மீ. இதற்கு ஒப்புக் கொள்ளாததால் இருவரை யும் இணைப் பேராசிரியர்களாக நியமித்தனர். இதன் விளைவு விரைவில் தமிழ்த்துறை குருட்சேத்திரப் போர்க் களமாயிற்று. டாக்டர் D. செகந்நாத ரெட்டி இதை உணர்ந்தாரோ என்பது தெரியவில்லை. ஆனால் தெ.பொ.மீ, இதை உணர்ந்ததாகத் தெரிந்தது. நான் ஒய்வு பெற்று இரண்டாண்டுக் காலத்தில் திரு. தாமோதரன் திருநாடு சென்றுவிட்டார். டாக்டர் P. சௌரிராஜன் (துறைத் தலைவர்—பேராசிரியர்) மதுரைக்குப் போயிருந்தபொழுது தெ. பொ. மீ. அவரிடம் ''என்ன இருந்தாலும் திரு. தாமோதரன் டாக்டர் ரெட்டியாருக்கு இவ்வளவு தலைவலியை உண்டாக்க வேண்டியதில்லை. இப்பொழுது என்ன வாரிக் கட்டிக் கொண்டுவிட்டார்? டாக்டர் ரெட்டியாரிடம் பல்லாண்டுகள் பழகியிருந்தாலும் இப்பொழுதுதான் அவர் பெருமையையும் திறமையையும் அறிந்து மகிழ்கின்றேன்'' என்றாராம்.

  

டாக்டர் மு. வ. வின் செயல்கள் ஒவ்வொன்றும் அவர்தம் நேர்மைக்கு எடுத்துக் காட்டாக அமையும். மனச்சான்று காட்டும் வழியில் செயற்படுபவர். ஒருசமயம் உஸ்மானியாப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர் தேர்ந்தெடுக்கும் நியமனக் குழுவில் இடம் பெற்றார். அந்தப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் இருவரிடையே பலத்த போட்டி இருந்தது. தம் வகுப்பைச் சார்ந்த ஒருவர் அவ்விருவரில் ஒருவர். ஐதராபாத்தில் செல் வாக்குள்ள அவர் சாதியினர் அவருக்குத் துணையாக

நின்றனர். சிலர் டாக்டர் மு. வ. வுக்கும் எழுதினர். நிலைமையை நன்குணர்ந்த டாக்டர் மு.வ. இந்தச் சூழலில் சிக்கிக் கொள்ள விரும்பவில்லை; ஒதுங்கிக் கொள்ளவே விரும்பினார். தமக்கு உடல்நலக் குறைவு என்று காரணம் காட்டி விலகிக் கொண்டார். போனால் தம் பெயர் கெடும் என்பதை நன்கு உணர்ந்தமையால் இவ்வாறு செய்தார். தமிழகத்திலிருந்து குழுவில் அமைந்த வேறு இருவர் தமக்குத் தெரிந்த ஒருவரை நியமனம் செய்யும் 'திருப்பணியில்' ஈடுபட்டனர் (அந்த இருவரையும் தவிர்க்க நினைத்தனர்). ஆனால் துணைவேந்தர் நேர்மையுடையவராதலால் (உச்ச நீதிமன்ற ஓய்வு பெற்ற நீதிபதி) இவர்கள் கருத்து நிறைவேறவில்லை. அந்த இருவரில் தகுதியானவருக்கே அப்பதவி கிடைத்தது.

பேட்டிக்குத் திருப்பதி வந்து போன ஒன்றிரண்டுத் திங்களில் டாக்டர் மு. வ. மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக நியமனம் பெற்றார். (இந்த நிலையைச் சூசகமாக அறிந்த திரு. தெ. பொ. மீ. தன்னுடைய பதவிக் காலம் முடிவதற்குப் 18 நாட்களுக்கு முன்னதாகவே பதவியைத் துறந்தார்) 1971—மே மாதம் தமிழ் எம்.ஏ. (போர்டு தேர்வாளர்கள்) கூடியது. நானும் அதில் இடம் பெற்றிருந்தேன். டாக்டர் மு. வ. துணைவேந்தரான பிறகு நாங்கள் முதன் முதலாகச் சந்திக்கின்றோம்; வாழ்த்துகின்றோம். கூட்டத்தன்று மதிய உணவின்போது எங்கட்குப் பெரிய விருந்தொன்று அளித்தார். அப்போது அவர், ''டாக்டர் ரெட்டியார், நீங்கள் பி.ஏ., பி. எஸ் சி. போர்டில் (வினாத்தாள். குறித்தல்) இருந்தீர்கள். உரிமை கொண்டு அதினின்றும் உங்களை நீக்கி, இந்தப் போர்டில் சேர்த்தேன். வேறொருவருக்கு உதவுவதற்காக இதைச் செய்தேன். ஒரு சில நூறு ரூபாய்கள் உங்கட்கு இழப்பாக இருந்தாலும் நீங்கள் அதைப் பொருட்படுத்த மாட்டீர்கள் என்பதை அறிவேன்; கோபிக்கமாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்''

என்று சொன்னார். போர்டில் இருந்த தமிழ்ப் பேராசிரியர்கள் எனக்கும் டாக்டர் மு. வ.வுக்கும் உள்ள இணக்கமான உறவைக் கண்டு வியந்தார்கள்.

டாக்டர் மு. வ. எளிய வாழ்க்கையை விரும்புபவர். அளவறிந்து வாழ்பவர். துணைவேந்தரான பிறகும்கூட பாடநூல் குழு கூட்டத்திற்குச் சென்னையிலிருந்து வரும் போதும் திரும்பும்போதும் பேருந்தில்தான் வருவார்; திரும்புவார். திருமலை திருப்பதி தேவஸ்தான சத்திரத் தில் தங்குவார். ஒரு வேளையாவது என் இல்லத்தில் உணவு கொள்ளாது திரும்பார். 'சான்றோருடைத்து தொண்டை நாடு' என்று புலவர்களால் போற்றப்பெறும் தொண்டை நாட்டைச் சார்ந்தவர் இவர். நல்லவர்; வல்லவர். உயர்ந்த குறிக்கோள் நெறியுடன் வாழும் சீலம் நிறைந்த நெஞ்சத்தினர். விளம்பரத்தை விரும்பாதவர்; அடக்கமான பண்பினர். சுமார் இருபத்தைந்து ஆண்டு களாக இத்தகையவருடன் நெருங்கிய உறவு கொண்டிருந் ததன் நினைவாக 'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' (ஆகஸ்டு-1973) என்ற என் நூலை,

மங்கலப் புதினப் படைப்பினால் இளைஞர்
மனத்தினைத் திருத்திய கலைஞன்;
சங்கநூற் பொருளை யாவரும் உணரத்
தகவொடு விளக்கிய செம்மல்;
துங்கமார் மதுரைப் பல்கலைக் கழகம்
துலக்குறும் தனித்துணை வேந்தன்;
பங்கமில் உளத்தன்; தூயநன் மு.வ.
பண்பினுக் குரியதிந் நூலே

என்ற பாடலால் அன்புப் படையலாக்கி மகிழ்ந்தேன்.

துணைவேந்தராக இருந்தபோது மதுரைப் பல்கலைக் கழக வளாகத்தைப் பசுமைப் புரட்சி பெறச் செய்தார். சாலைகள் அமைத்தல், மரங்கள் நடுதல், பூங்காக்கள் அமைத்தல் போன்ற செயல்களால் பாலைவனம் போன்

றிருந்த இடம் சோலையாக மாறி விட்டது. இயற்கை யழகை நக்கீரர் பெருமான் 'கை புனைத்தியற்றாக் கவின் பெறுவனப்பு' என்று வருணிப்பார். டாக்டர் மு. வ. பல்கலை வளாகத்தைக் 'கைபுனைந்தியற்றிய கவின் பெறு வனப்'பாக்கினார். பல்கலைக் கழகத்தில் பல்வேறு கட்டடங்கள் இவர் காலத்தில் எழும்பின. இவை தவிர அஞ்சல் வழிக் கல்விமுறையை முதன் முதலாகத் தமிழகத் தில் தொடங்கின பெருமை இவரைச் சாரும். இஃது பெரும் புகழுடன் திகழ்கின்றது. இத்திட்டத்தால் பெறும் வருவாய் சுய தேவையை நிறைவேறச் செய்வதுடன் எஞ்சிய தொகை (பல இலட்சரூபாய்) பல்கலைக் கழகக் கருவூலத்தையும் சென்றடைகின்றது. இத்திட்டத்தால் கிடைக்கக்கூடிய வருவாயைக் கொண்டேபல கட்டடங்கள் எழும்பியுள்ளன; பல்வேறு தளவாடப் பொருள்கள் இந்த வருவாயைக் கொண்டே வாங்கப் பெற்றுள்ளன. இப் பல்கலைக் கழகத்தில் இது மிகவும் சிறப்புடனும் செல்வாக் குடனும் செயற்பட்டு வருகின்றது.

கல்லூரி ஆசிரியர்கட்கு மூதறிஞர் குழுக்கள் அமைத்து முதன் முதலாக ஆய்வு முறையைத் தோற்றுவித்து பிஎச். டி பட்டம் பெறக் கல்லூரி ஆசிரியர்கட்கு வசதி செய்து தந்த பெருமை டாக்டர் மு. வ. வைச் சாரும். இத்திட்டத்தால் பலர் டாக்டர் பட்டம் பெற்றனர். இவர் வழியைப் பின்பற்றியே சென்னைப் பல்கலைக் கழகமும் இத்திட்டத்தை நடைமுறைக்குக் கொணர்ந்தது. இங்ஙனம் பல்வேறு ஆக்கத் திட்டங்களை நடைமுறைக்குக் கொணர்ந்து பெரும் புகழ் பெற்றார். தமிழக அரசும் இவரைப் பாராட்டியது. பாராட்டின் அறிகுறியாக அடுத்த மூன்றாண்டுக்குத் துணைவேந்தராக நியமனமும் செய்தது. ஆனால் தமிழகம் இவர் தொண் டினைப் பெறும்பேற்றை இழந்தது.

நான் திருப்பதியில் பணியாற்றிய பொழுது மின்னாது இடித்தது போன்று இவர் மறைவுச் செய்தி (10-10-1974)

எட்டியது. சென்னையில்தான் இவர் திருநாடு அலங்கரித்தார். திரு. பொன் சௌரிராசனது விடுப்புக்கடிதத்தால் இத் துக்கச் செய்தியை அறிவித்திருந்தார். செய்தி தாமதமாகத் தெரிந்ததால் ஈமச் சடங்கில் நான் கலந்து கொள்ள இயலாது போய் விட்டது. பத்தாம் நாள் சடங்கில் கலந்து கொண்டேன். இந்தச் சூழ்நிலை பக்திச் சூழ்நிலையாக மாறியிருந்தது. ஈமச் சடங்கில் கலந்துகொள்ள முடியாத வெளியூர் அன்பர்கள் திரண்டிருந்தனர். தாயுமானவர் பற்றி இவர் வானொலியில் பேசிய ஒரு மணி நேரப் பேச்சினைப் பதிவு செய்து வைக்கப் பெற்றிருந்தது. அந்தப் பேச்சினை இப்போது வந்திருந்த அனைவருக்கும் கேட்கும் வாய்ப்பு இருந்தது. டாக்டர் மு. வ. மறைந்த நிகழ்ச்சி போனது போன்ற ஒரு மயக்கம். அவரே இப்போது நேரில் உரையாற்றுவது போன்ற மற்றொரு மயக்கம். தேவார, திருவாசகங்கள் ஓதப்பெற்றன.

மறைந்த ஆன்மாவின் நினைவாக—பிதிர்க்கடனாக—அனைவருக்கும் பெரு விருந்துக்கு ஏற்பாடாகி இருந்தது. சென்னை வருவதற்கு முதல் நாளே, என் உடல்நிலை சற்றுச் சீர் கெட்டிருந்தது. இந்த நிலையில் நகரி தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கி வைத்துப்பேசினேன். சென்னைக்கு வந்த போதும் உடல் நிலை நன்றாக இல்லை. விருந்து உணவு என் உடல் நிலைக்கு ஏற்றதாக இல்லை; பசியும் இல்லை. கத்தரிக் காய்க் கூட்டு மிகச் சுவையாக இருந்தது. பாயசம், சிறிது மோர்சோறு மட்டிலும் தான் உண்டேன். சுவை மிக்க கத்தரிக்காய்க் கூட்டைச் சற்று அதிகமாகவே உண்டேன். அன்றுமாலையே திருப்ப திதிரும்பி விட்டேன்.

மறுநாள் வயிற்றுப் போக்கு சிறிது இருந்தது. வரவர அது அதிகப்பட்டது. வெறும் நீராகவேபோயிற்று. வாந்தி பேதி (Cholera)யாக இருக்குமோ என்று ஐயப்பட்டேன். நாடி இறங்கிக்கொண்டே வந்தது. பல்கலைக் கழக நலவாழ்வு மையத்தில் சிகிச்சை பெற்றேன். ஊசி மருந்து, மாத்திரை—எதற்கும் கேட்கவில்லை. நாளுக்கு நாள் பேதி

அதிகப்பட்டுக் கொண்டும் வந்தது. நாடோறும் 250 C.C. உப்புநீர் உடலில் குத்திப் புகுத்தப்பெற்றது. இருபது நாட்கள் கிடந்த நிலைதான். சிறுநீர் கழித்தல், பேதி யாதல் முதலியவை படுக்கைத்தட்டில் (Bed pan) தான். காலையிலும் மாலையிலும் ஆராய்ச்சி மாணவர்கள், முதுகலை வகுப்பு மாணவர்கள் செய்த பணி விடைகளுக்குக் கணக்கே இல்லை. திரு செயக் குமார் என்ற மாணவனின் பணி என்னால் மறக்க முடி யாதது. அவர்கள் படிப்பிற்காக, நலத்திற்காக உயிர் விட்டு உழைத்ததை அவர்கள் மறக்கவில்லை. நான் திருநாடு அலங்கரித்து விடுவேனோ என்று கூட ஐயப்படத் தொடங்கினர். நானும் டாக்டர் மு. வ. சென்ற வழியைத் தொடர்வேனோ என்று சிறிது ஐயப்பட்டேன்.

என்று வருவான் எமனென் றெதிர்நோக்கி
நின்று தளர்கின்றேன் நித்தமும்—மன்றில்
நடங்கண்ட ஈசன் நடராசன் பாதத்
திடங்கண்டு வைநீ எமக்கு[5]

என்று பண்டிதமணியின் பிரிவிற்கு இரங்கிப் பாடிய தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல் அடிக்கடி நினைவிற்கு வரத் தொடங்கியது. மனஉறுதி குறையவில்லை; முகத்திலும் பொலிவு இருந்துகொண்டே இருந்தது. இன்னும் சமூகச் சேவைக்காக வைத்திருக்கின்றான் ஏழுமலையான் என்று உறுதியாக நம்பினேன். நான் பிழைக்க வேண்டும் என்று என் மாணவர்கள் இறைவனை வேண்டினர்; தோழ ஆசிரியர்கள் (ஒருவரைத் தவிர) பிரார்த்தித்தனர். என் ஆயுட்காலமும் (பிராரத்த கருமம்—நுகர்வினை) முடியாத தால்பிழைத்துக்கொண்டேன். எனக்குச் சுவையாக உண்ட கத்தரிக்காய் கூட்டின்மீது ஐயம். சென்னையிலும் விருந் துண்டவர்கள் பலருக்கும் பேதி ஏற்பட்டதாம். பூச்சி

5. தே. வி: மலரும் மாலையும்—பண்டிதமணியின் பிரிவு-3

மருந்து அடிக்கப் பெற்று மூன்று நாட்கள் கழிவதற்கு முன்னரேபறிக்கப்பட்ட கத்தரிக்காயின் திருவிளையாடலே என்பது பின்னர்உறுதிப்பட்டது. சைவ வைணவ சம்பந்த மான பல நூல்கள் எழுதி விட்டேன். நான் நன்கு பழகி மறைந்த பெரியார்களை நினைவுகூரும் வகையில் எழுதும் நூலில் டாக்டர் மு. வ. அவர்களும் இடம் பெறு கின்றார். அவருடைய 'சாட்டுப் பெயராகிய' திரு வேங்கடத்தை மறக்க முடியுமா, என்ன!

பிறப்பு: 25-4-1912. மறைவு: 10-10-1974.

## 16. பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

மகாகனம் சீநிவாச சாஸ்திரியாரை (முதல் துணை வேந்தர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்) பேச்சு நய முடைய சொற்பொழிவாளர் (Silver-tongued Orator) என்று கேள்விப்பட்டதுண்டு. ஆனால் அவரை நேரில் பார்த்ததும் இல்லை; சொற்பொழிவைக் கேட்டதும் இல்லை. நாட்டுப் புறத்தில் கிணற்றுத் தவளைபோல் வாழ்கின்றவர்கட்கு இத்தகைய வாய்ப்புகள் இருக்க முடியாதல்லவா? ஆயினும் கேள்விப் பட்டே அவரிடம் அதிக மதிப்பும் மரியாதையும் கொண்டிருந்தேன். என் அரிய நண்பர் பேராசிரியர் அ. சீவாசராகவன் ஆங்கிலத் திலும் அருந்தமிழிலும் உரையாற்றினதைப் பலமுறை கேட்டு மகிழ்ந்துள்ளேன். கற்பனையில் மகாகனம் சாஸ்திரியாரைப் பற்றிக் கொண்டிருந்த மதிப்பீடும் பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்களின் உரைகளை நேரில் கேட்ட பிறகு அவர்களைப் பற்றிக் கொண்டிருக்கும் மதிப்பீட்டை ஒப்பிட்ட என் மனம் பேராசிரியர் சீநிவாச ராகவனை மிக்க பேச்சு நயமுடைய சொற்பொழிவாளர் (Gold tongued Orator) என்று எடை போடுகின்றது. கண்ணுக்கு எடுப்பான தோற்றம், கேட்போர் காதிற்கு இனியகுரல், பழகுவதற்கு எளிமை, எல்லோருடனும் இன்முகத்துடன் உரையாடி அவர்கட்கு உவப்பூட்டும் பாங்கு—இவையனைத்தும் உருண்டு திரண்ட மாமேதையே பேராசிரியர் அ. சீநிவாசராகவன்.

இவரை முதன் முதலாகக் கண்டு பழகியது 1949—பிப்பிரவரி மாதம் என்பது என் நினைவு. நாமக்கல் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் திரு பி.ஆர் சுப்பிரமணியத்தின் பொறுப்பில் சேலம் மாவட்ட ஆசிரியர்களின் மாநாடு நாமக்கல்லில் நடைபெற்றது. அந்த மாநாட்டைத்திறந்து வைக்கச் சிறப்பு விருந்தினராக அழைக்கப்பெற்றிருந்தார் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் அவர்கள். எனக்கும் அழைப்பு வந்திருந்தமையால் நானும் மாநாட்டிற்குப் பார்வையாளனாகச் சென்றிருந்தேன். அப்பொழுதுதான் திரு. பி.ஆர். சுப்பிரமணியம் என்னைப் பேராசிரியர் அ.சீ. இராகவனுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அப்பொழுது பேராசிரியர் இராகவன் சென்னை விவேகாநந்த கல்லூரியில் தாம் வகித்து வந்த ஆங்கிலப் பேராசிரியர் பதவியைத் துறந்து 'சிந்தனை' என்ற திங்கள் இதழை நடத்திக் கொண்டிருந்தார். நான் அவரைச் சந்தித்தபோது தாம் கையில் வைத்திருந்த 'சிந்தனை' இதழ் ஒன்றை எனக்குத் தந்தார். சிந்தனையைத் தூண்டும் பல தரமான இலக்கியக் கட்டுரைகளைத் தாங்கிக் கொண்டிருந்த ஏடாகத் திகழ்ந்திருப்பதைக் கண்டேன். துறையூர் திரும்பியதும் அந்த இதழுக்கு ஓராண்டு சந்தாத்தொகையை அனுப்பி வைத்தேன். ஓராண்டுக்காலம் அதிலுள்ள கட்டுரைகளைப் படித்து அநுபவித்தேன்.

நாமக்கல் ஆசிரியர் மாநாட்டைத் திறந்து வைத்து நிகழ்த்திய பேராசிரியரின் ஆங்கில உரை கேட்போர் கவனத்தை ஈர்த்தது. அவர்தம் இனியகுரலில் வெளிப்பட்ட ஆங்கில உரை அழகிய ஆங்கில மாது ஒருத்தி நடனமாடியது போன்று இனிமையாக இருந்தது. தமிழையும் முறையாகப் படித்து புலமை பெற்றவராதலால், ஆழ்வார் பாசுரங்களில் காணப்பெறும் இனிமையும் குழைவும் பேச்சில் நெளிந்தது. இப்படித்தான் வகுப்பும் எடுப்பார் என்றும், இவரிடம் பயிலும் வாய்ப்பு பெற்றவர்கள்

பாக்கியசாலிகள் என்றும் நினைத்துக் கொண்டேன். திரு. பி.ஆர்.சுப்பிரமணியமும் இப்பேராசிரியரும் நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவராதலால் இப்பெருமகனாரை சேலம் மாவட்ட ஆசிரியப் பெருமக்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதற்காகவே இவரை அழைத்தார் போலும். திரு. பி.ஆர் சுப்பிரமணியமும் ஆங்கிலத்தில் வல்லுநர்; அருந்தமிழ்க் காதலர்.

1949—ஏப்பிரலில் காரைக்குடிக் கம்பன் திருநாளைக் காண முதன் முதலாகச் சென்றேன். அப்போழுது (இரண்டு மாத இடைவெளிக்குள்) பேராசிரியர் இராகவனைச் சந்தித்து மகிழ்ந்தேன். இந்தத் திருநாளின் போது பல அன்பர்கள் அறிமுகமானார்கள். அவர்களுள் தூத்துக்குடி ஏ.சி. பால் நாடார் (வழக்குரைஞர்), தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் (கலெக்டர்) கு. அருணாசலக் கவுண்டர் (பேராசிரியர்), எஸ். மகராசன் (அப்போது மாவட்ட முனிசீப்) மஞ்சுநாத் (சார் பதிவாளர்) தொ மு. சிதம்பர ரகுநாதன் (திரு.தொண்டைமானின் இளவல்) திரு ராய. சொக்கலிங்கன், திரு. சொ. முருகப்பா பேராசிரியர் ஆ. முத்துசிவன், திரு தெ.பொ. மீனாட்சி சுந்திரனார் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்; தூத்துக்குடி, திருநெல்வேலி நண்பர்களையெல்லாம் பேராசிரியர் இராகவன் அறிமுகம் செய்து வைத்தார்.

ஒன்றிரண்டு ஆண்டுகள் பேராசிரியர் அ.சீநிவாச ராகவன் தூத்துக்குடியில் வ.வு. சிதம்பரம் பிள்ளை அவர்கள் பெயரால் புதிதாகத் தொடங்கப் பெற்ற கல்லூரிக்கு முதல்வராக நியமனம் செய்யப்பெற்றார். இந்தப் பதவி ஏற்று ஒன்றிரண்டு ஆண்டுகளில் ஏற்கெனவே பெற்றுள்ள புகழ் காரணமாகச் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின் (Syndicate) உறுப்பின ராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இந்தப் பதவியில் தாம் ஓய்வுபெறும்வரை இருந்து வந்தார். ஆங்கிலப் பேராசிரியராக இருந்த இப்பெருமகனார் பலதமிழாசிரியர்

களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டார். அவர்கட்கு ஒல்லும் வகையெல்லாம் உதவினார். எங்கள் கல்லூரி ஆசிரியர்கள் ஒரு சிலருக்கு ஆதரவாளர்கள் (God-fathers) இருந்தமையால் சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வுப் பணி பெற்றனர். பலமுறை துணைவேந்தரைப் பார்த்துப் பேசியும் இப்பதவி எனக்குக் கிடைக்கவில்லை. ஒரு மூன்றாண்டுகள் (1953—56) பல்கலைக் கழகப் பேரவை யிலும் கல்வி ஆலோசனைக் குழுவிலும் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றிருந்தேன். இந்த அவைகளின் கூட்டங் களுக்காகப் பன்னிரண்டு முறை சென்னைசெல்லும் வாய்ப் புகள் இருந்தன. இவற்றைத் தவிர மூன்று முறைசொந்த அலுவலாகச் சென்னை செல்லும் வாய்ப்புகள் இருந்தன. பதினைந்து முறை பார்த்து வேண்டியும் துணைவேந்தர் ஏ.எல். முதலியாரின் உதவி பெறமுடியவில்லை. பல்வேறு மழுப்பல்கள்தாம் அவரிடம் பெற்ற உதவிகள்! பேராசிரியர் இராகவனை (ஆட்சிக் குழு உறுப்பினர்) அணுகியதால் ஓர் ஐந்தாண்டுகள் வித்துவான் தேர்வில் விடையேடுகள் திருத்தும் பணி கிடைத்தது. காரைக்குடி யில் இருந்தபோது (1958, 1959, 1960 ஆண்டுகள்) மூன்று ஆண்டுகளும், திருப்பதி சென்றபிறகு இரண்டு ஆண்டுகளும் (1961, 1962 ஆண்டுகள்) இப்பணி தொடர்ந்து நீடித்தது.

திருப்பதியிலிருந்தபொழுது தொடர்ந்து ஆறு ஆண்டு கள் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்தவர் தாமரைச்செல்வர் திரு நெ.து.சுந்தரவடிவேலு அவர்கள். இவர் காலத்தில் இவரால் பயன் அடைந்தவர் கள் எண்ணற்ற மாணவர்கள்; எண்ணற்ற ஆசிரியர்களுள் அடியேனும் ஒருவன். ஐந்தாண்டுகள் எம்.ஏ. தேர்வில் பணி நல்கினார். வறுமையால் தொல்லையுற்ற அடியேனுக்கு இந்த உதவி காலத்தினால் செய்த உதவி யாகும். இதனை என் வாழ்வில் ஞாலத்தினும் பெரியதாகக் கருதி வருகின்றேன்.

மூன்று முறை சென்னைப் பல்கலைக் கழகத்தில் நுழைய முயன்றேன். மூன்று முறையும் கிடைக்கும் போலிருந்தது; நழுவியது. இனி, சென்னைக்கு விண்ணப்பம் அனுப்புவதில்லை என்ற சூளுரையை எடுத்துக் கொண்டேன். இதனைப் பேராசிரியர் இராகவ னிடம் தெரிவித்தேன்; அவரும்என் துணிவுக்கு மகிழ்ந்தார். அவரும் வாழ்க்கையில் சிரமப்பட்டவர். திரைமறைவில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை விவரமாக எடுத்துச் சொன் னார் பேராசிரியர் அ. சீநிவாசராகவன். 1960—பிப்பிரவரி யில் 1954-இல் தொடங்கப்பெற்ற திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு முதன்முதலாகத் தமிழ் விரிவுரை யாளர் பதவி விளம்பரம் செய்யப் பெற்றிருந்தது, காரைக் குடியில் அப்போது பேராசிரியர் (Professor) பதவியில் இருந்தேன். அதனைத் துறந்து திருப்பதியில் சேர்வதெனத் தீர்மானித்து விண்ணப்பித்தேன். என் வாழ்வில் மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையை இழக்கச் செய்தான் ஆண்டவன். உதவிக்கும் ஆதரவாளர்கள் இல்லாமல் செய்தான்.

புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே![1]

என்று நினைக்கச் செய்தான். ''துணிவாக என்னிடம் வருக'' என்று சொல்வதுபோல் ''விண்ணப்பம் போடு'' என்றும் பணித்தான். 'தமிழக அரசு தமிழ் வளர்ச்சிக்காக பிறமாநிலங்கட்கு வழங்கிவரும் நிதியைப்' பெற்று தமிழை யும் வளர்க்கலாம் நானும் வளரலாம் என்று கருதியே திருப்பதி செல்லத் தீர்மானித்தேன். இங்கு எந்த விதத் தடையுமின்றி என்னை எடுத்துக் கொண்டார்கள். இதற்காக நடந்த பேட்டியின்போது நானும் குழுவிற்குச் சில வினாக்கள் விடுத்து என் நிலையை உறுதி செய்து கொண்டேன். பணி ஏற்ற பிறகு பேராசிரியர் இராகவ

1. திருவாய் 6.10 :10

னுக்கு எழுதினேன். அதற்கு அவரே தன் கைப்பட எழுதி கடிதத்தில்,

செடியாய வல்வினைகள்
 தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா!
 நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
 அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன்
 பவளவாய் காண்பேனே.[2]

என்ற குலசேகராழ்வார் பாசுரத்தை எழுதி ''இனி கவலை வேண்டா; வேங்கடன் அடியில் பெரும் புகழுடன் திகழ்வீர்கள்'' என்று வாழ்த்தினார். திருப்பதி சென்ற பிறகும் திருவேங்கடவன் பத்து ஆண்டு கள் தமிழக மானியம் பெறமுடியாமல் தவிக்க வைத்தான். பதவி உயர்வில் ஒவ்வொரு நிலையிலும் பெரிய பெரிய தடைக் கற்களை இட்டு சொல்லொணாத் துன்பங்களை யும் விளைவித்தான். இவற்றைத் தாக்குப்பிடிக்கவல்ல மன வலியையும் அருளினான்.

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.[3]

என்ற குறளுக்கு என்னையே எடுத்துக் காட்டாகக் கொண்டு விளக்கம் தந்தான் போலும் என்று இப்பொழுது சிந்திக்கின்றேன். திருப்பதியில் என்னை வறுமையில் வாடச் செய்தாலும் என் மக்கட்கு நல்ல கல்வி பெறும் வாய்ப்பு கள் அளித்தான். எனக்கும் நல்ல உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி இன்றுவரை (6-11-1989) நோய் நொடியின்றி வைத்துத் தன்புகழை எழுத்து வடிவத்தில்

---

2. பெரு.திரு. 4:9
3. குறள். 267 (தவம்)

தரச் செய்கின்றான். வாழ்விலும் தாழ்விலும் இன்பத்திலும் துன்பத்திலும் சம நிலையான மனத்தையும் நல்கியுள்ளான். சித்தாந்த மொழியில் கூறினால் 'இருவினையொப்பு, மலபரிபாகத்தை' நல்கி 'போதுமென்ன மனமே பொன் செய்யும் மருந்து' என்ற பழமொழியின் உண்மையையும் கடைப் பிடிக்கச் செய்து விட்டான். இதனையும் அவன் காட்டும் கருணையாகவே கொள்ளுகின்றேன்.

நான் காரைக்குடியில் தொடங்கி திருப்பதியில் முடித்த 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற நூலுக்கு ஆங்கிலத்தில் ஓர் அணிந்துரை தருமாறு வேண்டினேன். பேராசிரியர் உவப்புடன் என் வேண்டுகோளை ஏற்று அணிந்துரை நல்கினார். அதிலுள்ள ஒரு பகுதி :

> 'These chapters illustrate how learned writing can be stimulating even while, for the sake of precision and truth, it avoids mere sentiment and fancy.
>
> This work on 'Tolkappiyam' covers almost all aspects of that ancient classic. Its discussions are full, its analysis of 'Tolkappiyam' and its commentators keen and learned and its judgements on the whole marked by restraint and balance. Prof. Reddiar has given us a patiently evolved and carefullyworded thesis on a recondite theme, one that will prove helpful to all earnest students of old Tamil Literature'

திருப்பதி தமிழ் இலக்கியம் நடையாடாத தேசமாகையாலும், தமிழ் எழுதவும் படிக்கவும் வல்லவர்கள் அருகி விட்டதாலும் தமிழ் இலக்கியம்பற்றி ஓரளவாவது அறிந்து கொள்ள வாய்ப்பாக இருக்கட்டும் என்றே இப் பேராசிரியரிடம் ஆங்கில முகவுரை பெற்றேன்.

பேராசிரியர் அ. சீநிவாசராகவன் திருநெல்வேலி சீமையைச் சேர்ந்தவரான படியால் டி. கே. சியின் வட்டத் தொட்டியுடன் நிரம்பத் தொடர்பு கொண்டிருந்தார். ஒரு சில ஆண்டுகள் அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகவும் பணியாற்றியவர். பம்பாய் கல்கத்தா, டில்லி போன்ற இடங்களில் வாழும் தமிழர் களிடம் செல்வாக்கும் மதிப்பும் பெற்றுத் திகழ்ந்தவர். கம்பனையும் ஆழ்வார்களையும் கண்ணப்ப நாயனார் பன்றி இறைச்சியைச் சுவைத்து சுவைத்து இறைவனுக்குப் படைத்ததைப்போல இவரும் இந்த இலக்கியங்களைச் சுவைத்து சுவைத்துத் தமிழ்உலகத்திற்குத் தம் பேச்சாலும் எழுத்தாலும் வழங்கி மகிழ்வித்தவர்.

சில ஆண்டுகட்கு முன்னர் அவர் வெளியிட்ட 'காவிய அரங்கில்' (பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, திருச்சி) என்ற ஒரு நூலைத் திரும்பத் திரும்பப் படித்துச் சுவைத்த துண்டு. யாரோ ஒருவர் வாங்கிப் போனார்; திரும்பத் தர வில்லை. கொடுத்த எனக்கு வாங்கினவர் பெயர் கூட மறந்த போது வாங்கினவர்க்குக் கொடுத்தவர் பெயர் எப்படி நினைவு இருக்கும்? பெரும்பாலும் இரவலாக நூலைப் பெற்றுப் போவார்கள்; அதைப் படிப்பதுமில்லை; வாங்கின நினைவும் இருப்பதில்லை; அந்த நூல் எங்கு போயிற்று? என்று தேடிப் பிடிக்கவும் முடியாத நிலையில் இருப்பவர்கள் சிலர். 'காவிய அரங்கில்' என்ற இந்நூல் கம்பன் காவிய அரங்கில் நடமாடும் சில பாத்திரங்களைப் பற்றி அற்புதமாகத் திறனாய்ந்த கட்டுரைகளைக் கொண்டு இலங்குவது. ஆங்கில இலக்கியங்களையும் ஆங்கிலத் திறனாய்வு நூல்களையும் படித்து அவற்றில் தோய்ந்தவராதலால் அவற்றின் போக்கும், தமிழ் மரபிற் கேற்ற நெளிவு சுழிவுகளும் இந்த நூலில் பிரதிபலிப்பதைக் கண்டு மகிழலாம். இவர் தமிழ்ச் சொற்பொழிவுகளில் காணும் இனிமை, எளிமை, தெளிவு என்ற கூறுகளை

இவர்தம் இனிய குரலில் கேட்டு மகிழ வேண்டும் என்ற ஆசை எவரையும் விட்டு வைக்காது.

பிறவியிலே வைணவராயினும் சில வைணவர்கள் பேச்சில் மணிப் பிரவாள நடையும் தமிழ் நடையும் கலந்து கிராம ஃபோன் பிளேட்டில் செய்தி வெளிவருவதுபோல் இல்லாமல் இவர் வாக்கில் தூயதமிழில் வைணவ நடையும் தமிழ் மணமும் கமழ இனிய குரலில் வெளிவரும்போது குளிர்ந்த பழச்சாறு பருகினது போன்ற அநுபவம் கேட் போரிடம் ஏற்படும். எடுத்துக்காட்டாக,

"கொழுந்துஅலரும் மலர்ச்சோலைக் குழாய்கொள் பொய்கைக்
கோள்முதலை வாள்எயிற்றுக் கொண்டற்கு எள்கி
அழுந்தியமா களிற்றினுக்கு அன்றுஆழி ஏந்தி,
அந்தரமே வரத்தோன்றி அருள்செய் தானை,
எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட,
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட,
செழுந்தடநீர்க் கமலம் தீவிகைபோல் காட்டும்
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.[4]

என்ற திருமங்கையாழ்வாரின் திருக்கோவலூர் பற்றிய பாசுரத்தை எடுத்து விளக்கும்போது நம்மைத் திருக் கோவலூருக்கே கொண்டுபோய் விடுவார். அங்குள்ள இயற்கை எழிலை அற்புதமாக விளக்குவார். நமது மனத் தில் அக்காட்சி திரைக் காட்சி காண்பது போன்ற அநுபவத்தை ஏற்படுத்தி விடுவார். கசேந்திராழ்வான் கதையை எடுத்து விளக்கும்போது நாம் கசேந்திரன் என்ற யானை முதலை வாயில் சிக்கித் தடுமாறுவதையும் திருமால் மலர்மகளும் மண்மகளும் இருபாலும் விளங்க கருடன்மீது வருவதையும் நாம் நேரில் காண்பது போன்ற ஒருவித பிரமையை—மயக்கத்தை—ஏற்படுத்தி விடுவார். நாமும் கவிதையநுபவத்தின் கொடுமுடியில் நின்று

4. பெரி.திரு.2.10:3

பக்தியநுபவத்தை மாந்தும் நிலையை ஏற்படுத்தி விடுவார். ஒரு முறை இவர் பேச்சைக் கேட்போர் மேலும் மேலும் கேட்க வேண்டும் என்ற ஆவலுடன் இருக்கும் நிலையை ஏற்படுத்தி விடுவார் கேட்போரிடையே.

ஒரு சமயம் பேராசிரியர் இராகவன் காரைக்குடிக் கம்பன் திருநாளில் சீதாப்பிராட்டி என்னும் பாத்திரப் படைப்பைப் பற்றிப் பேசியதாக நினைவு. அப்பொழுது அவர் சில பாடல்களை எடுத்துகாட்டிக் கல்கத்தா 'ரசகுல்லா'வைச் சுவைப்பதுபோல் அப்பாடல்களைச் சுவைக்க வைத்தது நினைவுக்கு வருகின்றது. சீதாப் பிராட்டி இலங்கையில் இருந்த சூழ்நிலையை,

வேலையுள் இலங்கை என்னும்
விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலை தானும்
இல்லதோர் கனகக் கற்பச்
சோலையங் கதனுள் உம்பி
புல்லினால் தொடுத்த தூய
சாலையின் இருந்தாள் ஐய!
தவம்செய்த தவமாம் தையல்.[5]

என்று அநுமன் வாக்குவில் காட்டுவார் பேராசிரியர், ''இலங்கையில் ஒருபக்கத்தில் இராவணன் விரும்பும் போது உல்லாசமாய்க் காலங் கழிக்க ஓர் இடத்தை அமைத்துக் கொண்டிருந்தான். அஃது அழகான சோலை; எது காலை? எது மாலை? என்று தெரியாத இடம். பகலவன் பிரவேசிக்காத இடம். அந்தச் சோலையில் தான் கற்பினுக்கு அணியான பிராட்டியைக் கண்டேன். எப்படிக் கண்டேன் தெரியுமா? கோதாவரி தீரத்தில் பஞ்சவடி என்றும் சோலையில் நின் தம்பி இலக்குவன் புல்லினால் அமைத்த பர்ண சாலையில் இருந்தாள். எப்படி இருந்

5. சுந்த. திருவடி தொழுத—64

தாள்? பதிவிரதா தருமம் என்னும் தவம்தான் செய்த தொரு தவத்தின் பயனாக இருப்பது போல் இருந்தாள்'' என்று பேராசிரியர் விளக்கினது இன்னும் நான் அவர் பேச்சைக் கேட்பதுபோல் உள்ளது.

இன்னும் கூறுவார்: ''அரக்கிமார் பிராட்டியை நெருங்கி நெருங்கி அச்சுறுத்துகின்றனர். கல்லினிடையே தோன்றி ஒரு துளி நீராயினும் தன்மேல் துளிக்கப் பெறாத மூலிகைபோல் அழகு கெட்டுக் காணப் பெறுவாள். பெருமானின் கருணையைப் பெறாமல் மிகவும் மெலிந்து காணப்பெறுகின்றாள்.

நன்மருந்துபோல் நலன்அற
வுணங்கிய நங்கை
மென்மருங்குல்போல் வேறுள
அங்கமும் மெலிந்தாள்.[6]

''முன்பு பிராட்டிக்கு மருங்குலில் மாத்திரம் இருந்த மெலிவு பெருமானைப் பிரிந்துள்ள நிலையில் பருத்திருந்த மற்றைய உறுப்புகளிலும் பரவுவதாயிற்றுப் போலும்'' என்று விளக்குவார். தொடர்ந்து ''அரக்கிகளிடையே இருந்த பிராட்டி புலிகளின் கூட்டத்திலகப்பட்டுக்கொண்ட தாகிய ஓர் இளம் பெண்மானை ஒத்துக் காணப்பட்டாள். உறக்கத்தைத் துறந்தவளாதலின் கண்ணை மூடுவதும் இல்லை; இமைத்தலும் இல்லை. அவள் கண்கள் இடைவிடாது தாரை தாரையாக நீர் வடிந்து கொண்டிருந்த நிலையில் உள்ளாள். 'நெடுங்கண்கள், மழைக்கண் என்பது காரணக் குறியென வகுத்தாள்.' மகளிர் கண்கள் மழை போலக் குளிர்ச்சியான இயல்புடைமையால் 'மழைக் கண்' என்று வழங்கப்படும். பிராட்டியின் கண்கள் எப்பொழுதும் இடையறாது நீர் மழையைப் பொழிதலால் 'மழைக் கண்' என்று காரணக் குறியாயிற்று'' என்பது பேராசிரியரின் விளக்கம்.

6. சுந்தர. காட்சி-3

இன்னும் அவள் திருமேனி எப்படிக் காணப்பட்டது, தெரியுமா?

ஆவி யந்துகில் புனைவதொன்
றன்றிவே றறியாள்;
தூவி யன்னமென் புனலிடைத்
தோய்கிலா மெய்யாள்;
தேவு தெண்கடல் அமிழ்துகொண்
டனங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே
யொக்கின்ற உருவாள்.[7]

திருமால் சயனித்திருக்கும் பாற்கடலைக் கடைந்ததால் தோன்றியது அமிர்தம். அதற்குத் தெய்வத் தன்மை உண்டு. எப்படி? அது கண்ணுக்கு இனியதாக இருப்பது; யாவராலும் விரும்பப்படுவது; உண்டாரை மரணத்தை யொழித்து வாழ்விப்பது; தன்னை நுகர்ந்தவர் வேறொன்றையும் நுகராமல் தடுக்கும் தன்மையுடையது; கிடைத்தற் கருமையுடையது; மிக்க இனிய சுவையுடையது என்பன போன்றவை. இத்தகைய அமிர்தத்தைக் கொண்டு அனங்கவேள்— மன்மதன்— எல்லாராலும் விரும்பத் தக்கவன்—தீட்டிய ஓவியம் போன்றவள் பிராட்டி. அந்த ஓவியத்தின்மீது புகை (ஆவி) படிந்தது போன்ற உருவத்தையுடையவள். பன்னாட்கள் நீரைக் காணாத—தீர்த்தமாடாத—திருமேனியையுடையவள் என்பதைத் 'தூவி (அன்னத்தின் சிறகுகள்) யன்னமென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்' என்று காட்டப் பெறுகின்றது. இத்தகைய திருமேனியில் அணிந்திருந்த ஆடையும் ஒன்று தான்; அதுவும் புகைபோல் (ஆவி) மெல்லிதாகிய ஆடையே. இராவணன் விலையுயர்ந்த பல ஆடையாபரணங்களைக் கொடுக்கக் காத்திருந்தனனாயினும் அவற்றில் ஒன்றையும் விரும்பினாள் அல்லள் என்பதையும் காட்டியவாறு.

---

7. சுந்தர் காட்சி.11

திருமேனியைக் காட்டிய கவிஞன் அவன் திருவுள்ளத்தையும் காட்டுகின்றான்.

அருந்து மெல்லடகு ஆர்இட
 அருந்துஎன்று அழுங்கும்
விருந்து கண்டபோது என்உறுமோ
 என்று விம்மும்
மருந்தும் உண்டுகொல் யான்கொண்ட
 நோய்க்(கு) என்று மயங்கும்
இருந்த மாநிலம் செல்அரித்து
 இடவும் ஆண்டு எழாதாள்.[8]

இராவணன் எந்த இடத்தில் சிறை வைத்தானோ அந்த இடத்தைக் கரையான் பிடித்து அரித்த போதிலும் அந்த இடத்தை விட்டு அகலாது அமர்ந்திருக்கின்றாள்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை[9]

என்று வாழ்க்கைத் துணையைச் சிறப்பிப்பார் வள்ளுவப் பெருந்தகை. 'இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை'[10] அல்லவா? சிந்திக்கின்றாள் பிராட்டி; 'காட்டில் அருந்தப்படும் மென்மையான இலையுணவை யாவர் பரிமாற உண்ணுவார்? என்று வருந்துவாள்.' 'செல் விருந்து ஓம்பி வருவிருந்து காத்திருப்பாள்' இராமனுக்கு விருந்து வரும்போது 'உபசரிப்பார் இல்லையே?' என்று என்ன துன்பப்படுவாரோ? என்று எண்ணி வருந்துவாள். 'யான் இப்போது கொண்டிருக்கின்ற மனப்பிணியைத் தீர்க்கும் மாமருந்தும் உண்டு கொல்?' என்று மயங்குவாள். இப்படியாகப் பிராட்டியின் திருவுள்ளம் காட்டப்படுகின்றது.

8. சுந்தர. காட்சி-15
9. குறள்-51
10. வாக்குண்டாம்-21 (ஔவையார்)

ஒரு காவிய மாந்தரை உயர்ந்த இடத்தில் ஏற்றி வைக்கின்ற கலை ஓர் அரிய கலை; அற்புதமான கலை. இந்த அரிய கலையைக் கம்பனது படைப்புத் தத்துவம் பாங்குற எடுத்துக் காட்டுகின்றது. சிம்மாசனத்திற் கெல்லாம் மேலான சிம்மாசனம் ஒன்றைச் சீதாப் பிராட்டிக்குக் கவிநாயகன் கம்பன் அமைத்து வைக்கின் றான். இது பெண்மையைக் கண்ணுக்கும் எட்டாத ஆசனத்தில் வைத்ததாகும். இராவணனை ஒரு துரும்பாக மதித்துப் பிராட்டி பேசினதை மறைந்து நின்று கேட்ட மாருதிக்கு உண்டான வியப்புக்கும் பெருமைக்கும் அளவே இல்லை. மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும் எட்டாத ஓர் அற்புத உலகிலிருந்து இலட்சியமும் ஆங்காரமும் இறங்கி வந்து முழக்கம் செய்கின்ற மாதிரி மாருதிக்குத் தோன்று கின்றது. பிராட்டியின் மனப்பண்பு அவ்வளவு உயர்ந்த நிலையில் உள்ளது. இலங்கையினின்றும் திரும்பி வந்த மாருதி இராமனிடம் பேசுகின்றான்.

இந்த நிகழ்ச்சியைச் சித்திரித்துக் காட்டும் கம்ப நாடனின் இரண்டு பாடல்களை விளக்குகின்றார் பேராசிரியர் இராகவன்.

சோகத்தால் ஆய நங்கை
கற்பினால் தொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும்
வான் சிறப் புற்றார்;

வாழ்க்கை இலட்சியங்களில் மகளிர்க்கே உரிய உறுதிப் பாட்டின் ஆற்றல்—அதாவது கற்பின் ஆற்றல்— எவ்வளவு தொலைவு போகும் என்பதை வியந்து கூறுகின்றான் அநுமன். நான்முகனின் நாயகி நாமகள், பகலவனின் தர்மபத்தினி சாயாதேவி, இந்திரனின் துணைவி இந்திராணி ஆகிய எல்லோருக்கும் உயர்வு கிடைத்து விட்டது.

மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப் புற்றார்.

என்கின்றான் கவிஞன். ஒரு பாகத்தில் பார்வதிதேவியை வைத்துக் கொண்டிருப்பதனால் அம்மை அப்பன் என்றும் 'தையல் பாகன்' என்றும் வழங்குகின்ற சிவபெருமானும் தன் தேவியை தலையில் வைத்து மதிக்கும்படி ஆயிற்று.

மற்றைப்
பாகத்தாள் அல்லள் ஈசன்,
மகுடத்தாள்

இனி தாமரை மலரில் வாழும் பெரிய பிராட்டியாருக்கும் கவிஞன் எப்படி இடம் அமைக்கின்றான் தெரியுமா? இப்போது முழுப்பாடலையும் காண்போம்.

சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால் தொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப் புற்றார்; மற்றைப்
பாகத்தால் அல்லள் ஈசன்
மகுடத்தாள்; பதுமத் தாளும்
ஆகத்தால் அல்லள் மாயன்
ஆயிரம் மௌலி மேலாள்.[11]

இங்குப் பெரிய பிராட்டியார் திருமார்பில் வீற்றிருக்கத் தக்கவள் அல்லள் ஆகின்றாள்; கோடி கோடி சூரியப் பிரகாசத்தோடு கூடிய அவனது ஆயிரமாயிரம் கிரீடங்கள் குவிந்து குவிந்து அலங்கரிக்கும் அவரது கிரீடங்களுக்கும் மேலான இடத்தைப் பெற்றுவிடுகின்றாள். ஆம்; 'ஆயிரம் மௌலி மேலாள்.' பாடலின் பொருள், உணர்ச்சி, சொல் எல்லாம் சேர்ந்து நம்மையும் கடத்திக் கொண்டு எட்டாத அநுபவ உலகிற்குக் கொண்டு சேர்த்து விடுகின்றன.

11. சுந்தர. திருவடிதொழுத-67

பிராட்டியின் கற்பு உயர்ந்த இடத்தை அடையவே, நான்முகன், மங்கை பங்கன், திருமால் ஆகியோரும் அவரவர் தேவிமார்களை அவரவர் தலைமேற் கொண்டு கொண்டாடத் தக்க சிறப்பை அடைகின்றனர். பிறிதொரு பாடலில்,

இற்பிறப்பு என்பது ஒன்றும்
இரும்பொறை என்பது ஒன்றும்
கற்பெனும் பெயரது ஒன்றும்
களிநடம் புரியக் கண்டேன்.[12]

என்று பிராட்டியாரின் கற்பை அநுமன் கூறுவதையும் எடுத்துக் காட்டுகின்றார்.

பிராட்டியைப்பற்றி அநுமன் வாக்காகப் பேராசிரியர் கூறும் மேலும் இரண்டு பாடல்கள் நினைவிற்கு வருகின்றன. பெண்ணாகப்பிறந்தவள் எவ்வெவ்வாறெல்லாம் தன்னைத் தகுதியாக்கிக் கொள்ள முடியும் என்ற கருத்தை அற்புதமாக விளக்குவது ஒரு பாடல்.

உன்பெருந் தேவி என்னும்
உரிமைக்கும் உன்னைப் பெற்ற
மன்பெரு மருகி என்னும்
வாய்மைக்கும் மிதிலை மன்னர்
தன்பெருந் தனயை என்னும்
தகைமைக்கும் தலைமை சான்றாள்
என் பெருந் தெய்வம் ஐயா...[13]

என்பதுவே இது. பல்வேறு வகையில் பிராட்டியின் சிறப்பு காட்டப் பெறுகின்றது. "சீதாப்பிராட்டி தான் இராமபிரானை மணாளனாக பெற்ற சிறப்புக்,கேற்பத் தன் ஒழுக்கத்தால் முதன்மை பெறுகின்றாள். அறந் திறம்பாத தசரதன் இல்லத்திற்கேற்பப் புகுந்த இடத்தில்

12. சுந்தர. திருவடி தொழுத—62
13. சுந்தர.திருவடிதொழுத—59

சிறந்த மருமகளாகத் திகழ்கின்றாள். இராஜ ரிஷியாகிய ஜனக மகாராஜனின் மகளாகப் பிறந்ததற்கேற்பப் பிறந்த குலத்திற்கு ஏற்ற பெருமையை நிலைநாட்டு கின்றாள். இத்தகைய பெருமாட்டி என் சிறந்த தெய்வம் ஆகின்றாள்'' என்று கூறும் மாருதி இன்னமும் சிலவற்றை எடுத்துரைக்கின்றான்.

இங்ஙனம் எடுத்துரைத்த் சிலவற்றுள் ஒரு சில ஒரு பாடலில் பகரப் பெறுகின்றன.

உன்குலம் உன்ன தாக்கி
    உயர்புகழ்க் கொருத்தி யாய
தன்குலம் தன்ன தாக்கித்
    தன்னையித் தனிமை செய்தான்
வன்குலம் கூற்றுக் கீந்துஅவ்
    வானவர் குலத்தை வாழ்வித்து
என்குலம் எனக்குத் தந்தாள்
    என்இனிச் செய்வ தெம்மோய்.[14]

என்ற பாடலில் இவற்றைக் காணலாம். உலகத்தில் பிறந்த ஒருவர் தன் குடிபிறப்பொன்றை மேம்படுத்துவது அரிது. ஆனால் வள்ளுவர் பெருமான்,

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.[15]

என்பார். தன்குடியை முன்னேறச் செய்யப்புகும் கடமை யுணர்ந்த ஒருவனுக்கு ஊழும் வரிந்து கட்டிக் கொண்டு விரைந்து முன்வந்து துணை செய்யும் என்பது இதன் கருத் தாகும். ஆனால் பல குடியை உயரச் செய்கின்றாள் என்ற அநுமன் வாக்கைப் பேராசிரியர் இராகவன் அற்புதமாக விளக்குவார். 'பிராட்டி இராமனை மணாளனாகப் பெற்ற பிறகு அவன் குலப் பெயரே மாறி வருகின்றது. இதுகாறும் 'சூரிய குலம், மநுகுலம், ககுஸ்தகுலம், இரகு

14. சுந்தர். திருவடி தொழுத—61

15. குறள்—1023 (குடிசெயல்வகை)

குலம் என்று வழங்கி வந்த குலப்பெயர்கள் 'இராகவ குலம், இராம குலம்' என வழங்குமாறு செய்வித்து விடுகின்றாள். அன்றியும், அப்பெருமாட்டி தன் கற்பு நிலை கலங்காத தன்மையினால் தன்னையும் உயர்த்தித் தான் பிறந்த பெண் குலத்தையும் பெருமைப் படுத்துகின்றாள்; தான் பிறந்து வளர்ந்த ஜனக குலத்துக்கும் மேன்மையை ஈட்டுகின்றாள். இவள் பிறந்த 'ஜனககுலம்' 'ஜானகி குலம்' என்று வழங்குமாறு செய்துவிட்டாள். தன்னை இராமனை விட்டுப் பிரித்துச் சிறைவைத்த இராவணனது அரக்கர் குலத்தைக் கூற்றுக்கு ஈந்தாள் என்பது தன்னைக் களவு செய்து எடுத்து வந்த இராவணனது குலம் முழுவதும் அழிந்தது என்பதை விளக்குகின்றது. இராவணனால் வெல்லப்பட்டு ஒடுங்கிக் கிடந்த தேவர் குலத்தை வாழ வைக்கின்றாள். 'அநுமன்' என்ற பெயர் அவன் பிறந்து வளர்ந்த குலத்தோர்க்கெல்லாம் வழங்குமாறு செய்து விட்டாள். குரங்குக் கூட்டத்தை 'அநுமார்கள்' என்று வழங்குகின்றோ மன்றோ? இப்படிப் பிராட்டியின் கற்பு நிலையைப் பலவாறு விளக்கிய பேராசிரியர் 'இதிகாச சிரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது'[16] என்ற பிள்ளை லோகாச்சாரியாரின் திருவாக்கால் தன் உரைக்கு ஒரு முத்தாய்ப்பும் வைத்து விடுகின்றார்.

1965—இல் என நினைக்கின்றேன். பேராசிரியரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் நான் எழுதி வெளியிட்ட இரண்டு நூல்களின் பெயர், வெளியிட்ட ஆண்டு அவை நுவலும் பொருள், வெளியிட்டோர் முகவரி இவை பற்றிக் குறிப்பிட்டெழுதுமாறு கேட்டிருந்தார் அவரிடம் பணியாற்றிய வைத்தமாநிதி என்பார் மூலமாக. நானும் 'கவிதையநுபவம்', (1961) 'தொல்காப்பியம் காட்டும்

16. ஸ்ரீவசன பூஷணம்—வாக்கியம்-1 (முதல் பிரகரணம்)

வாழ்க்கை', (1964) ஆகிய இரண்டு நூல்கள்பற்றிய விவரங்களை எழுதியிருந்தேன். பன்னூல்களை எழுதித் தமிழ்த் தொண்டு புரிந்த எனக்குச் சாகித்திய அகாடமி பரிசு கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது பேராசிரியரின் ஆசை என்பதை என்னால் ஊகம் செய்ய முடிகின்றது. இவரைத் தவிர என் நூல்களைப்பற்றி சாகித்திய அகாடமிக்குப் பரிந்துரைக்க ஒருவரும் முன்வரவில்லை. நான் கூட தமிழ்ப் பகுதிக்கு ஓர் ஐந்தாண்டுகள் ஆலோசனைக் குழுவில் உறுப்பினராக இருந்தேன். அப் பொழுதுகூட ஒருவரும் என் நூல்களை அறிமுகம் செய்ய முன் வரவில்லை. தமிழ் அறிஞர்களில் பலர் பொறாமைக் காய்ச்சலால் பீடிக்கப் பெற்றுள்ளனர் என்பதைத் தமிழ் உலகம் நன்கு அறியும். ஓர் உறுப்பினர் தம் நூல்களைப் பரிந்துரைக்கலாகாது என்பது அகாடமியின் விதிகளுள் ஒன்று. எனக்கு அகாடமிப் பரிசு கிடைக்காததுபற்றி வள்ளுவரின் 'பெறுவான் தவம்' (குறள்-842) எனக்கு இல்லை போலும் என மன அமைதி கொள்ளுகின்றேன். யான் பரிசு பெற முயன்ற பேராசிரியர் இராகவனின் நல்லுள்ளத்தை வாழ்த்துகின்றேன். இதன்பிறகு இப் பெருமகனாரைப் பற்றிய செய்தி ஒன்றும் இல்லை. ஒரு சில ஆண்டுகட்குப் பிறகு அவர் திருநாடு அலங்கரித்த செய்தியைத்தான் நாளிதழின்மூலம் அறிந்து வருந்தினேன்.

# 17. பி. ஸ்ரீ. ஆச்சாரியார்

பி. ஸ்ரீ. ஆச்சாரியாரைத் தமிழுலகத்திற்கு அறிமுகம் செய்து வைப்பது சொல்லத் தெருவில் ஊசி விற்கும் கதைபோன்றது. இவர் தமிழுலகம் நன்கு அறிந்த எழுத்தாள மேதை. ஒரு காலத்தில் கம்ப சித்திரக் கட்டுரைகள் ஆனந்த விகடனில் வெளிவந்து கொண்டிருந்தபோது நான் உயர்நிலைப்பள்ளி, கல்லூரி மாணாக்கன். அந்தக் காலத்தில் குறைந்த என் தமிழறிவைக் கொண்டு இவர் கட்டுரைகளை ஓரளவு சுவைத்து மகிழ்ந்தவன். தமிழகத்தில் மட்டுமன்று, பிற மாநிலங்களிலும் தமிழர்கள் வாழ்ந்த பகுதிகளிலெல்லாம் கம்பனைப் புகழ் பெறச் செய்தவர். பிறப்பிலேயே வைணவராதலால் ஆழ்வார்களை ஈரத் தமிழில் தமிழர்கட்கு நன்கு அறிமுகம் செய்தவர். கல்லூரியில் நான் பயின்ற காலத்தில் 'திவ்வியப் பிரபந்த சாரம்' என்ற தலைப்பில் வெளிவந்த நூலைத் திருச்சி மாவட்ட நூலகத்தில் (மேலப் புல்வார்டு சாலையில் உள்ளது) மேலோட்டமாகக் கற்று மகிழ்ந்தவன். துறையூரில் பணியாற்றிய போது இதன் இரண்டாம் பதிப்பு வெளிவந்து விட்டது. இரண்டரை ரூபாய்க்குக் கிடைத்த இந்த நூலைச் சொந்தமாக வாங்கி வைத்துக் கொண்டு இவருடைய கட்டுரைகளைக் கற்று மகிழ்ந்தவன். இதிலுள்ள 33 கட்டுரைகளும் கொஞ்சும் தமிழில் என் உள்ளத்தைக் கவர்ந்தன. 'பழமறைகள் முறையிடப்,

பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சை ட்சுங் கொண்டல்' எனக்கு நன்கு அறிமுகமானது இவரது எழுத்தோவியங்களின் மூலம் தான். பின்னர் இவன் என்னை ஆட்கொள்வான் என்பதை அப்போது நான் அறியவில்லை. 'மூவுலகு உண்டு உமிழ்ந்த முதல்வன்' அடியேன் திருப்பதியில் பணியாற்றிய காலத்தில்தான் என்னை முற்றிலும் அடிமை கொண்டான்; பி. ஸ்ரீயின் எழுத்தோவியங்கள் எல்லாம் இதற்கு ஓரளவு துணை செய்திருக்குமோ? என்று என் உளவியல் அறிவு சிந்திக்கின்றது. கல்விஉளவியல் கற்றவனல்லவா? 'கல்வி உளவியல் கோட்பாடுகள்' என்ற நூலின் ஆசிரியனும் தானே.

நான் துறையூரில் பணியாற்றிய காலத்தில் (1941-50) தான் தமிழன்னையும் ஆட்கொண்டாள். அறிவியலிலும் கணிதத்திலும் ஆராக்காதல் கொண்டு அடிமைப் பட்டவனைத் தமிழைப் புதிய போக்கில் பரப்பக் கூடியவன் என்று கருதித்தான் தமிழன்னை என்னைத் 'தத்து' எடுத்துக் கொண்டாள் எனக் கருதுகின்றேன். இந்தத் தத்துப் பிள்ளையின் தமிழறிவை துறையூருக்கு நான் வரவழைத்த தமிழ்ப் பெரியார்களாகிய பன்மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார், திரு பு. ரா. புருடோத்தம நாயுடு, பேராசிரியர் சி. இலக்குவனார், திரு வீ. உலக ஊழியனார், லாலுகுடி நடேச முதலியார், டாக்டர் மு. வரதராசனார், பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், பேராசிரியர் அன்பு கணபதி, பேராசிரியர் பூ. ஆலால சுந்தரம் செட்டியார், பாவேந்தர் பாரதிதாசன், அறிஞர் அண்ணாதுரை ஆகியோர்களின் சொற்பொழிவுகள் தண்ணீர் விட்டு வளர்த்தன; என் தமிழார்வத்தை மேலும் தட்டி எழுப்பி என்னை ஆழ்ந்து தமிழ் இலக்கியதைக் கற்கச் செய்தன; வித்துவான், எம். ஏ. பட்டங்களையும் பெறத் தூண்டின. எழுத்துப் பணியிலும் இறங்கச் செய்தன. நான் கல்லூரியில் இடைநிலை வகுப்பில் பயின்ற காலத்தில் எனக்குக் கட்டுரை

எழுதும் முறையைத் தெளிவாகக்கற்பித்தவர் பேராசிரியர் மு. நடேச முதலியார். கட்டுரையின் கூறுபாடுகளையெல் லாம் புதிர்க்கதிர்படங்கள் (X-ray photo) போல் எடுத்துக் காட்டி வழிப்படுத்தியதால், நான் நன்கு தமிழ் கற்ற பிறகு நீரில் விட்ட மீன் குட்டி இயல்பாக நன்கு நீந்தக் கற்றுக் கொள்வதுபோல், என் எழுத்துப் பணி என் இரண்டாம் இயற்கையாகவே அமைந்து விட்டது. எழுத எழுத என் எழுத்தில் புதிய மெருகேறி வருவதை நானே உணர்கின்றேன்.

துறையூரில் முதலாவதாக, என் கன்னி முயற்சியாகப் படைத்த ‘கவிஞன் உள்ளம்’ என்ற நூலுக்கு அக்காலத்தில் கல்வி அமைச்சராக இருந்த தமிழ்க்காதலர் திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களிடம் அணிந் துரை பெறவேண்டும் என்பது என்பேரவாவாக இருந்தது. ஒருதமிழ்க்காதலர் இன்னொரு தமிழ்க்காதலரை நாடுவது இயல்பு தானே. நூல் அச்சு முடிந்ததும் மூன்று பொம்மை உரு படிகளைத் (Dummy copies) தயார் செய்து வைத்துக் கொண்டேன். இதில் ஒரு படியை திரு. தி. சு. அவினாசி லிங்கம் செட்டியார் அவர்கட்கு முன்னரே அஞ்சலில் அனுப்பி வைத்துப் பத்து நாட்கள் அவகாசம் கொடுத்து ஒரு குறிப்பிட்ட நாளில் நேரில் வந்து அணிந்துரையைப் பெற்றுக் கொள்வதாகக் கடிதமும் எழுதி விட்டேன். அப்போது கடற்கரை சாலையில் (கச்சேரி சாலைக்கருகில்) ஓர் இல்லத்தில் அமைச்சரின் குடியிருப்பு அமைந்திருந்தது. குறிப்பிட்ட நாளில் சென்னை சென்று அமைச்சரவர் களைச் சந்தித்தேன். இந்த நூலில் பன்னிரண்டு கட்டுரை கள் சங்க இலக்கியங்களின் அகத்துறைப் பாடல்களின் விளக்கமாக இருந்தன. தாம் மாணியாதலாலும், காதல் தமக்கு ஒவ்வாததாலும், தாம் இராமகிருஷ்ணரின் பெயரி லுள்ள நிறுவனத்தைச் சார்ந்தவராதலாலும் இந்நூலுக்கு அணிந்துரை நல்குவதில் தம் இயலாமையை வருத்தத் துடன் தெரிவித்துக் கொண்டார். அப்போது தமிழ்க்

கலைக் களஞ்சியப் பணி தொடங்கப்பெற்ற காலம். திரு. பெ. தூரன் அதன் தலைமைப் பதிப்பாசிரியராக நியமனம் பெற்றிருந்தார். அவர் ஆசிரியராக இருந்து நடத்தி வந்த காலச் சக்கரத்தில் வெளியிடப்பெற்றிருந்த பத்துக் கட்டுரைகள் இந்த நூலில் அடங்கியிருந்தமையால் அதனைப் பற்றாசாகக் கொண்டு அவரிடம் ஓர் அணிந்துரை பெறுவது பொருத்தமாக இருக்கும் என்று கருதி அன்று மாலை ஏழு மணி சுமாருக்கு அவரைச் சந்தித்து என் வேண்டுகோளைத் தெரிவித்தேன். அப்போது அவர் புரசைவாக்கத்தில் குடியிருந்தார். அவரிடமிருந்தும் எதிர் மறையான மறுமொழியே வந்தது. மறுமொழியும் அகந்தை தொனிக்கும் பாணியில் இருந்தது. 'என்ன உலகமடா!' என்று நினைத்துக் கொண்டேன்.

அடுத்த நாள் முற்பகல் பத்து மணிக்கு திரு. ஏ. கே செட்டியாரைச் சந்தித்து அவரிடமாவது அணிந்துரை பெறலாம் என்று கருதி குமரிமலர் அலுவலகம் (100, மாவ்பரீஸ் சாலை) சென்றேன். திரு. செட்டியாரவர்கள் ஊரில் இல்லாத சமயமாக இருந்தது. திரு. கோபாலன் அவர்கள்தாம் அலுவலகத்தில் இருந்தார். அணிந்துரை பெறுவதில் யான் மேற்கொண்ட முயற்சிகள் பலி யாமையை எடுத்துக் கூறினேன். திருமண முயற்சியில் வெற்றியடையாத இளைஞன் ஒருவன் எப்படியாவது உடனே திருமணம் முடிந்தாக வேண்டும் என்று ஒரு பெரிய வரின் உதவியையும் ஆசியையும் நாடுவது போலிருந்தது என் பேராவல். 'இலக்கிய உலகில் புகழ் பெற்றவரும், சிறந்த எழுத்தாளரும், நல்ல உள்ளமும் கொண்ட திரு. பி. ஸ்ரீ நம் அலுவலகத்திற்கருகிலுள்ள சீநிவாச அய்யங்கார் சாலையில் நம் அருகிலேயே அம்புஜம் அம்மாள் இல்லத்தில்தான் இருக்கின்றார்கள். அவரது அறிமுகமும் ஆசியும் உங்கள் முதல் நூலுக்கு உகந்ததாக இருக்கும்' என்று தாமே புருஷகாரமாக நின்று என்னை இட்டுக் கொண்டு நேராக பி. ஸ்ரீ அவர்களைச் சந்திக்கச்

செய்து என் வேண்டுகோளையும் தெரிவித்தார். பி.ஸ்ரீயும் என் இளமைத் துடிப்பையும் தமிழார்வத்தையும் கண்டு மகிழ்ந்து ஒரு வாரத்தில் அனுப்புவதாக என்னிடமிருந்த நூலின் படியைப் பெற்றுக் கொண்டார்.

நானும் திருமணம் உறுதியான பிறகு திருமணம் நடைபெறுவது உறுதி என்று இளைஞன் ஒருவர் மகிழ்ச்சியடைவதுபோல அணிந்துரை பெறுவது உறுதி என்ற மகிழ்ச்சிப் பெருக்குடன் அன்றிரவே புறப்பட்டு மறுநாள் காலை ஒன்பது மணிக்குள் துறையூர் வந்து சேர்ந்தேன். ஒரு வாரத்தில் சொன்னபடியே அணிந் துரையையும் அனுப்பியருளினார்கள் பி. ஸ்ரீ. அவர்கள். அவர்கள் நூல் முழுவதையும் படித்து, திறனாய்ந்து, எழுதிய வாழ்த்துரை போலவும் ஆசியுரை போலவும் அமைந்த அணிந்துரையையும் ஈண்டு அப்படியே தருகின் றேன்:

''இன்று பல்லாயிரக்கணக்கான தமிழ் மக்கள் பத்திரிகை வாசித்து வருகிறார்கள். புஸ்தக வாசகர் களும் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். தமிழர்கள் பரந்த உலகம் தெரிந்து வாழ விரும்புகின்றார்கள். தூரத்தைச் சமீபமாக்கிப் பரந்த உலகத்தைச் சுருக்கிக் காட்டும் விஞ்ஞான அதிசயங்களையும், பயமுறுத்தும் விஞ்ஞான விபரீதங்களையும் அறிந்து ஆட்கொண்டு வசதியாக வாழ்க்கை நடத்த விரும்புகிறார்கள். ஆம், இன்றைய சுதந்திர இந்தியாவின் இன்றியமையாத பகுதியாகத் தமிழ்நாடு தன் பிற்காலக் 'கிணற்றுத் தவளை' வாழ்வை விட்டு விடுதலையாகிக் கடல் போன்ற ஒரு புது வாழ்வை நோக்கிச் செல்ல ஆசைப்படுகின்றது. இந்தப் புதுமைப் பெருவாழ்வில் 'காந்தீயம்' போன்ற உயர்ந்த இலட்சியங் களுக்கு விசேஷ இடம் உண்டு என்பதில் சந்தேகம் இல்லை. இந்த நம் ஆசைகள், அச்சங்கள், கருத்துகள், நம்பிக்கை கள், இலட்சியங்கள், பரபரப்புகள், துடிப்புகள் ஆகிய வற்றை உள்ளபடியே பிரதிபலித்து நம் மக்களிடைய ஒரு புது வாழ்வியக்கத்தைத் தோற்றுவிக்கக் கூடிய சக்திகளைப்

படைத்துவிடும் முறையில் நம் புதுமைத் தமிழ் இலக்கியம் வளர்ந்தோங்க வேண்டும். இந்த இலக்கியம் ஆழமாக வேரூன்றி வளர்வதற்குச் சங்க காலம் தொட்டுத் தமிழிலே வளர்ந்து வந்திருக்கும் இலக்கியங்களையும் தேவைக்குத் தகுந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம். அந்தப் பழைய இலக்கியங்களிலுள்ள பண்பாடும் இலட்சியங்களும் காந்தீயத்திற்கு அரணாகி நமக்குத் தரும் கவசமாக அமையவும் கூடும்''.

''நம் புதுமை இலக்கியத்தின் இன்றைய நிலை என்ன? எழுத்தாளர்கள் 'சிறுகதைகளை' எழுதிக் குவித்த வண்ணமிருக்கின்றார்கள். 'நாவல்கள்' என்ற நீண்ட நவீனக் கதைகளும் இடை இடையே வெளியாகின்றன. சிறுகதைகளும் பெருங்கதைகளும் பெரும்பாலும் தழுவலாகவும் மொழிபெயர்ப்பாகவும், நமது வாழ்வோடு ஒட்டாத காதற் கதைகளாகவும் இருந்தபோதிலும் இவற்றிற்கெல்லாம் வாசகர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. கவிதைத் துறையிலும் சிலர் புதுமுறைகளைக் கையாண்டு பலருக்கும் இன்பமூட்டி வருகிறார்கள், இவர்களில், பழைமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலம் போல் கவிதை இயற்றிவரும் கவிமணிதேசிய விநாயகம் பிள்ளையையும் தேசியம், காந்தீயம் என்ற புதிய சக்திகளைப் பாடிப் பரப்பிவரும் 'நாமக்கல் கவிஞரையும்' சமுதாயப் புரட்சிக் கவிஞரான 'பாரதிதாசன்' அவர்களையும் முத்திறப் புதுமைக் கவிஞர்களாய்க் குறிப்பிடலாம். இவர்கள் பாரதியார் தோற்றுவித்த மறுமலர்ச்சி இலக்கியத்தை,

அரிதாள் அறுத்துவர
மறுதாள் பயிராகும்

என்ற ரீதியில் மறுபோகமாகப் பயிர் செய்து வருகின்றார்கள்.''

"'அழகுக் கலையின் ஆணிவேர்' என்று கருதத்தக்க நடனமும் இன்று புத்துயிர் பெற்று வருகின்றது. ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் போன்ற அறிஞர்கள் இத்துறையில் பிரவேசித்திருப்பதே நமது நாட்டியக் கலையின் மறுமலர்ச்சிக்குத் தக்க சான்று. இசைக் கலையும் பொதுமக்கள் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து வருகின்றது. தமிழிசை இயக்கத்திற்கும் கர்நாடக சங்கீதத்திற்கும் போட்டியும் பூசலும்—ஏசலும் கூட—இன்று அதிகமாயிருந்த போதிலும் நாளடைவில் இரண்டு இசை இயக்கங்களும் கங்கையும் யமுனையும் (கங்கையும் காவிரியும் என்றே சொல்லலாம்) போலக் கலந்து நம் புதுவாழ்வியக்கத்திற்கு வளமும் வனப்பும் அளித்து உதவும் என்று நம்பலாம்."

"நம் புதுவாழ்வியக்கத்திற்கும் விஞ்ஞான வளர்ச்சிக்கும் புதிய இலக்கியப் பெருக்கிற்கும் கங்கை—காவிரியின் சங்கமம்தான் போதுமா? தேம்ஸ் நதியையும் நம் காவிரி சந்திக்க வேண்டியதுதான்! 'நயாகரா' நீர் வீழ்ச்சியின் பேரிடிகளையும் கேட்க வேண்டியதுதான்! 'ஆஹா வென்றெழுந்தது பார் யுகப்புரட்சி!' என்று பாரதியார் பாடியிருக்கின்றாரே, அந்த இரஷ்யப் புரட்சி இடிக்குரலில் பேசி மின்-எழுத்துகளில் எழுதி வரும் புத்தம் புதிய இலக்கியத்தையும் நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் தமிழ் வளரும் புதிய புதிய துறைகளில் எல்லாம், தமிழின் உயிர் நாடி பேச வேண்டும்; சங்க இலக்கியங்களில் கொலுவிருக்கும் அரசிளங்குமரியின் அதிகார முத்திரை வேண்டும்; அதாவது, தமிழ் தமிழாக வளர வேண்டும்."

"நம் இலக்கிய வளர்ச்சி நெறியைச் சிறிதும் தெரிந்து கொள்ளாமல் பிற இலக்கியங்களின் உதவியால் மட்டும் தமிழை வளர்த்து விட இயலாது. புதிய புதிய கருத்துகளை வெளியிடலாம்; வெளியிடத்தான் வேண்டும். புரட்சிகரமான கருத்துகளையும் காரசாரமாக வெளியிடலாம்; பாரதியார் வெளியிடவில்லையா? அவற்றை வெளியிடு

வதற்குப் புதிய புதிய சொற்களையும் சொற்றொடர் களையும் கொண்டு வரலாம். வேறு மொழிகளிலிருந்தும் கருத்துச் செல்வத்துடன், வேறு நாடுகளிலிருந்து கலைச் செல்வங்களுடன் விஞ்ஞானச் செல்வங்களுடன், இன்றியமையாத சொற்செல்வத்தையும் கொண்டு சேர்த்து வீட்டு மொழியின் பொக்கிஷத்தைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் பாரதியாரைப்போல், பாரதிதா சனைப் போல், கவிமணியைப் போல் தமிழின் பண்போடு கூடிய ஜீவ சக்தியை உணர்ந்து எழுத வேண்டும். பாட வேண்டும். அப்போதுதான் பழைமைக்கும் பழைமையான தமிழ், புதுமைக்கும்புதுமையாக வளர்ந்தோங்கமுடியும்.''

''தமிழ் ஒரு குழந்தைப் பாஷையன்று. சங்ககாலம் தொட்டு—ஏன்? அதற்கும் முன்பே—எவ்வளவோ காலம் கண்டு, எத்தனையோ நிகழ்ச்சிகள் கண்டு, கருத்து வேற்றுமைகளும் கொள்கை முரண்பாடுகளும் கண்டு, தொல்காப்பியர், திருவள்ளுவர், கம்பர் போன்ற மேதாவி களையும் குழந்தைகளாக அணைத்துக் கொண்டு தாய்மைப் பண்பு பெற்று வளர்ந்து வந்திருக்கும் தாய் மொழியல்லவோநமக்கு வாய்த்திருக்கிறது?காலவகையால் பழையன கழியப் புதியன கண்டு வந்திருக்கிறது? இன்னும் புரட்சிமயமான புதுமைகளையும் காணப்போகிறது. இம்மொழியின் இலக்கிய சரிதமே இரண்டாயிரம் ஆண்டு களுக்குமுன் தொடங்கியிருக்க வேண்டும் என்பதை ஆராய்ச்சியாளர்கள் ஒருமுகமாய் ஒப்புக் கொண்டிருக் கிறார்கள். இந்த இருபது நூற்றாண்டு வளர்ச்சி நெறியி லும் மைல் கற்கள் உண்டு—வளர்ச்சி நெறியை இன்றும் நாம் அறியக் காட்டும் மைல் கற்கள்.''

''இத்தகைய தமிழ் இலக்கியப் பரப்பிலே ஆதி மைல் கல்லைத்தான் 'பத்துப் பாட்டு' 'எட்டுத் தொகை' என்று இருபெருங் கூறுகளாகப் பகுத்துப் பேசுகிறார்கள். இவற்றில் எட்டுத் தொகையிலுள்ள நற்றிணை, அகநானூறு, புறநானூறு, கலித்தொகை என்ற நான்கு

தொகை நூல்களிலிருந்தும் இந்த ஆசிரியர் பன்னிரண்டு உயிரோவியங்களைத் தேர்ந்தெடுத்துப் 'பாருங்கள் இந்தக் கவிதைச் சித்திரங்களை!' என்று காட்டுகிறார். இது போன்ற நன்முயற்சிகளே சங்க நூல்களின் தனி மேதையையும் சங்கப் புலவர்களின் அறிவுத்திறனையும் புலமை வளப்பத்தையும் இந்நாளில் பத்திரிகைகள் கதைகள் படிக்கத் தெரிந்த தமிழ் வாசகர்களுக்கும் ஒருவாறு அறிவிக்கக் கூடும்''

''சங்கம் வளர்த்த தமிழ்க் கடலிலே திரண்டெழுந்த அமுதமாகிய திருக்குறள் இந்த ஆசிரியரின் இரண்டு கட்டுரைகளில் இடம் பெற்றிருக்கிறது. இக்கட்டுரைகள் நடுநாயகமாக அமைந்திருப்பது பொருத்தமுடையது. இவ்வாசிரியர் 'நாலடியார்' என்ற நீதிச் சுரங்கத்தையும் நினைப்பூட்டிச் செல்கின்றார்.''

''வழியில் 'சிந்தாமணியை'யும், மணிவாசகப் பெருமானின் இரண்டு மணிகளையும் மறந்து விடவில்லை. சங்க நூல்களில் அரியாசனம் பெற்றிருக்கும் அரசிளங் குமரியை என்றும் குமரியாக்கிச் சக்கரவர்த்தினியாகவும் முடிசூட்டி வைத்த கவிச்சக்கரவர்த்தியின் காவிய அரண்மனையிலே, முன்வாசற் பூஞ்சோலையில் சாதாரணமாக மலர்ந்திருக்கும் நான்கு மலர்களைத் தம் புலமைத் திறமையால் மணம் மிக வீசக் காட்டிச் செல்கின்றார் ஆசிரியர்.''

''திருவிளையாடற் புராணத்தையும் காஞ்சி புராணத்தையும் நளவெண்பாவையும் கூட மறந்து விடாமல் மைல் கற்களாகக் காட்டித் தமிழின் 'இராஜபாதை'யை நீளக் காட்டி விடுகின்றார். நமது இன்றைய புரட்சிக் கவிஞரையும் கண்டு காட்டி, 'இப்படியே இன்னும் எத்தனையோ மைல் கற்கள்!' என்று உய்த்துணரவைக்கின்றார். புரட்சிக்கரமான மாறுதல்களிலும் பொற்சரடு போல் சங்ககாலத் தமிழ்ப் பண்பு ஊடுருவிக்கிடக்கும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றார்.''

''இந்த ஆசிரியரின் தமிழ் நடை காலத்திற்கு இசைந்து வளர்ந்து வரும் நடைதான். வளரும் தமிழில் மலரும் இலக்கியத்திற்கு உரிய நடை. சங்க நூற்கட்டுரைகளையும் இத்தகைய வசன நடையில் எழுதினால்தான், சாதாரண உலக இன்பம் முதல் உயர்ந்த கொள்கைகள் வரையில் அறிஞர்கள் சங்க இலக்கியங்களிலே கண்டுகளிக்கின்றார்களே, அந்தக் கருத்துச் செல்வம் முழுவதும் சாதாரண மக்களுக்கும் பயன்படுவதாகும். சுதந்திர இந்தியாவில் தமிழர்களின் புதுமைப் பெருவாழ்வியக்கத்திற்கு,

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

என்பது போன்ற பழந்தமிழ்க் கொள்கைகளும் இன்றியமையாதன அல்லவா?''

''இந்நூலில் அடங்கியிருக்கும் சங்க நூற்கட்டுரைகளிலும் வேறு இலக்கியக் கட்டுரைகளிலும் ஆசிரியர் தாம் தமிழ்க் கடலில் மூழ்கி முத்துக் குளித்து வந்து 'இதோ பாருங்கள் சில ஆணித்தரமான முத்துக்களை!' என்று காட்டுகின்றார். தரம் அறிந்து 'முத்தும் முத்தமிழும்!' போற்றிய தமிழ் நாட்டின் தற்கால மக்கள் இந்த ஆசிரியர் காட்டும் முத்துகளையும் தக்க முறையில் மதித்துப் போற்றுவர் என்பது என் நம்பிக்கை.''

ஒரு நூலுக்கு 'அணிந்துரை' நல்கும் போக்கில் எத்தனை விதமான தனது நோக்கங்களையும் குறிக்கோள்களையும் காட்டி விடுகின்றார் பி.ஸ்ரீ? சுதந்திர இந்தியாவின் போக்கு எப்படியிருக்க வேண்டும்?என்பதை எவ்வளவு நுட்பமாகச் சுட்டிக் காட்டுகின்றார்! இசைக்கலை, நடனக்கலை, இலக்கியக் கலை இவற்றைக் காட்டும் போக்கில் தமிழின் பெருமையையும் நீர்மையையும் எடுத்துக்காட்டி அது புதுக்கோலத்துடன் எப்படி வளர வேண்டும்?என்பதையும்சுட்டியுரைக்கின்றார். தமிழ்மொழியின் சரிதத்தை பல் மைல் கற்களாகக் காட்டிப் படிப்போரை வியக்க வைக்கின்றார். பழந்தமிழ்க் கொள்கைகள் சுதந்திர இந்தியாவிற்கு எந்த அளவு பயன்படும்? என்பதை

நுட்பமாகக் காட்டும்போது நாம் உண்மையாகவே நம் மூக்கின்மீது விரலை வைக்கின்றோம்.

1950-இல் நான் காரைக்குடிக்கு வந்த பிறகு இவர் கம்பன் திருநாளில் மூன்று முறை கலந்து கொண்டதாக நினைவு. அப்பொழுதெல்லாம் இவருடன் உரையாடி மகிழ்ந்திருக்கின்றேன். இக்காலத்தில் ஆழ்வார்கள்பற்றிய இவருடைய சில நூல்கள் வெளிவந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக 'மூவர் ஏற்றிய மொழி விளக்கு' என்பது ஒன்று. முதலாழ்வார்களின் பாசுரங்களைப் பற்றிய விளக்கு. நம்மாழ்வார் பற்றிய ஓர் அரிய நூலைப் படித்து மகிழ்ந்ததாக நினைவு. காரைக்குடி வந்த பிறகு அடிக்கடி எனக்குச் சென்னைப் பயணங்கள் இருந்து வந்தன. அப்போது பன்மொழிப் புலவர் திரு. ரெட்டியார் மயிலையில் வீடு மாற்றியிருந்தார் (35, இராக்கியப்ப முதலித் தெரு). இதேதெருவில் பி.ஸ்ரீயும் குடியிருந்தார் கள்.சில முறை பி.ஸ்ரீயை திரு ரெட்டியார் இல்லத்திலேயே சந்தித்திருக்கின்றேன்; அளவளாவி மகிழ்ந்திருக்கின்றேன். சந்திக்கும் போதெல்லாம் இலக்கியம் பற்றிய பேச்சுகளே இருக்கும். ஒரு நாளும் அரசியல் விமர்சனம் செய்ததே இல்லை. இவர் பழுத்த காந்தீயவாதி. கதராடையே இவர் திருமேனியை அலங்கரிக்கும்;

1960-இல் திருப்பதி சென்ற பிறகும் அடிக்கடி என் சென்னைப் பயணங்கள் இருந்து வந்தன. அப்பொழுதெல் லாம் கூட இப்பெருமகனாரைத் தெருவிலும் இல்லத்திலும் சந்தித்துச் சல்லாபித்ததுண்டு. 1963-இல் பன்மொழிப் புலவர் மறைந்த அன்று இவரைப் பார்த்ததுண்டு; கேதம் விசாரிக்க வந்திருந்தார். மறைந்த பெருமகனாரைப் பற்றி மிகவும் துக்கப்பட்டார்; அவர்தம் உயர்ந்த பண்புகளையும் புலமைக் கூறுகளையும் பற்றி ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்தார்.

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்துஇவ் உலகு.

(குறள் 336)

என்ற குறளையும் நினைவுகூர்ந்தார். வெற்றிலைப்பாக்கை மென்று கொண்டே அவற்றின் சுவையையும் சேர்த்தே தமிழ் இலக்கியச் சுவையையும் அநுபவிக்கும் பெருமகனார் பி.ஸ்ரீ அவர்கள். 1963-க்குப் பின்னர் இவரைச் சந்திக்கும் வாய்ப்பே எனக்கு ஏற்பட வில்லை. சில ஆண்டுகட்கு முன்னர் திருநெல்வேலி மாவட்டத்தில் விட்டலாபுரம் என்ற தம் சொந்த ஊருக்கே சென்று விட்டார் என்பதை அறிந்தேன். பிறந்த மண்ணிலேயே திருநாடு அலங்கரித்த செய்தியும் எனக்கு எட்டியது; வருந்தினேன். ஆயினும், அவரது திருமேனியின் தோற்றமும் இலக்கியப் பேச்சுகளும் என் உள்ளத்தில் நிலையான இடம் பெற்றுள்ளன. இவருக்கு மிகவும் பிடித்தவை ''காந்தி, கா:.பி, கம்பன்''.

## 18. இரசிகமணி டி. கே. சி

1949-மார்ச்சுத் திங்கள் இறுதியில் டி.கே.சி. என்று மூன்று எழுத்துகளால் நாடெங்கும் அறிமுகமான திரு டி.கே.சிதம்பரநாத முதலியாரை அடியேனுக்குப் புருஷகாரமாக[1] நின்று அறிமுகம் செய்து வைத்தவர் திரு. K.S. முத்துவேல் பிள்ளையவர்கள். இந்த அறிமுகம் சென்னையிலிருந்துஇராமேச்சுவரம்—தனுஷ்கோடிவிரைவு இருப்பூர்தி திருச்சியில் நின்றபோது நடைபெற்றது. டி.கே.சி அவர்கள் காரைக்குடியில் நடைபெற்றுவரும் கம்பன் திருநாளில் கலந்து கொள்வதற்காகச் சென்று கொண்டிருந்தார்கள். துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகப் பணி புரிந்தபொழுது அந்த ஊரில் பல பேரறிஞர்களைக் கொண்டு இலக்கியச் சொற் பொழிவுகளை நிகழ்வித்தும், பள்ளியில் பல தமிழறிஞர் களை வரவழைத்துத் தமிழ்ச் சொற்பொழிவுகளை ஏற்படுத்தியும் 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம்' செய் வித்த அடியேனைக் காரைக்குடிக் கம்பன் திருநாளைக் காணச் செய்தல் வேண்டும் என்று கருதினார் திரு முத்து வேல் பிள்ளை. இதைக் காண்பதற்குப் பலமுறை பல நாட்களாக என்னை ஊக்குவித்துக் கொண்டே இருந்தார் திரு பிள்ளை அவர்கள். துறையூரிலிருந்து அதிகாலை 4-30க்குப் புறப்படும் பேருந்தில் என்னை இட்டுச் சென்று திருச்சியில் நின்று கொண்டிருந்த விரைவு இருப்பூர்தியில்

---

1. புருஷகாரம்—தகவுரை கூறுதல்

டி.கே.சி அவர்கள் அமர்ந்திருந்த பெட்டியிலேயே என்னையும் ஏற்றிப் பயணப்படுத்தினார்கள். என்னை அறிமுகப் படுத்தும் போது 'இவர் நல்ல தமிழறிஞர்; தமிழார்வம் மிக்கவர். அண்மையில் வித்துவான் பட்டத்தையும் பெற்றார்.

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்'

'சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்'[2]

என்று முழங்கிய பாரதியின் கொள்கைகளைக் கடைப் பிடித்துத் தமிழைப் பரப்பி வருபவர்' என்றெல்லாம் கூறி அறிமுகப்படுத்தி வைத்தார். இதற்குள் வண்டியும் புறப் பட்டு விட்டது. திரு. பிள்ளையும் எங்களிடமிருந்தும் விடைபெற்றுக் கொண்டார்.

இந்தத் திரு. முத்துவேல் பிள்ளை யார் என்பதைச் சொல்லி விடவேண்டும். திருச்சி மாவட்டத்தில் முசிறி வட்டத்தைச் சேர்ந்த காட்டுப் புத்தூர் இவர்சொந்த ஊர். இலங்கைக்குத் தொழிலாளர்களை அனுப்பும் ஆணையத் தில் (Cylon Labour Commission) செயலாளர் (Agent( பொறுப்பில் துறையூரில் பணியாற்றிக் கொண்டிருந்தவர். துறையூருக்கு வருவதற்கு முன்னர் திருநெல்வேலியில் இதே பணியில் பல்லாண்டுகள் செயலாற்றியவர். இந்தக் காலத்தில் திரு முத்துவேல் பிள்ளையவர்கள் டி.கே.சி. வட்டத்தொட்டியில் கம்பராமாயணம் கேட்ட அநுபவம் பெற்றிருந்தார். இந்த வட்டத்தொட்டியைப் பற்றியும் டி.கே.சி. அவர்கள் பற்றியும் திரு பிள்ளையவர்கள் என்னிடம் மிகவும் பாராட்டிப் பேசுபவர். இலக்கிய சங்கம் கூடும் இடந்தான் வட்டத்தொட்டி என்பது. நெல்லை வண்ணாரப்பேட்டையில் டி.கே.சி.யின் வீட்டின் முன்கட்டு ஒரு அகலமான கூடம். அந்த அகலமான

2. பா.க : தேசிய கீதங்கள்—தமிழ் 1,2

கூடத்தின் நடுவில், வானவெளியுள்ள, வட்டவடிவமான தொட்டிகட்டு ஒன்றும் இருந்தது. ஞாயிறன்று மாலை ஐந்து மணிக்கெல்லாம் கூட்டம் அதிகமாகக் கூடி விடும். எல்லோரும் அமர்ந்திருப்பது அந்தத் தொட்டிக்கட்டுக் குள்ளேதான். வட்டதொட்டித் தலைவர் டி.கே.சியால் கம்பன் காவியம் முறையாகப் படிக்கப்படும். இக்கூட்டத் தில் பதினெட்டு வயது நிரம்பாத பள்ளி மாணவரிலிருந்து எண்பது வயதிற்கு மேலான பழுத்த கிழவர்கள் வரை டி.கே.சி. படிக்கும் கம்பன் கவிதைகளின் சுவையை அநுபவித்து மகிழ்வர் என்று கூறி எனக்கு உற்சாகம் ஊட்டி வருபவர் திரு. முத்துவேல் பிள்ளை.

  

துறையூரிலிருந்தபோது அவரது கம்பராமாயணப் பதிப்பைப் பார்த்திருக்கின்றேன். மேலோட்டமாகப் பார்த்துப் படித்து மகிழ்ந்திருக்கின்றேன். டி.கே.சி கூறும் 'செருகு கவிகள்', டி.கே.சி திருத்திய 'கம்ப ராமாயணப் பாடல்கள்' என்பவற்றைப் பற்றியெல்லாம் நான் அப்போது சிந்திக்கவில்லை. நான் கல்லூரியில் படித்த காலத்தில் 'தீபன்' என்ற புனை பெயரில் வெளியிடப் பெற்ற சில கட்டுரைகளைப் படித்தும் மகிழ்ந் திருக்கின்றேன். பிரகண்டவிகடனில் 'முதலியார் வீட்டுக் கல்யாணம்' என்ற நகைச்சுவைக் கட்டுரையைக் கோடை விடுமுறையில்கோட்டாத்தூர்[3]திருK.Nநல்லப்பரெட்டியார் வீட்டு மாடியில் பத்துப் பேர்களுக்கு நடுவில் படித்து அனை வரையும் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தது இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது. ஆனால் அப்போது 'தீபன்' என்ற புனைபெயர் டி.கே.சியின் அருமை மகன் டி.சி.தீத்தாரப்பன் என்பது எனக்குத் தெரியாது. ஏன்?

3. கோட்டாத்தூர் என்பது என் சொந்த ஊர். துறையூரிலிருந்து கீழ்த்திசையில் சுமார் ஏழு கல் தொலைவிலுள்ளது.

டி.கே.சியையும் அப்போது கேள்விப்பட்டதில்லை. எங்கேயோ குக்கிராமத்திலிருந்து கல்லூரியில் படிக்கும் மாணவனாகிய எனக்கு இத்தகைய வாய்ப்பு எப்படிக் கிடைக்க முடியும்? 1949-இல் முதன் முதலாகக் காரைக்குடிக் கம்பன் திருநாளுக்குச் சென்று நான்கு நாட்கள் பலருடன் பழகின பிறகுதான் டி. கே. சி, தீபன், இவர்களின் உறவு முறை தெரிந்தது; செருகுகவிகள், டி. கே. சி, திருத்திய கம்பராமாயணப் பாடல்கள் இவை பற்றியெல்லாம் அறிந்து கொள்ள வாய்ப்புகள் ஏற்பட்டன.

□ □ □

விரைவு இருப்பூர்தியில் பயணம் செய்யும்போது சுமார் இரண்டு மணி நேரம் காரைக்குடி சந்திப்பு (Karaikudi Junction) அடையும் வரை டி. கே. சியுடன் உரையாடல் நடைபெற்றுக் கொண்டே இருந்தது. உரையாடலின் போது அவரைப்பற்றி நான் அறிந்து கொண்டவை: நெல்லை மாவட்டம் தென்காசியைச் சேர்ந்த களங்காடு இவர் பிறந்த பூர்வீகமான ஊர். தென்காசியிலிருந்த தீத்தாரப்ப முதலியார் இவருடைய திருத்தந்தையார். ஆனால் களங்காட்டுத் தீத்தாரப்ப முதலியார் குமாரர் சிதம்பர நாத முதலியார் என்றுதான் பத்திரங்களிலும் அரசுக் கணக்குகளிலும் இவருடைய திருநாமம் பதியப் பெற்றிருக்கும். சுருக்கமாக க. தீ சிதம்பரநாத முதலியார் என்றே காணப்படும். ஆனால் 'கேயும்' 'டியும்' எப்படியோ இடம் மாறி டி.கே. சிதம்பரநாத முதலியார் என்று அவருடைய திருநாமம் நிலைத்து விட்டது. அல்லது தென்காசி களங்காட்டுச் சிதம்பர நாத முதலியார் என்றும் பத்திரங்களில் எழுதப் பெற்று தெ. க. சிதம்பர நாதன் என்றும் சிலர் அவர்களைக் கருதலாம். இதுவே 'திரு'வும் 'ஸ்ரீ'யும் சேராமல் வெறும் டி. கே. சி.யாக இலக்கிய உலகில் வழங்கப்படுகின்றது.

□ □ □

கீரனூர் வரை ஒருவரையொருவர் அறிந்து கொள்ளும் வகையில் எங்கள் உரையாடல் அமைந்திருந்தது. பிறகு எங்கள் பேச்சு கம்பராமாயணத்தின் பக்கம் திரும்பியது. 'கம்பராமாயணம் படித்திருக்கிறீர்களா?' என்று கேட்டார் டி. கே. சி. 'படித்திருக்கின்றேன் ஐயா, வித்துவான் தேர்வுக்கு 'யுத்தகாண்டம்-கும்ப கருணன் வதைப் படலம்' முடியபாடமாக இருந்தது. அப்போது படித்திருக்கின்றேன். அதன் பிறகு சேலம் திரு. வீ. உலக ஊழியனார், லால்குடி நடேச முதலியார் போன்ற புலவர்கள் ஆற்றிய கம்ப ராமாயணச் சொற்பொழிவுகளைக் கேட்டிருக்கின்றேன்.' என்றேன். தொடர்ந்து, 'தாங்கள் வெளியிட்டிருக்கின்ற கம்பராமாயணப் பதிப்புகள் சிலவற்றைப் பார்த்திருக் கின்றேன். சிலவற்றைப் பள்ளி நூலகத்திற்காக வாங்கியும் வைத்திருக்கின்றேன்' என்றேன். 'என் பதிப்பிலுள்ள பாடல்கட்கும் பிறபதிப்புகளிலுள்ள பாடல்கட்கும் உள்ள வேறுபாடுகளைக் கவனித்தீர்களா?' என்று கேட்டார். 'புதிதாகத் தொடங்கப்பெற்ற பள்ளியாதலால் நாடோ றும் நடைபெறும் வேலைகளைத் தவிர வேறுபலபணிகளின் பளு காரணமாகப் பாடல்களைச் சோதித்து அறிவதற்கு வாய்ப்பும் இல்லை; நேரமும் இல்லை. ஆனால் புலவர்கள் தாங்கள் பாடல்களைத் திருத்துவதையும், நீக்குவதையும், நீக்கும் பாடல்களைச் 'செருகுகவிகள்' என்று திருநாமம் இடுவதையும் பற்றி கண்டனக் குரல்கள் எழுப்புவதையும் கேட்டிருக்கின்றேன். இவற்றைக் கேட்கும் தாங்கள் திருத்தி வெளியிட்ட பாடல்களையும் வேறு பதிப்பிலுள்ள பாடல்களையும் ஒப்பிட்டுப் பார்க்க ஆர்வம் இருந்தும் நேரம் இல்லாமை காரணமாக அவ்வாறு நோக்கவில்லை' என்றேன்.

பிறகு 'வனவாசத்தினின்றும் அயோத்திக்குத் திரும்பிய பிறகு இராமனுக்குப் பட்டாபிஷேகம் நடைபெற்ற தல்லவா? அதுபற்றிய கம்பன் பாடலைப் படித்திருக் கின்றீர்களா?' என்று வினவினார் இரசிகமணி. 'நன்றாகத் தெரியும். நானும் படித்திருக்கின்றேன், செகவீர

பாண்டியன் போன்ற பல புலவர்கள் அதைப்பற்றிச் சிறப்பித்துப் பேசுவதையும் பலமுறை கேட்டதனால் பாடலே எனக்கு மனப்பாடமாகி விட்டது' என்று கூறி பாட்டையே,

அரியணை அநுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைக விக்க
இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி[4]

என்று ஒப்பித்தேன். 'பேஷ். பேஷ், இவ்வளவு நல்ல பாடலை மனப்பாடமும் பண்ணி வைத்திருக்கின்றீர்களே. அதற்கு மிகவும் பரிதாபப்படுகின்றேன்' என்று கூறினார். அவர் பேச்சில் 'நல்ல' என்ற சொல்லில் அழுத்தம் கொடுத்துப்பேசியது என்னைத் திகைக்க வைத்தது; பின்னர் சிந்திக்கவும் வைத்தது.

'இப்படிச் செருகுப் பாடல்கள் கம்பன் பாடல்களுடன் கலந்து வருவதற்குக் காரணம் என்ன?' என்று கேட்டேன். அந்தக் காலத்தில் இப்படிப் பாடல்கள் நுழைந்ததைப் பற்றிச் சிந்திக்கவில்லை. வை. மு. கோ. பதிப்பில் 'மிகைப் பாடல்கள்' என்று பல இடங்களில் காணப்படுகின்றன. பலபாடல்கட்குப் பல்வேறு 'பாட பேதங்கள்' காணப்படுகின்றன. வை. மு. கோ. அவர்கள் ஏதோ தாம் பொருத்தமாகக் கருதும் ஒரு பாடத்தைப் பாட்டுடன் சேர்த்துவிட்டு ஏனைய பாடபேதங்களை பாடலின் உரைக்குக் கீழ்க் காட்டியுள்ளார்கள் 'இஃது ஏன்?' என்று நான் எப்பொழுதும் சிந்திக்கவில்லை. இப்போது டி. கே. சி அவர்கள் தாம் பொருத்தமானவையாகக் கருதும் பாடபேதங்களை நுழைத்துப் பாடலைப் திருத்துவது நியாயம்தானே?

4. யுத்தகாண்டம்—திருமுடி சூட்டு படலம்.—38

என்று என்மனம் எண்ணியது. அப்போது இந்தப் பாட பேதங்கள் யாவும் முன்னர் ஏடெழுதுவோரால் நுழைக்கப் பெற்றவை தானே? அப்படி நுழைந்தவர்கள் யாவர் என்பதை நாம் அறியோம். இப்போது நுழைகின்ற டி. கே. சி. நம் முன் இருக்கின்றார்கள். இதனால் புலவர் கூட்டம் இவரைக் கண்டிக்கின்றது. இப்படிக் கண்டிக்கும் போதும் 'நுழைப்பது சரியல்ல' என்று சொல்லுகின்றார்களே யொழிய அவர் நுழைத்த பாடத்துடன் பாடல்களைப் படித்து அவற்றை அநுபவிக்காமல் வாளா குறை கூறுவது பொருத்தமற்ற செயல்தானே? என்றெல்லாம் நான் சிந்திக்கத் தொடங்கினேன். அவர்கள் அவ்வாறு அவர்மீது வசை புராணம் பாடுவது நேர்மையற்ற (Uncharitable) செயல் என்றும் நினைத்துக்கொண்டேன். ஒரு சமயம் 'இராமாயணத்திற்கு ஒரு கைகேசி; கம்பராமாயணப் பதிப்பிற்கு ஒரு டி. கே. சி.' என்ற கண்டனக் குரல் என்னை மிகவும் வருத்தியது.

நான் விடுத்த வினாவிற்கு டி.கே.சி பதில் கூறினார்கள். ஏதோ சிறியவன் ஒருவன் கேட்டானே என்று உதாசீனம் செய்யாமல் சொன்ன அவர்தம் பெருந்தன்மை என்னை வியக்க வைத்தது. ''தம்பீ, கேளுங்கள்'' என்று தொடங்கி, 'ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கம்பர் இராமாயணப் பாடல்களை ஏட்டில்தான் எழுதி வைத்தார்கள். ஏடு என்பது பனையோலைதான் என்பது உங்கட்குத் தெரியும்" என்றார்கள். தொடர்ந்து பேசினார்கள் : ''அந்தக் காலத்தில் வீடுகளின் தளம் மண்தளம்தான். மோடு கூரையால் வேயப்பட்டது. மழையால் வீடுகள் ஒழுகுவதற்கும் தரை ஈரம் ஆவதற்கும், ஈரத்தால் கரையான் உற்பத்தியாவதற்கும், இந்தக் கரையான் ஓலைச்சுவடிகளை அரிப்பதற்கும் வாய்ப்பான இடம்தான் அந்தக் காலத்து வீட்டின் தரை. இந்தக் காரணத்தால் ஏடுகளின் பல பகுதிகள், முக்கியமான அடிப்பகுதிகள்

கரையான் அரித்ததாலோ ஈரத்தால் மட்கியோ அழிந்து போய் விட்டன'' என்றார்.

தொடர்ந்து, ''இவ்வாறு அழிந்து பட்ட செயல் ஓரளவு அப்படியே நின்றதே என்பது நம் அதிர்ஷ்டம்தான். பாடல்களை ஓரளவு சுவைப்பது நம்மவர்கட்கு இயல்புதானே. இங்ஙனம் சிதைவுபட்ட ஏடுகளை நம்மவர் படித்துக் கொண்டுதான் வந்தார்கள். ஆண்டுகள் பல உருண்டோடின. இந்த நிலையில் சிலருக்கு ஏதோ பட்டது; ஒழிந்துபோன பாகங்களைத் தாம் நிறைவு செய்தால் என்ன? என்று நினைத்தார்கள். தொடங்கினார்கள் தம் இலக்கிய 'கைங்கரியத்தை'. இவர்களில் சிலர் யாப்பிலக் கணம் படித்தவர்கள். எதுகைகள், மோனைகள், சீர்கள் இவற்றைக் கொண்டு கம்பரை நிறைவு செய்து விடலாம் என்று எண்ணி விட்டார்கள். ஓர் அம்மன் காசு பொறாத கண்ணாடித் துண்டுக்குப் பட்டை தீட்டினால் வயிரமாகி விடுமா? (இப்படிப் பேசும்போது இருப்பூர்தி புதுக்கோட்டை நிலையத்தில் நின்றது). ஆனாலும் தமிழர் களாகிய நம்மைப் பிடித்த பூர்வவினை (சஞ்சித கர்மம்) அந்தக் காலத்துக் கவிராயர்களை அவ்வாறு நினைக்கத் தூண்டி விட்டது, பிறர் சொல்லக் கேட்ட கதை, தாம் படித்த கதை, தமக்கு மனத்தில் தோன்றிய கதை எல்லாம் சேர்ந்து, குழப்பமாய் வெறும் செய்யுட்களாக 'அவதாரம்' செய்து புறப்பட்டு விட்டன. இந்தச் செய்யுட்கட்குக் கம்ப ராமாயண ஏடுகள் புகலிடமாய் விட்டன. இப்படி வந்து புகுந்த பாடல்களில் ஒன்றுதான் சிறிது நேரத்துக்கு முன் தாங்கள் ஒப்புவித்த 'திருப்பாடல்'' என்றார்கள்.

மேலும் தொடர்ந்தார்கள். என்னைக் கண்டது முதல் என் இலக்கிய ஆர்வத்தை அறிந்து கொண்டது முதல் அவருக்கு ஒரே உற்சாகம் ஏற்பட்டு விட்டது. ''அயோத்தியை விட்டு இராமன் வனத்திற்குப் போனான். பதினான்கு ஆண்டு வனவாசம். வனத்தில் இராமனுக்குக்

கிடைத்தவர்கள் பத்தரைமாற்றுத் தங்கமான அன்பர்கள். கங்கைக் கரைவேடனான குகன், கிட்கிந்தையில் அநுமன் சுக்கிரீவன், தெற்குக் கடற்கரையில் வீடணன் ஆகிய இந்த நால்வரும் இராமனது இதயத்தில் சிந்தாமணிகளாகத் திகழ்கின்றார்கள். வனவாசம் முடிந்து இராமன், இலக்குவன், சீதாப்பிராட்டி ஆகிய மூவரும் அயோத்திக்குத் திரும்புகின்றனர். இவர்களோடு மேலே கூறிய நான்கு பேர்களும், வாலியின் மகன் அங்கதனோடு, அயோத்திக்கு வந்திருக்கின்றனர். பட்டாபிஷேகம் நடைபெறுகின்றது. முடி சூட்டு விழாவுக்கு பெருந்தோரணை ஒன்று உண்டல்லவா? மேலே சுட்டி உரைத்த கவிராயரது காலத்தில் சடையப்ப வள்ளல் பரம்பரையைச் சார்ந்த ஒருவர் இருந்தார். அவர் பெயரும் திருவெண்ணெய்ச் சடையன். அந்தச் சடையனுக்குக் கவிராயர் புகழ்மாலை ஒன்று கட்டிச் சுட்டுகின்றார்'' என்றார்கள்.

''தம்பீ, இப்போது நீங்கள் ஒப்புவித்த செய்யுளுக்கு வருவோம்; அதைப் பார்ப்போம்'' என்றார்கள்.

'அரியணை அநுமன் தாங்க'

இவ்வாறு பாட்டு தொடங்குகின்றது, சிம்மாசனத்தை அநுமான் தாங்குகின்றானாம். ஏன் தாங்குகின்றான்? நமக்குப் பொருள் துலங்கவில்லை. இந்தப் பாடலை யாத்த கவிராயருக்குத்தான் இதன் பொருள் வெளிச்சம்.

'அங்கதன் உடைவாள் ஏந்த'

அங்கதனுக்கும் இடம் கண்டு பிடித்தாய் விட்டது. அங்கதன் சிறிய பையன். அதனால்தான் அவனுக்கு உடைவாள் தாங்கியானான். அவ்வளவுதான். சுக்கிரீவன், வீடணன், குகன் இவர்கட்கு சிம்மாசனத்தின் பக்கம் இடம் இல்லை. அதாவது செய்யுளில் இடம் இல்லை.

'இருவர்வெண் கவரிவீச'

இலக்குவன், சத்துருக்கனன் என்ற இராமனது சகோதரர்களை 'இருவர்' என்று சொல்லப் பெற்றுள்ளது.

ஏதோ பேரற்ற 'அனாமதேயப் பேர்வழிகள்' இரண்டு பேர், அவ்வளவுதான். சீதாப்பிராட்டியைப் புகழ்வதற்கு 'சொற்கள்' அகப்படாமல் 'விரைசெறி குழலி' என்று அலங்காரம் செய்யப்பட்டுள்ளது. செய்யுளை டி. கே. சி. அவர்களே சொல்லுகின்றார்கள்.

அரியணை அநுமன் தாங்க
    அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைக விக்க
    இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க
    வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
    வசிட்டனே புனைந்தான் மெளலி.

சாமானியப் புராணச் செய்யுள்கூட இவ்வளவு கீழ்த் தரமாக இருக்காது. இதில் அங்குமிங்குமாகச் சொற்களும் பொருள்களும் நஞ்சு பிஞ்சுமாகத் தொங்குகின்றன. தமிழ்ப் பண்பாட்டில் தோய்ந்த மனத்திற்கு இந்தச் செய்யுள் மிக்க சங்கடத்தை ஏற்படுத்தி விடுகின்றது. இது கம்பன் பாடிய செய்யுளா? இல்லவே இல்லை. கவிராயரிட மிருந்தும் செய்யுளிடமிருந்தும் விடைபெற்றுக் கொள்ளு வோம்'' என்று சொல்லி முடிக்கும்போது இருப்பூர்த்தி செட்டிநாடு நிலையத்தை அடைந்துவிட்டது.

இப்போது 'செருகுகவிகள்' என்பவை எப்படிப் பட்டவை என்பது எனக்குத் தெளிவாகிவிட்டன. 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்' என்ற பழமொழியின் பொருள் இப்போதுதான் எனக்குத் தெளிவாயிற்று. ஓர் உயர்ந்த இரத்தின வியாபாரி வயிரம் எது? புஷ்பராகம் எது? ரெங்கூன் கமலம் எது? என்று எளிதாகத் தேர்ந்தெடுப்பது போல டி.கே.சி. பாடலின் தரத்தை அற்புதமாகப் பரிசோதிப்பதை அறிந்து வியந்தேன். உண்மையாகவே

கம்பன் எப்படிப் பாடியிருக்க வேண்டும் என்பதை ஒவ்வொரு தமிழனும் தெரிந்து கொண்டு சுவைக்க வேண்டியது அவனது கடமை. நல்ல கவிதைகளில் ஓர் எழுத்தோ சொல்லோ மாறி விழுந்துவிட்டால் அதைப் படிக்கும் சுவைஞனுக்கு எவ்வளவு வேதனையைக் கொடுக்கும் என்பதை டி.கே.சியுடன் பழகிய பின்னர்தான் அறிந்தேன். நல்ல கவிதைகளையே கேட்டும், படித்தும் அநுபவித்த டி.கே.சிக்கு எந்த இடத்தில் ஒலிநயம் (Rhythm) கெடுகின்றது? எந்த இடத்தில் தாளம் தவறு கின்றது? சொற்கள் மாறி விடுகின்றன? கவி உருவமே குலைகின்றது? என்பது நன்கு தெரிந்துவிடுகின்றது. நல்ல பாடத்தைத் தேடுகின்றார். துருவித் துருவிப் பார்க் கின்றார். இவ்வளவு செய்தும் அவருக்கு மனநிறைவு ஏற்படாவிட்டால் அதில் கை வைக்கின்றார்; பாடலின் சுளுக்கு நீங்குகின்றது. பாடலும் மெருகு ஏற்றப் பெற்ற நகைபோல் பளிச்சிட்டு ஒளிர்கின்றது. இவர் திருத்திய பாடலைப் படிக்கும்போது நமது உள்ளத்தில் இல்லாத புத்துணர்ச்சிகள் எழுகின்றன என்பதை உணர முடிகின்றது.

இருப்பூர்தி காரைக்குடி சந்திப்பை அடைகின்றது. கம்பன் அடிப்பொடியே டி.கே.சியை வரவேற்க நிலையத் திற்கு வந்திருந்தார். அடியேனை டி.கே.சி. கம்பன் அடிப்பொடிக்கு அறிமுகம் செய்து வைத்தார். எங்களை காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் ஆசிரியர் குடியிருப்பில் திரு. வி. கே. சி. நடராசன் (அழகப்பர் கல்லூரியில் பொருளாதாரத்துறை விரிவுரையாளர்) இல்லத்தில் தங்க வைத்தார்கள். திரு. வி.கே.சி. நடராசன் திரு. தொ மு. பாஸ்கரத்தொண்டைமானுடைய மாப்பிள்ளை; திருமதி இராஜேசுவரியின் கணவர். நாங்கள் வீட்டிற்குப் போகும் போது ஏற்கெனவே இரண்டு நாட்கள் முன்னதாகவே திரு. தொண்டைமான் வந்திருந்தார்கள். அவருக்கும் அவர் மாப்பிள்ளைக்கும் இரசிகமணி என்னை அறிமுகம் செய்து

வைத்தார்கள் டி.கே.சி. காரைக்குடியில் நடைபெற்ற மூன்றுநாள் திருவிழாவைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்தேன். மூன்று நாட்களும் இரவு தங்கல் வி. கே. சி. நடராசன் இல்லத்தில்தான். இந்த அநுபவம் என் வாழ்நாளில் கிடைத்தற்கரிய அநுபவமாக இருந்தது. கம்பன் திருநாளில் யான் பெற்ற இலக்கிய இன்பத்தை யான் இங்குச் சொல்லுவது 'மற்றொன்று விரித்தல்' என்ற குற்றத்தின் பாற்படுமாதலால் அதனைக் கூறவில்லை. நான்காம் நாள் நாட்டரசன் கோட்டையில் நடைபெற்ற விழாவுக்கு டி.கே.சி. வரவில்லை என்பதாக நினைவு. திரு. தொண்டைமான் அவர்களும் திரு. வி. கே. சி. நடராசன் அவர்களும் மட்டும் வந்தார்கள். எங்களை யெல்லாம் ஒரு காரில் ஏற்றிக் கொண்டு சென்றார்கள். இந்தப் பயணமே ஒரு மகிழ்ச்சிச் செலவுபோல் அமைந்தது. அன்று மாலை சா.க.வின் கம்பன் வழிபாட்டையும் நால்வர் ஆற்றிய சொற்பொழிவுகளையும் கண்டும் கேட்டும் அடுத்த நாள் அதிகாலையில் திருச்சி திரும்பினேன்; அங்கிருந்து துறையூர் வந்து சேர்ந்தேன்.

□ □ □

காரைக்குடியில் கம்பன் விழாவைத் தொடங்கி வைத்த டி.கே.சி.யின் பேச்சில் சத்துருக்கனைப் பற்றி வரும் ஒரு பாடல் அற்புதமாக விளக்கம் பெற்றதைக் கேட்டு மகிழ்ந்தேன். இரசிகமணியின் இதய ஒலியையே கேட்ட மாதிரி இருந்தது பாடலின் அவருடைய விளக்கம். டி.கே.சி. பேசுகின்றார்: ''நந்தியம்பதியிலிருந்து கொண்டு பரதன் இராமன் பாதுகைகளை வைத்து வணங்கிக் கொண்டு மன்னர் பேராட்சியாளராக (Regent) அரசாள்கின்றான். பரதன் தெற்கு நோக்கியவண்ணம் இராமனது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றான். பதினான்கு ஆண்டுகளும் கழிந்து இராமன் வரவேண்டிய நாளும் வருகின்றது. இராமன் வரவில்லை. 'சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்[1]'. தான் முன்னரே

1. யுத்த. மீட்சி-220.

தீர்மானித்து வைத்திருந்தபடி எரியை வளர்க்கச் செய்கின்றான். 'இனி யான் இப்படிப்பட்ட துயரத்தை பொறுக்க முடியாது' என்கின்றான்; அரச சுமையை யாரிடம் ஒப்புவிப்பது? தானும் போய்விட்டால் அந்தப் பொறுப்பை ஏற்பதற்காக மிஞ்சியிருப்பவன் சத்துருக்கனன் மட்டிலுமே. அவனிடம் பொறுப்பை ஒப்படைக்க எண்ணுகின்றான். இராமகாதையில் சத்துருக்கனன் பேசி நாம் கேட்டதே இல்லை. இறுதி வரையில் அவன் 'பேசாத தம்பியாகவே' இருந்து வந்திருக்கின்றான். பரதன் தீயின் முன்னால் நின்றிருக்கும்போது சொல்லியனுப்பியபடி சத்துருக்கனன் வருகின்றான். வந்ததும் அவனிடம்,

> ''மின்னு தீயிடை யான்இனி வீடுவன்
> மன்னன் ஆதி;என் சொல்லை மறாது''[5]

என்று தான் தீக்குளிக்கப் போவதையும் அவன் அரசுப் பொறுப்பை ஏற்க வேண்டியதையும் கூறிவிடுகின்றான், சத்துருக்கனனுக்கோ அளவுக்கு மீறிய வருத்தம், திகைப்பு, துயரம் எல்லாம். பேசாத தம்பி இப்போது பேசிவிடுகின்றான். எப்படி? 'இராமனோ கானாளப் போய்விட்டான். தன்னை நம்பியிருந்த மனையாளான நிலமகளை நட்டாற்றில் கை விட்டதுபோல் விட்டுவிட்டான். இதைவிடக் கொடிய செயல் வேறு ஏதேனும் உண்டா? இங்ஙனம் செய்துவிட்டுப் போன இராமனைப் பின் தொடர்ந்து போய்விட்டான் ஒரு தம்பி. மற்றொரு தம்பியோ 'போனவர்கள் வருவார்கள், வருவார்கள்' என்று வழிமேல் விழி வைத்துக் காத்திருந்து இறுதியில் ஏமாந்து போகின்றான். இப்போது அவன் உயிரையே விடத் துணிந்துவிட்டான். பரதனுடைய நொந்த உயிருக்கும் நல்லதொரு காலம் வந்து விட்டதாகத் தோன்றுகின்றது. அடுத்தாற் போலிருக்கின்றான் ஒரு தம்பி! ஆம்; இவன்தான் சத்துருக்கனன். இவர்கள்

5. யுத்த. மீட்சி—220

மூவரும் இல்லாதபோது அரசாள ஒருவன் வேண்டாமா? அதற்காகத்தான் நான் இருக்கின்றேன் போலும்! மானம், நாணம் இவற்றையெல்லாம் துறந்த ஒருவன் வேண்டாமா நாட்டை ஆள? அரசாளும் பொறுப்பை அவன் ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும்? அதுதானே நியாயம்?' என்றெல்லாம் குமுறுகின்றான். நிலமகளின் சார்பாக 'வக்காலத்து' வாங்கிக் கொண்டு ஒரு வக்கீல் பேசுவது போல் இருக்கின்றது சத்துருக்கனின் பேச்சு. கம்பன் பேசுகின்றான் சத்துருக்கனின் மூலமாக— பாட்டில்தான்,

கான்ஆள நிலமகளைக்
கைவிட்டுப் போனவனைக்
காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி!
போனவர்கள் வரும்அவதி
போயிற்று என்னா
ஆனாத உயிர்விடஎன்று
அமைவானும் ஒருதம்பி!
அயலே நாணாது
யானாம் இவ்அரசாள்வன்?
என்னேஇவ் அரசாட்சி?
இனிதே அம்மா;[6]
[அவதி—கால எல்லை!

தனக்கு நேர்ந்த கொடுமையினை வியக்கின்றான் சத்துருக்கனன். தான் மட்டிலும் 'நெறி திறம்பாத் தன் மெய்யை நிற்ப தாக்கி இறந்தான்தன் பரம்பரையில் வர வில்லையா?' என்று கேட்டு அவன் மனம் துடித்து நிற்கின்றது.

'பூனை பதி போட்டுப் பாய்வதுபோல் கவிதையின் முந்தினவரியிலுள்ள கானாள என்ற எதுகை பதிபோட்டு, அடுத்த அடியிலுள்ள போனானும் என்ற எதுகையில் பாயும்

6. யுத்த. மீட்சி—223

போது, உணர்ச்சிக்கு அதிக வேகமும் அழுத்தமும் ஏற்பட்டு விடுகின்றது. ஆனாத, யானாம் என்ற எதுகைகளிலும் இது பாயும் போது நம்மை உணர்ச்சியின் கொடுமுடிக்கே இட்டுச் சென்று விடுகின்றது. இவ்வாறு எதுகையாலும் மோனையாலும் சொற்கட்டுகளாலும் ஏற்படும் ஒலி நயம் (Rhythm) கவிதைக்கு உயிராக அமைந்து விடுகின்றது' என்று விளக்கினார்கள் டி. கே. சி. கவிதையின் உயிர்நிலை அதன் வடிவத்தில் தான் (Form) உள்ளது, அதன் பொருளில் இல்லை என்பதை அடிக்கடி வற்புறுத்தி வந்தார்கள். இந்த வடிவத்தை உண்டாக்குவதும் உணர்ச்சியே, பொருள் அல்ல என்றார்கள். ஓர் உண்மையான உணர்ச்சி ஒரு கவிஞனின் இதயத்தை ஆட்கொண்டு விட்டால், அவன் அதற்குமேல் செய்வது ஒன்றும் இல்லை; அவனது தாய்மொழி அவனுடைய இதயத்தில் பாய்ந்து, அந்த உணர்ச்சியை உயிருடன் சேர்த்துக் கட்டி அதை ஒரு கவிதையாக உறையச் செய்து விடுகின்றது. கவிஞனுக்கும் கவிதைக்கும் இதற்குமேல் சம்பந்தம் இல்லை என்று கூடச் சொல்லி விடலாம். உண்மையான, வளமான, ஓர் உணர்ச்சியை அவன் பெற வேண்டும், அவ்வளவு தான்; அவனது உள் மனம் அந்த உணர்ச்சிக்குக் கவிதை உருவம் கொடுத்து விடும். தேன் இறுகி இறுகிக் கற்கண்டு ஆவது போல, உணர்ச்சி இறுகி இறுகிக் கவிதையாக வடிவெடுத்து விடும் என்றார்கள். கவிஞனுடைய உள் மனத்தில் அவன் கற்ற யாப்பிலக்கண அறிவு, மொழி அறிவு, அநுபவ அறிவு—இவையெல்லாம் படிந்து கிடக்கின்றன. உண்மை உணர்ச்சி இந்த அறிவையெல்லாம், கவிஞனைக் கேட்காமலேயே, பயன்படுத்திக் கொண்டு, கவிதையின் வடிவத்தை வார்த்து விடுகின்றது என்று விளக்கினார்கள்.

கம்பன் திருநாள் தொடங்கின நாள் பிற்பகலில் 2-30க்கு அமராவதி புதூரில் திரு. சொ. முருகப்பனார் நடத்தி வந்த மகளிர் இல்லத்தில் நடைபெற்ற ஆண்டு

விழாவில் டி. கே. சி. தலைமை தாங்கி உரையாற்றினார்கள். அதற்கும் யானும் சென்றிருந்தேன். அங்கே சொ. முரு.வின் அறிமுகம் பெற்றேன். இங்கு நிகழ்த்திய உரையில்,

கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெல்லாம்
சதுர்வேதம்; கிளைகளீன்ற
களையெல்லாம் சிவலிங்கம்; கனியெலாம்
சிவலிங்கம்; கனிகளீன்ற
சுளையெலாம் சிவலிங்கம்; வித்தெல்லாம்
சிவலிங்க சொரூபமாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த
சிவக்கொழுந்தை வேண்டுவோமே[7]

[கிளை—கூட்டம்; களை—வளார்]

என்ற குற்றாலக் குறவஞ்சியிலுள்ள பாடல் விளக்கம் பெற்றது. சுமார் அரைமணி நேரம் திருப்பித் திருப்பிப்பாடி அநுபவித்தார்கள்இந்தஅநுபவம்கூடியிருந்தோர் இடையில் பரவி அவர்களையும் தம் அநுபவத்துடன் கலக்கச் செய்து விட்டார்கள். கூட்டம் கலைந்துபோகும்போது கூடியிருந்தோ ஒவ்வொருவரும் இந்தப் பாடலைக் சொல்லிக் கொண்டே போனதைக் கண்டு வியந்து போனேன். டி. கே. சி.யை நன்றாக அறிந்தவர் திரு.தொண்டைமான் அவர்கள். அவருடைய உரையை எவ்வளவு நுட்பமாகக் கவனித்துக்கேட்டுள்ளார் என்பதை அவர் வாக்கினாலேயே அறிவோம். ''கம்பனைப் பற்றி, தமிழ்க் கவிதையைப் பற்றி டி. கே. சி பேசும்போது டி. கே. சியின் நா(க்கு) பேசும்; டி. கே. சியின் வாய் பேசும்; அடர்ந்த நெற்றிப் புருவம் பேசும்; செழித்து வளர்ந்துள்ள மீசை பேசும்; எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய உள்ளமே நம்முடைய

7. திரிகூடராசப்பர் கவிராயர் குற்றாலக்குறவஞ்சி-3

உள்ளத்தோடு பேசும்,''[8] தொண்டைமானின் இந்த அநுபவத்தை நானும் டி. கே. சி.யின் இரண்டு பேச்சிலும் கேட்டு அநுபவித்தேன். இதற்குப் பிறகு இந்தப் பெரியாரைப் பார்த்துப் பழகும் பேறு பெறவில்லை.

இதன் பிறகு இவரைப்பற்றி எழுதிய நூல்களையும் இவர் படைத்த கட்டுரை நூல்களையும் ஆர்வத்துடன் படிக்கத் தொடங்கினேன். இதற்குமுன் இவர்கள் எழுதிய நூல்களை மேலோட்டமாகப் படிந்திருந்தேன். இவர் அறிமுகமான பிறகு இவற்றை ஆழ்ந்து கற்றுச் சிந்திக்கத் தொடங்கினேன். இவரை வீர வழிபாடு செய்து வந்த வட்டத் தொட்டி அன்பர்களில் சிலரும் பிறரும் கம்பன் திருநாளில் அறிமுகம் ஆனார்கள். இவர்களில்குறிப்பிடத்தக்கவர்கள் ஜஸ்டிஸ் மகராஜன் பேராசிரியர் அ. சீநிவாசராகவன், திரு A. C. பால் நாடார், பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர், பேராசிரியர் தெ. பொ. மீ., பேராசிரியர் அ. ச. ஞான சம்பந்தம் முதலிய பலர். இவர்கள் வயிலாகவும் டி. கே. சி.யைப் பற்றி அடிக்கடி கேட்கும் வாய்ப்புகள் இருந்தன. இவர்கள் கூறியவற்றையெல்லாம் ஈண்டுக் கூறின் இந்த நினைவு மிக நீளும் என்று அஞ்சியே இத்துடன் நிறுத்திக் கொள்ளுகின்றேன். தமிழிசை இயக்கத்தில் டி. கே. சி.க்குப் பெரும் பங்கு உண்டு என்பதை இவர்கள் வாயிலாக அறிந்து கொண்டேன்.

டி. கே. சி.யின் திருத்தங்கள் : டி. கே. சி.யை நன்கு அறிந்து கொர்ண்ட பிறகு அவர்கள் திருத்திய பாடல்களையெல்லாம் கூர்ந்து நோக்கிக் கற்கத் தொடங்கினேன். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காட்டுவேன். முதலில் கம்பராமாயணத்தில் ஒன்றைக் காட்டுவேன்.

1. இராமனுக்குத் திருமுடி சூட்டு விழா நடக்கப் போகின்றது என்பதை அறிந்த மக்கள் எப்படியுள்ளார்கள் என்பதைக் கம்பர் வருணிக்கின்றார்,

8. ரசிகமணி டி. கே. சி. பக்கம்—17

## மாதர்கள் கற்பின் மிக்கார்

கோசலை மனத்தை ஒத்தார்
வேதியர் வசிட்டன் ஒத்தார்
வேறுள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார் அன்னாள்
திருவினை ஒத்தாள்; அவ்வூர்
சாதுகை மாந்தர் எல்லாம்
தயரதன் தன்னை யொத்தார்.[9]

இது வை. மு. கோ. பதிப்பிலுள்ளபடி இருக்கும் பாடல். 'மாதர்கள் கற்பின் மிக்கார்' என்றவர் பின்னர் 'வேறுள மகளிர் எல்லாம்' என்று சொன்னால் எந்த மகளிரைக் குறிக்கின்றார் கவிஞர் என்ற வினா எழுகின்றது; இப்படி எழுவதும் இயற்கையே. அயோத்தி மாநகரிலுள்ள பெண் களைக் 'கற்புடைமாதர்', 'மற்ற மாதர்' என்று பாகுபாடு செய்வாரா கம்பர் பெருமான்? இஃது எவ்வளவு அசம்பா விதம்? இதனை நன்கு அறிந்து சிந்தித்து முடிவு செய்த பிறகு தான் டி, கே. சி, திருத்துவார்.

மாதர்கள் வயதின் மிக்கார்
கோசலை மனத்தை ஒத்தார்;
வேதியர் வசிட்டன் ஒத்தார்;
வேறுள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார்; அன்னாள்
திருவினை ஒத்தாள்; அவ்வூர்
சாதன மாந்தர் எல்லாம்
தயரதன் தன்னை ஒத்தார்

இது டி. கே. சி யின் கம்பராமாயணத்தில் உள்ள திருத்தம் பெற்ற பாடல், என்ன அற்புதம்! பெரிய அபவாதத்தை யல்லவா எவ்வளவோ எளிதாக மாற்றி விடுகின்றார் டி. கே. சி. இந்தத் திருத்தத்தை எதிர்ப்பவர்கள் கம்ப

9. அயோத்தி. கைகேசிசூழ்வினை—66

னுக்கு வந்த அபவாதத்தைப் போற்றுகின்றவராகின்றனர். இந்தத் திருத்தத்தைப் படித்த பிறகு கம்பர் எப்படிப் பாடியிருப்பார்? பெயர்த்து ஏடெழுதுவோர் எப்படித் தப்பும் தவறுமாகப் பின்னர் எழுதியிருப்பார்கள் என்று இப்போது நன்கு தெளிவாகின்றதல்லவா?

2. ஆண்டாள் பாசுரம் ஒன்றில் இவர் செய்த திருத்தம் ஒன்றைக் காட்டுவேன்.

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தி(து) இருக்குமா?
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்—ஆழி வெண்சங்கே![10]

என்பது திவ்வியப் பிரபந்தங்களில் காணும் பாட்டின் வடிவம். இதில் வருகின்ற 'நாற்றமும்' என்ற சொல் நன்றாக இல்லையென்று கருதுகின்றார் இரசிகமணி. அதைத் திருத்தி அமைத்து விடுகின்றார்.

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்(து) இருக்குமோ?
மருப்பொசித்த மாதவன் வாயமுதும் வாசமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன். சொல்ஆழி யெண்சங்கே!

என்பது டி. கே. சி.யின் திருத்தம் பெற்ற பாசுர வடிவம். பாட்டின் சுளுக்கை எடுத்து விடுகின்றார் இதில்,

3. கவிதை நயம் குறைந்த பாடல் ஒன்று இரசிகமணி திருத்தியபின் எப்படிக் கவிதை நயம் பெற்று விடுகின்றது

10. நாச். திரு. 711

என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. சுமார் முப்பதாண்டுகட்கு முன்னர் செட்டி நாடு என்ற இதழொன்றில் ஒரு வெண்பா வெளியிடப் பெற்றது. இயற்றியவர் பெயர் காட்டப்பெற வில்லை. வெண்பாவைப் படித்ததும் டி. கே. சி. க்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. 'இதோ ஓர் அற்புதமான கவிதை தமிழுக்குக் கிடைத்து விட்டது!' என்று பெருமிதத் துடன் முழங்கினார்கள். இது முருகனைப் பற்றிய பாடல். இதில் இரண்டு திருத்தங்கள் செய்யப் பெற்றன. திருத்தம் பெறுவதற்கு முன் பாடலின் வடிவம் இது.

மன்றல் கமழ்குழல்சேர் வள்ளிக்கு வாய்த்தானை
வென்றி மயிலேறும் வித்தகனை—ஒன்றின்
முளையானை, யாவர்க்கும் மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே ஏத்து.

திருத்தம் பெற்ற பிறகு பாடல் அடியிற் கண்டவாறு வடிவம் பெற்றது.

மன்றல் குழல்கமழும் வள்ளிக்கு வாய்த்தவனை
வென்றி மயிலேறும் வித்தகனை—ஒன்றின்
முளையானை யாவர்க்கும் மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே ஏத்து.

திருந்திய பிறகு பாடல் ஒலி நயத்தில் சிறந்து நிற்கின்றது என்பதை உணர்கின்றோம். ஆனால், சிறப்புக்குக் காரணம் இன்னதென்று நம்மால் சுட்டிக்காட்ட முடிய வில்லை.

ஜஸ்டிஸ் மகராஜனுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் இரசிகமணியே காரணத்தை அடியிற் கண்டவாறு விளக்கு வதை அறிகின்றோம்.

''முதலடியில் பாடம் 'மன்றல் கமழ் குழல்சேர்' என்றிருந்தது. இதில் 'சேர்' என்ற வார்த்தை பிய்ஞ்சி

தொங்குகின்ற மாதிரி இருக்கின்றது. ‘வள்ளி’யோடு அங்கமாய்ப் பொருந்தவில்லை. ‘குழல் கமழும் வள்ளி’ என்று சொல்லும்போது, அங்கமாய் நின்கின்றது. இஃது ஒரு சிறு திருத்தம் தான்.

ஆனால், ‘வாய்த்தவனை’ என்ற திருத்தம்தான் முக்கியமான திருத்தம். இதழில் ‘வாய்த்தானை’ என்று இருக்கின்றது. அது ‘வித்தகனை’ என்ற இரண்டாம் அடியில் வரும் இளக்கமான இலக்கணப் பாங்குக்கு மேலாகப் போய் விட்டது.

வாய்த்தவனை
வித்தகனை

இந்த இரண்டும் இளக்கமான நீண்டு செல்லும் ஓசை. ஆனால்,

முளையானை
மூத்தானை
இளையானை

என்னும் வடிவங்கள் எழுத்துக் குறுகி, வேகத்தோடு ஒலிப்பன. இந்த வேகத்தைக் கெடுத்து விடுகின்றது

‘வாய்த்தானை’

என்று முதலடியில் வரும் வேகம் கொண்ட வடிவம்; மூன்றாவது நான்காவது அடிகளில் வரும் அற்புதமான, பொருள் பொதிந்த வேகத்தைக் கெடுத்து விடுகின்றது. கெடுக்காமல் இருப்பதற்கே திருத்தம்.

மறுபடியும் வெண்பாவைத் திருத்தத்துடன் சொல்லிப் பார்க்கலாம்.

‘‘மன்றல் குழல்கமழும் வள்ளிக்கு வாய்த்தவனை
வென்றி மயிலேறும் வித்தகனை—ஒன்றின்
முளையானை, யாவர்க்கும் மூத்தானை, யானைக்கு
இளையானை, நெஞ்சமே, ஏத்து’’

[மன்றல் குழல்—பூமாலை சூடிய கூந்தல்; ஒன்றின் முளையானை—அநாதியான பொருள்; வேறொரு பொருளிலிருந்து வராத தத்துவம். யாவர்க்கும் மூத்தானை—அவனுக்கு முன் யாரும் இருந்த தில்லை.]

கவிதையில் விஷயம், வேகம், ஓசை எல்லாம் அமைந் திருக்கின்றன்.''

பாடலின் வடிவினை முடியக் கண்டவர்கள்தாம் முதலடியில் உள்ள ஓசை எவ்வாறு மூன்றாவது நான்காவது அடிகளின் இங்கிதத்தையும் வேகத்தையும் கெடுக்கின்றது என்று கண்டு கொள்ள முடியும்.

4. 'இதய ஒலி' என்ற அவர்தம் நூலின் ஒரு கட்டுரையில்,

கூத்தாட் டவைகுழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

என்ற குறளுக்கு (குறள்—332) அவர் தந்த விளக்கம் இன்னும் என் நினைவில் பசுமையாக உள்ளது. இது எப்போதோ படித்தது. இது செல்வ நிலைமையைக் கூறும் குறள்நாடகம். அல்லது திரைஅரங்கில் மக்கள்ஒவ்வொருவ ராகச் சீட்டு வாங்கிக் கொண்டு மெதுவாக வந்து சேர் கின்றனர். கொட்டகை நிரம்ப ஓர் அரைமணி நேரம் ஆகின்றது. 'இவ்வாறு மெதுவாகக் கூடுவதை முதலடியில் உள்ள நீண்ட சீர்கள் உணர்த்துகின்றன. ஆட்டம் அல்லது படம் முடிந்ததும் கூட்டம் மிக வேகமாகக் கலைந்து விடு கின்றது. இரண்டாம் அடியில் உள்ள குறுகலான சீர்கள் உணர்த்துகின்றன. ஒருவருக்குச் செல்வம் சேர்வதை நீண்டகாலம் ஆவதை நீண்ட சீர்களும், அஃது அவர்களிட மிருந்து நீங்கிப் போவதைக் குறுகிய சீர்களும் உணர்த்து கின்றன. நீண்ட சீர்களைப் படிப்பதற்குச் சற்று அதிகக்

காலம் ஆவதும் குறுகிய சீர்களைப் படிப்பதற்குக் குறைந்த காலம் ஆவதும் ஆகிய குறிப்புகள் செல்வம் சேர்வதற்கு அதிகக் காலம் ஆவதையும் அது அழிவதற்குக் குறைந்த காலம் ஆவதையும் அற்புதமாகப் புலப்படுத்துகின்றன.

அன்புப் படையல் : எளியனான அடியேன் இப்பெரு மகனாருக்கு ஒரு நினைவுச் சின்னம் ஏற்படுத்த வேண்டும் என்று நினைத்ததுண்டு. பாரதி நூற்றாண்டில் வெளி யிட்ட நான்கு நூல்களில் ஒன்றாகிய 'குயில் பாட்டு— ஒரு மதிப்பீடு'' என்ற சுவை நூலை—திறனாய்வு நூலை— இவருக்கு,

புனிதகுற் றாலத் தருவியின் சுகத்தைப்
புதுமது வாக்கிஅம் மதுவை
இனியநல் அமுதாய் உயர்த்திநற் றமிழில்
இன்பமே மணந்திடக் கலந்து
தனியருள கலைஞர்; ரசனையே வடிவாம்
நல்லுளம் பெற்றமெய்ஞ் ஞானி
கனிவுறும் அன்பர் எங்கள் டி.கே.சி
கழற்கிந்நூல் சமர்ப்பணம்; வாழி!

என்ற பாடலால் அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். ஆனால் டி. கே. சி. அவர்கள் என்னிடம் வளர்த்த சுவை யுணர்வுக்கு நான் தரும் இந்த நூல் ஈடாகாது. நான் அவரிடம் கொண்டுள்ள பக்திக்கு இஃது ஓர் அறிகுறியே.

ரசஞ் ஞானி : டி.கே.சி யின் அருமை மகன் தீபன் முப்பத்திரண்டு அகவையில் திருநாடு அலங்கரித்து விடுகின் றார். இந்தச்செய்தியை அறிந்த கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை ஒரு பாடலை எழுதி டி. கே. சிக்கு அனுப்பி வைக்கின்றார்.

எப்பாரும் போற்றும்
இசைத்தமிழ்ச் செல்வாளன்
அப்பா அழகியசெல்
லையாநான்—இப்பாரில்
சிந்தை குளிரச்
சிரித்தொளிரும் உன்முகத்தை
எந்தநாள் காண்பேன்
இனி.

என்பதுதான் அந்தப்பாடல். இந்தப் பாடலைப் படித்ததும் டி.கே.சி. சோகத்தால் துடித்திருப்பார் என்றுதான் நாம் நினைப்போம். அதுதான் இல்லை. டி.கே.சி. இறந்த தன் மகனை மறந்தார். பாடலினை அநுபவித்தார், அநுபவித்தார். அதன் பிறகு அவர் சொன்னது: இப்படி அற்புதமான கவிதை தமிழுக்குக் கிடைக்குமானால் உயிரைக் கொடுத்துங்கூட அதைப் பெறலாம்' என்று. இப்படி அருமை மகனைப் பிரிந்த காலத்திலும் அவன்மீது பாடப்பட்ட பாட்டை அநுபவிக்கும் அபூர்வப் பிறவியை என்ன என்று சொல்வது? ஜஸ்டிஸ் மகராஜன் அவரை ரசஞ்ஞானி என்கின்றார். சரியான விருதுதான் இது டி. கே. சி.க்கு. இத்தகைய இரசிகமணியை,

கூடியிருக்கும் நண்பரெல்லாம்
குடித்து மகிழ்ந்து கூத்தாட
பாடிப் பாடிப் பாடலிலே
பாலும் தேனும் கறந்துதவும்
தாடி இல்லாத் தாகூர்செய்
ஜால வித்தை அத்தனையும்
தேடி அழகாய்ச் சொன்னதமிழ்ச்
செல்வா! வாழ்க! வாழ்கவே.

என்ற பாடலால் வாழ்த்தி மகிழ்கின்றார், கவிமணி.

## 19. கம்பன் அடிப்பொடி சா. கணேசன்

மேன்மைப் படுவாய் மனமே! கேள்
விண்ணின் இடிமுன் விழுந்தாலும்
பான்மை தவறி நடுங்காதே,
பயத்தால் ஏதும் பயனில்லை;
யான்முன் உரைத்தேன் கோடிமுறை;
இன்னும் கோடி முறைசொல்வேன்;
ஆன்மா வான கணபதியின்
அருளுண்டு அச்சம் இல்லையே.

—விநாயகம் நான்மணி மாலை—23

என்ற பாரதியாரின் கணபதி வணக்கத்துடன் கம்பனடிப் பொடியைப்பற்றிய நினைவுகள் மலர்கின்றன. பல்வேறு விதமான கவலைகளுடன் மன அமைதியின்றி இருந்த எனக்கு சா. கணேசனிடமிருந்து வந்த தந்தி சஞ்சீவிமருந்து போல்அனைத்துக் கவலைகளையும் போக்கியது. புதிதாகத் தொடங்கப் பெற இருக்கும் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக வந்து சேரும்படித் தந்தியின் வாசகம் இருந்தது. மறுநாள் முதல்வர் ஐ. நாராயண மேனனிடமிருந்து (ஐ. என். மேனனிட மிருந்து) விளக்கமான கடிதமும் வந்தது. என் வாழ்க்கையில் எவரிடமும் எந்தக் காலத்திலும் இத்தகைய உதவி

யைப் பெறவில்லை. இது 1950 ஜூன் இறுதியில் வந்த செய்தியாகும். இந்த உதவியை,

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (குறள்—102)

என்ற வள்ளுவப் பெருமானின் பொன்மொழிக்கும் எடுத்துக்காட்டாகவும் அமைந்திருந்தது.

1949 மார்ச்சு-ஏப்பிரலில் காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் திருநாளைக்கண்டு களிப்பதற்குக் காரைக்குடி சென்றிருந்தேன். அப்போது ஏற்பட்ட ஒரு சிறு அறிமுகமே அவருடன் எனக்கு ஏற்பட்ட தொடர்பு. நான் ஓர் உயர் நிலைப்பள்ளித் தலைமையாசிரியன் என்பது மட்டுமே என்னைப் பற்றி அவருக்குத் தெரியும். ஏதோ தமிழ்ப்படித்தவன் என்பதும் தெரிந்திருக்கலாம். 1950 ஏப்பிரல்-மேயில் புதிதாகத் தொடங்கப் பெற இருக்கும் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக்குப் பேராசிரியர் பதவிகட்கு விளம்பரம் வந்திருந்தது. அப்போது நான் ஒரு வழக்கு பற்றி சென்னைக்கு அடிக்கடிப் போய் வந்து கொண்டிருந்தேன். இதனால் விளம்பரம் என் கவனத்திற்கு வரவில்லை. நூற்றுக்கு மேற்பட்ட விண்ணப்பங்கள் வந்திருந்தன. எல். டி (பி.டி) பட்டவர்கள் (தமிழுக்கு) ஒருவரும்இலர். தமிழ்த்துறையைத் தொடங்குவதற்குத் தக்கவர் இல்லாமையால் அடுத்த ஆண்டு தமிழ்த் துறையைத் தொடங்கலாம் என்று வள்ளல் டாக்டர் அழகப்பர் சொன்னாராம். ‘ஆளில்லையே’ என்றாராம். ‘நான் கொணர்கின்றேன்’ என்று சா.க. சொல்ல, தமிழ்த் துறையைத் தொடங்கும் பொறுப்பு அவருக்கு விடப்பட்டது (சா. க. அழகப்பர் அறத்தின் உறுப்பினர்). என் படிப்புத்தகுதி சரியாக இருக்கும் என்று கருதி எனக்குத் தந்தி அனுப்பினார் சா. க. (சாவன்னா கன).

ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

—வெற்றிவேற்கை-34

என்ற அதிவீரராம பாண்டியனின் திருவாக்கிற்கு எடுத்துக் காட்டாக நின்றது சா. க.விடம் நான் கொண்ட நட்பு. காரைக்குடிப் பணி என் வாழ்வில் ஏற்பட்ட ஒரு பெரிய திருப்பம்.

கல்லூரி தொடங்குவதற்கு ஒரு நாள் முன்னதாகவே காரைக்குடி சென்றேன். நேராகச் சா.க.வின் வீட்டில் இறங்கினேன் பிள்ளையார் கோயிலுக்குச் சென்றது போல. அவருடைய கோயிலும் பிள்ளையார்பட்டிக் கோயில்தான். நகரத்தார்கட்கு ஒன்பது கோயில்கள் உண்டு. ஒவ்வொரு கோயிலுக்கும் உரியவர்கள் இன்னார் இன்னார் என்று அவர்களிடம் பிரிவு உண்டு. பிள்ளையார் பட்டிக் கோயில் என்பது ஒன்பது கோயில்களில் ஒன்று. இங்ஙனம் நான் பெற்ற நன்மை விநாயகப் பெருமான் அருளால்; இந்த நன்மை பிள்ளையார்பட்டி கோயிலைச் சார்ந்த சா. க. மூலம் என்னை வந்தடைந்தது. நான் சென்றபோது சா. க. வீட்டில் இருந்தார். என் நியமனம் பற்றி மேலே குறிப்பிட்ட விவரங்களையெல்லாம் சா. க. வே அன்று தெரிவித்தார். கல்லூரிகட்குப் பேருந்து வசதிகள் செய்யப் பெற்றுள்ளன என்றும் நான் நிற்க வேண்டிய இடங்கள் இன்னவை என்றும் விளக்கினார். மறுநாள் கல்லூரிப் பணியை ஒப்புக்கொண்டேன். 20 நாட்கள் மாணவர் உணவு விடுதியில் தங்கி அதற்குமேல் குடும்பத்தைக் கொணர்ந்து விட்டேன். என் இல்லமும் திரு சா. க. திருமாளிகையருகில் அமைந்தது. இது அடிக்கடி அப் பெரியாருடன் நெருங்கிப் பழக வாய்ப்பு அளித்தது. காரைக்குடி 16 ஆண்டு வாழ்விலும் அதற்குப் பின்னரும் அவருடன் கொண்ட தொடர்புகளால் சில நினைவுகள் என் உள்ளத்தில் இப்போது மலர்கின்றன.

அவருடைய திருமாளிகை எப்போதும் அறிஞர்கள், புலவர்கள், நாட்டுப் பற்றாளர்கள் இவர்கள் சூழ்ந்திருக்கும் இடமாகத் திகழும். அவருடைய பேச்சிலும் மூச்சிலும் கம்பன் காட்சி அளிப்பான். காந்தியடிகளும் மணிவாசகர் போன்ற சமயப் பெரியார்களும் அடிக்கடி தோன்றுவார்கள். சட்டை போடாத திருமேனியுடன் அரசமரத்துப் பிள்ளையார்போல்நெற்றியில்திரு நீற்றுப் பொலிவுடனும் குங்குமப் பொட்டுடனும் காட்சி அளிப்பார். சுறுசுறுப்புடன் பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருக்கும் காட்சிகளை எவரும் மறக்க முடியாது. 'கற்பக நிலையம்' உண்மையிலேயே வேண்டுவார் இயன்ற அளவில் உதவிகள் பெறும் கற்பகமாகவே திகழ்ந்தது. மனம் வாக்கு காயங்களால் அவரிடம் உதவிகள் பெற்றவர்கள் எண்ணற்றவர். காரைக்குடி காந்தியாக, கம்பனடிப் பொடியாக, இன்று எல்லோர் மனத்திலும் அன்புருவாக வீற்றிருப்பர் காரைக்குடிக் கற்பகம்.

*நினைவு—1*: காரைக்குடியில் பணியேற்றுச் சுமார் இருபது நாட்களுக்குள் என் குடும்பத்தைத் துறையூரிலிருந்து காரைக்குடிக்குக் கொண்டு வந்து விட்டேன். காரைக்குடியில் அப்போது (ஆகஸ்டு-1960) சா.கணேசன் ஒரு நூற்பு யக்ஞத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். கொப்புடையம்மன் கோயிலுக்கெதிரில் (மணிக் கூண்டுக்கு அருகில்) ஒரு பெரிய கொட்டகை அமைத்து அதில் பத்து நாட்கள் நூற்பு யக்ஞம் நடந்து கொண்டிருந்தது. தக்ளியில் நூற்பவர்களும் இராட்டையில் நூற்பவர்களுமாக மாறி மாறி நூற்றுக் கொண்டிருந்தார்கள். எந்தத் திட்டத்தையும் சா.க. ஏற்று நடத்தினால் அதில் ஒரு தனித் தன்மை மிளிரும்.ஒருசிறு தடையுமின்றி அஃது ஒழுங்காக நடைபெறும். இந்த நூற்பு யக்ஞத்தைத் தொடங்கி வைப்பதற்கு திரு.O.P. இராமசாமி ரெட்டியார் (அண்மையில் முதலமைச்சர் பதவியினின்றும் விலகியவர்) எழுந்தருளியிருந்தார். சா.க. யக்ஞம் நடை

பெறும் இடத்தில்தான் இருப்பார். இதே சமயத்தில் மௌனசாமி என்ற துறவி (துறையூரில் இருந்தபோது பழக்கமானவர்) என் இல்லத்தில் மூன்று நாட்கள் தங்கி யிருந்தார். ஒருசிறு விருந்திற்கு என் இல்லத்தில் ஏற்பாடு செய்திருந்தேன். முற்பகல் முழுவதும் நானும் மௌனசாமி யும் நூற்புயக்ஞத்தைக்கண்டு களித்தோம். சா.க.என்னை திரு.O.P. இராமசாமி ரெட்டியாருக்கு அறிமுகம் செய்து வைத்தார். இரண்டு காந்தியை ஏக காலத்தில் கண்டது போன்ற ஒரு பிரமை என் மனத்தில் ஏற்பட்டது.

யாரும்
செப்பருங் குணத்து இராமன்
திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பு
வாசகம் உணரக் கேட்ட
அப்பொழு(து) அலர்ந்த செந்தா
மரையினை வென்ற தம்மா[1]

என்ற பாடலைக் கம்பனில் படித்திருக்கின்றேன். ''எப்பொழுதும் இராமனது முகச்செவ்வி தாமரை மலரை யொத்திருக்கும். ஆனால் 'நீ போய்த் தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு, பூழிவெங்கானம் நகண்ணிப் புண்ணிய நதிகளாடி, ஏழிரண்டாண்டில் வா' என்ற கைகேயியின் உரையைக் கேட்ட பின்பு அவன் முகச்செவ்வி அப்பொழுது அலர்ந்த செந்தாமரையின் செவ்வியையும் வென்றது என்பான் கம்பன். இதனையே பிறிதோரிடத்தில்,

மெய்த் திருப்பதம் மேவென்ற பொதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்

1. கம்ப.அயோத்.கைகேசி சூழ்வினை-108

சித்தி ரத்தின் அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்கும் முகம்.[2]

என்று கூறுவான். அண்மையில் முதலமைச்சர் பதவியைத் துறந்த ஓ.பி.ஆரின் முகத்தில் இதனைக் காணமுடிந்தது. ஓர் இல்லறத் துறவியாகவே வாழ்ந்த அப்பெருமகனாரைக் கண்டு மகிழ்ந்தது என் பெரும்பேறாகக் கொண்டேன். 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே'[3] என்பது ஔவைப் பாட்டியின் வாக்கல்லவா?

சுமார் பகல் ஒரு மணிக்கு சா.க.வையும் மௌனசாமி யையும் இட்டுக் கொண்டு என் வீடு வந்து சேர்ந்தேன். விருந்து சுமார்தான். எலுமிச்சைப்பழ சாதம், தேங்காய்ச் சாதம், வடை, சேமியா பாயசம் சிறப்புக் கூறுகள். ஏனையவை நடைமுறையில் உள்ள உணவு வகைகள்தாம். காரைக்குடி வாழ்வில் எனக்கு உணவு அளித்த கணேசப் பெருமானுக்கு சா.க.மூலம் அமுது படைத்ததாகவே கருதி என் மனம் நெகிழ்ந்தது. விதுரன் திருமாளிகைக்குக் கண்ணன் எழுந்தருளியபோது விதுரன் பெற்ற மகிழ்ச் சியை வில்லிபுத்தூராழ்வார்,

'என்ன மாதவம் செய்தது
இச்சிறுகுடில்?'[4]

என்று காட்டுவார். அவனது மகிழ்ச்சியை ஒத்தது என் மகிழ்ச்சி. பின்னர் ஒருமுறை (1954) என் மகன் இராமலிங்கத்துக்கு 'வித்தியாப்பியாசம்' தொடங்கப் பட்டபோது பல பெரியார்கட்கு அளிக்கப்பட்ட விருந்தி லும் இப்பெருமகன் பங்கு கொண்டார் என்பது என் நினைவு. விருந்து சிறிதே. என்னையும் பொருட்படுத்தி

2. ஷெ சுந்தர. காட்சி-20
3. வாக்குண்டாம்-8
4. வி.பா. கிருட்டிணன் தூது-80

பெருமனத்துடன் என் இல்லத்திற்கு எழுந்தருளி விருந்துண்டது எனது பெறற்கரும் பேறு என்பதை இன்றும் நினைந்து போற்றுகின்றேன்.

**நினைவு—2:** ஒருநாள் ஞாயிறன்று சிற்றுண்டி முடித்துக் கொண்டு அவர் இல்லத்திற்குச் சென்றேன். யாரும் இல்லை; தனிமையாக ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரம் நானும் அவர் அருகில் அமர்ந்திருந்தேன். என்ன நினைத்தாரோ, தெரியவில்லை. திடீரென்று, ''ரெட்டியார், வாருங்கள் பிள்ளையார் பட்டிக்குப் போய் வரலாம்'' என்றார். யாரோ ஓர் ஆள் மூலம் நான் பிள்ளையார் பட்டிக்குப் போயிருப்பதாக என் வீட்டுக்குச் சொல்லியனுப்பி விட்டார். இருவரும் பேருந்து மூலம் பிள்ளையார் பட்டி போய்ச் சேர்ந்தோம். 'கல்சொல்லும் கதையை'ச் சொல்லுவதில் வல்ல சா.க. பிள்ளையார் பட்டி வரலாற்றை விளக்கியது இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது. ''பல்லவ மன்னன் மகேந்திர வர்மனிடம் சேனாதிபதியாக இருந்த பரஞ்சோதி (பின்னர் சிறுத்தொண்ட நாயனார் என்ற பெயரில் பெரிய புராணத்தில் இடம் பெற்றவர்) சளுக்கிய மன்னன் புலிகேசிமீது எடுத்த படையெடுப்பில் இடம் பெற்றவர். இவர் வாதாபிக் கோட்டையிலுள்ள கணபதிச் சிலையைப் பெயர்த்தெடுத்து வந்து தம் சொந்த ஊரான திருச்செங்காட்டங்குடியில்(நன்னிலத்திற்கு அருகிலுள்ளது) பிரதிட்டை செய்து விடுகின்றார். ஆனால் தம்மைப்போல் கணபதிக் காதல் உள்ளவர்கள் தாம் பிரதிட்டை செய்து வைத்த கணபதியைப் பெயர்த்தெடுத்துச் சென்றால் என்ன செய்வது என்ற கவலை இருந்தது பரஞ்சோதிக்கு. பிறருக்கும் இந்த விதமான கவலை இருந்திருக்கலாம். மகேந்திரவர்மன் மகன் நரசிம்மவர்மன் காலத்தில் பிள்ளையார் பட்டியில் குடைவரைக் கோயில் தோன்றியது. அதனுள் ஒரு பாறையில் கணபதியும் செதுக்கி வைக்கப்பட்டார். இந்தப் பிள்ளையாரே தேசிக

விநாயகப் பிள்ளையார்— கற்பக விநாயகர்; இவர் அசைக்க முடியாத பிள்ளையாராக அசைக்க முடியாத கணபதியாக அமர்ந்து விட்டார்''.

இந்த பிள்ளையார் அமர்ந்த இடம் முன்னர் ஈக்காட்டூர், மருதங்குடி, திருவீங்கைக்குடி என்ற பெயர் களால் வழங்கப்பட்டது என்றும், பிள்ளையாரின் ஆதிக்கம் அதிகமாகவே ஊரும் பிள்ளையார் பட்டி என்று வழங்கப் பட்டது என்றும், இப்பெயரே நிலைத்து விட்டது என்றும் கல் சொல்லும் கதை கூறும் சா.க. கூறினார். ஆதலால் நரசிம்மவர்மனால் உருவான குடைவரைக் கோயில் நாளடைவில் விரிந்து வளர்ந்து விட்டது என்றும் விளக்கினார். இந்தக் கோயிலில் மார்கழியில் நடைபெறும் திருநாளும் விநாயக சதுர்த்தியும் இரண்டு விழாக்கள் என்றும் இவற்றுள் விநாயக சதுர்த்தியே பெருந்திருவிழா என்றும் தெளிவு படுத்தினார்.

இங்குள்ள விநாயகரது துதிக்கை வலஞ்சுழித்து வலம்புரி விநாயகராக இருப்பதையும், பிற இடங்களில் பிள்ளையாரிடம் காணப்பெறும் நான்கு கைகளுக்குப் பதிலாக இரண்டு கைகள் இருப்பதையும் எடுத்துக் காட்டினார் சா.க. ஆதியில் இங்ஙனம் இரண்டு திருக்கை களுடன் இருந்துதான் நான்கு திருக்கரங்களுடன் எழுந்து, நடந்து, நின்று, நடமாடி, பெருச்சாளியிலும் (மூஷிகம்) சிம்மத்திலும் ஏறிச் சவாரி செய்து கலைஞர் சிந்தனையில் வளர்ந்திருக்க வேண்டும் என்றும் விளக்கினார்.

இவற்றையெல்லாம் விளக்கவும், திருக்கோயிலைச் சுற்றி வரவும் இரண்டரை மணிநேரம் ஆயிற்று. இருவரும் கோயில் விடுதியில் உண்டோம். கோயிலைச் சார்ந்தவர் மூன்றணாவும் உணவுக்குச் செலுத்த வேண்டும் என்றும், அவர் இட்டுச் செல்லும் விருந்தினருக்குக் கட்டணம் இல்லையென்றும் ஒரு மரபு இருந்து வருவதை

யும் விளக்கினார். சரியாக பகல் இரண்டு மணிக்குத் திரும்ப வீடு வந்து சேர்ந்தோம்.

**நினைவு-3:** சா.க.சிறந்த நாட்டுப் பற்றாளர்; காந்தியடிகள் காட்டிய வழியைக் கடைப் பிடிப்பவர். இராஜாஜியைத் தென்னாட்டு காந்தி என்று சொல்வதைப்போல் இவரைக் காரைக்குடி காந்தி—செட்டிநாட்டுக் காந்தி— என்று சொல்வார்கள். 1952 ஆம் ஆண்டு நடை பெற்ற தேர்தலில் காங்கிரஸ் கட்சி இவரை வேட்பாளராக நிறுத்த மறுத்து விட்டது. பலர் வேண்டுகோட் கிணங்கவே தேர்தலில் நிற்க இவருக்கு விருப்பம் ஏற்பட்டது. காங்கிரசு கட்சி மேலிடம் இவரை வேட்பாளராகத் தேர்ந்தெடுக்காதது மிகவும் வருந்தத்தக்கது. பல்குழு, உட்பகை, குறும்பர்—இவை இல்லாத நாடே நல்ல நாடு என்பர் வள்ளுவப் பெருந்தகை. இந்த மூன்றும் கட்சி அரசியல் நடைமுறையிலிருக்கும் இக்காலத்தில் கட்சிக்குள்ளேயே புகுந்து புற்றுநோய்போல் அரித்துத் தின்கின்றன: எல்லாக் கட்சிகளுக்கும் இது பொருந்தும். இதனால் இவர் காங்கிரசுக் கட்சியை விட்டு விலகி சுயேச்சை வேட்பாளராக நிற்கும் நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. கையூட்டும் நேர்மையின்மையும் மலிந்து தேர்தல் குற்றங்கள் தலை தூக்கி நிற்கும் இக்காலத்தில் வாக்காளர்கள் தாயக் கோட்டில், அல்லது சதுரங்க விளையாட்டில், நகர்த்தப் படும் 'காய்கள்'போல் தேர்தல் சாவடிக்கு நகர்த்தப்படுவதைக் காணும்போது நல்லறிஞர்கள் வருத்தப்படுகின்றனர்; சமூகத்தின் ஒழுக்கம் ஆடிக்காற்றில் அலைக்கழிக்கப்படும் பட்டம்போல் சீரழிந்து வருவதைக் காண்பவர்கள் நாணித் தலை குனிகின்றனர்.

இவர் நின்ற தேர்தலில் நடைபெற்ற தேர்தல் குற்றங்கள்— காரைக்குடி நகராண்மைக் கழக ஆட்சிக்குட்பட்ட இடங்களில்—நினைவிற்கு வருகின்றன. ஆண்களுக்குப் பத்து ரூபாய், உணவுப் பொட்டலங்கள்; பெண்

களுக்கு சின்னாளப்பட்டி சேலை ஒன்று, கையில் இரண்டு ரூபாய் வழங்கப்பட்டன. பெண்கள் வாக்குகளை உறுதிப் படுத்த எதிர்க்கட்சி ஏஜெண்டுகள் மேற்கொண்ட முறை கவிஞர்களின் கற்பனைக்கும் எட்டாதது. பள்ளிகளுக்கு அமெரிக்க அரசு ஏழைப் பிள்ளைகட்கென வழங்கப்பட்ட பால் பொடியைத் தவறான முறையில் பெற்றுப் பாலாக்கி அதில் பெண்கள் தாலியை மூழ்கச் செய்து ''நான் இத் தாலியின் ஆணையாக உங்கள் கட்சிக்கு வாக்கு அளிப்பேன்'' என்று சத்தியம் வாங்கிக் கொண்டு சின்னாளப்பட்டி சேலையொன்றையும் ஓர் இரண்டு ரூபாய்த் தாளையும் தந்ததை நேரில் பார்த்து வியந்து போனேன்.

எல்லாக் கட்சிகளும் காரைக்குடி காந்திக்கு ஒத்துழைத் தன. பொதுவுடைமைக் கட்சியினர் வந்து ''அண்ணே, வாக்காளர்க்கு வழங்கப்பெறும் ரூபாய்த் தாள்கள் புதியவை; ஒரே வரிசை எண்களைக் கொண்டுள்ளன. ஒரே வங்கியில் வாங்கப்பட்டவை. தாங்கள் இசைவு அளித் தால் நாங்கள் எதிர்த்தாக்குதல் நடத்தி ரூபாய்த்தாள் கட்டுகளைப் பறித்து வந்து விடுகின்றோம். தேர்தலையே நிறுத்தி விடுகின்றோம்'' என்று கேட்டார்கள். அதற்கு இப்பெருமகன், ''அங்ஙனம் செய்ய வேண்டா. ஏழை மக்களின் வருவாயைக் கெடுக்க வேண்டா. அப்படி அவர்கள் வருவாயைப் பெற்றாலும் அவர்களின் பெரும் பான்மையோரின் வாக்கு நமக்குத்தான் வரும். அப்படி வராமல் நான் தோற்றாலும் மகிழ்வேன். நீங்கள் அதற்குத் தடையாக வேண்டா'' என்று கூறினபோது இவரது நல்லுள்ளம் என்னை வியக்க வைத்து விட்டது. தேர்தலில் 2000|- வாக்குகள் வேற்றுமையால் தோற்றார். ஆனால் தோல்வியையும் வெற்றியையும் ஒன்றாகப் பாவிக்கும் இவர் பேருள்ளம் ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும் சேக்கிழார் கூறும் சிவனடியாரின் பேருள்ளத்தை ஒத்திருந் ததைக் கண்டு வியந்து போனேன்.

**நினைவு-4 :** நா. செல்வராசன் என்ற ஒரு மாணவன் பயிற்சிக் கல்லூரியில் படித்து வந்த காலத்தில் (1953-54 என்பதாக நினைவு) அவனுக்குத் திருமணம் கூடியது. அவன் சா. க. வே தன் திருமணத்தைத் தமிழ்த் திருமணமாக நடத்தி வைக்க வேண்டும் என ஆசைப் பட்டான். அவன் துறையூருக்கு அருகிலுள்ள செங்காட்டு பட்டியைச் சேர்ந்தவன். உயர்நிலைப்பள்ளியிலும் என் மாணவன். கடவுளர்களிலேயே நினைத்தவுடன் வரவழைக்கக் கூடிய ஒருவர் உள்ளார் என்றால் அவர் விநாயகப் பெருமானே. சாணத்தையோ மஞ்சள் பொடி யையோ கொண்டு அவரைச் சிருஷ்டி செய்து தலையில் அருகம் புல்லைக் குத்தி வைத்து விட்டால் போதும்; அந்த உருவத்தில் எழுந்தருளி விடுகின்றார். அவரே நம் காரியத்தைத் தடையின்றி நடத்தி வைப்பார் என்று நம்பு கின்றனர் மக்கள். சா. க. அவர்களும் அங்ஙனமே நல்ல காரியம் நடைபெறும் இடத்திற்கு மகிழ்ச்சியுடன் எழுந்த ருளுவார். நானும் அந்த மாணவனும் அவரை அணுகி னோம். மாணவன் ''தாங்கள் பெருமனம் கொண்டு எங்கள் சிற்றூருக்கு எழுந்தருளி என் திருமணத்தைத் தமிழில் நடத்தி என்னை ஆசிர்வதிக்க வேண்டும்'' என்று வேண்ட அவரும் மகிழ்ச்சியுடன் அவ்வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார்.

திருமணத்திற்கு முதல்நாள் மாலை இராமேசுவர இருப்பூர்தி விரைவு வண்டியில் புறப்பட்டுத் திருச்சியை அடைந்தோம். 'அசோக்பவன்' விடுதியில் அன்றிரவு தங்கி மறுநாள் அதிகாலை குளியல், சிற்றுண்டி முதலிய வற்றை முடித்துக் கொண்டு மகிழ்வுந்து ஒன்றை அமர்த்திக் கொண்டு பயணப்பட்டோம்; காலை எட்டு மணிக்கே செங்காட்டுப்பட்டியை அடைந்து விட்டோம். ஊர்ப் பெருமக்கள் காரைக்குடிக் காந்தியை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். காந்தியைப் போலவே சட்டை போடாத சா: க. வைக் கண்டு மதிப்

புடன் வரவேற்றனர். சட்டை போடாவிட்டாலும் மடிப்பு கலையாமல் போட்டிருந்த கதர் அங்கவஸ்திரம் அனைவர் கவனத்தையும் கவர்ந்தது. வைத்த கண் வாங்காமல் உற்று நோக்கி வியந்த வண்ணம் இருந்தனர். திருமண நிகழ்ச்சி தொடங்கியது. ஹோமம் வளர்க்கப் பெற்றது; திருமுறையில் சில பாடல்களையும் வேறு சில பாடல்களையும் நாவினால் நவிற்றி திருமணத்தை அற்புமாக முடித்து வைத்தார்.

வேறு சில நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்த போதே எங்கள் இருவருக்கும் மாணவன் பெரிய தந்தையார் வீட்டில் அமுது படைக்கப்பட்டது—நாங்கள் திருச்சியிலிருந்து பகல் 1-30க்குக் கிளம்பும் இருப்பூர்தியைப் பிடிக்க வேண்டும் என்று கருதியதால். வீட்டில் நுழையும் போதே தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, கவிஞர் பாரதிதாசன் இவர்தம் திருவுருவப்படங்கள் சா. க. வின் கண்ணில் பட்டன. ''பையன் தி. மு.க. வைச் சேர்ந்தவன் போலத் தோன்றுகின்றது'' என்றார். உண்மை அதுவாக இருந்தாலும் ''யார் வீடோ அது? பையன் காங்கிரசுக் காரன்'' என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டேன். உணவு முடிந்து உரிய காலத்தில் திருச்சி வந்து மாலை 5-15க்குக் காரைக்குடிக்கு வந்து சேர்ந்தோம்.

**நினைவு-5 :** அக்காலத்தில் 'தினமணி-ஞாயிறு' மலரில் கலிங்கத்துப்பரணிபற்றி என் ஐந்து கட்டுரைகள் வெளி வந்திருந்தன. மேலும் நான்கு கட்டுரைகள் எழுதிக் காரைக்குடி செல்வி பதிப்பகத்தின் மூலம் 'கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி' என்ற தலைப்பில் வெளியிட்டேன். என் வாழ்வில் ஒரு திருப்பத்தை ஏற்படச் செய்தும், மேலும் படிக்கவும் வாய்ப்பு பெறச் செய்தும், வரும் இடையூறு களைத் தடுத்து நிறுத்தியும், இன்னும் பல்வேறு வகையில் உதவியும் திருவருள் பாலித்தவர் விநாயகப் பெருமான் என்பது என் திடமான நம்பிக்கை, அந்த எம்பெருமானே

சா. க. வடிவத்தில் எனக்கு உதவினார் என்பதும் என் நம்பிக்கையுமாகும். எந்த ஒரு புதிய பொருளையும் விநாயகப் பெருமானுக்கு முதலில் படைப்பது ஒருவித மரபு. காரைக்குடி வாழ்வில் முதல் நூலாக (மார்ச்சு-1957) வந்த இதனை,

> தீந்தமிழ் அன்னைக்கு இனியநற் புதல்வன்;
> செம்மையில் பிறழ்ந்திடா உளத்தன்;
> காந்திஎம் பெருமான் நெறிவழி நிற்போன்;
> கல்சொலும் கதையுணர் அறிஞன்;
> சாந்தமார் முப்பால் வாசகம் சுவைப்போன்;
> தண்டமிழ் கம்பனுக்கு அடியான்;
> மாந்தருள் சிறந்தோன் கணேசனாம் எங்கள்
> வள்ளலுக்கு உரியதுஇந் நூலே.

என்ற பாடலின்மூலம் அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இந்தப் படையலின்கனமே வரிசை வரிசையாகப் பலப்பல நூல்கள் எழுதுவதற்கும், வெளியிடுவதற்கும் காரணமாக அமைந்தது என்பதை என் உள்ளம் நம்புகின்றது.

**நினைவு-6 :** எந்த நூலை எழுதினாலும் ஒரே அளவு, ஒரே மாதிரியான நல்ல தாளில் என் கைப்படிகள் அமையும். 'செய்வன திருந்தச்செய்' என்பதற்கு எடுத்துக் காட்டாகத் திகழும். சா. க. வுடன் பழகின பிறகு இயல்பாக என்னிடம் அமைந்துள்ள இப்பண்பு மேலும் மெருகேறியது. எந்த நூலாக இருந்தாலும் அவற்றின் கைப்படியைத் திரு. சா. க.வின் பார்வைக்கு வைப்பேன். எழுதிக் கொண்டிருக்கும்போதும் அவற்றின் அமைப்பு பற்றி அவருடன் கலந்து யோசிப்பதுண்டு. அருமையான திருத்தங்களைச் சொல்வார்; அற்புதமான யோசனைகளைக் கூறுவார். பெரும்பாலும் எல்லாத் துறைகளிலும்

மனம் கலந்து உரையாடும் திறன் படைத்த ஓர் அபூர்வ மனிதராகத் திகழ்ந்தார் சா. க.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு (குறள்-783)

என்ற வள்ளுவப் பெருமானின் வாக்கின் உண்மையை நான் இவரிடம்தான் கண்டேன். காரைக்குடியில் பணியேற்ற அன்றே 'தமிழ் பயிற்றும் முறை' பற்றி ஒரு பெரு நூல் எழுதவேண்டும் எனத் திட்டமிட்டேன். தாய் மொழியைப் பயிற்றும் முறைகள் பற்றிய ஆங்கில நூல்கள், கல்வி, உளவியல் பற்றிய நூல்கள், பல பேரறிஞர்கள் தனித்தனி பொருள் பற்றி ஆராய்ந்து எழுதிய நூல்கள் இவற்றையெல்லாம் ஆழ்ந்து கற்றேன். இவற்றில் குறிப்பு களை எடுத்து வகுப்பில் கற்பித்தலில் கையாண்டேன். இந்தப் பயிற்சியால் கருத்துகள் தமிழில் நல்ல 'சொல்லும் திறமையை' அடைந்தன. இங்ஙனம் அநுபவத்தால் எழுதப் பெற்றதே ''தமிழ் பயிற்றும் முறை'' என்ற என் பெரிய நூல். இது அச்சாக வேண்டுமே. ஏழைப் பெண் ஒருத்தி குழந்தையைச் சுமந்து கொண்டு பேருந்து நிலையங்களிலும், இருப்பூர்தி நிலையங்களிலும் பிச்சைக் காகக் கையேந்தி நிற்கும் நிலைதான் என் போன்ற எழுத்தாளர் நிலையும். ச. கா.விடம் இதனைக் காட்டி அச்சில் இந்நூல் வெளிவர உதவ வேண்டும் என்று வேண்டி னேன். 'கவனிப்போம்' என்றார். விநாயகர் மனம் வைத்தால் விக்கினங்கள் யாவும் தீயினில் தூசாகும் அன்றோ?

அந்த ஆண்டுக் கம்பன் திருநாளுக்கு திருநெல்வேலி எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை என்ற வெளியீட்டு நிறுவனத்தின் உரிமையாளர் S. R. கூத்தநயினார் வந்திருந் தார்; அவருக்கு நெருங்கிய நண்பரும் ஆலோசகருமான பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டரும் கம்பன் திருநாளில் கலந்து கொள்ள வந்திருந்தார் (1956-கம்பன்

திருநாள் என்பதாக நினைவு). சா. க. கூத்தநாயினாரைப் பார்த்து, ''அப்பா கூத்து, திரு.ரெட்டியார் ஆறாண்டுகள் சிரமப்பட்டு 'தமிழ் பயிற்றும் முறை' என்ற இந்தப் பெரிய நூலை ஆக்கியிருக்கின்றார். இதனை நீதான் போட வேண்டும் என்பது என் ஆசை. இந்த வெளியீட்டால் உன் நிறுவனத்திற்குப் பேரும் புகழும் வந்து சேரும். உடனே போடுக'' என்று கூற, அவரும் போடுவதாக ஒப்புதல் தெரிவித்தார். மறுநாளே கைப்படியை அவரிடம் சேர்த்தேன். 1957-அக்டோபரில் நூலும் அச்சாகிப் பெரும் புகழுடன் நடைபோடத் தொடங்கிவிட்டது. சா.க.வின் துணையில்லாவிடில் இந்த நூல் வந்திருக்க முடியாது. இதன் மூன்றாவது பதிப்பும் (செப்டம்பர், 1980) வெளிவந்து படிகள் தீர்ந்துவிட்டன. இது மணிவாசகர் நூலகத்தார் (சிதம்பரம்) வெளியிட்டனர்; நான்காவது பதிப்பு வெளிவர இறைவன் அருள்வேண்டும்; இந்த நூலின் சிறப்பினைப் புலவர் இரா. திருமுருகன் (புதுச்சேரி) என்பார்,

ஆசிரியப் பணியாற்றி அறிந்த வெல்லாம்
ஐந்தரிய நூலாகத் தந்தார் மண்மேல்;
ஆசிரியப் பணியிருக்கும் வரையி ருக்கும்
அவர்படைத்த 'தமிழ் பயிற்று முறை'யின்
கீர்த்தி![5]

என்று புகழ்மாலை சூட்டுவார்.

நினைவு-7 : 'தமிழ் பயிற்று முறை' வெளி வந்த சமயத்தில் 'அறிவியல் பயிற்றும் முறை' என்ற நூலும் தயாராயிற்று. இதனையும் உருவானது முதல் முடியும் வரை கவனித்தார். பத்துத் திங்களில் ஒரே மூச்சில் முடிக்கப்பட்டது. மூலம் ஆங்கில நூல்களாதலால் அந்தக்

5. ஆசிரியரின் 'விட்டுசித்தன் விரித்தமிழ் (சிறப்புப் பாயிர மாலை—22) காண்க.

கருத்துகள் தமிழில் அவதாரம் எடுக்கும்போது 'தமிழ் நடையாக' இருக்க வேண்டும் என்ற கவலை என்னிடம் அடிக்கடி எழும். ஜஸ்டிஸ் மகராசன் ''இந்திய ஆடையணிந்து அங்கவஸ்திரம் மேலே போட்டுக் கொண்டு கையில் குடையுடனும் காலில் நடையனுடனும் கை வீசிக் கொண்டு 'ராஜநடை' போடுவதுபோல் இருக்க வேண்டும் நூலின் நடை'' என்பார்; ''மாறாக ஆங்கில உடையணிந்து கால் புதையணியுடன் (Boot) நடக்கத் தெரியாதவன் நடப்பதுபோல் நடை அமையக் கூடாது'' என்பார். சா. க. நடை 'நன்கு அமைந்துவிட்டது' என்று 'சான்றிதழ்' வழங்கினார். நூலும் அழகாக 'பழநியப்ப சகோதரர்கள்' என்ற வெளியீட்டாளர்மூலம் வெளி வந்தது (1957). இதன் மூன்றாவது பதிப்பும் புழக்கத்தில் உள்ளது.

Edith Sproul என்ற அம்மையார் எழுதிய The Science Book of Human Body என்ற பெரிய ஆங்கில நூலைத் தமிழாக்கம் செய்தேன். இதனையும் ஆதி முதல் அந்தம் வரையில் நோக்கினார். தமிழின் நீர்மை குன்றாது நடை அமைந்தது என்று ஆமோதித்தார். நூலும் 'மானிட உடல்' என்ற பெயருடனும் படங்களுடனும் காரைக்குடி புதுமைப் பதிப்பகத்தார் மூலம் (உரிமையாளர் அ. லெ. நடராசன்) வெளிவந்தது (1958). இது தவிர Heisenberg எழுதிய (Nuclear Physics) என்ற நூலை மொழி பெயர்த்தேன். சென்னைப் பல்கலைக் கழகப் பரிசுக்கு அனுப்ப வேண்டியதாக இருந்ததால் இதன் கைப்படியைச் சா. க. பலமுறை நோக்கினார். 'நடை நன்று' என ஆமோதித்தார். நூலும் பல்கலைக் கழகப் பரிசு பெற்றது; ஆனால் இது நான் திருப்பதி சென்ற பிறகுதான் வெளிவந்தது (1966). இதற்கோர் ஆங்கில அணிந்துரை அருமை இராஜாஜி அவர்களிடம் பெறுவதற்கு முன்னின்று உதவினார் சா.க. மேலும் 'அணுவின் ஆக்கம்' (Atom for Peaceful Uses) என்ற

முதல் நூலைப்படங்களுடன் தயார் செய்தேன். இதனையும் உற்று நோக்கினார். இவரது பரிந்துரையால் எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை பதிப்பகத்தார் வெளியிட்டனர் (பல விளக்கப் படங்களுடன்)—(1958). இவை தவிர 'கல்வி உளவியல்', 'கவிதை அநுபவம்' என்ற நூல்களின் படிகளையும் நன்கு நோக்கி ஆசி கூறினார். இவை இரண்டும் நான் திருப்பதி சென்ற பிறகு 1961 இல் தான் வெளிவந்தன.

**நினைவு-8 :** நான் திருச்சியில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது திரு.வி.க. வின் பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை என்ற நூலைப் படித்தேன். அதன் முகவுரையில் 'அறிவியலடிப்படையில் புதிதாக இல்லற வாழ்க்கையில் புகும் மணமக்களுக்குப் பயன்படும் வகையில் நூலொன்று படைப்பவர் சிறந்த தொண்டராகக் கருதப் பெறுவார்' என்ற குறிப்பு என் உள்ளத்தை நெருடிக் கொண்டிருந்தது. Dr. Hanna, Dr. Abrahamtone என்ற இரண்டு மருத்துவ நிபுணர்கள் எழுதிய வினா-விடையிலமைந்த A Marriage Manual என்ற ஆங்கில நூலைப் படித்துக் கொண்டிருந்தபோது, திரு.வி.க.வின் குறிப்பு நினைவிற்கு வர, இந்த நூலையும் வேறு பல அடிப்படையாக ஆங்கில நூல்களையும் துணை கொண்டு பத்து இயல்களில் ஐம்பது கடிதங்களில் நூலொன்றை உருவாக்கினேன். கடித உத்தியைக் கையாண்டதை மிகவும் பாராட்டினார் சா. க. இந்த நூல் உருவாகும்போது இதில் மிக்க அக்கறை காட்டிப் பல குறிப்புகளை ஆங்காங்கே தந்து கொண்டிருந்தார். 'மண மக்களுக்கு' என்ற திருநாமம் சூட்டியிருந்தேன். இது 'காம நூல்' என்ற தவறான கருத்தைப் பொது மக்களிடம் விளைவித்து விடுமோ என்ற அச்சம் இருந்து வந்தது. சா. க.வும் நானும் பல நாட்கள் சிந்தித்து 'இல்லறநெறி' என்று புதுப்பெயர் சூட்டினோம். ஆனால் 1958-இல் உருவான இந்த நூல் 'கழகத்திடம்'

ஐந்தாண்டுகள் 'கூண்டுப் புழுவாக'வே கிடந்தது. பின்னர் இதன் படியைத் திரும்பப் பெற்று தமிழ்ப்புத்தகாலயம் (சென்னை-5) என்ற நிறுவனத்தின் மூலம் வெளியிட்டேன் (1964). திருப்பதியிலிருந்தபோது நூல் வெளி வந்ததால் நூலை 'வேலனுக்கு வேங்கடத்தான் கடிதங்கள்' என்ற முறையில் மாற்றி வெளியிட்டேன்.

*நினைவு—9* : காரைக்குடியில் நான் பணியாற்றிய கல்லூரியில் பேராசிரியர் பதவி ஒன்று காலியாக இருந்தது. அதற்கு நான் முயன்றேன். வேறு சிலரும் முயன்றனர். அப்போது வள்ளல் அழகப்பர் மறைந்து சில ஆண்டுகள் கழிந்த நிலை. அழகப்பர் அறத்தின் செயலராக இருந்தவருக்கும் சா.கா.வுக்கும் கருத்து வேறுபாடு. ஆனால் செயலரிடம் நல்லெண்ணத்தை வளர்த்துக் கொண்டிருந்தேன்—என் உழைப்பினால். இந்நிலையில் என் தோழ ஆசிரியர்களில் இருவரும் அழகப்பர் அறத்தின் மேலாளரும் மேற்கொண்ட ஒரு சதியால் இப்பதவி எனக்குக் கிடைப்பதில் ஒரு தடைக்கல் எழுப்பப்பட்டது. இந்தச் சதித்திட்டத்தில் எங்கள் கல்லூரி முதல்வரும் கலந்து கொண்டிருந்ததையும் அறிந்து கொண்டேன். இந்தத் தடைக்கல் விவரத்தை எழுதவே என் கை கூசுகின்றது. இதனை அழகப்பர் அறத்தின் தலைவராக இருந்த, திரு. சி. சுப்பிரமணியத்தின் (சென்னை மாநில கல்வி-நிதி அமைச்சர்) கவனத்திற்கும் கொண்டு வந்தேன். 'கவலை வேண்டா; உரிய நேரத்தில் கவனிப்பேன்' என்று ஆசியுடன் உற்சாகம் ஊட்டினார். சா.க. நேராக இதில் தலையிட்டு உதவ முடியாத நிலை. முந்தைய செயலர் திரு K.V.AL.M. இராமநாதன் செட்டியார் (அறத்தின் முக்கிய உறுப்பினர்) அவர்களுக்குத் தொலைபேசி மூலம் என் நிலையை விளக்கினார். நானும் அவரைப் பார்த்து நிலையை விளக்கினேன். செயலரின் அழைப்பாலும் திரு இராய. சொ. அவர்களின் தூண்டுதலாலும் கானாடு காத்தான் சென்று செயலரைப் பார்த்துப் பேசினேன்.

அவரும் என்னை அன்புடன் வரவேற்று சிற்றுண்டி வழங்கி நான் ஊகத்தால் ஐயுற்றிருந்த சதித்திட்டத்தைத் தெளி வாக்கினார். தக்க நேரத்தில் தக்கமுறையில் அனைவரும் வியக்கும் முறையில் ஆணை அனுப்புவதாக உறுதியும் கூறினார். இவ்வளவு பேர் துணை இருந்தாலும் கணேசப் பெருமானே சா.க. மூலம் எல்லா விக்கினங்களையும் போக்கினார் என்பது என் அதிராத நம்பிக்கை.

டாக்டர் பட்டம் (Ph.D) பெறுவது எளிது என்றே திரு சா.க., திரு இராய. சொ. செயலர் திரு CV.CT.V. வேங்கடாசலம் செட்டியார் இவர்களிடம் பிரியாவிடை பெற்றுத் திருப்பதிப் பணியை ஏற்றேன். திருப்பதி சென்றா லும் குடும்பம் ஆறு ஆண்டுகள் காரைக்குடியிலிருந்ததால் விடுமுறைக் காலம் காரைக்குடியில்தான் கழிந்தது. இந்த மூவரின் அன்புறவும் தொடர்ந்து இருந்து வந்தது. 1966-க்குப் பிறகு சா.க.வின் தொடர்பு அறுந்தாலும் (10 ஆண்டுகள்) அவர் என் மனத்தில் நிலையாகவே இருந்து வந்தார்.

காங்கிரசு ஆளும் கட்சியாக இருந்து தமிழகத்தை ஆண்டு வந்த காலத்தில் உண்மையாகத் தொண்டு புரிந்த சா.க.வுக்கு எந்தவித பொறுப்போ பதவியோ கிடைக்க வில்லை. சட்டமன்றப் பேரவைக்கு உறுப்பினராக நிற்பதற்குக் கூட அநுமதி வழங்கப் பெறவில்லை. 1967-இல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் (தி.மு.க) வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது. பேரறிஞர் அண்ணாத்துரை முதலமைச்ச ராகப் பதவியேற்றார். இவர் காலத்தில் சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் சா.க.வுக்கு முக்கிய பொறுப்பு தரப்பெற்றது. தொடர்ந்து சட்டமன்ற மேலவையிலும் உறுப்பினராக வருவதற்கு வாய்ப்பும் அளித்தார் அண்ணா. தவிரவும் காரைக்குடியில் கம்பன் மணி மண்டபம் அமைக்கவும்

தமிழன்னைக்குக் கோயில் அமைக்கவும் சா.க.வுக்கு ஒல்லும் வகையெல்லாம் உதவியது தி.மு.க ஆட்சி. ஒரு காலத்தில் தந்தை பெரியாரையும் அறிஞர் அண்ணாவையும் வெறுப்புடன் நோக்கினார் சா.க.அந்த அண்ணாவின் காலத்தில்தான் எல்லாவித ஏற்றங்களும் சா.க.வை வந்தடைந்தன.

*நினைவு—10 : 1977*—ஆகஸ்டுத் திங்கள் *(1—3)*—செப்டம்பரில் திருப்பதிப் பணியிலிருந்து ஒய்வு பெற வேண்டிய நிலை—U.G.C.யின் ஆதரவில் ஒரு கம்பராமாயணக் கருத்தரங்கம் திருப்பதிப் பல்கலைக் கழகத்தில் நடைபெற ஏற்பாடு செய்தேன். கம்பன் புகழ் பரப்ப முதன் முதலாகத் தமிழகத்தில் 'பிள்ளையார் சுழி' போட்ட சா.க.வையும் அரசியலிலிருந்து ஓய்வு பெற்று நெல்லூரில் நிரந்தரமாகக் குடியிருந்த திரு B. கோபால் ரெட்டியையும் (முன்னாள் மத்திய அமைச்சர், உத்தரப் பிரதேச முன்னாள் ஆளுநர்), ரசிகமணியின் தலையாய சீடர் ஜஸ்டிஸ் மகராஜனையும், இணையற்ற இலக்கிய வரலாற்று ஆசிரியர் மு. அருணாசலத்தையும் கருத்தரங்கில் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்து கொள்ள ஏற்பாடு செய்தேன். தமிழில் சா.கவுக்கு ஒரு வரவேற்பு இதழும், தெலுங்கில் திரு. B. கோபால்ரெட்டிக்கு ஒரு வரவேற்பு இதழும் வாசித்து அளித்து பெருமைப்படுத்தினேன். சா.க.வுக்குத் தந்த இதழை மட்டிலும் ஈண்டு தருகின்றேன்.

வரவேற்பு மடல்

வண்ணமுறு பொதியமலை தன்னில் தோன்றி
வளம்நல்கும் வையையினில் தவழ்ந்து வேம்பன்
புண்ணியநற் சங்கத்தில் வீற்றி ருந்து
புகழ்பெற்ற தமிழன்னை செங்கோல் ஓச்சக்

கண்ணனைய பெருங்கோயில் கண்ட நம்பீ!
கலைத்தமிழுக் குணர்வளிக்கும் புனித நம்பீ!
தண்ணமுதம் எனக்குளிர்ந்த உள்ள நம்பீ!
சால்புநிறை நின்வரவால் உயர்ந்தோம் வாழி!

மாதகவார் காந்தியருள் நெறியில் ஏகி
மாசற்ற சத்தியத்தின் சுடரைக் கண்டாய்!
போதமுறு பாரதியின் வதன சோதிப்
பொலிவினால் இலக்கியத்தின் நுட்பங் கண்டாய்!
கோதகன்ற ராஜாஜி நட்பி னாலே
கொள்கையினில் தளராத உறுதி கண்டாய்
ஏதமிலாச் சுகமுடைய கணேச நம்பீ!
இவற்றாலே தமிழகத்தின் தீப மானாய்!

செந்தமிழ்த்தாய் ஒருகோடி யாண்டு செய்த
செழுந்தவத்தின் பயனான கம்ப நாடன்
சந்ததமும் புரிந்திட்ட நோன்பி னாலே
தகவுடனே அவதரித்தாய்! கலைஞர் கோவே!
முந்துறயாம் பகர்ந்தமொழி முகமன் அன்று
மூவாத தமிழகத்துப் பட்டி மன்றம்
சிந்தைநிறை கவியரங்கம் கம்ப னுக்குத்
திகழ்கின்ற பதிப்புக்கள் யாவும் சாட்சி.

சிற்பத்தில் கல்வெட்டில் புனிதப் பண்ணில்
சீர்மிக்க சொல்லாய்வில் மருத்து வத்தில்
கற்பனையின் முதிர்ச்சிவளர் கவிதை யாய்வில்
கம்பனடிப் பொடியே! நின் ஒப்பா ரில்லை.
பொற்புறுநின் முற்றத்தில் சிந்தும் சொல்லைப்
பொலிவுடனே தொகுத்தவர்கள் டாக்ட ராகி
முற்பட்ட புகழ்பெறுவர் கவிஞர் கோவாய்
மூவாத கம்பனுக்கே அடிமை யாவார்.

மங்கலமார் கம்பனடிப் பொடியே! நீங்கா
மகிழ்வுடன்நீ புரிதொண்டு முற்றும் கண்டோம்

பொங்குமனக் களிப்புற்றோம்; இதயத் தாலே
புகழ்மிக்க தமிழ்த்தாய்க்கு வடிவம் தந்தாய்
கங்கையெனச் சிறப்புறுக; வேங்க டத்தில்
கருணையே வடிவாக மேவு கின்ற
பங்கயக்கண் எம்பெருமான் அருளி னாலே
பல்லாண்டு பல்லாண்டு பல்லாண்டு வாழ்க!

[கம்பராமன்-S.K. இராமராசன் பாடியது].

இந்தப் பாடல்களை டாக்டர் P சௌரிராசனால் இசையுடன் பாடப் பெற்று சா.க.வுக்கு வரவேற்பு நல்கப் பெற்றது. இங்ஙனமே தெலுங்கில் கணிதப் பேராசிரியர் Dr.P.V. அருணாசலம் அவர்களால் பாடல்கள் தயாரிக்கப் பெற்று அவராலேயே இசையுடன் பாடப் பெற்று திரு B. கோபால்ரெட்டிக்கு வரவேற்புரை வழங்கப்பெற்றது.

1977-அக்டோபரில் ஓய்வு பெற்று மூன்று திங்கள் திருப்பதியில் தங்கியிருந்தேன். 1978 சனவரி 14 முதல் சென்னையில் குடியேறி விட்டேன். ஒருமுறை இராசேசுவரி கல்யாண மண்டபத்தில் நடைபெற்ற கம்பன் விழாவில் சா.க.வைக் கண்டு உரையாடி மகிழ்ந்தேன். அதன் பிறகு அவரைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படவில்லை. உடல்நிலை குன்றி கோவையில் மருத்துவ சிகிச்சை பெற்று வந்ததாகச் செய்தி எட்டியது. சில நாட்களில் அவர் திருநாட்டை அலங்கரித்த செய்தியும் தொடர்ந்து வந்தது. மிகவும் வருந்தினேன். ஆனால் என் வாழ்வில் ஒரு திருப்பத்தை விளைவித்த விநாயகப் பெருமான் சா.க. வடிவத்தில் நிலையாக என் உள்ளத்தில் எழுந்தருளியுள்ளார். இனி எத்தனை பிறவி எடுத்தாலும் அவர் என் உள்ளத்தில் நிலையாக இடம் பெற்றிருப்பார்.

தோற்றம் : 6-6-1908 முத்தி : 28-7-1982

## 20. பேராசிரியர் ஆ. முத்துசிவனார்

பேராசிரியர் ஆ. முத்துசிவனார் காரைக்குடி அழகப்பா கல்லூரி தொடங்கப்பட்டகாலத்திலேயே முதல் தமிழ்ப்பேராசிரியராக நியமிக்கப் பெற்றவர். கம்பனடிப் பொடியின்பேரன்பிற்கு இலக்கானவர். அக்காலத்தில் பி. ஏ. வகுப்பில் சிறப்புத் தமிழ் உள்ள கல்லூரியில்தான் தமிழ்த் துறைக்குப் பேராசிரியர் பதவி உண்டு. கல்லூரி தொடங்கப் பெற்றபோது ஆங்கிலம், தமிழ், இயற்பியல், கணிதம் போன்ற பல துறைகட்கும் பேராசிரியர்களின் நியமனத்திற்கும் ஆணைகள் தயாரிக்கப் பெற்ற போது தமிழ்த் துறையிலும் சிறப்புத் தமிழ் இருப்பதாகக் கருதி தயாரித்துவிட்டார் எழுத்தர்; கையெழுத்தும் ஆகி ஆணைகளும் உரியவர்களைச் சென்றடைந்தன, பின்னர் தவறு தெரிந்தது. கல்லூரி நிர்வாகம் தமிழ்ப் பேராசிரியருக்குரிய ஆணையை மாற்ற நினைத்தது. கம்பனடிப்பொடி குறுக்கிட்டு, ''மாற்ற வேண்டா; தவறாகப் பிறப்பிக்கப் பட்ட ஆணையாயினும், கல்லூரியில் தமிழ் வளர்ச்சி பெற வேண்டும் என்பதற்கு இது சூசகமாக அமைந்து விட்டது. அப்படியே இருக்கட்டும்'' என்று தடுத்துவிட்டார். இப்படியாக திரு. ஆ. முத்துசிவனாருக்குப் பேராசிரியர் பதவி வந்து சேர்ந்தது.

காரைக்குடிக்கு வருவதற்கு முன்னர் திரு. முத்து சிவனார் திருநெல்வேலியிலிருந்தார். அப்போது டி.கே.சி.யின் வட்டத் தொட்டியில் தொடர்பு கொண்டிருந்தார்.

டி.கே.சியின் கவிதை மோகம் இவரையும்பற்றிக் கொண்டிருந்தது, சிறந்த பேச்சாளர்; எழுத்தாளர். டி.கே.சி.யின் கவிதைக் கொள்கையை முழுமூச்சுடன் பரப்பியவர். மேனாட்டு முறையில் அமைந்த இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளை தம் பேச்சாலும் எழுத்தாலும் முதன் முதலாகப் பரப்பி வந்தவர் முத்துசிவனார். தலையிலுள்ள வழுக்கையை மறைக்கக் கதர் குல்லாய் அணிந்திருப்பவர். கதர்க்குல்லாயுடன் அழகிய முகத்தோற்றம்—சுந்தர வதனம்—பாட்லை இசையுடனும் கையசைவுடனும் பாடும் பாணி, நல்லகுரல் இவையனைத்தும் கண்டாரையும் கேட்பாரையும் ஈர்க்கும் பெற்றியுடையவை. பாடலை அநுபவித்துப் பாடும்போது கேட்போருக்குக் கல்கத்தா ரச குல்லாவைச் சுவைப்பது போன்ற ஒரு பிரமை ஏற்படும். பேச்சு நடையும் டி.கே.சியின் பாணியில் அமைந்திருக்கும்.

நான் காரைக்குடியில் பணியேற்றபோது ஜப்பார் மருத்துவமனையருகிலுள்ள ஓர் இல்லத்தில் குடியிருந்தார்; அங்குத்தான் அவரை முதன் முதலாகப் பார்த்தேன். அந்த இடத்திலிருந்துதான் கல்லூரிக்கு இட்டுச் செல்லும் பேருந்தில் ஏறுவார். ஒன்றிரண்டு ஆண்டுகளில் கல்லூரி வளாகத்திலேயே இல்லம் அமைந்து விட்டது. வார விடுமுறை நாட்களில் சா. க. இல்லத்தில் இவரைப் பார்க்கலாம். பழகுவதற்கு இனியர்; எவருடனும் புன்முறுவல் தவழும் இன்முகத்துடனும் மிக எளிமையாகப் பழகும் பண்புடையவர். ஜஸ்டிஸ் மகராசனுக்கு மிக நெருங்கிய நண்பர். டி.கே.சி.யின் வட்டத்தொட்டி பலரைப் பிணைத்து வைக்கும் ஒரு சிறந்த கருவியாகத் திகழ்ந்தது.

1950—ஜூனில் நான் பல நிலைகளில் பங்கு கொண்டு முன்னின்று தொடங்கி வைத்த உயர்நிலைப் பள்ளி வைரிச் செட்டிப் பாளையத்திலுள்ள விவேகாநந்தா வித்யாலய உயர்நிலைப்பள்ளி. திரு. S. R. நாக ரெட்டியார் பொறுப்பில்நடை பெற்று வந்த உயர்நிலைப் பள்ளி. பள்ளி

தொடங்கப் பெற்ற ஆண்டு முதலே திரு நாக ரெட்டியார் பல இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்தத் தொடங்கி விட்டார். அதற்கு முன்னரே நூலகம்—வாசக சாலையின் ஆதரவில் பல நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்து திறமையுடன் நடத்தி வந்தவர். நான் காரைக்குடி சென்ற நான்கு திங்களில் பள்ளியில் கவியரங்கம் ஒன்றிற்கு ஏற்பாடு செய்தார். காரைக்குடியிலிருந்து பேராசிரியர் ஆ. முத்துசிவனார், திரு க. தேசிகனார், திரு பூ. அமிர்தலிங்கனார், நான் ஆகியோர் கருத்தரங்கில் கலந்து கொண்டோம். செவந்தாம் பட்டி பெ. இராமாநுஜ ரெட்டியார், வேலூர் S. K. இராமராாசன் முதலியோரும் இதில் கலந்து கொண்டனர். திருச்சி வரையில் இருப்பூர்தியில் சென் றோம். திருச்சியிலிருந்து மகிழ்வுந்தில் வைரிச்செட்டிப் பாளையம் சென்றோம். கருத்தரங்கம் பேராசிரியர் முத்துசிவனார் தலைமையில் நடைபெற்றது. அன்று மாலை நிகழ்ச்சிகள் முடிந்தன. இரவு நல்ல விருந்து.

அடுத்த நாள் திரு நாகரெட்டியார் புளியஞ் சோலைக் குப் பயணப்படுத்தினார். காலை சிற்றுண்டி முடிந்ததும் சுமார் எட்டு மணிக்கு எங்களை வில்வண்டியொன்றில் அச்சோலைக்குக் கூட்டிச் சென்றார். இன்னொரு வண்டி யில் வர்க்க அன்ன வகைகளும் வேறு சில பொருள்களும் சில ஆட்களுடன் வருவதற்கு ஏற்பாடு செய்தார். சுமார் 9-30க்குள் புளியஞ் சோலையைச் சென்றடைந்தோம். ஓங்கி உயர்ந்த மரங்கள் சூழ்ந்த சோலை; கதிரவன் தலை காட்ட முடியாத பரந்து பரவிய மரங்கள். மரங்களின் அடியில் வெள்ளத்தில் மலையினின்றும் உருண்டு ஓடி வந்த வழுவழுப்பான பெரிய கருங்கற்கள்; இடையிடையே சிறு கற்கள் செறிந்து கிடந்த காட்சி. கற்களுக்கிடையே ஊற்று நீர் சிற்றொலியுடன் ஓடிச் சென்ற காட்சி. இவை யாவும் எங்களது சிந்தைக்கும் செவிக்கும் கண்ணுக்கும் நல் விருந்தாக அமைந்தன.

கம்பனில் தோய்ந்த முத்துசிவனாருக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. இயற்கைக் காட்சியில் உள்ளத்தைப் பறி கொடுத்த பேராசிரியர்,

ஓங்கிமரன் ஓங்கிமலை
ஓங்கிமணல் ஓங்கிப்
பூங்குகுலை குலாவுகுளிர்
சோலைபுடை விம்மித்
தூங்குதிரை யாறுதவழ்
சூழலதோர் குன்றின.[2]

என்ற கம்பராமாயணப் பாடலைப் பலமுறை இசை யேற்றிப் பாடத்தொடங்கி விட்டார். இராமனுக்கு வில் முதலியவற்றை ஈந்த பிறகு அகத்தியர் இராமன் முதலியோருக்கு விடைகொடுத்துப் பஞ்சவடியில் தங்கி யிருக்குமாறு பணிக்க, இராமன் முதலியோர் பஞ்சவடிக் கும் செல்லும் வழிபற்றிக் கூறுவது இப்பாடல். பஞ்சவடி என்பது கோதாவரி நதிக்கரையில் ஐந்து ஆலமரங்கள் தொகுதியாகச் சூழ்ந்திருந்த இடம். முத்துசிவனார் இப்பாடலைப் பாடப்பாட நாங்கள் புளியஞ் சோலையை விட்டு பஞ்சவடிக்குப் போனதாகவே நினைத்து மகிழ்ந் தோம். புளியஞ்சோலைக் காட்சி பஞ்சவடிக் காட்சியை நினைக்கச் செய்தது ஒருவித இலக்கிய அநுபவம்.

கற்களின்மீது அமர்ந்து நாற்புறமுள்ள காட்சிகளை அநுபவித்துக் கொண்டிருந்த போது எங்களைத் திடீரென்று சிறையிருந்த செல்வி சீதாப்பிராட்டி இருந்த அசோக வனத்திற்குக் கொண்டு சென்று விடுகின்றார். ‘அசோக வனம்’ என்ற நூலின் ஆசிரியரல்லவா?

வேலையுள் இலங்கை என்னும்
விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலை தானும்
இல்லதோர் கனகக் கற்பச்

2. கம்ப. ஆரணிய—அகத்தியப்—57

சோலையங் கதனுள் உம்பி
புல்லினால் தொடுத்த தூய
சாலையின் இருந்தாள் ஐய!
தவம்செய்த தவமாம் தையல்[3]

என்ற பாடலைப் பாடத்தொங்கி விட்டார். 'காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக் கற்பச் சோலை' என்ற அடிக்கு அழுத்தம் கொடுத்துப் படித்தபோது இந்தப் புளியஞ்சோலையே அசோகவனமாக மாறுகின்ற ஒருவித மயக்கத்தை உண்டாக்கி விடுகின்றது.

பெரும்பாலும் பேராசிரியர் எங்குப் பேசினாலும் கவிதையைப் பற்றியே அதிகமாகப் பேசுவார். கவிதையில் வரும் சொற்களைப்பற்றி இவர் அடிக்கடி பேசுவது: கவிதைகளில் காணப்பெறும் சொற்களுக்கு வெறும் சொற்பொருள்தான் உண்டு என்பதில்லை. தொனிப் பொருளும் உண்டு. தொனிப் பொருளிலும் நானாவித ரகங்கள் உண்டு. இனம் இனத்தோடு என்பது போன்று, வெள்ளாட்டுக் கூட்டம் திரண்ட மாதிரி, ஒரு பொருளைச் சுற்றி பல தொனிப் பொருள்களும் துணைப் பொருள்களும் தோன்றி விடும். எடுத்துக் காட்டாக 'தென்றல்' என்ற ஒரு சொல் கவிதையில் வருவதாகக் கொள்வோம். அதன் பொருள் தெற்கிலிருந்து வீசும் காற்று என்பது மட்டும் பொருளன்று. இது பொதிகைமலையைக் குறிக்கும்; தமிழ் நாட்டைக் குறிக்கும்; தமிழின் மாட்சிகள் அனைத்தையும் குறித்து விடும். இதனால்தான் சொல் தன்னைப் பயன்படுத்துகின்ற கவிஞனை விட ஞானமுள்ளது என்ற கருத்தொன்று வழக்கில் பயின்று வருகின்றது. Words are wiser than those who use them என்று கூறுவார். சொற்களின் மர்மங்களையும் விசித்திரப் பண்புகளையும் நன்றாக உணர்ந்து அவற்றின் அருமைப் பாடுகளையெல்லாம் விளங்குமாறு அவற்றை அற்புதமாகக் கையாளுவார்கள் என்று சொல்லுவார். சில இடங்களில்

3. சுந்த. திருவடிதொழு—64

ஒப்புமையான சொற்களைக் கொண்டு அற்புதமான மந்திர வேலைகளையெல்லாம் செய்து விடுவார்கள் என்று எடுத்துக் காட்டுகள் மூலம் விளக்குவார்.

இவர் எடுத்துக்காட்டாக அடிக்கடிக் கூறும் பாடல் ஒன்று நினைவிற்கு வருகின்றது.

கூடல் பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப் பெறுவனேல் கூடென்று—கூடல்
இழைப்பாள்போல் காட்டி இழையாது நிற்கும்
பிழைப்பில் பிழைபாக் கறிந்து.

என்பது. இதில், கூடல் என்பது மதுரைக்குப் பெயர். கூடல் இழைத்தல் என்றால் மணலைப் பரப்பி ஒற்றை விரலால் வளைத்து வளைத்து சங்கிலித் தொடர்போன்று கண்ணை மூடிக்கொண்டு வட்டம் இடுதல். பெரும்பாலும் இதனைக் காதல் வயப்பட்ட மகளிர் மேற்கொள்ளும் செயல். இவ்வாறு வட்டமிடும்போது முடிகின்ற கோடு தொடக்கக் கோட்டைத் தொட்டுவிட்டால் நினைத்த காரியம் சித்தியாகி விடும் என்பது அவர்களின் நம்பிக்கை. இங்கு இந்தப் பாடலில் காதலியொருத்தி கூடல் பெருமானாகிய பாண்டியனை எண்ணிக் கூடல் இழைக்கின்றாள். பாண்டியன் வருவானா? வர மாட்டானா? அவனோடு கூடுவதற்குரிய பேறு கிட்டுமா? கிட்டாதா? என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள அவளது மனம் துடிக்கின்றது. ஆனால் கோடுகள் கூடுவது தவறிவிட்டால் மனம் சஞ்சலப் படும் என்று எண்ணி கூடல் இழைப்பதை இடையில் நிறுத்தி விடுகின்றாள். இவ்வாறு கூறி மீண்டும் ஒருமுறை பாடலைப் படிப்பார்; இல்லை, பாடுவார்—தமக்கே உரிய இனிய குரலில். தலைவியின் பாவனையை 'கூடல்' என்ற ஒரு சொல்லே திரும்பத் திரும்ப வந்து எத்தனை அழகாகப் பொருளைத் தெரிவிக்கின்றது! என்று விளக்குவார். இத்தனை சொற்களும் வெளிப் பார்வைக்கு ஒரே விதமான உடைகளை அணிந்தவைகளாகக் காணப்பெறினும்

அவற்றிற்குரிய இடங்களிலும் குறிப்புகளிலும் நல்ல வேற்றுமை உண்டு என்பது தெரிகின்றதல்லவா? என்று தம்முன் வீற்றிருப்பவர்களையே கேட்பார். இஃது இவர் கையாளும் ஒரு வகை பாணி. டி.கே.சி கையாளும் பாணி.

இன்னொரு பாடல் சேரநாட்டரசனைப் பற்றியது.

வஞ்சியான் என்றவன்தன் ஊருரைத்தான்
யானுமவன்
வஞ்சியான் என்றதனால் வாய்நேர்ந்தேன்—வஞ்சியே
வஞ்சியேன் வஞ்சியேன் என்றென்று உரைத்துப்பின்
வஞ்சித்தான் வஞ்சியார் கோ.

என்பது பாடல். தலைவியொருத்தி தனது தோழியிடம் வஞ்சி நாட்டு மன்னன் 'வஞ்சியேன், வஞ்சியேன்' என்று தன்னிடம் சொல்லியும் வஞ்சித்த வரிசையை எடுத்துக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இரசவர்க்க மாங்கனியை நெருடி நெருடி அதன் சாற்றை வருவிப்பதுபோல் பாடலைத் திரும்பத் திரும்பப் படித்து—இல்லை,இசையுடன் பாடி—பாடலின் பொருளைப்பிழிந்து எடுத்துக் காட்டுவார். அந்தக் காலத்தில் இவர் தோன்றும் சொற்பொழிவு மேடைகளுக்குக் கணக்கே இல்லை.

இங்ஙனம் உணர்ச்சியுடன் கவிதைகளை விளக்கிவந்த பெருமகன் திடீரென்று மாரடைப்பால் காலமானார். கல்லூரி வளாகத்திற்குக் குடியேறின பின்னர்தான் இச் சோக நிகழ்ச்சி நடைபெற்றது. நானும் என் முதல்வர் துரைக்கண்ணு முதலியாரும் கல்லூரியிலிருந்த வண்ணம் இவருடைய இல்லம் சென்று பார்த்தோம்; வருந்தினோம். ஓயாது புகைப்பார். சிறு சுருட்டுப் புகையே இவர்தம் ஆவியைச் சுருட்டிக்கொண்டு போய்விட்டதோ என்று கலங்கினோம். நானும் பலமுறை 'இப் பழக்கத்தை விட்டொழியுங்கள்' என்று கூறியுள்ளேன். 'ஆகட்டும் மிஸ்டர் ரெட்டியார்' என்று சொல்வாரேயன்றி பழக்கத்தை விட்டொழித்த பாடில்லை. என் செய்வது?

கள்ளம் கபடம் அற்ற வெள்ளை மனம் கொண்ட பெரு மகனார் மறைந்தார். மாணவர்களும் ஆசிரியர்களும் கூட்டம் கூட்டமாகத் திரண்டு வருவதைக் கண்டோம்.

நானும் முதல்வர் திரு. முதலியாரும்,

புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளறச்
சென்றான் எனப்படுத லால்.[4]

என்ற சமண முனிவரின் யாக்கை நிலையாமையை உணர்த்தும் பாடலை நினைத்துக்கொண்டோம். இன்னும் பல்லாண்டுகள் வாழவேண்டியவர் இளமையிலேயே போய் விட்டாரே என்று நினைந்தவண்ணம் கல்லூரிக்குத் திரும்பி னோம். அந்த அழகப்பா கல்லூரி ஆசிரியர்களும் மாணவர் களும் சேர்ந்து 'பேராசிரியர் ஆ. முத்து சிவனார் நினைவு மலர்' என்ற பெயரில் நினைவுமலர் ஒன்று வெளியிட்டு இவரது நினைவுச் சின்னமாக்கினர்.

4. நாலடியார்—29

## 21. தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார்

**1949**-காரைக்குடி கம்பன் திருநாளுக்குப் போயிருந்தபோது முதன் முதலாக எனக்கு அறிமுகப் படுத்தப்பெற்ற பெருமகனார் இவர். அதன் பிறகு 1950 - ஜூலை முதல் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக்கல்லூரி யில் பேராசிரியர் பணியை ஏற்றேன். காரைக்குடிப் பத்தாண்டு வாழ்வில் மிக அதிகமான நெருக்கத்துடன் பழகியவர்களுள் இப்பெரும்புலவர் ஒருவர். பெரும்பாலும் மாலை நேரங்கள் (6-8 மணி) இந்து மதாபிமான சங்கத் தில் இவருடன்தான் கழியும். முதுரைத் தமிழ்ச் சங்கத்துத் தலைவராக ஆலவாய் அவிர் சடைக் கடவுள் சொக்க லிங்கப் பெருமான் இருந்து வந்ததுபோல் பாரதியாரால் பாராட்டுப்பெற்ற காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தின் தலைவராக வீற்றிருந்து செயற்கரிய செயல்கள் புரிந்து வந்த மாமேதை தமிழ்க் கடல் இராய. சொ. இப்போது இப்பெரும் புலவரை நினைக்கும்போது பல நினைவுகள் மலர்கின்றன. அவற்றுள் சில ஈண்டுப் பதிவாகின்றன.

காரைக்குடிப் பணியேற்ற ஒருவார காலத்திற்குள் காரைக்குடியிலிருந்து சுமார் நான்குகல் தொலைவிலுள்ள இராய.சொ. வாழ்ந்து வந்த ஊராகிய அமராவதி புதூர் சென்றேன் இரண்டு ஆப்பிள் பழத்துடன். பேருந்து நிற்கு மிடத்திலிருந்து இவர் இல்லம் சுமார் முக்கால் ஃபர்லாங் தொலைவில் உள்ளது. அங்குச் சென்றேன். உண்மையில்

இல்லமேயானாலும் அஃது ஓர் ஆச்சிரமத்தின் களையுடன் காணப்பட்டது. ஓராண்டிற்குமுன் அறிமுகமாய்விட்ட தனால் இருவரும் ஒருவரையொருவர் நன்றாக இனங் கண்டு கொண்டோம். நான் சென்ற நேரம் முற்பகல் பத்து மணி. நான்கு பக்கமும் நூல்கள் நிறைந்த அலமாரிகள் சூழ இருந்த அறையின் நடுவில் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டு ஏதோ ஒரு நூலில் ஆழங்கால் பட்டிருந் தார். திருநீறும் சந்தனப் பொட்டும் தாங்கிய அகன்ற நெற்றி, புன்முறுவல் பூத்த அன்பு ஒழுகும் திருமுக மண்ட லம், தமிழே உருக்கொண்டது போன்ற பொன்னிறத் திருமேனியுடன் காட்சி தந்தார். கையுறையாகக்கொண்டு சென்ற இரண்டு ஆப்பிள் கனிகளைத் தந்து வணங்கி னேன். நான் ஒருவாரத்திற்குமுன் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பணியேற்றிருப்பதைக் கூறினேன்; மிக்வும் மகிழ்ந்தார். சுமார் அரைமணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். குளிர்பானம் வழங்கினார். பின்னர் விடைபெற்றுத் திரும்பினேன். அன்று பெற்ற நட்பு நான் காரைக்குடியில் இருந்த பத்தாண்டுக் காலத்திலும் திருப்பதிக்குச் சென்ற பிறகும் வளர்ந்தோங்கியது.

**நினைவு—1 :** காரைக்குடியில் நான் இருந்த காலத்தில் முதல் இரண்டு மூன்று ஆண்டுகள் வரை சனி, ஞாயிறு மட்டிலும் அமராவதி புதூரிலிருந்து இந்து மதாபி மான சங்கத்திற்கு வந்து சங்கத்திலேயே தங்கியிருந்தார். காலை நேரங்களிலும் மாலை நேரங்களிலும் தவறாமல் அவரை வந்து காண்பேன். சங்கத்தில் நல்ல நூலகம்ஒன்று இருந்தது. அதில் கிடைத்தற்கரிய பழைய நூல்கள், செந்தமிழ்த் (மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு) தொகுதி கள்; மறைமலையடிகள் வெளியிட்ட ஞானசாகரம் என்பவற்றின் தொகுதிகள் போன்றவை இருந்தன. சிறுவர்கள் சாக்லேட், பப்பர் மிட்டாய்களை நாடுவது போல நான் நூல்களை நாடும் பழக்கத்தைச் சிறு வயதிலிருந்தே வளர்த்துக் கொண்டிருந்தேன்.

இப்பழக்கத்தால் சங்கத்திற்கு வரும் போதெல்லாம் நூற்கடலில் மூழ்கி விடுவேன். தமிழ்க் கடல் என் ஆர்வத்தைக் கண்டு மகிழ்வார். விரைவில் என்னைச் சங்கத்து உறுப்பினராக்கி விட்டார்; மூன்று நான்கு ஆண்டுகள் நிர்வாக சபையிலும் இடம் தந்து விட்டார். மதுரையில் மீனாட்சித் திருக்கோயிலுக்கு வழிபாட்டுக்குச் செல்வோர் சொக்கலிங்கப் பெருமானை தரிசித்து வருவதுபோல், நான் நாடோறும் இந்து மதாபிமான சங்கம் சென்று தமிழ் கடல் இராய. சொ.விடம் அளவிளாவிக் கொண்டிருந்தேன். இராய. சொ.விடம் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசிக் கொண்டிருக்கலாம். பேச்சு இலக்கியம் பற்றியே இருக்குமாதலால் அதனால் என் தமிழறிவில் மெருகேறியது போன்ற மாற்றம் பெற்றது.

நினைவு—2 : நேர்மை, ஒழுங்கு, நேரந்தவறாமை எல்லாம் ஒருங்கு திரண்டு வடிவம் கொண்டது போன்ற ஒரு மாமனிதர் இவர். இந்து மதாபிமான சங்க நிர்வாக சபைக் கூட்டத்தில் இவரது கண்டிப்பைக் காணலாம். மாலை மூன்று மணிக்குக் கூட்டம் தொடங்கும். கூட்டத்திற்கு வேண்டிய குறைந்த அளவு உறுப்பினர் (Quorum) வந்து விட்டவுடன் கூட்டத்தைத் தொடங்கி விடுவார். தீர்மானங்கள் எண்ணிட்டு உடனுக்குடன் நிகழ்ச்சிப் பதிவேட்டில் (Minutes book) எழுதப்பட்டு விடும். தொடங்கும்போது இருப்பவர்களின் கையெழுத்து மட்டிலும் போடப்பட்டு தீர்மானங்கள் எழுதப்பெறும். இரண்டு தீர்மானங்கள் எழுதப்பெற்றவுடன் ஓர் உறுப்பினர் தாமதப்பட்டு வந்தால், அவர் இந்த இரண்டு தீர்மானங்கள் எழுதப் பெற்றதை அடுத்து கையெழுத்து போடுவார். இதனை அடுத்து மூன்றாவது தீர்மானம் எழுதப்பெறும். ஐந்து தீர்மானங்கள் எழுதப்பெற்றவுடன் ஒருவர் தாமதப்பட்டு வந்தால் அவர் அடுத்து கையெழுத்திடுவார். இவர் கையெழுத்திற்குக் கீழ் ஆறாவது தீர்மானம் எழுதப்பெறும். எல்லாத் தீர்மானங்

களும் எழுதப்பெற்ற பிறகு ஒருவர் தாமதத்துடன் வந்தாலும் இறுதியில் அவர் கையெழுத்திடலாம். அதன் பிறகு தலைவர் கையெழுத்திட்டு பதிவேட்டு வேலையை முடித்து விடுவார். அதன்பிறகு சிற்றுண்டி விருந்து நடைபெறும். ஒவ்வோர் உறுப்பினரும் ஒவ்வொரு கூட்டத்திற்கு விருந்தளிக்க வேண்டும். என் போன்ற ஏழ்மை நிலையிலிருப்பவர்கள் உணவு விடுதிப் பொருள் களை வாங்கி விருந்தளிப்பார்கள். செல்வச் செழிப்புள்ள நகரத்தார் உறுப்பினர் வீட்டிலிருந்தே தயாராகியுள்ள பொருள்களை மகிழ்வுந்தில் சமையல்காரப் பையன் கொண்டு வருவான். அன்று விருந்து பலமாக இருக்கும். நிகழ்ச்சிப் பதிவேட்டை நோக்கினால் யார் யார் எப்பொழுது வந்தார் என்ற விவரத்தை அறிந்து கொள்ள லாம்.

**நினைவு—3 :** யான் காரைக்குடி சென்ற இரண் டாண்டுகளில் அமராவதி மகளிர் இல்லத்தில் சொ. முருகப்பா அவர்கள் கம்பராமாயண ஆராய்ச்சி ஒன்று நடத்தினார்கள். அதற்குத்தமிழ்க் கடல்இராய.சொ.தான் தலைமை. நான், அழகப்பா கல்லூரி க. தேசிகன் பூ. அமிர்தலிங்கம் ஆகியோர் இதில் வழக்கமாகக் கலந்து கொள்வோம்! ஒவ்வொரு சனி, ஞாயிறு விடுமுறை நாட்களில் இந்த ஆய்வுக் கூட்டம் நடைபெறும். சனிக் கிழமை காலையில் சிற்றுண்டிக்குப் பிறகு மகளிர் இல்லம் செல்வோம்; ஞாயிறு மாலை 6 மணிக்குத் திரும்புவோம். இக்காலத்தில் உண்டி, உறையுள் எல்லாம் மகளிர் இல்லத் தில்தான். இப்படி இரண்டாண்டுக் காலத்திற்குமேல் ஆராய்ச்சி நடை பெற்றது.இதன் முக்கியப்பணி ஒவ்வொரு பாடலாகப் படித்து 'செருகு கவிகள்' எனக் கருதப் பெறும் பாடல்களை நீக்குவதுதான். பொதுவாக க. தேசிகன்தான் பாடல்களைப் படிப்பார். இந்தக் குழு பாடல்களைச் சோதிக்கும். இந்தச் சோதனையில் சொ. முரு. தான் பாடல்களின் நாடி பிடித்துப் பார்க்கும்

மருத்துவர். நீக்கத்தக்க பாடல்களை எடுத்துக் காட்டு வார். குழு இதனை ஆராயும், இராய. சொ. முடிவு சொன்னவுடன் பாடல் நீக்கப்படும்; அல்லது வைத்துக் கொள்ளப்படும். இராமாயணம் முழுவதையும் இப்படி ஆராய்ந்தோம். இத்தகைய அநுபவத்தை என் வாழ் நாளில் என்றுமே பெற்றதில்லை. இந்தத் திட்டத்தின் செயற்பாடு சொ. முரு.வைப் பற்றிய கட்டுரையில் (கட்டுரை—22) சற்று விரிவாக விளக்கப்பெற்றுள்ளது.

**நினைவு—4 :** மகளிர் இல்லத்தில் கம்பராமாயண ஆராய்ச்சி நிறைவு பெற்றது. ஒரு நாள் மாலை பல பெரியோர்கள் இந்து மதாபிமான சங்கத்தில் கூடியிருந்த பொழுது ஏதாவது ஓர் இலக்கியத்தைப் படிக்க வேண்டும் என்ற கருத்து தெரிவிக்கப்பெற்றது. பலர் பல இலக்கியத் தின் பெயர்களைக் குறிப்பிட்டனர். இறுதியாக 'வில்லி பாரதம்' பற்றிப் படிக்கலாம் என்று முடிவாயிற்று. சனிக் கிழமைதோறும் மாலை மூன்று மணிக்குத் தொடங்கி ஆறு மணி வரை தொடரலாம் என்று முடிவு செய்யப் பெற்றது. திருநாவுக்கரசு செட்டியார் பாடலை இசை யுடன் படிக்க, இராய. சொ. அவர்களின் விளக்கம் தொடர்ந்தது. இரண்டாண்டுக்குமேல் வில்லி பாரதம் தொடர்ந்து நடை பெற்றது. சொல்லற்கரிய இலக்கிய அநுபவங்கள். எதைச் சொல்வது? எதை விடுவது? எனக்கு இந்த அநுபவம் பெறற்கரிய நப்பறாக அமைந்தது. எல்லா நிகழ்ச்சிகளையும் விட ஒன்று மட்டிலும் மிகப் பசுமை யாக உள்ளது, கன்னனுக்குக் கண்ணன் தந்த காட்சிதான் அது.

நீலநெடுங் கிரியும்மழை முகிலும் பவ்வ
நெடுநீரும் காயாவும் நிகர்க்கும் இந்தக்
கோலமும்,வெங் கதைவாளும், சங்கு, நேமி
கோதண்டம் எனும்படையும் குழையும் காதும்

மாலைநறுந் துழாய்மார்பும், திரண்ட தோளும்,
மணிக்க முத்தும் செவ்விதழும், பாரிசாதக்
காலைமலர் எனமலர்ந்த முகமும், சோதிக்
கதிர்முடியும் இம்மையிலே கண்ணுற் றேனே[1]

திருநாவுக்கரசுச் செட்டியார் இப்பாடலைப் படிக்கும் போதே குரல் தழுதழுத்து உருகி விடுகின்றார். கூடியிருந் தோர் கசேந்திராழ்வானுக்குத் தந்த காட்சியையே கண்டு மனம் புளகாங்கிதம் அடைகின்றனர். இராய. சொ.வின் விளக்கம் இந்த அநுபவ்த்திற்கு முத்தாய்ப்பு வைத்து விடுகின்றது. மீண்டும் இந்தப் பாடலைத் திருநாவுக்கரசுச் செட்டியார் இசையேற்றிப் படிக்கும்போது கூடியிருந் தோரின் ப்க்தியநுபவம் கொடுமுடிக்குச் சென்று விடு கின்றது.

**நினைவு—5 :** இந்து மதாபிமான சங்கத்தின் நிர்வாக சபைக் கூட்டம் ஞாயிற்றுக் கிழமையும் வில்லி பாரத வகுப்பு சனிக் கிழமையுமாக நடைபெறும்போது சங்கக் கட்டடம் கலகலத்துப் போகும். வெளியூர் நிர்வாக சபை உறுப்பினர்களும் வந்து சேர்வார்கள். இப்படி வருபவர்கள் திரு. கா. காடப்பச் செட்டியார் (ஆத்தங்குடி), திரு சொக்கலிங்கம் செட்டியார் (காரைக் குடி, ஆனால் கும்பகோணத்தில் தங்கியிருப்பவர்) மற்றொருவர் திரு சொக்கலிங்கம் செட்டியார் (புதுக் கோட்டை) ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். ஒரு சமயம் மாலை நேரத்தில் இராய. சொ. நாற்காலியிலும், அவருக்கு எதிராக பக்கவாட்டில் போடப் பெற்ற பெஞ்சு களில் எதிரெதிராக கும்பகோணம் முத்த. வெ. சொக்க லிங்கம் செட்டியாரும், புதுக்கோட்டைச் சொக்கலிங்கம் செட்டியாரும் அமர்ந்திருந்தனர். மூவரும் சிவபூசை எடுத்தவர்கள். இவர்களுள் கும்பகோணம், முத்த. வெ. சொ. செட்டியார் இராய. சொ.வைப் போலவே

1. பதினேழாம் போர்—247

செம்மேனியுடன் திகழ்வார்; புதுக்கோட்டைச் செட்டியார் மாநிறமேனியுடையவர். இருவருமே சத்துவ குணம் படைத்த சாதுக்கள். மூவரும் மாலை நியம நிட்டைகளை முடித்துக் கொண்டு நெற்றியிலும் திருமேனியிலும் வெண்ணீற்றுப் பட்டை தீட்டிய நிலையில் அமர்ந்திருந் தனர். வேறு சில அன்பர்களும் அருகில் இருந்து உரை யாடிக் கொண்டிருந்தனர். இராய. சொ. புதுக் கோட்டையாரைப் பார்த்து, ''நம்முடைய புதுக்கோட்டை சொ. முனியாண்டிவிலாஸ் சோற்றுப்பானைக்குப் பட்டை தீட்டியது போல் பட்டை தீட்டிக்கொண்டு அமர்ந்திருக் கின்றார்கள்'' என்று நகைச் சுவையை உதிர்த்தார். புதுக் கோட்டையார் உட்பட அனைவருமே நகைத்து மகிழ்ந் தார்கள். இப்படிப் பல சந்தர்ப்பங்களில் நண்பர்கள் மகிழ்வதற்காகவே நகைச்சுவையை உதிர்ப்பார்கள் இராய. சொ.

**நினைவு—6 :** காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் தங்கியிருக்கும்போது நண்பர்கள் சில சமயம் அவருக்குத் தமது வீட்டில் விருந்து வைப்பார்கள். நான் அவருடன் நிழல்போல் நெருங்கிப் பழகுவதால் என்னை யும் அந்த விருந்துக்கு அழைப்பார்கள். நண்பர்கள் இராய.சொ.வுக்குப் பிடித்தமான உணவு வகைகள், காய்கறி வகைகள், கூட்டு வகைகள், கீரைவகைகள் இவற்றைத் தெரிந்து கொண்டு அதற்கேற்றபடி விருந்து உணவு வகைகள் தயாராகும். விருந்தின்போது வீட்டு ஆச்சிமார்கள் உணவு வகைகளின் பெயர்களைச் சொல்லி அவருக்குப் பறிமாறுவார்கள். அக்காலங்களிலெல்லாம்,

> இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள். 87)

என்ற குறள் நினைவில் எழுந்து மகிழ்வூட்டும். இங்ஙனம் இராய.சொ.வுடன் நான் கலந்து கொண்ட விருந்துகளில் சில : கும்பகோணம் முத்த. வெ. சொக்கலிங்கம்

செட்டியார் (காந்தி சதுக்கம் அருகில்), திருப்பதி செட்டியார் (முத்துப்பட்டினம்) அ.லெ. நடராசன் (புதுமைப் பதிப்பகம்), இராமநாதன் செட்டியார் (இருப்பூர்தி நிலையச் சாலை), தேவராயன் செட்டியார் (முத்துப் பட்டினம்) போன்ற அன்பர்கள் வைத்தவை. விருந்தின் போது பேச்செல்லாம் இலக்கியம் பற்றியே இருக்கும்.

***நினைவு—7 :*** செட்டிநாட்டுப் பகுதியில் செல்வர்கள் வீட்டில் நடைபெறும் திருமணம், புதுமை, மணிவிழா நிகழ்ச்சியின்போது நூல்களை அன்பளிப்பாக வழங்கும் ஒரு மரபு இருந்து வருகின்றது, அந்தந்த நிகழ்ச்சிக்கு ஏற்பப் பொருத்தமான நூல்களைத் தொகுத்து அச்சிட்டுத் தரும் பொறுப்பு இராய.சொ.விடம் இருக்கும். ‘பாவை பாட்டு’, ‘ஆழ்வார் அமுது’, ‘சீதைத் திருமணம்’, ‘மாதவன் மாலை’ போன்ற தொகுப்புகள் அவற்றுள் சில. இவை அச்சேறும்போது பார்வைப்படிகளைத் (Proofs) திருத்தும் பொறுப்பு பெரும்பாலும் என்னைச் சார்ந்திருக்கும். இப்பணியை நான் மிக்க அன்புடன் செய்து அவருடைய பாராட்டைப் பெறுவேன். ‘ஆழ்வார் அமுது’ என்ற நூல் நாலாயிரத்திலிருந்து பொறுக்கி எடுக்கப் பெற்ற நானூறு பாசுரங்களின் தொகுப்பு; குறிப்புரை இராய.சொ.வால் எழுதப் பெற்றது. இந்த நூல் இராயவரம் ப.வ. குழந்தையன் செட்டியார் மகன் திருமணவிழாவில் வழங்கப்பட வேண்டிய நூல். இது புதுக்கோட்டையில் அச்சாயிற்று; அச்சகம் பெரியது. மூன்றே நாட்களுக்குள் அச்சு வேலை முடித்துத் தந்தார் அச்சக அதிபர் திரு சக்தி செட்டியார். மூன்று நாட்கள் நான் இராய.சொ.வுடன் திரு சக்தி செட்டியாரின் இல்லத்தில்தான் தங்கி இருந்தேன். பார்வைப் படிவங்களைப் பார்ப்பதற்காக என்னைத் தம்முடன் வருமாறு பணித்தற்கேற்ப அவருடன் சென்றிருந்தேன். திரு சக்தி செட்டியார் தம் விருந்து உபசரிப்பால் எங்களைத் திணற அடித்து விட்டார். சில

நாட்களுக்குப் பின்னர் இராயவரத்தில் நடைபெற்ற திருமணத்திற்கும் சென்றிருந்தேன். இராய.சொ.வுடன் செல்லும்போது மகிழ்வுந்து வசதி, தங்கும் வசதி போன்ற வற்றிற்குக் குறைவில்லை.

நினைவு.—8 : 1958 அக்டோபரில் இராய. சொ.வின் மணிவிழா. இந்து மதாபிமான சங்கத்தின் ஆதரவில் விழாவை நடத்துவதென்றும், அப்போது அவருக்குத் 'தமிழ்க் கடல்' என்ற விருதை வழங்குவதென்றும் தீர்மானம் ஆயிற்று. ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றன.அப்போது அவர் உடல் நிலையும் சற்றுக் குன்றி யிருந்தது. 'இதயக் கோளாறு' என்பது மருத்துவச் சோதனையால் உறுதியாயிற்று. மருந்து, மாத்திரைகள் கவனமாக உட்கொள்ளச் செய்து கவனமாகப் பார்த்துக் கொண்டோம். இவருடைய நெருங்கிய நண்பர் (சிறைச்சாலைத் தோழர்) பல் மருத்துவர் திரு. வர்க்கீஸ் என்பார் ''நீங்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ விரும்பினால் என் சொற்படிக் கேட்க வேண்டும். மணிவிழா முடியட்டும். உங்கள் பல் முழுவதை யிம் பிடுங்கி எறிய வேண்டும். பிறகு பற்சீழ்நோய்க்கு (Pyorrhoea) ஊசி போட்டுக் கொள்ள வேண்டும். நான் அழகாகப் பல்கட்டித் தருவேன். அதைப் போட்டுக் கொண்டு நான் சொல்லும் உணவு வகைகளை மட்டிலும் தான் உட்கொள்ள வேண்டும். எண்ணெயாலான பொருள் களை அறவே விலக்க வேண்டும். இதய நோய்க்குத் தொடர்ந்து மாத்திரைகளை விழுங்க வேண்டும்...'' என்று அறிவுரை கூறினார். இராய. சொ.வும் அவர் சொற்படி நடந்து கொண்டார்; மேலும் பதினாறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தார். இக்காலத்தில் தமிழகத்தின் திசைகள் தோறும் சென்று தம் சொற்பொழிவுகளால் சைவத்தை யும் தமிழையும் பரப்பி ஒல்காப் பெரும் புகழ் பெற்றார். இக்காலத்தில் இவர் பெற்ற விருதுகள் 'சிவமணி', 'சிவம் பெருக்கும் சீலர்' என்பவை.

ஒருநாள் சங்கத்தில் இராய. சொ. என்னிடம் '''தமிழ்க் கடல்' என்ற விருது தமிழகத்தில் எனக்குத்தான் முதன் முதலாக வழங்கப்படப் போகின்றது என்று கருது கின்றேன்'' என்றார். ''அஃது பெரும்பாலும் உங்கட்கு இரண்டாவதாக இருக்கும்'' என்றேன். ''எப்படி?'' என்றார். சங்கத்தில் கட்டமைத்து வைக்கப் பெற்றிருந்த 'ஞானசாகரம்' (பின்னர் 'அறிவுக்கடல்' என்று பெயர் மாற்றம் செய்யப் பெற்றது) என்ற ஒரு தொகுதியிலிருந்து மறைமலையடிகள் இந்த விருது பெற்ற செய்தியை எடுத்துக் காட்டினேன். வியந்து போனார். ''நீங்கள் பெரிய ஆய்வாளராகத் திகழ்வீர்கள்; திகழவேண்டும்'' என்று வாழ்த்தினார். இப்பெரியாரின் 'வாழ்த்தின் கனம்' என்னை ஆய்வுப் பணியில் இன்றும் ஈடுபடுத்தி வருகின்றது என்பது என் அதிராத நம்பிக்கை.

*நினைவு-9:* காரைக்குடி இந்துமதாபிமான சங்க ஆண்டு விழா ஒன்றில் தினமணி துணையாசிரியர் (தினமணிச்சுடரின் ஆசிரியர்) திரு ஏ. ஜி. வேங்கடாச்சாரி கலந்துகொண்டார். அப்பொழுது இராய. சொ. அவர்கள் என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். அப்போது திரு. வேங்கடாச்சாரி தினமணிச்சுடருக்குக் கட்டுரைகள் வழங்கு மாறு கேட்டார். 'கலிங்கத்துப்பரணி' பற்றி என் ஐந்து கட்டுரைகள் அந்த வார இதழில் தொடர்ந்து வெளி வந்தன. இவற்றையும் வேறு நான்கு கட்டுரைகளையும் சேர்த்து 'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி' (மார்ச்சு—1957) என்ற தலைப்யில் நூலாக வெளியிட்டேன். இதற்கு இராய சொ.வை 'அணிந்துரை'யொன்று அருளுமாறு வேண்டி னேன். அவரும் மனமுவந்து 'அறிமுகம்' என்ற தலைப்பில் அரியதோர் அணிந்துரையை அருளினார். அதில், ''இந்தக் கலிங்கத்துப்பரணி என்ற அரிய நூலுக்குத் திறவு கோலாக அமைந்திருப்பது 'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி' என்னும் இந்த நூல். இத்திறனாய்வு நூலை எழுதியவர் என் அரிய நண்பரும், நன்கு கற்றவரும், வள்ளல் அழகப்பு

னாரின் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவருமான பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். அன்னார் கலிங்கத்துப்பரணியை நன்கு ஆராய்ந்து ஆங்காங்குள்ள நயங்களையெல்லாம் இந்நூலில் அழகுபட எடுத்துக் காட்டியிருக்கின்றார். கலிங்கத்துப்பரணி கற்பார்க்கு இந்நூல் பேருதவி செய்யவல்லது. 'கடை திறப்பின் உட்பொருள்' என்ற பகுதியில் பேராசிரியர் ரெட்டியார் காட்டியிருக்கும் கருத்தே கொள்ளத்தக்கது'' என்று வாழ்த்தியுள்ளார். இராய. சொ. அவர்களின் வாழ்த்தின் கனத்தால் 'தினமணிச்சுடர்' என்ற வார இதழிலும் (அப்போது துமிலன் அதன் துணை ஆசிரியர்) ஓர் ஆறு திங்கள் என் இலக்கியக் கட்டுரைகள் வெளி வந்து கொண்டிருந்தன. நான் இலக்கிய உலகிற்கு இதழ்களின் வாயிலாக முதன் முதலில் அறிமுகமானது இராய. சொ. அவர்களின் ஆசியால்தான் என்று சொன்னால் அது மிகை யாகாது. இக்காலத்தில் ஓராண்டுக் காலம் மதுரையி லிருந்து வெளி வந்த 'தமிழ்நாடு'—ஞாயிறு மலரில் என் சங்க இலக்கியக் கட்டுரைகளும் வெளி வந்து கொண்டிருந் தன (அப்போது அதன் துணை ஆசிரியர் எம். எஸ். பி. சண்முகம் என்பார்),

**நினைவு-10 :** 1960-ஆகஸ்டு முதல் காரைக்குடிப் பணியைத் துறந்து 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலாகிய' ஏழுமலையான் எழுந்தருளி யிருக்கும் திருப்பதி பல்கலைக்கழகத்தில் பணியேற்றேன். குடும்பம் காரைக்குடியில் (1966 மே வரை) தான் இருந்தது. இதனால் விடுமுறை நாட்களில் காரைக்குடியில் தான் இருப்பேன். இக்காலத்தில் இராய. சொ. வின் துணைவியார் திருநாடு அலங்கரித்து விட்டார்கள். இதனால் சமையல்காரனை அமர்த்திக் கொண்டு இந்து மதாபிமான சங்கத்தின் மாடியில் (ராய.சொ. உமையாள் மண்டபத்தில்) குடியிருந்தார். அப்பொழுது அவரைச் சந்தித்து இந்து மதாபிமான சங்கத்தில் ஆயுள் உறுப்பின

னானேன். (இதற்கு முன்னர் 14 ஆண்டுகளாகச் சாதாரண உறுப்பினர்). இக்காலத்தில் இரண்டு மூன்று ஆண்டுகள் காரைக்குடிப் பெருமாள் கோயிலுக்கு அறங்காவலர் பொறுப்பில் இருந்தார். இந்தக் காலப்பகுதியில் இத்திருக் கோயிலின் திருப்பணியை மேற்கொண்டு நிறைவுச் செய் தார். 'வைகுண்ட வாசலை' இயங்கச் செய்தார். மகர் நோன்பு விழாவில் ஐந்து கோவில் சாமிகளின் புறப் பாட்டை மிகச்சிறப்புடன் குதிரை வாகனங்களில் எழுந் தருளச் செய்து காந்தி சதுக்கத்தில் சிறப்பாக அம்பு போடும் விழாக்களை அற்புதமாக நடைபெறச் செய்தார்.

இக்காலத்தில் நான் ஏற்கெனவே எழுதி பல இதழ் களில் வெளியான ஒன்பது கட்டுரைகளை 'அறிவுக்கு விருந்து' என்ற தலைப்பில் (செப்டம்பர் 1963 நூலொன்றை வெளியிட்டேன். இதனை நான் இராய. சொ. விடம் கொண்டிருந்த மதிப்புக்கும் மரியாதைக்கும் அறிகுறியாக,

பக்குவமெய்ஞ் ஞானியென உலகம் போற்றும்
பாரதியைக் கண்டுமகிழ் பேறு பெற்றோன்;
மிக்கநறுங் கலைத்தமிழ்நூல் ஒன்று கூடி
வெண்ணீறு புனைந்ததென விளங்கும் சான்றோன்;
தக்கதிரு வாசகத்தை மூன்று போதும்
தலைதாழ்த்திப் பணிந்திடுவோன்; எங்கள் ராய
சொக்கலிங்கம் எனும்பெயர்கொள் தமிழ்க் கடற்குச்
சொல்விருந்தாம் இச்சிறுநூல் உரிமையாகும்.

என்ற பாடலின்மூலம் அன்புப் படையலாக்கி மகிழ்ந் தேன். இவருடைய ஆசியால் இந்த நூல் 1974-76 ஆண்டு களில் சென்னைப் பல்கலைக் கழக பி. ஏ., பி. எஸ்சி வகுப்புகளுக்குப் பாட நூலாக வைக்கப்பெற்றுக் கணிச மான வருவாயைத் தந்தது. இந்த வருவாய் என் முதல்

மகன் இராமலிங்கத்தின் திருமணத்திற்கு (1976) மிகவும் உதவியாக இருந்தது.

இக்காலத்தில் ராய. சொ. இரண்டாண்டுக் காலம் காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ் ஆராய்ச்சித் துறைப் பேராசிரியராகப் பணி புரிந்தார். வள்ளல் அழகப்பரின் கனவை அறக்கட்டளை நிறுவனத்தின் செயலராக இருந்த திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார் நனவாக்கினார். இந்த இரண்டாண்டுக்காலம் (1962-64) கல்லூரி வளாகத்தில் ஆசிரியர் குடியிருப்பிலுள்ள இல்லம் ஒன்றில் வாழ்ந்தார். காரைக்குடி வந்திருந்தபோது ஒருமுறை இப்பெரும் புலவரை இந்த இல்லத்தில் சந்தித்து அளவளாவியதாக நினைவு.

நினைவு-11 : தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியராக இருந்த போதுதான் அழகப்பர் அறக்கட்டளை நிறுவனத்தின் செயலர் வேங்கடாசலம் செட்டியாருடன் திருத்தலப் பயணத்தை மேற்கொண்டு வைணவ சைவ வேறு பாடின்றி எல்லாத் திருக்கோவில்களையும் சேவித்தார். இக்காலத்தில் நான் குடும்பத்தைத் திருப்பதிக்குக் கொண்டு போய் விட்டேன்: அப்போது என் பிஎச். டி.க்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை ஆய்ந்து கொண்டிருந்த காலம். 1965 முதல் 1970 வரை வைணவத்திருப்பதிகள் 108ஐயும் சேவித்துக் கொண்டிருந்தேன். என் அருமை நண்பர் K. சீநிவாச வரதனைத் துணையாகக் கொண்டு காஞ்சியிலுள்ள திவ்விய தேசங்களைச் சேவித்து வந்தபோது (ஜனவரி 1966) திருத்தலப் பயணத்தை மேற்கொண்டிருந்த இராய. சொ. குழுவினரை காஞ்சி அட்டபுயகரத்தில் சந்தித்தேன். இக்காலத்தில் இத்திருக்கோயிலில் பகல் பத்து—இராப் பத்து உற்சவம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பொருளில் அதிக நாட்டங் கொண்டிருந்த திரு. வேங்கடாசலம் செட்டியாரை இத்திருத்தலப்பயணத்

தின் மூலம் இறையருளில் நாட்டம் கொள்ளச் செய்தது இராய. சொ. வின் பெரிய சாதனை. பின்னர் இராய. சொ. தம் பயண அநுபவங்களை 'திருத்தலப் பயணம்' என்ற தலைப்பில் நூல் வடிவமாகச் செய்ததையும் அறிந்தேன். இதுகாறும் அந்த அரிய நூல் என் கண்ணில் படவில்லை!

இராய. சொ. ஒரு சிறந்த கவிஞர்; எழுத்தாளர்; சொல்லின் செல்வர் என்று பாராட்டக்கூடிய சிறந்த பேச்சாளர். காந்தி பிள்ளைத்தமிழ், காதற்பாட்டு, (தொகுப்பு), குற்றாலவளம் போன்ற நூல்கள் இவர்தம் நூல்களில் குறிப்பிடத்தக்கவை. 1966-சனவரிக்குப் பிறகு இப்பெருமகனைச் சந்திக்கும் வாய்ப்பில்லை. திருப்பதிக்கு வரவழைத்துப்பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் இப்பெருமகனாரைப் பாராட்ட வேண்டுமென்று பல் நாட்கள் கனவு கண்டதுண்டு. ஆனால் அந்த என் கனவு நனவாகவில்லை. அதற்குள் அவர் திருநாடு அலங்கரித்த செய்திதான் (30-9-1974) என்னை எட்டியது. என் வாழ்நாளில் தந்தைபோல் உற்ற துணையாக் இருந்து எனக்கு ஆசி கூறி என் தமிழறிவை மெருகேற்றச் செய்து எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும், ஒல்லும் வகையெல்லாம் உதவியருளின இப்பெரும் புலவர் தமிழ்க் கடல் நிலையாக என் உள்ளத்தில் இடம் பெற்றுத் திகழ்கின்றார்.

திரு. ஏ. கே. செட்டியார்தான். சொல்வார்: ''இராய. சொ.க்குப் பிடித்தவை இரண்டு; ஒன்று தமிழ். மற்றொன்று சீட்டாட்டம்.''

பிறப்பு : 30-10-1898 சிவப்பேறு : 30-9-1974

## 22. சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா

**1949**-இல் காரைக்குடிக் கம்பன் திருநாளைக் காணச் சென்றிருந்தபோது முதன்முதலாக அறிமுகப் படுத்தப்பெற்ற பெருமகனார் இவர். கம்பன் திருநாள் நடைபெற்றுக் கொண்டிருந்தபோதே மகளிர் இல்ல ஆண்டு விழாவும் ஒருநாள் மாலை நடைபெற்றது. இரசிகமணி டி.கே.சி. இந்த விழாவிற்குத் தலைமை வகித்ததால் அவருடன் இந்த விழாவிற்கும் போயிருந் தேன். இதனால் சொ.முரு. அவர்கள் மேற்கொண்டிருந்த பெருங்கல்விப் பணியை நேரில் அறிந்து கொள்ள முடிந்தது.

காரைக்குடியில் பணியேற்ற (ஜூலை 1950) பத்து தினங்களுக்குள் ஒருநாள் மாலை இரண்டு சாத்துக்குடிப் பழங்களை கையுறையாகக் கொண்டு சொ. முரு. அவர் களைப் பார்க்க அமராவதிப் புதூருக்கு இரண்டு ஃபர்லாங் தொலைவிலுள்ள மகளிர் இல்லத்திற்குச் சென்றேன். அப்போது சொ. முரு. அவர்கள் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார்கள். அவரைக் கண்டு வணக்கம் செலுத்தி என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். ''உங்களை நன்றாகத் தெரியுமே. சென்ற ஆண்டு தாங்கள் கம்பன் திருநாளுக்கு வந்திருந்தீர்கள். அப்போது இங்கு இரசிகமணி டி.கே.சி. தலைமையில் நடைபெற்ற ஆண்டு விழாவுக்கும் வந்திருந்தீர்கள். அதற்குள் உங்களை எப்படி மறக்க முடியும்?'' என்று

அன்பாகப் பேசினார்கள். பேசிக் கொண்டே அவர்தம் தனி அறைக்கு என்னை இட்டுச் சென்றார்கள். காஃபி பானம் வழங்கினார்கள். சுமார் ஓர் அரைமணி நேரம் உரையாடிக் கொண்டிருந்தோம்; நான்கு தினங்களுக்கு முன் ராய. சொ. அவர்களைப் பார்த்ததையும் தெரிவித்தேன். ராய. சொ. தமக்கு ஐந்து வயது சிறியவர் என்பதைத் தெரிவித்தார் பேச்சினிடையில்.

நினைவு-1 : நான் திருச்சியில் புனித சூசையப்பர் கல்லூரியில் படித்த பொழுது (1934-39) அவர் நடத்தி வந்த 'குமரன்' என்ற இதழை மிக ஆர்வத்துடன் படித்து வந்ததைக் குறிப்பிட்டேன். தான் 'தனவைசிய ஊழியன்' என்ற பத்திரிகையின் தொடக்க கால ஆசிரியராக இருந்ததையும் இப்பத்திரிகை நாளடைவில் 'ஊழியன்' என்ற பொதுப் பெயரோடு வெளிவந்ததையும் கூறினார் சொ. முரு. ஊழியன் பத்திரிகையிலிருந்து 'குமரன்' பத்திரிகையைத் தொடங்கியதாகக் கூறினார். ஒரு கட்டத்தில் குமரனுக்கும் ஊழியனுக்கும் இடையில் பலமான போட்டி இருந்ததையும், இரண்டு பத்திரிகைகளிலும் தேசிய உணர்ச்சியிலும் சீர்திருத்த உணர்ச்சியிலும் ஒற்றுமை கொண்டிருந்ததையும் குறிப்பிட்டார். அதன் பிறகு அவரிடம் விடைபெற்றுக் கொண்டு காரைக்குடி திரும்பினேன்.

நினைவு-2 : பல்வேறு காரணங்களால் நான் சொ. முரு. வை அடிக்கடிச் சந்தித்து உரையாடியதுண்டு. ஒரு சமயம் அவர் சொன்னார் : ''ரெட்டியார், ராய. சொ. இப்போது 'சிவமணி'; சிவம்பெருக்கும் சீலர்', இதற்கு முன்னே நான் சிவ வேடத்துடன் தேவாரப் பாடல்களைக் 'காதலாகிக் கசிந்துருகிப்' பாடி சைவத்தைப் பரப்பியிருக்கின்றேன். ரெட்டியார், ஒன்று சொல்வேன். நாளொன்றுக்கு ஐந்து பலம் விபூதியைக் கொண்டு மேனியெல்லாம் பட்டை தீட்டிக் கொண்டு சைவப் பிரசாரம் செய்த காலம் ஒன்றுண்டு. என் வாழ்

நாளில் நான் பூசிக் கொண்டது இரண்டு மூட்டை விபூதி இருக்கும். பிறகு அதையெல்லாம் கைவிட்டேன். இப்போது என்னைப் பார்க்கும், என் நிலையை நோக்கும் தங்கட்கு இது வியப்பாகவே இருக்கும்! பிள்ளையார் பக்தி கூட என்னிடம் அதிகமாகவே இருந்தது'' என்றார். காரைக்குடி வாழ்வில் சொ.முரு.வின் சிவம் பெருக்கும் சீலத்தைப் பற்றிப் பல அன்பர்கள் என்னிடம் சொல்லிய துண்டு. ஏன் ராய. சொ.வே முருகப்பரின் பழைய 'சைவப் பற்றைப்' பற்றி ஒரு தடவை பேச்சுவாக்கில் இடைப் பிறவரலாகச் சொல்லி மகிழ்ந்திருக்கின்றார்கள். இந்நிலையில் 'சைவப்பற்று' என்ற தலைப்பில் மடாதிபதி களின் செயலைக் குத்திக் காட்டும் பாவேந்தரின் பாடலும் நினைவிற்கு வருகின்றது.

நினைவு-3 : என் அருமை நண்பர் திரு. P. அரங்கசாமி ரெட்டியார் (வழக்குரைஞர்) அவருடைய திருக்குமாரனை (நான்காவது மகனை) மகளிர் இல்லச் சிறுவர் பள்ளியில் சேர்ப்பதற்காக நானும் திரு. ரெட்டி யாரும் மகளிர் இல்லம் சென்றிருந்தோம். ''திரு. ரெட்டியார் தந்தை பெரியாரிடம் மிக்க தொடர் புடையவர். அவர்தம் கொள்கைகள் இவருக்கு நன்கு பிடிக்கும்'' என்று சொல்லி வைத்தேன். அவ்வளவுதான்; தம் கதையைத் தொடங்கிவிட்டார் முருகப்பா. ''ரெட்டியார்வாள், சைவத்தையும் 'பூச்சாண்டிக் கோலத்தையும்' கைவிட்ட பிறகு, தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம் என்னைக் கவர்ந்தது. அதில் சேர்ந்து ஈ. வே. ரா. வுடன் நெருங்கிய தோழமை கொண்டேன். அவர்தம் கொள்கைகளை பிரசாரம் செய்து வந்தேன். கைம்பெண் திருமணத்தை ஆதரித்துப் பேசினேன். அவர்கட்கு மறுவாழ்வு அளிக்க வேண்டும் என்று முழங்கின காலம் ஒன்றுண்டு. சமூகச் சீர்திருத்தத் தையே என் மூச்சாகவும் பேச்சாகவும் கொண்டிருந்தேன். பட்டுக்கோட்டை சுயமரியாதை மாநாட்டில் கைம்பெண்

மணத்தை ஆதரித்துப் பேசினேன். அப்போதுதான் இந்த அம்மையாரிடம் (அருகில் இருந்த மரகதவல்லியைச் சுட்டிக் காட்டி) மாட்டிக் கொண்டேன்'' என்று சொல்லிச் சிரித்தார். ''இன்னும் கதையைக் கேளுங்கள்'' என்று மரகதவல்லி அம்மையார் சீண்டினார்கள். முருகப்பா தொடர்ந்து ''கைம்பெண்கட்கு மறுவாழ்வு அளிக்க வேண்டும் என்று பேசி முடிக்கும் சமயத்தில் ஓர் இளம் பெண் (இந்த அம்மையார்தான் என்று சுட்டிக் காட்டி) கூட்டத்தினின்றும் எழுந்து வந்து ஒலி வாங்கியைப் (Mike) பிடித்துக் கொண்டு, 'செட்டியார் முழங்கிவிட்டார். இங்ஙனம் கட்சிக் கூட்டங்களில் வாய்ப்பந்தல் போடுபவர் களை நிறையப் பார்த்திருக்கின்றேன். நான் கன்னி கைம்பெண் (Virgin widow). செட்டியார் ஆண் மகனாக இருந்தால் என்னைக் கை பிடிப்பாரா?' என்று சவால் விட்டார்கள். எனக்கு மட்டும் ரோஷம் இல்லையா? என்ன? எதிர் சவால் விடுத்தேன் 'கை பிடிப்பதற்குத் தடை இல்லை' என்று. எங்கள் திருமணம் திருப்பரங் குன்றத்தில் தந்தை பெரியார் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது'' என்று கூறினார். ''முருகனுக்கும் தெய்வயானைக்கும் மரபு முறைப்படித் திருப்பரங் குன்றத்தில் நடைபெற்றதாகக் கந்த புராணத்தில் படித் திருக்கின்றேன். முருகன் வள்ளியை மணந்ததுபோல் (காதல் முறையில்!) இந்த முருகப்பர் மரகதவல்லியை மணந்து கொண்டார் போலும்!'' என்று ஒரு புராண உண்மையைக் கூறினேன். எல்லோருமே என் நகைச்சுவை குறிப்பைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

நினைவு-4 : எந்த ஆண்டு என்று நினைவு இல்லை. காரைக்குடிக் கம்பன் திருநாளில் 'கம்பனின் சிறு பாத் திரங்கள்' என்ற தலைப்பில் ஒரு சொற்கோவை நிகழ்ச்சி இருந்தது. அதில் பரதனைப் பற்றி சொ. முரு. அவர்கள் பேசியதாக நினைவு. அவர் பேசின அந்த உருக்கமான பேச்சு இன்றும் என் நினைவில் பசுமையாகவுள்ளது.

'மன்னன் தந்த வரம் ஒன்றினால் இராமனை வனத்திடைப் போக்கினேன்; மற்றொன்றினால் பார் உனக்காக்கினேன். இதைப் பொறுக்கலாற்றாது மன்னன் தன் உயிர் நீக்கினான்' என்று கைகேயியின் சொல் செவிப்படுவதற்கு முன்னர், பரதனின் கைகள் செவியைப் பொத்திக் கொண்டன; புருவங்கள் கூத்தாடின; மூச்சினிடையே தீச்சுவாலைகள் வெளிப்பட்டன; கண்கள் குருதியை உமிழ்ந்தன. கன்னங்கள் துடித்தன; உடலின் மயிர்த் தொளைகள் தொறும் அனற் கொழுந்துகள் அரும்பின. வாய் மடித்துக் கொண்டது. கைகள் இடியும் அஞ்சும்படி ஒன்றோடொன்று அடித்தன. இவ்வாறு சினத்தினால் சீறி நின்ற பரதன் இராமன் முனிவான் என்று அன்னையைக் கொல்லாது கடிந்து கூறுகின்றான். ''உன்னுடைய சூழ்ச்சியினால் எந்தை மாண்டனன்; எம்முன் மாதவம் பூண்டனன். இவ்வாறு வரம் பெற்ற நின் வாயைக் கிழித்தெறியாமல் இருந்தால் நின் செயலுக்கு உடன்பட்டவனாக வன்றோ உலகத்தாரால் கருதப் பெறுவேன்? வாய்மையைக் காக்க மாளவும் ஒரு மன்னன் உள்ளான்; ஆள வேண்டிய அரசை ஆளாமல் கானகம் செல்லவும் ஒரு வீரன் உள்ளான்; தன் தாய் விரும்பித் தேடிய பூமியை ஆளவும் பரதன் என்ற ஒருவன் உள்ளான்—இப்படி ஒரு நிலை உண்டானால் அறநெறி எங்கே போயிற்று? சூரிய குலத்தில் மூத்தவன் ஆளும் மரபு கெடும் வண்ணம் நான் அரசினை மேற்கொண்டால் அந்தச் சூரிய குலத்திற்கே ஒரு பழி உண்டாகி விடுமே. வரம் என்ற ஓர் உபாயத்தை மேற்கொண்டு கற்பொழுக்கத்திற்கு மாறாகக் கணவன் உயிரைக் கொள்ளை கொண்டாய். நீ கணவன் உயிருண்ட நோய் அல்ல; கணவன் உயிர் கொண்ட பேய்; அதனால் தான் இன்னும் உயிரோடு இருக்கின்றாய். இன்னும் என்ன செய்யப் போகின்றாயோ? பாலனாக இருக்கும்போது பாலூட்டி வளர்த்தாய். இப்போது கொடிய பழியைத் தந்துள்ளாய். இன்னும் என்ன தரப் போகின்றாயோ?

இராமன் கானகம் செல்லுவதற்குப் பரதன் உடந்தை யாயினான் என்ற பழிமொழிக்கு மூலம் நின் வயிற்றில் பிறந்தமையே காரணம். உலகோர் பழிக்கு ஆளான மனத் துயரம் தீர்வதற்கு மூவுலகோரும் காண்பதற்குரிய தவத்தை மேற்கொள்வேன். அதுபோல நின்பழியைத் தீர்த்துக் கொள்வதற்கு நீ நின்னுயிரைத் துறத்தலே உற்ற வழியாகும், இனி, நின் முகத்தில் விழித்தலே பெரும் பாவம்.'' என்று சொல்லி தூய உள்ளத்தையுடைய கோசலை இருக்கும் இடம் ஏகினான்.

குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது (குறள்—29)

சொ. முரு. பேசிய சொற்களை அப்படியே எழுத முடிய வில்லை.

முன்னர் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டு, பின்னர் சைவ சமயப் பிரசாரத்தில் மிக ஈடுபாடு கொண்டு, அதன் பின்னர் அதனைக் கைவிட்டு 'பெரியாரைத் துணைக்கோடல்' என்பதைப் பின்பற்றி தந்தை பெரியாருடன் தோழமை கொண்டு அவர் கொள்கையைப் பரப்பி வந்த சொ. முரு. வின் வாழ்க்கையை நோக்கும்போது, 'எல்லாப் பொரு ளுக்கும் தலைமையான பரத்துவம் எது?' என்பது பற்றி ஆராயத் தொடங்கி, உலகாயதம், பௌத்தம் சமணம் முதலிய அவைதிக சமயங்களுள்ளும் மாயாவாதம், சைவம் முதலான சமயங்களுள்ளும் ஒவ்வொன்றிலும் தனித்தனியே புகுந்து ஆராய்ந்து தொடங்கிய பக்திசாரர் என்ற திருமழிசையாழ்வார் நினைவுக்கு வருகின்றார். சொ. முரு. குறிக்கோள் எதுவுமின்றி உலக வாழ்வில் அலைந்து திரிந்தவர்; மழிசையார் பாரமார்த்திகக் குறிக் கோளை நாடித்திரிந்தவர். இதுவே இவர்களிடையேயுள்ள தலையாய வேற்றுமை.

***நினைவு – 5 :*** ஒரு சமயம் மகளிர் இல்லப் பள்ளியில் பயின்று வரும் தன் மகனைப் பார்ப்பதற்காகத் திருச்சி

வழக்குரைஞர் அரங்கசாமி ரெட்டியார் காரைக்குடி வந்தார். நானும் அவரும் மகளிர் இல்லம் சென்றோம். சிறுவனைப் பார்த்து விட்டுச் சொ. முரு. வுடன் உரையாடிக் கொண்டிருந்தோம். அப்போது திரு வழக்குரைஞர் ரெட்டியார், ''மகளிர் இல்லம் என்ற பெயர் சிறுவர்கள் படிக்கும் பள்ளிக்குப் பொருந்தவில்லையே'' என்ற ஒரு வினாவை எழுப்பினார். அதற்கு சொ. முரு. தந்த விடை: ''நான் மரகதவல்லியை மணந்து கொண்ட பின்னர் கைம் பெண்களுக்கு மறுவாழ்வு கொடுக்கும் பணியில் ஈடுபட்டேன். இளம் கைம்பெண்களுக்காகவே 'மகளிர் இல்லம்' தோற்றுவிக்கப் பெற்றது. நோக்கம்: சிறிது படித்தவர்களை மேலும் படிக்கவைப்பது, கல்வி அறிவே இல்லாதவர்கட்கு எழுத்து வாசனையையாவது தருவது, அவரவர் திறமைக்குகந்தவாறு பயிற்சி தருவது, பிறகு தக்கவர்க்கு மணம் செய்விப்பது என்ற முறையில் திட்டம் இருந்தது. இயன்ற வரை இவற்றை இலவசமாகச்செய்வது என்றிருந்தும், சமூகம் இதனைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. 'கைம்பெண்கள் இந்த இல்லத்தில் அதிகமாகச் சேரவில்லை. எங்கட்கும் இதனால் ஊக்கம் குறைந்தது. வேறுவழி தோன்றவில்லை. சிறுபிள்ளைகட்கு நல்ல முறையில் கல்வியளித்து அவர்களையாவது முன்னேற்றப் பாதையில் கொண்டு செலுத்தலாம் என்று 'மகளிர் இல்லம்' குழந்தைகள் இல்லமாகி குழந்தைகள் பள்ளியாகப் பணி செய்து வருகின்றது'' என்றார். இது சொ. முரு. தமது வாழ்வில் மேற்கொண்ட தலையாய பணியாகத் திகழ்ந்தது. இவருக்குப் பின்னர் இப்பணி நின்று போயிற்று.

**நினைவு – 6** : பக்தி சாரருக்கு நாளடைவில் பாகவத நெறியில் இதயப் பசியும் ஆன்ம தாபமும் தீர்ந்து விசுவாசமும் சாந்தியும் கைகூடியதைப்போல் கம்பனில் ஈடுபாடுகொண்ட முருகப்பாவுக்குச் சாந்தியும் மனஅமைதியும் தருகின்றது. இரசிகமணி டி.கே.சியின் நட்பைப் பெறு

கின்றார். கம்பனுக்கு மேலான கவிஞர் தமிழகத்தில் இல்லை என்பதை உணர்ந்து பிரசாரம் செய்யும் நிலையிலும் இறங்கி விடுகின்றார். இரசிகமணி டி. கே. சி. யைப் போல் கம்பராமாயணத்தில் புதர்கள்போல் மண்டிக் கிடக்கும் செருகுகவிகளை நீக்குவதற்குத் தம்போக்கில் வழி வகுக்கின்றார். இரசிகமணி டி. கே. சி. யைப்போல் பாடலைத் திருத்தவில்லை. பல பதிப்புக்களிலுள்ள (சிறப்பாக வை.மு. கோ. பதிப்பை அடிப்படையாகக் கொண்டு) நல்ல பாடல்களை மட்டிலும் தேர்ந்தெடுத்து உரைக் குறிப்புடனும் பொருத்தமான முகவுரையுடனும் வெளியிடத் திட்டம் தீட்டினார். இத்திட்டத்தின்கீழ் பால காண்டமும், அயோத்திக்காண்டமும் வெளிவந்தன. பாலகாண்டம் இராய. சொவுக்கு உரிமையாக்கப் பெற்றது. அயோத்திக் காண்டம் யாருக்கு உரிமையாக்கப் பெற்றது என்பது நினைவில்லை. ஏனைய காண்டங்களில் உள்ள பாடல்களின் பரிசோதனையும் நிறைவு பெற்றது.

நினைவு—7 : 'பால காண்டம்' நூலுக்கு வெளியீட்டு விழா ஒன்றை ஏற்படுத்தினார், சொ. முரு. விழா காரைக்குடி மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்றது. (இந்தப் பள்ளியின் பின்புறமுள்ள பள்ளிக்குரிய விளையாட்டுத்திடலில் பெரிய காவணம் அமைத்து பதினைந்து ஆண்டுகட்கு மேல் சா. க. ஏற்படுத்திய கம்பன் திருநாளின் மூன்று நாட்கள் விழா நடை பெற்று வந்தது. கம்பன் மணி மண்டபம் நிறுவப் பெற்ற பிறகு விழா நிகழ்ச்சிகள் மணிமண்டபத்தில் நடை பெற்று வருகின்றன). இந்த வெளியீட்டு விழாவில் நூலை வெளியிட்டார் வள்ளல் இராம. அழகப்பர்; விழாவுக்குத் தலைமை வகித்தவர் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை என்பதாக நினைவு. சொ. முரு. தம் துணைவியார் மரகதவல்லி அம்மையார் வசமிருந்த 150 சவரன் எடையுள்ள தங்க நகைகளை உருக்கி நகாசு வேலைப்பாடுள்ள அட்டையாக்கினார், 'பால காண்டம்' என்ற நூலுக்கு.

இந்தச் செயலைக் கண்டு பலர் வியந்தனர்; சிலர் ஐயுற்றனர்; சிலர் கிண்டல் செய்தனர். இதனால் சொ. முரு. தாம் கம்பனிடம் கொண்டிருந்த ஈடுபாட்டைத் தூலமாக எடுத்துக் காட்டினார் என்று தான் எனக்குத் தோன்றுகின்றது. நூலை வெளியிட்ட வள்ளல், ''இந்த நூலை வெளியிடுவதால் நான் தான் சொ. முரு.வுக்கு 150 சவரன்களை அளித்திருக்கக் கூடும் என்று உங்களில் பெரும்பான்மையோர் கருதலாம். உண்மை அதுவல்ல.சொ.முரு.தான் தம் குடும்பவசமுள்ள தங்க நகைகளையெல்லாம் உருக்கிக் கம்பனுக்குக் காணிக்கையாக்கி உள்ளார்.''என்று பலர் கொண்டிருந்த ஐயத்தைப் போக்கினார். கூட்டம் முடிந்தவுடன் தனிமையில் ''செயற்படுவது அவரவர் விருப்பம்.இராய. சொ. திருவாசகத்தை பூசையில் வைத்து வணங்குகின்றார்; நாவினாலும் பாடல்களை நவிற்றிப் பூசிக்கின்றார். இது தப்பா? அப்படியே சொ. முரு.வும் கம்பன் பாடல்களில் மனத்தைத் பறிகொடுத்து உருகுகின்றார். தம் வசமுள்ள தங்கம் முழுவதைவும் பால காண்டத்தின் அட்டை மூலம் கம்பனுக்கே சமர்ப்பணமாக்கி அப்பெருங் கவிஞனைப் போற்றுகின்றார். நமக்குப் பொருந்தாத கருத்தைப் பேசாமல் இருப்பது நல்லது'' என்று கூறிக் கிண்டல் செய்தவர்களின் வாயை அடக்கினார் கம்பனடிப் பொடி சா. க.

**நினைவு—8 :** கம்பனில் செருகு கவிகளாகத் தாம் கருதுவனவற்றைச் சொ.முரு.அவர்கள் நீக்கிய முறையைப் பன்னி உரைக்கில் பாரதமாக விரியுமாதலால் ஒன்றிரண்டு காட்டுகளுடன் நினைவை அடக்கிக் கொள்ளுகின்றேன். (1) திருமுடிசூட்டுப் படலத்தில் ஒரு பாடல் :

வேசியர் உடுத்த கூறை
    வேதியர் சுற்ற, வெற்றிப்
பாசிலை மகளிர், அன்னார்
    ஆடையைப் பரிந்து சுற்ற,

வாசமென் கலவை சாந்துஎன்று
இனையன மயக்கம் தன்னால்
பூசினர்க்கு இரட்டி ஆனார்
பூசலார் புகுந்து ளோரும்
திருமுடி—13

இராமன் காட்டிலிருந்து அயோத்தி நகர் வந்து முடிசூடுகின்ற எல்லா ஏற்பாடுகளும் நடை பெற்றுக் கொண்டிருந்த சமயம். விலை மாதர்களின் வீடுகளில் பிராமணரெல்லாரும் குவிந்து நிர்வாணமாகக் கிடக்கின்றார்கள். இராமனுக்கு பட்டம் என்ற செய்தி இவர்கள் காதுக்கு எட்டுகின்றது. மகிழ்ச்சி மண்டைக்கு கொண்டு போய் விடுகின்றது. உடனே வெளியில் புறப்படுகின்றார்கள். அவர்களும் விலை மாதர்களும் தத்தம் கைக்கு அகப்பட்ட துணிகளை எடுத்துச் சுற்றிக் கொண்டு ஓடுகின்றனர். அந்தக் காட்சியை வருணிப்பது இந்தப் பாடல். விலை மாதர் உடுத்திக் கொண்டிருந்த சேலையை அந்தணர்களும் அந்தணர் உடுத்திக்கொண்டிருந்த (எட்டு முழம்) வேட்டியை விலை மாதர்களும் மாற்றி உடுத்திக் கொண்டு தெருவிற்கு வந்து விடுகின்றனர்! இராமனைக் காண்பதிலுள்ள ஆர்வமும் விரைவும் இப்படி ஒரு மாறாட்டத்தை ஏற்படுத்தி விடுகின்றது! இது மட்டுமா? எதிர் கொள்வதிலுள்ள விருப்ப மேலீட்டால் வாசக்கலவைச் சாந்துகளைப் பூசிக் கொள்ளாமலேயே வந்தவரும் வாசக்கலவைச் சாந்துகளைப் பூசியவரோடு நெருக்கி உரசுதலால் பூசியவர்களின் வாசக்கலவைச் சாந்து தம்மீது இழுசிக் கொள்ள, வாசக்கலவை பூசி வந்தவரினும் இருமடங்கு வாசக்கலவைச் சாந்தை உடையவரானார்கள். இந்தப் பாடலும் 'கல்வியிற் பெரிய' கம்பர் வாக்குதான் என்று கொள்வதில் என்ன அசம்பாவிதம்? கம்பர் பெருமானின் பெருமைக்கு எப்படிப்பட்ட இழுக்கு?

(2) செருகு கவியாகக் கொள்ளப்பட்ட இன்னொரு பாடல். இது வாலிவதைப் படலத்தில் வருவது :

கைஅவண் நெகிழ்த லோடும்
கடுங்கணை கால வாலி
வெய்யமார் பகத்துள் தங்கா(து)
உருவிமேக்(கு) உயர மீப்போய்த்
துய்யநீர்க் கடலுள் தோய்ந்து
தூய்மலர் அமரர் சூட்ட
ஐயவெந் விடாத கொற்றத்(து)
ஆவம்வந்(து) அடைந்த(து) அன்றே

—வாலிவதை 153

இதற்கு முன்னுள்ள,

தன்அடி தாழ்த லோடும்
தாமரைத் தடங்கண் ணானும்
பொன்னுடை வாளை நீட்டி
'நீஇது பொறுத்தி என்றான்;
என்னலும் உலகம் ஏழும்
ஏத்தின; இறந்து வாலி
அந்நிலை துறந்து வானுக்(கு)
அப்புறத்(து) உலகன் ஆனான்

ஷை 152

என்ற பாடலுடன் படலம் முடிந்து விடுகின்றது. தான் அங்கதனை அடைக்கலமாக ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக தன் அழகிய உடைவாளைக் கையிலெடுத்து நீட்டி 'நீ இது பொறுத்தி' (கையிலேந்துக)என்று கட்டளையிட இதனைக் கண்ட ஏழு வகைப்பட்ட உலகங்களிலுள்ள உயிர்களெல்லாம் இராமனைத் துதித்தன; பின்பு வாலி இந்த உடம்பை விட்டு மேலுலகங்கட்கெல்லாம் அப்பாலுள்ளதான வீட்டுலகத்தை (பரமபதத்தை) அடைந்தவனானான். இவ்வாறு படலம் முடிந்த பிறகு வரும் பாடல் செருகப்பட்ட பாடல்.

இதற்கு மேலுள்ள சில பாடல்களை நோக்கும் போது இக்கருத்து வலிவடைகின்றது.வாலி தன் மார்பில் பாய்ந்த

அம்பைப் பிடுங்கினான் (67). பிடுங்கிய வாளியை ஓடிக்க முயன்றான்; முடியவில்லை (70). இருகைகளையும் நீட்டித் தம்பியைக் கட்டித் தழுவினான் (131). மகனைப் பற்றி நெஞ்சில் அணைத்துத் தழுவினான் (131). தன்னுடைய இரு கைகளாலும் மகனைப் பிடித்து மார்பில் சேர்த்துத் தழுவினான் (150). பின்னர், தனயனை 'உனக்கு அடைக்கலமாவான்' என்று இராமனிடம் சொல்லுகின்றான் (151). வீடுபேறு பெறுகின்றான் (152).

இத்தனை நிகழ்ச்சிகட்குப் பிறகு வருகிற பாடலில் (153) அம்பைப் பிடித்திருந்த கை இப்பொழுதுதான் நழுவினதாகவும் உடனே அம்பு உடலை உருவிப் பின்புறம் போய், கடலில் முழுகித் தேவர்களிடத்தில் ஆசிபெற்று இராமனின் அம்பு அறாத் தூணியில் வந்து நுழைந்ததாகவும் கூறப்பெறுகின்றதே; இஃது எவ்வளவு அசம்பாவிதம்? ''சிறியன சிந்தியாத மாபெரும் வீரனான வாலியின் முதுகில் புண்தோன்றும்படி ஒரு நிகழ்ச்சி ஏற்படுமா? இராமன் எய்தாலும் அம்பு செல்லுமா? அம்பு சென்றாலும் கம்பர் விடுவாரா?''—என்பவை சொ. முரு. அவர்கள் விடுக்கும் விடை காண முடியாத வினாக்கள்.

*நினைவு—9 :* இது சோகமான நினைவு. ஒரு நாள் சொ. முரு. அவர்களைப் பார்க்கும்போது அவர் உடல் நிலை குன்றியிருந்ததைக் கண்டேன்; உள்ளமும் சோர்ந்திருந்தது. ''ரெட்டியார்வாள், நான் இனி நீண்ட நாள் இருக்க முடியாது என்பதை உணர்கின்றேன். மரகத வல்லிக்கு முன்னர் நான் இறந்தால் அம்மையாரின் நிலை அதோகதிதான். 'சின்ன வீடு' என்று அவர்களை வீட்டை விட்டு வெளியில் தள்ளி விடுவார்கள் நகரத்தார்கள். என்னுடன் பல்லாண்டுகள் சேர்ந்து வாழாது அவர் அன்னையார் வீட்டில் வாழும் என் முதல் மனைவியை வீட்டிற்குள் கொணர்ந்து விடுவார்கள். என்னசெய்வது?'' என்று அழாத குறையாகச் சொன்னார்கள். இத்தகைய

நிகழ்ச்சியொன்றை இன்னோர் இடத்தில் நேரில் கண்டு அறிந்திருந்த படியால் இந்நிலை எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. ''வழி காணலாம்'' என்று ஆறுதல் கூறினேன்.

திருச்சி வழக்குரைஞர் P. அரங்கசாமிரெட்டியாருக்குத் தந்தி அனுப்பி வரவழைத்தேன். மூவரும் கலந்து யோசித்தோம். சொத்துகளையெல்லாம் அம்மையார் பேருக்கும் ஒரே மகன் வீரபாண்டியன் பேருக்கும் (முதல் மனைவி மூலம் குழந்தை இல்லை) எழுதி வைத்து விடுவ தென்றும், இவ்வாறு எழுதி வைக்கப்பெறும் பத்திரம் சென்னையிலேயே பதிவு செய்து கொள்ளலாம் என்றும், இருவரும் சென்னைக்கு உடனே குடியேறி விடவேண்டும் என்றும் முடிவு எடுத்தோம். இம்முடிவின்படியே காரியங்கள் விரைவாக நடைபெற்றன.

சென்னையில் தங்கின இடம் எனக்குத் தெரியாது. வழக்குரைஞர் ரெட்டியாருக்குத் தெரியுமா? என்பதையும் அறியேன். குடியேறிய சில திங்களில் சொ. முரு. திருநாடு அலங்கரித்த செய்திதான் எனக்கு எட்டியது. சென்னை யில் அவர் பூதஉடல் எங்கு எரியூட்டப் பெற்றது என்பதும், சடங்குகள் நடைபெற்ற இடங்களும் என்னால் அறியக் கூடவில்லை. வழக்கமாகச் சென்னை வாழ் நகரத்தார் செய்துவரும் பட்டினத்தார் அடக்கமான திருவொற்றி யூரில்தான் இறுதிச் சடங்குகள் நடைபெற்றிருக்க வேண்டும். ஆனால், காரைக்குடியில் ஆச்சி தங்கியிருந்த இல்லத்தில் நடைபெற்ற சடங்குகளில் கலந்து கொண் டேன்.

ஓடுவிழுந்து சீப்பாயும்
ஒன்பதுவாய்ப் புண்ணுக்கு
இடுமருந்தை யான்அறிந்து
கொண்டேன்—கடுஅருந்தும்

தேவாதி தேவன்
திருவொற்றி யூர்த்தெருவில்
போவார் அடியின்
பொடி.[1]

என்ற பாடல் நினைவிற்கு வருகின்றது. சொ. முரு. தம் இகலோக வாழ்வின் சிலகாலம் அக்கமணி தரித்தும் வெண்ணீறு பூசியும் தேவார திருவாசகப் பாடல்களைக் காதலாகிக் கசிந்துருகிப் பாடியும் செய்து வந்த சிவப்பணி யின் விளைவாக அவருக்கு 'சித்தாந்தமுத்தி' கிடைத்திருக் கும் என்பது என் அதிராத நம்பிக்கை. இப்பொழுது வக்கீல் அரங்கசாமி ரெட்டியார் இல்லை. இதை எழுதும் நான் மட்டிலும் உள்ளேன்.

1. பட்டினத்துப் பிள்ளையார் பாடல்—திருவொற்றி யூர்—8

# 23. வள்ளல் டாக்டர் இராம. அழகப்பச் செட்டியார்

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று (குறள்—236)

'கர்ணனுக்குப் பின் கொடையும் இல்லை' என்பது தமிழகத்தில் வழங்கும் பழமொழி; இம்மொழி பாவலர் வாயிலும் பாமரர் வாயிலும் தாண்டவமாடும். இவன் கொடுத்த கொடைகளிலெல்லாம் தலைசிறந்தவை இரண்டு. ஒன்று இந்திரனுக்குத் தன்உயிரனைய கவச குண்டலங்களை ஈந்தமை; மற்றொன்று உற்றபெரு நல் வினைப் பேறு அனைத்தையும் வேதியனாக வந்து வேண்டிய பார்த்தன் தேரூர்ந்த பரந்தாமனுக்கு நல்கியது. இந்த இரண்டு கொடைகளே மேற்குறிப்பிட்ட பழமொழிக் குக் காரணமாயிற்று; ஏனைய கொடைகள் யாவும் எல்லோரும் வழங்கும் கொடைகளாதலால், அவை அவ் வளவாக அக்காலத்து மக்கள் மனத்தை ஈர்க்கவில்லை.

வள்ளல் அழகப்பரோ தனக்கென வாழாத் தகை சான்ற பெருந்தகை. 'ஈத்துவக்கும் இன்பத்தின்' எல்லை யைக் கண்ட பெருமகனார். ஒன்றுக்கும் உதவாத காரைக்குடிக்கருகிலுள்ள ஆயிரக்கணக்கான பொட்டல் நிலத்தை (தரிசுக் காட்டை)ப் பல்வேறு பள்ளிகள், கல்லூரி கள், ஆராய்ச்சி நிறுவனங்கள் எழும்படிச் செய்த மேதை. காரைக்குடி வழியாகச் செல்லும் இருப்பூர்திகளில் செல்

பவர்கள் அழகப்பர் நிறுவிய கட்டடங்களை அணி அணியாகக் கண்டு களிக்கலாம். அழகப்பா கல்லூரி, அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, அழகப்பா பொறியியற் கல்லூரி, அழகப்பா மகளிர்க் கல்லூரி (இப்போது இஃது இல்லை), அழகப்பா பல்தொழிற் கல்லூரி, அழகப்பா உடற்கல்விக் கல்லூரி, அழகப்பா மாதிரி உயர்நிலைப் பள்ளி, அழகப்பா மாண்டிசோரிப்பள்ளி, அழகப்பா தொடக்கப்பள்ளி, அழகப்பா ஆயத்தப்பள்ளி, அழகப்பா இசைப்பள்ளி மின்சார—வேதியியல் ஆராய்ச்சி நிறுவனம் போன்ற பெயர்ப்பலகைகள் இருப்பூர்தி வழியின் மேல்புறமாக வரிசையாக இருப்புத் தாங்கிகள்மீது பொருத்தப் பெற்றுத் திகழ்வதைக் கண்டு மகிழலாம்.

அழகப்பர் தம் வாழ்க்கையைக் கல்விக்கே அர்ப்பணித்துக்கொண்ட கதையை ஒரு காவியமாக எழுதி மகிழலாம். என்றாலும், என்அரிய நண்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் (மதுரை—காமராசர் பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர்) எழுதிய 'கொடை விளக்கு' என்ற வெண்பா யாப்பில் அமைந்த நூல் அழகப்பர் செய்த கல்வித் தொண்டினை அற்புதமாகச் சித்திரித்துக் காட்டுகின்றது. வள்ளல் அழகப்பர் கல்வித் தொண்டிற்குத் தம்மை அர்ப் பணித்துக் கொண்ட தொடக்கமே விநோதமானது. 1950-சூலைத்திங்கள் முதல் அழகப்பர் நிறுவிய அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாகப் பணியாற்றும் பேறு பெற்றவனாதலால் (1950—1960) அழகப்பரைப் பற்றிய நேரில் கண்ட நிகழ்ச்சிகளும் கேட்ட ஒரு சில நிகழ்ச்சிகளும் மலரும் நினைவுகளாக இங்கு வெளிப்படுகின்றன.

சென்னை அடையாற்றில் பிரம்ம ஞான சங்கத்தில் அனிபெசண்ட் அம்மையாரின் நூற்றாண்டு விழா (சூலை 3, 1947)—நாடு விடுதலை பெறுவதற்கு ஒரு திங்களுக்கு முன்னர்—நடைபெற்றது. நாடளாவிய சீரும்சிறப்பும்

பெற்ற சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஆ. இலக்குமணசாமி முதலியார் தலைமை வகித்தார். அப்போது அவர், 'புதிய கல்லூரிகள் நிறுவ, செல்வப் பெருமக்கள் பலர் பொறுப்பேற்க வேண்டும்' என்ற வேண்டுகோளைப் பேரார்வத்துடன் வெளியிட்டார். சுமார் கால் நூற்றாண்டுக் காலம் தமிழகத்தில் உயர் மட்டக் கல்வி உயர்ந்தோங்கியதற்கு முதற் காரணமாக இருந்தவர் இத்துணைவேந்தர். விழாக் கூட்டத்தில் முன் வரிசையில் அமர்ந்திருந்த வள்ளல் அழகப்பர் எழுந்திருந்து 'இராமநாதபுரம் மாவட்டத்தில் (இப்போது பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டமாக உள்ள பகுதி) கல்லூரியொன்றை நிறுவுவேன்' என்று உரைத்தார். ஒரு திங்களுக்குள் 'அழகப்பா கல்லூரி' தோன்றியது.

விரைவாகப் படைப்பதற்குக்காட்டுகளாகத் தேவதச்சனான விசுவகர்மாவையும், அசுரதச்சனான மயனையும் புராணங்களில் கூறியிருப்பதைப் படித்திருக்கின்றோம். ஆயிர ஏக்கர் பரப்புக்கு மேற்பட்ட பொட்டல் காட்டை வாங்கின வேகம், கல்லும் முள்ளும் மேடும் பள்ளமும் நிறைந்த அக் காட்டைச் சமப்படுத்தின வேகம், குறுக்கும் நெடுக்குமாகச்சாலைகள் அமைத்தவேகம், எந்தெந்தஇடத்தில் எந்தெந்தக் கல்லூரிகள், பள்ளிகள் அமைய வேண்டும் என்று போட்ட நீள் நோக்குத் திட்டம் இவையெல்லாம் நம்மை வியக்க வைக்கின்றன. இராக்கத் 'புல்டோசர்கள்' பல இயங்கிக் காடுகளை அழித்து நிலத்தைச் சமப்படுத்தின காட்சியைக் கண்ட காரைக்குடி வாசிகள் பலபட வருணித்தனர். நாகங்கள், விரியன் பாம்புகள், கீரிகள், எலிகள், நரிகள், குறு முயல்கள் முதலியவை நாலாபக்கமும் வெருவியோடின என்று கூறினர். இன்னும் பலவாறு உணர்ச்சியுடன் பேசி மகிழ்ந்தனர். அப்போது காண்டவ வனத்தை அங்கியங் கடவுள் அழித்த காட்சி நினைவிற்கு வந்தது. நான் திருச்சியில் புனித சூசையப்பர் கல்லூரியில்

இடைநிலை வகுப்பில் பயின்ற போது (1934—36) என் அருமைப் பேராசிரியர் மு நடேச முதலியார் பாடமாக அமைந்த காண்டவ தகனச் சருக்கத்தை (வில்லி பாரதம்) விளக்கின காட்சிகள் நினைவிற்கு வந்தன.

ஒரு பாடலை நினைவு கூர்கின்றேன்.

எப்புறத்தினும் புகுந்துதீச் சூழ்தலின்
ஏகுதற்(கு) இடம்இன்றி
தப்புதல்கருத்(து) அழிந்துபேர் இரலையொ(டு)
உழைஇனம் தடுமாற
மெய்புறத்துவெண் புள்ளிசெம் புள்ளி
ஆய்விடும்படி விரைந்தோடி
அப்புறத்துவீழ் பொறிகள், அவ்வவற்றினை
அலங்கரித் தனஅன்றே.[1]

இப்படிக் காரைக்குடிக் காடு சமநிலை ஆகும்போது உயிரினங்கள் பல்வேறு விதமாக வெருவியோடி இருக்க வேண்டும்; சில புல்டோசர்களின்கீழ் அகப்பட்டு மடிந்திருக்க வேண்டும். இவ்வாறு சீர்திருத்தப்பெற்ற நிலப் பரப்பே எல்லா நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் அமையும் இடங்களாயின. இதனை.

நிலமகள் கைவிட்ட நீள்சுரத்தை வீட்டுக்
குலமகள் போலக் குறித்தான்.

என்றும்,

நரியிசைத்த காடு நகராய்ச் சிலம்பின்
வரியிசைக்கப் பள்ளி வகுத்தான்;—உரியசைத்துப்
பாம்பா டிடமெல்லாம் பந்தா டிடமாகும்;
தாம்பாடு கன்னியர்க்குத் தாம்.[2]

என்று அழகாகக் குறிப்பிடுவர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார்.

---

1. வி. பா: காண்டவதகன 6—19
2. கொடை விளக்கு (சூலை, 1957). 35, 36

1947—ஆகஸ்டில் அழகப்பா கல்லூரி தோன்றியது. 1948 சூலை 25-இல் மின்சார வேதியியல் ஆராய்ச்சி நிலயத்திற்கு நேரு அவர்கள் அடிக்கல் நாட்டினார்; இப்போது நடைபெற்ற கால்கோள் விழாவில் வள்ளல் தம் வரவேற்புரையில் தாம் இனி மேல் நிறுவ எண்ணியிருக்கும் திட்டங்களை வெளியிட்டார். தொடர்ந்து அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி (1950 ஜூலை), அழகப்பா பொறியியற் கல்லூரி, அழகப்பா மகளிர்க் கல்லூரி (இஃது இப்போது இல்லை), அழகப்பா பல தொழில் கல்லூரி, அழகப்பா உடற் கல்விக் கல்லூரி (1956) அழகப்பா மாண்டிசோரிப் பள்ளி, அழகப்பா மாதிரி உயர்நிலைப் பள்ளி (1951). அழகப்பா தொடக்க நிலைப் பள்ளி, அழகப்பா ஆயத்தப் பள்ளி என்று அணிஅணி யாக ஆண்டொன்றுக்கு ஒன்றோ, இரண்டோ என்னும் படிப் பள்ளிகளும் கல்லூரிகளும் ஆண்டு தோறும் தோன்றின. இவற்றையெல்லாம் கண்காணிக்க டாக்டர் 'அழகப்பச் செட்டியார் கல்வி அறம்' என்ற நிறுவனமும் தோன்றியது. இங்குத் தொடக்கநிலைப் பள்ளியில் வந்து சேரும் சிறுவன் ஒருவன் எல்லா நிலைக் கல்வியும் பெற்றுத் தொழிற் படிப்பும் தேர்ந்து நன்றாக வாழும் தகுதியோடு வெளியேறலாம். இத்தனை நிறுவனங்கட்கும் தொடக்கத் தில் தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், கேரளம் என்ற மாநிலப் பகுதிகளிலிருந்து பழுத்த அநுபவம் மிக்க பேராசிரியர்களே தொடக்கத்தில் தலைவர்களாக நியமிக்கப் பெற்றனர். நல்ல அநுபவம் பெற்ற பேராசிரி யர்கள் நியமனம் பெற்றும் பணியாற்றினர். அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் 1950 ஜூலை முதல் தமிழ்ப் பேராசிரியனாக நியமனம் பெற்றுப் பத்தாண்டுகள் (1950—60) பணியாற்றினேன்.

கல்லூரி தொடங்குவது எளிது. அதனை நன் முறை யில் செயற்படச் செய்வது மிகவும் அரிது. கல்லூரியின் குறிக்கோளையே ''அறம், அன்பு, பணி'' என்று குறித்

தார்; அவற்றை கல்லூரிச் சின்னத்தில் பொறித்தார். வள்ளல் தமிழில் இக்குறிக்கோளை அமைப்பதற்கு உறுதுணையாக இருந்தவர் கம்பன் அடிப்பொடி சா. கணேசன். கல்லூரி தொடங்கப் பட்டபோதே அறிவியல் படிப்புக்கு முன்னுரிமை அளித்தார் வள்ளல். தொடங்கப்பட்டபோதே இயற்பியல், வேதியியல், விலங்கியல், தாவர இயல், நிலஉட் கூற்றியல் (Geology)3 ஆக ஐந்து துறைகளும் சேர்ந்தாற்போல் தொடங்குவதற்கு வழி வகுத்தார். இப்பாடங்களை நடத்துவதற்கு வெறுங்கையால் முழம் போட முடியாது. ஆதலால் இரவும் பகலுமாகக் கட்டடங்களைக் கட்டி முடித்தார்; தளவாடப் பொருள்களை வாங்கிக் குவித்தார். இவற்றிற்குப் பிறகுதான் பிற கட்டடங்கள் வேலை தொடங்கப் பெற்று அசுர வேகத்தில் நிறைவு பெற்றன.

இந்த விரைவுப் பணியை நேரில் கண்டு வியந்த டாக்டர் வ. சுப. மாணிக்கனார்,

வெள்ளி விடியுமுன் வீறுசால் கட்டடங்கள்
உள்ளும் உயரம் உயர்த்துவான்—நள்ளிரவும்
மின்விளக்கம் வைத்து மிகவிரைந்து கட்டினான்;
பொன்விளக்கம் கண்ட புதிர்.[4]

என்ற பாடலால் பாராட்டுகின்றார். காரைக்குடியில் நான்பணியேற்றபோது அறிவியல் பகுதிக் கட்டடங்கள் முடிக்கப் பெற்றிருந்தன. 1950-க்குப் பிறகு எழுந்த

---

3. இந்தப் பாடத்திற்குரிய கட்டடத்தின் ஒரு பகுதியில்தான் அழகப்பா ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி (ஜூலை 1950) தொடங்கப் பெற்றது. அடுத்த ஆண்டு முதல் தனிக் கட்டடம் அமைக்கப் பெற்று அங்குக் குடி புகுந்தது.

4. கொடை விளக்கு – 97

கட்டடங்களின் துரிதமான வேலைகளை நேரில் கண்டு களித்தேன். அரசு கூட இவ்வளவு விரைவாகக் கட்ட முடியாது. காரணம் ''சிவப்பு நாடா'' தடை உள்ளதே!

பாண்டவர்க்கென விசுவகர்மா என்ற தேவதச்சனால் இந்திரப் பிரத்தம் அமைத்ததைப் பாரதம் விரித்துரைக்கும். வில்லிபுத்தூரார்,

'இமையவர் பதியில் உள்ளன யாவும்
இங்குள; இங்குமற்(று) உள்ள
அமைவுறு பொருள்கள் அங்(கு)இல' எனுமாறு
அமைத்தவான் தொல்பதி அழகைச்
சமைவுற விரித்துப் புகழ்வதற்கு உன்னில்,
சதுர்முகத் தவனும்மெய் தளரும்;
நமர்களால் நவில முடியுமோ? முடியாது.[5]

என்பார். பல்லாண்டுகட்கு முன்னர் தொடங்கப் பெற்று இயங்கி வரும் தொல்புகழ்க் கல்லூரிகளிலெல்லாம் 'நம்மிடம் கூட இல்லாத தளவாடப் பொருள்கள் அழகப்பா கல்லூரியில் உள்ளனவே' என்று வியக்கும் வண்ணம் ஆய்வகங்கள் (Laboratories) அமைந்திருந்தன. அறிவியல் பாடங்களை கற்பிக்கும் வசதிகள் குறித்து இப்படிப் புகழ் பெற்றது அழகப்பா (கலைக்) கல்லூரி.

மின்சார—வேதியியல் ஆராய்ச்சிக் கழகம் காரைக்குடியில் ,அமைப்பதற்குப் போதிய நீர் வசதி இல்லை என்ற தடை எழுப்பிப் பெற்றது தில்லியில். ,வள்ளல் பொட்டல் காட்டில் பெருங்கிணறுகளைத் தோண்டி நீர் உண்மையை நிதர்சனமாகக் காட்டி அனைவரையும் வியக்க வைத்தார். 'ஓங்கி உலகளந்த உத்தமனின்' திருவடிகளைத் தன் கமண்டல நீரினால் நான்முகன் கழுவியதால் அது கங்கையாகப் பெருகி உம்பர் உலகில் பாய்ந்து கொண்டிருந்தது.

5. வி. பா. இந்திரப் பிரத்தச் சருக்கம்—14

திலீபனின் குமாரனான பகீரதன் தன் மூதாதையார் கபில முனிவரின்[6] சாபம் பெற்ற வரலாற்றை வசிட்ட முனிவராலுணர்ந்து அவர்கள் நற்கதியடையப் பல்லாயிர ஆண்டுகள் நான்முகனை நோக்கித் தவம் புரிய நான்முகன் தரிசனம் தந்து சிவபெருமானையும் கங்கையையும் நோக்கிப் பல நூற்றாண்டுகள் தவம் புரியுமாறு பணிக்க, அங்ஙனமே தவம் புரிந்து கங்கையை நிலவுலகிற்குக் கொணர்ந்தான். மேலுள்ள பொருளைக் கீழே கொணர்வது எளிது. இதற்காகப் பகீரதன் பல்லாண்டுகள் தவம் புரிய வேண்டியிருந்தது. ஆனால் வள்ளல் அழகப்பர் தம்முடைய பண பலத்தால் சில திங்களில் கீழுள்ள நிலத்தடி நீரை மேலேற்றிப் பூமிக்குக் கொணர்ந்தனர். 'பகீரதப் பிரயத்தனம்' என்ற உவமை இவர்தம் முயற்சிக்குப் பொருந்தாது போயிற்று. 'அழகப்பரின் முயற்சி' என்ற உவமை வழங்குவதாயிற்று.

வள்ளல் அழகப்பர் நன்றிணர்வு மிக்கவர். தாம் நிறுவிய விளையாட்டரங்கிற்கு (Stadium) தமிழக ஆளுனராக இருந்த பவநகர் பெயரால் 'பவநகர் ஆடரங்கு' எனப் பெயரிட்டனர்; கண்போல் வளர்த்த பூங்காவிற்கு 'நேரு பூங்கா' (சவகர் சோலை) எனத்திருநாமமிட்டு வழங்கினார். மாணாக்கர் விடுதிகட்கு தன் அன்னையார்

---

6. கபிலர்—திருமாலின் அம்சம். இவர் பாதாளத்தில் தவம் செய்திருக்கையில் இந்திரன் சகர புத்திரர்களை வஞ்சித்து அசுவமேத யாகக் குதிரையை இவருக்குப் பின் புறத்தில்கட்டினான். குதிரையைத் தேடி வந்த சகர புத்திரர்கள் கபிலரை ஐயுற்று அவரை வருத்தினர். முனிவர் சினந்து விழித்தனர். அவரது சினத்தீயிற்கு இவர்கள் நீறாயினர் என்பது வரலாறு. இவர்தம் சாம்பர் கங்கையில் பாய்வித்தற்காகவே கங்கையை நிலவுலகிற்குக் கொணர்ந்தனன் பகீரதன்.

பெயரால் 'உமையாள் விடுதி' எனப்பெயர் சூட்டினார். தாய்க்கும் உணவுக்குந்தானே அதிக சம்பந்தம்? அடுத்துத் தொடங்கப் பெற்ற விடுதிக்கும் தம்மீது அதிக அன்பு காட்டிய தாய்மாமன் பெயரை 'வீரப்ப அம்மான் விடுதி' என்று திருநாமம் இட்டு வழங்கினார். தமக்குத் தொழில் துறையில் உறுதுணையாக இருந்த கேரளத்தைச் சார்ந்த மாங்கொம்பு ஆண்டி அய்யர் பெயரை'மாங்கொம்பு ஆண்டி அய்யர் விடுதி' என்ற பெரால் வழங்கினார். விசாலாட்சி விடுதி தோன்றிய காரணத்தைநினைவுகூர முடியவில்லை. பொறியியல் மாணவர்க்கென நிறுவப் பெற்ற அரைவட்ட வடிவமான விடுதிக்கு 'குப்புசாமி நாயுடு விடுதி' எனப் பெயரிட்டு அவர் 'வாய்ச் சொல்லால்' உதவின நிகழ்ச்சியை நினைவுகூரும் வகையில் வரலாறு படைத்தார். டாக்டர் சண்முகம் செட்டியார் அவர்களின் நினைவாகச் 'சண்முக நூல் நிலையம்' எழுந்தது.

இந்த விடுதியின் திறப்பு விழாவில் இந்த வரலாற்றை வள்ளல் அவர்களே வரவேற்புரையில் வெளியிட்டார்கள். இந்த விடுதியைத் திறந்து வைத்தவர்கள் மாண்புமிகு மத்திய நிதி அமைச்சர் சிந்தாமணி தேஷ்முக்; திருமதி துர்க்காபாய் தேஷ்முக்கும் அவருடன் வந்திருந்தார்கள். ஒரு சமயம் வள்ளல் பம்பாய் நகரில் நட்சத்திரத் தங்கும் விடுதியில் தங்கியிருந்தபோது திடீரென்று 'பங்குச் சந்தையில்' (Share Market) பங்குகளின் விலை மிகத் தாழ்ந்த நிலைக்குச் சரிந்தது. இதில் வள்ளலுக்கு இலட்சக் கணக்கான ரூபாய் இழப்பு. மீண்டும் பழைய நிலைக்குத் திரும்ப முடியுமா? என்ற ஐயமும் எழுந்தது.

கூத்தாட் டவைகுழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. குறள்—332

என்பது தானே செல்வத்தின் தன்மை? திண்ணிய மனம் உடையவராதலால் மனம் உடைந்து போகவில்லை, இவரைப்போல் இவர்தம் நண்பர்கள் பலரும் அந்த விடுதி

யில் தங்கியிருந்தனர். அவர்களுள் எவரும் இவர் அறைக்கு வந்து ஆறுதல் சொல்லவில்லை. ஆனால் கோவையைச் சார்ந்த ஜி. குப்புசாமி நாயுடு என்பார் மட்டிலும் இவர் அறைக்கு வந்து, ''டாக்டர் செட்டியார், கவலைப் படாதீர்கள். வாழ்க்கையில் ஏற்றமும் இறக்கமும் வருவது இயல்பு; அஃது இறைவன் கட்டளை. தற்சமயம் உங்கள் தேவைக்கு நான் உதவுவேன்'' என்று சொல்லிப்போனார்.

கேட்டிலும் உண்டோ? உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல் (குறள்—796)

என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார் திரு நாயுடு அவர்கள். வள்ளல் அவர்கள் திரு. நாயுடு அவர் களிடம் எந்தப் பண உதவியும் பெறவில்லை. ஆனால் அவர் நல்லெண்ணத்தைப்பாராட்டும் முகத்தான் அவர்கள் குடும்பத்திலுள்ள ஆண்கள் பெண்கள் உட்பட அனைவரை யும் விழாவிற்கு அழைத்து மேடையில் இருக்கை தந்து சிறப் பித்தார். பலர் முன்னிலையில் ''இந்த நல்லெண்ணத்தின் நினைவாக'' (நான் எந்த உதவியும் பெறவில்லை) இந்த உணவுவிடுதிக்குக்'குப்புசாமி நாயுடுவிடுதி' என்று பெயரிட் டேன். ஆனால் இப்பொழுது சிந்தாமணியே (டாக்டர் சிந்தாமணி தேஷ்முக் அவர்களைச் சுட்டிக் காட்டி) நமக்குக் கிடைத்திருக்கின்றது. சிந்தாமணி நாம் நினைப் பதை எல்லாம், கேட்பதையெல்லாம் தரும் என்பதை நீங்கள் அறிவீர்கள். இனி நமக்குக் கவலைஇல்லை'' என்று சொல்லி முடிக்க விழாவிற்கு வந்திருந்த பெரியோர்களின் கை தட்டல் ஒலி விண்ணைப் பிளந்தது.

பல துறைகளிலும் வல்ல—சிறந்த—பெரியவர்களை கட்டட அடிக்கல்நாட்டுவதற்கோ அன்றிக்கட்டடம் திறப்ப தற்கோ அழைத்துவருவார். இரவிலும்மாலையிலும்விருந்து கள் நடைபெறும் பெரும்பாலும் இவ்விருந்துகள் பவநகர் விளையாட்டரங்கு முற்றத்தும் நேரு பூங்காவிலும்தான் நடைபெறும். கல்லூரிப் பேராசிரியர்கள், ஊரில் சில முக்கிய

மானவர்கள். செட்டி நாட்டுப் பகுதிகளில் உள்ள பெரும் புள்ளிகள் யாவரும் விருந்தில் கலந்து கொள்வார்கள். பாலைவனம் போல் கல்லும் முள்ளும் நிறைந்த இந்தப் பொட்டல்காட்டில்இந்தியத்துணைக் கண்டத்தில்பல்வேறு இடங்களிலுள்ள பெரியார்கள் பலர் காரைக்குடிக்கு வந்து சிறப்பித்துப் போவதை யாவர்தாம் சிந்தித்திருப்பார்கள்? பொது மக்கள் கனவிலும் காணமுடியாத நிகழ்ச்சிகளை நனவாக்கிய பெருந்தகை வள்ளல் அழகப்பர்.

பருந்தும் பறவாப் படுசுரத்து நாளும்
விருந்து தலைவர்க்கு வேட்டான்;—மருந்தினை
ஊணாக வாங்கி உடலைக் கெடுத்தொழிந்தான்
பூணாகக் கொண்டான் புகழ்.[7]

என்று இதனைப் புகழ்ந்துரைப்பர் டாக்டர் வ.சுப. மாணிக்கனார். இப்போது அன்று வந்த பெரியார்களை நினைவு கூர்ந்தால் இந்தியப் பிரதமர் பண்டித சவகர்லால் நேரு, குடியரசுத் தலைவர் பாபு இராசேந்திரப் பிரசாத், துணைத் தலைவர் டாக்டர் சர்வேபல்லி இராதா கிருஷ்ணன், டாக்டர் ஆ. இலக்குணசாமி முதலியார், (அப்போது சென்னைப் பல்கலைக் கழகத்துணைவேந்தர்) இந்திய நிதியமைச்சர் டாக்டர் சிந்தாமணி தேஷ்முக், டாக்டர் இராஜகுமாரி அமிர்த கௌர்,சர் சி.வி இராமன் டாக்டர் மோ. விசுவேசரய்யா (கர்நாடகம்) டாக்டர் மணவாள ராமாநுசன் (முன்னாள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்) ஜஸ்டிஸ் எஸ்.வரதாச்சாரி (முன்னாள் ஃபெடரல் மன்ற நீதிபதி) முதலிய பெரியார்கள் அவர்களுள் சிலர். ஒரு சமயம் ஆசாரிய வினோபா அவர்கள்கல்லூரிவட்டத்திற்கு வருகை புரிந்திருந்தார்கள். பயிற்சிக் கல்லூரி முற்றத்தில் மிகப் பெரிய காவணம் (பந்தல்) எழுப்பி மிகப் பெரிய வரவேற்பு நல்கப்பெற்றது.ஊர்ப்பெருமக்களும் சுற்றுப்புற வட்டாரப் பிரமுகர்களும் திரண்டு வருகை புரிந்திருந்தனர்.

7. கொடை விளக்கு—39

ஆசாரியப் பெருமகனார் பூதான யக்ஞம் பற்றிச் சொற்பொழிவாற்றினார். இந்த ஏற்பாட்டை முன்னின்று நடத்தியவர் காரைக்குடி காந்தி சா.கணேசன் அவர்கள்.

பல கல்லூரிகளைத் தோற்றுவித்த வள்ளல் மருத்துவக் கல்லூரி ஒன்றை நிறுவ ஆர்வங்கொண்டார். இஃது அவர்தம் திட்டங்களுள் ஒன்று. இதனை நிறை வேற்றுவதற்கு வேண்டும் தொடக்க முயற்சிகளையும் மேற்கொண்டார். இவர் திட்டத்தை ஆய்விற்காக ஏற்படுத்தப் பெற்ற அரசுக் குழுவும் இதற்குஉடன்பட்டது. மருத்துவக் கல்லூரி என்றால் அதில் பயிலும் மாணவர் கட்குப் பயிற்சிக் களமாக ஒரு பெரிய மருத்துவமனை வேண்டுமல்லவா? 'உமையாள் மருத்துவமனை' என்ற ஒன்று நிறுவுவதற்கு ஏற்பாடுகள் செய்தார். அக்காலத்தில் நடுவண் அரசில் மக்கள் நலவாழ்வுத் துறை அமைச்சராக இருந்த டாக்டர்இராசகுமாரி அமிர்தகௌர்3-८-1954இல் அடிக்கல் நாட்டினார். இந்த மருத்துவமனை பயிற்சிக் கல்லூரிக்கு எதிரிலுள்ள மைதானத்தில் அமைய வேண்டும் என்பது வள்ளலின் திட்டம். இந்தக் கால்கோள் விழாவின் நினைவாக நடைபெற்ற இரவு விருந்து (Dinner) பயிற்சிக் கல்லூரியின் முற்றத்தில் நடைபெற்றது இன்றும் என் நினைவில் பசுமையாகவே உள்ளது. இந்த விழாவின் போதுதான் மக்கள் நலவாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் கௌர் காந்தியடிகள் 'வள்ளல் அழகப்பர் நோய் நீங்கி வாழ்க' என்று ஒருநாள் மாலைத் தொழுகைக் கூட்டத்தில் இறைவனை வழுத்தியதாகக் கூறியது கேட்டார் அனைவரின் உள்ளத்தையும் நீர்ப்பண்டமாக நெகிழ்வித்தது. 'உமையாள் மருத்துவமனை' தொடங்கப் பெறாமல் நின்று போய் விட்டது.

அழகப்பா பயிற்சிக்கல்லூரி மாணாக்கர்கட்கு ஆய்வுக் களன்களாக அமைந்தவை அத்துணைப் பள்ளிகளும்.

இவையாவும் பயிற்சிக் கல்லூரி முதல்வர் கண்காணிப்பில் நடைபெற்றன. குழந்தைப் பள்ளி (Nursery school) இல்லாத குறையொன்று இருந்தது. இதனைப் போக்கு வதற்காகவே வள்ளல் மாண்டிச்சோரிப் பள்ளியைத் தோற்றுவித்தார். இப்பள்ளியைத் தொடங்கி வைத்தவர் ஜஸ்டிஸ் எஸ். வரதாச்சாரியார். இவர் ஓய்வு பெற்ற ஃபெடரல் நீதிமன்ற நீதிபதி. மிகப் பழுத்த முதுபெரும் அறிஞர். ஆல்போல் தளிர்த்து அறுகு போல் வேரூன்றிய பெரிய குடும்பத்தைச் சார்ந்தவர்; குடும்பத்தின் வீட்டு மாச்சாரி போன்று நீண்ட ஆயுள் பெற்றுத் திகழ்ந்தவர். மாண்டிசோரி பள்ளியைத் திறந்து வைத்துப் பேசும்போது இவர் குறிப்பிட்டது : 'என் குடும்பம் மிகப் பெரியது. என் பேரப் பிள்ளைகளே அறுபதுக்கு மேற்பட்ட தொகை யினர். அவர்கட்கே தனியாக இத்தகைய பள்ளியொன்று இன்றியமையாதது. அந்தப் பள்ளியைத் திறந்து வைப்பது போல் இந்தப் பள்ளியைத் தொடங்கி வைக்கின்றேன்' என்று கூறிய போது கூடியிருந்தோர் எழுப்பிய கையொலி காதுகளுக்குப் பெருவிருந்தாக இருந்தது. இப்போது பேசப் படும் குடும்பக் கட்டுப்பாட்டை நினையாத காலம் அது.

1955 நவம்பர் 17 ஆம் நாள் கல்லூரி வளாகத்திற்குள் பலதுறைக் கல்லூரிகளின் சார்பில் பொருட்காட்சி (Exhibition) நடைபெற்றது. ஆயிரக் கணக்கான மக்கள்—ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் சிறுமியரும்—வரிசை யாகவும் அமைதியாகவும் நின்று கண்டு களித்து அறிவு பெற்றனர். இதனை,

பல்பொருட் காட்சி பரப்பி அறிவென்னும்
கல்பொருள் மக்கட்குக் கற்பித்தான்;—நில்பொருள்
ஈகையான் வந்த இசையென எண்ணினான்;
வாகையான் வந்த வழி.[8]

என்று பாராட்டுவர் வ. சுப. மாணிக்கனார். அக்காலத்தில் மன்னர்களின் கொடையையும் பிற நற்பண்புகளையும்

8. கொடைவிளக்கு—117

பாடி மகிழ்ந்தனர் புலவர்கள். நம் வள்ளல் காலத்திலும் அவர் நிறுவிய கல்லூரியிலேயே பணியாற்றும் புலவர் அப்பெருமகனைப் பாடி வள்ளலின் வரலாற்றுக்கு இலக்கியம் படைத்தது தமிழ்ப் புலவர்களின் பெருமிதத்தையும் செய்ந்நன்றியுணர்வையும் காட்டுவதாக அமைந்துள்ளது மாணிக்கனார் 'கொடைவிளக்கு'.

தொழுநோயால் தொல்லைக்குள்ளான வள்ளல் உடற்கல்விக் கல்லூரித் தொடக்க விழாவிற்குச் (27-8-56) சென்னையிலிருந்து வந்தபோது உடல் நிலை மிகவும் சீர்கெட்டிருந்தது; படுத்த படுக்கை நிலை. கல்லூரியிலிருந்தபோது ஆயிரக்கணக்கான மாணவர்களைத் தம் அருகே அழைத்துத் தனித்தனியாகக் கண்டு அவர்தம் படிப்பு நலன், பிற நலங்களை உசாவியறிந்தார். இந்நிலையை நேரில் எம்போலியர் தந்தையை விடப் பரிவு மிக்க வள்ளலின் பாசத்தைக் கண்டு வியந்து போனோம். ஆண் மகவு இல்லாத வள்ளல் அத்துணை மாணவர்களையும் தம் மக்கள் போல் கருதிப் பழகிய காட்சி இன்றும் (13-11-89) என் மனத்தில் பசுமையாக உள்ளது. நான் துறையூரில் பணியாற்றிய 9 ஆண்டுக் காலத்தில் எனக்கும் மகப்பேறு இல்லை; பிள்ளைகளைச் சேர்க்கவந்த முதியவர்களில் சிலர் என் மக்கட்பேற்றினை வினவியபோது "என் பள்ளியில் படிக்கும் பிள்ளைகள் அனைவரும் என் மக்களே" என்று வழக்கமாகச் சொல்லி வந்த காட்சி நினைவிற்கு வந்தது. கண்கள் குளமாயின.

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் பெருந் தமிழ்ப் புலவர். வள்ளலோடு நெருங்கிப் பழகிய ஒரு பெருந்தகை. வள்ளலுக்குத் தமிழில் நல்ல ஈடுபாட்டை ஏற்படுத்தியவர். தமிழ் இலக்கியத்தின் சிறப்பையும் பெருமையையும் வள்ளலுக்கு அறிமுகம் செய்து வைத்த பெருமகனார். வள்ளல் உடல் நலத்தோடு இருந்த காலத்திலும் உடல் நலம் குன்றிய காலத்திலும் உடனிருந்து தமிழமிழ்தம் ஊட்டி அவர்தம் மனம் மகிழச் செய்தவர். 'இவர் என்

ஆசிரியர்' என்று வள்ளலால் கொண்டாடி அழைக்கப் பெற்றவர். இத்தகைய பெரும் புலவரைத் தம் கல்லூரியில் ஓர் ஆராய்ச்சிப் பேராசிரியராக அமர்த்தி 1956-இல் 'தமிழ் ஆராய்ச்சிக் கழகம்' ஒன்றைத் தம் கல்லூரி வளாகத்தில் நிறுவ எண்ணி இருந்தார். ஏதோ இடர்ப் பாடுகளால் அப்போது அத்திட்டம் செயற்படாது நின்று போயிற்று. வள்ளல் மறைந்து[9] ஏழாண்டுகட்குப் பிறகு அவர் உட்கிடக்கையைத் தாளாளராக இருந்த திரு. C.V.CT. V. வேங்கடாசலம் செட்டியார் நிறைவேற்றி வைத்தார், தமிழ்க்கடல் இரண்டு ஆண்டுகள் (1964—66) தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியராகப் பணியாற்றினார். இராசிபுரம் தமிழாசிரியர் மு. இராமசாமி தம் பணியில் விடுப்பு வாங்கிக் கொண்டு வந்து தமிழ்க்கடலுடன் உதவி ஆய்வாளராகத் துணை புரிந்தார்.

வள்ளலிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மற்றொரு பெரும் புலவர் பண்டிதமணி மகா மகோபாத்தியாய மு. கதிரேசன் செட்டியார். வள்ளல் அழகப்பர் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொறியியல் கல்லூரிக்கு ஐந்து இலட்சம் வெண்பொற் காசுகளை வழங்கினார். இதனைப் பாராட்டும் வகையில் கோட்டை யூரில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தைப் பண்டிதமணி சிறப்பித்தார்கள். அது முதல் வள்ளலுக்குப் பண்டிதமணியின் நட்பு ஏற்பட்டது; அது பெரிதாக வளர்ந்தது. பண்டிதமணியவர்களை வள்ளல் தம் வேப்பேரித் திருமாளிகைக்கு அழைத்துத் திருக்குறள் பகுதிகளை ஓரளவு பாடம் கேட்டு அறிந்து கொண்டார். வள்ளுவம் வள்ளலுக்குத் தாம் செல்லும் நெறியை வழி யமைத்துத் தந்திருக்க வேண்டும் என்று கருதுவதில் தவறில்லை.

1952 அக்டோபர் 25ஆம் நாள் பாரத ரத்தினம் ச. இராசகோபாலாச்சாரியார் (அப்போது சென்னை மாநில

9. மறைவு 5-4-1957 (தோற்றம் 6-4-1909)

முதலமைச்சர்) காரைக்குடிக்கு எழுந்தருளினார். அழகப்பா கல்லூரிப் பேரவையில் உரை ஆற்றினார். சொற்பொழிவினிடையே ''பணம் சேர்க்கின்ற ஒரு வழியே பலருக்குத் தெரியும். சேர்த்த பணத்தை எல்லார்க்கும் பகுத்து வழங்குகின்ற மறுவழி ஒருவருக்கும் தெரியாது. இருவழியும் தெரிந்து தெளிந்தவர் வள்ளல் அழகப்பர். ஈத்துவக்கும் இன்பம் கண்ட மேதை'' எனப் பாராட்டினார். இதனைச் சுப. மாணிக்கனார்,

ஆக்கும் வழியே அறியும் உலகத்துப்
போக்கும் வழியும் புரிந்தபெரு—நோக்கனெனப்
பாரத ரத்தினம் பண்பிசைக்க வாழ்ந்தவன்
ஊரதிர வீழ்ந்தான் உழைத்து.[10]

என்று பாட்டாக வார்த்துக் காட்டுவார். வள்ளல் கொடுத்த கொடையை அளவிட்டுக் காணவோ காட்டவோ இயலாது; வள்ளலே இதை அறியார். வெளிப்படையாக பல நிறுவனங்கட்கு அளித்த கொடையை அந்தந்த நிறுவனங்கள் மூலம் அறியலாம். ஆயிரம், ஐயாயிரம், பதினாயிரம் என்று நண்பர்கட்கும் உறவினர்க்கும் நிலையங்கட்கும் அளித்த கொடைகளை கணக்கிட்டுக் கூற இயலாது. தம்பெயரால் காரைக்குடியிலும் பிறவிடத்தும் நிறுவிய பல்வகைக் கல்லூரிகளும் பள்ளிகளும் பல. இவற்றிற்கு வழங்கிய இலட்சக்கணக்கான தொகை கணக்கிற்கு வராது. இதனால்,

கோடி கொடுத்த கொடைஞன்; குடியிருந்த
வீடும் கொடுத்த விழுச்செல்வன்; - தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன்; அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு.[11]

என்று புலவரின் பாட்டில் இடம் பெறுகின்றார். வள்ளல் சில சமயம் கையிருப்பு இல்லாமலே சில விழாக்களில்

10. கொடை விளக்கு—17
11. ஷை—77

நன்கொடைத் தொகையை அறிவித்து விடுவார். பின்னர் அரும்பாடுபட்டு ஈட்டி 'வாய்க்கடனை' ஈடுகட்டுவார். இது வள்ளலின் தனிப்பெரும் பண்பு. 'கொடுக்கிலா தானைப் பாரியே என்று கூறினும், கொடுப்பாரிலை' (தேவா. 7-34:2) என்று பாடினார் தம்பிரான் தோழர் பாரியின் வண்மையை. எல்லாம் வழங்கிய பாரியிடம் பறம்பு மலை இருந்தது (புறம்-110) ஆனால், தாம் குடியிருந்த திருமாளிகையையும் வழங்கிய வள்ளல் அழகப்பரின் வண்மை பாரியின் வண்மையைவிடப் பெரிதன்றோ? இனிப்பாடும் பாட்டில் 'அழகப்பன் என்றே அழைப்பினும் கொடுப்பாரிலை' என்றுதான் பாட வேண்டும். இருவரும் பாண்டி நாட்டைச் சார்ந்தவர்கள் தாமே?

1943-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் டி.லிட். பட்டத்தையும் 1944இல் சென்னைப் பல்கலைக்கழகம் எல்எல். டி பட்டத்தையும் குடியரசுத் தலைவர் பதுமபூஷண் (தாமரை அணி) என்ற விருதையும் வழங்கி வள்ளலைச் சிறப்பித்த செய்தியை யான் காரைக்குடியில் பணியேற்றபின் அறிந்தவை. ஒரு சமயம் வள்ளல் அழகப்பர் பம்பாய் சென்றிருந்தார். தாம் தங்குவதற்கு ரீட்ஸ் என்ற விடுதிக்குச் சென்று ஓர் அறையைத் தருமாறு கேட்டார். அந்த விடுதியின் மேலாளர் 'அறை காலி இல்லை' என்று சொல்ல, வள்ளல் 'இந்த விடுதியில் எத்தனை அறைகள் உள்ளன?' என்று வினவ, மேலாளர் 'என்ன ஐயா, விலைக்கு வாங்குபவர் போலக் கேட்கின் றீரே?' என்று கிண்டல் பாவனையில் பதிலிறுக்க, வள்ளல் 'ஆம்' என்று விடையிறுத்து உடனே முன் பணமும் கொடுத்தார். பின்னர் அந்த விடுதியை விலைக்கு வாங்கிக் கல்லூரிக்கு நிதியாக வைத்தார் என்பது செவிவழிச் செய்தி.

தமிழ்க்காதலர் திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் ஆதரவில் தயாரிக்கப் பெற்ற

கலைக்களஞ்சியத் தொகுதிகளை வெளியிடும் தமிழ் விழாக்கள் பேரூர்களிலேயே நடைபெற்று வந்தன. இந்தத் தமிழ் விழா ஒன்றை 1955 செப்டம்பரில் அழகப்பா கல்லூரி வளாகத்தில் நடத்தத் தீர்மானித்திருந்தார். அவர் தம் தமையன் மறைவாலும் இப்பகுதியில் எழுந்த புயலாலும், பின்னர், தம்முடைய நோய் முற்றிய நிலையாலும் இவ்விழா இங்கு நடத்தப் பெறாமல் போயிற்று, இந்த விழா நடந்திருந்தால் சிற்றூர்களில் விழா நடத்தும் பெருமையும் பெற்றிருக்கும் தமிழ் வளர்ச்சிக் கழகம்.

நம் அருமை இராஜாஜி அவர்களின் வேண்டுகோளின் படி தமிழ்க் கலைச்சொல்லாக்கக் குழு அழகப்பா கல்லூரியில் 30. 1. 1954இல் அமைக்கப்பெற்றது. அடியேனுக்கும் அதில் உறுப்பினர் பொறுப்பு வந்தது. ஒரு கூட்டம் நடைபெற்றது. வள்ளல் மறைந்த பிறகு அப்போது நிதி-கல்வி அமைச்சர் பொறுப்பிலிருந்த திரு. சி. சுப்பிரமணியம் 'வள்ளல் அழகப்பர் அறத்தின்' தலைவரானார். இவர் காலத்தில் அரசின் ஆதரவில் ஒரு 'கலைச் சொல்லாக்கக் குழு' அமைந்தது. அமைச்சர் என் திறமையை நன்கு அறிந்திருந்தும் அக்குழுவில் எனக்கு வாய்ப்பு இல்லாமல் போயிற்று. அமைச்சரும் வருந்தினார்; நானும் வருந்தினேன். ஓரேர் உழவன்போல் நான் உழைத்துப் புகழ் பெறவேண்டும் என்பது இறைவன் திருவருள் போலும்!

4. 12. 1954 இல் வள்ளலைச் சென்னை அரசின் தொடக்க நிலைக் கல்விச் சீரமைப்புக் குழுவிற்குத் தலைவராக நியமித்தது அரசு. வள்ளல் நாடெங்கும் சுற்றிப் பல பள்ளிகள் செயற்படும் நிலைகளை நேரில் கண்டார். பல கல்வியாளர்கள், பெரியோர்கள், கல்வியதிகாரிகள் இவர்களை நேரில் சந்தித்து இவர்தம் சாட்சியங்களைப் பதிவு செய்தார். புதிய திட்டங்கள், யோசனைகள் அடங்கிய தம் அறிக்கையைச் சென்னை அரசிடம் 2. 10. 1955 இல் சமர்ப்பித்துப் பெரும் புகழ் பெற்றார். கல்லூரிக் கல்வி

யிலும் அதற்கு மேற்பட்ட கல்வியிலும் ஆழங்கால் பட்டிருந்த வள்ளல் இக்கல்விகட்கெல்லாம் வேராகவுள்ள தொடக்க நிலைக்கல்விக் கொள்கைகளை வகுக்கவும் வள்ளல் வாய்ப்பு பெற்றது தமிழகத்தின் பெரும் பேறாக அமைந்தது என்று கருதலாம்.

1954-ஆகஸ்டு 18 இல் நடைபெற்ற சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் பேருரை நிகழ்த்தினார். இந்தப் பொழிவில் முக்கியமாக வற்புறுத்தியவை: மனிதன் தன் சொந்த எண்ணத்தை அழிப்பதே பிழை. இற்றை நாளில் அவ்வெண்ணத்தை அழிப்பதோடு நில்லாமல், கல்வியின் பெயரால், எண்ணுதற்குரிய மூலநெஞ்சினையே குழந்தை நிலை முதல் கெடுத்து விடுகின்றோம். மனிதன் உரிமையாக எண்ணவும், உரிமையாகப் பேசவும் சில வரம்புக்கு உட்பட்டு உரிமையாகச் செயலாற்றவும் வேண்டும். இவ்வுரிமைக்குத் தக்க செவ்வியை என்றும் காத்துக்கொள்ள வேண்டும். எத்துணைப் பெருஞ்செல்வமும் உரிமை கொடுக்கும் சூழ்நிலைக்குச் சமம் ஆகாது... அரசியலிலும் பிற துறைகளிலும் ஒரு தலைச் சார்பான கோட்பாடுகளையே மாணாக்கர் அறியும்படி மேற்படிப்புத் திட்டங்களை அமைத்தல் முடிவில் நாட்டுக்கே கேடு விளைவிப்பதாகும். பிற நாட்டவரின் நற்கருத்துகளையும் தழுவிக் கொள்ளாது 'நமக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை' என்று தற்பெருமை பேசித் திரிதல் அறிவீனம். இந்த விழாவில் உரிமை வேண்டும் என்ற கொள்கையை விரித்துரைக்கும்போது திருநாவுக்கரசர் பெருமானின் 'நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்' என்ற பாடலை (தேவா. 6.98:1) மேற்கோளாகக் காட்டினது குறிப்பிடத்தக்கது. மாணவர்கட்கு 'மாணவ மணிகாள்! வெற்றி பெறுவீர் வாழ்க்கையில். வினை புரிவீர். பெரியோர்களின் அறிவுரையைப் போற்றுவீர். நம்மைப்பெற்ற நன்னாட்டுக்கு ஒல்லும் வகையெல்லாம் உதவுவீர்.' என்று

கூறிய அறிவுரையை எல்லாக் காலத்திலும் மாணவர்கள் சிந்திக்கத்தக்க அறிவுரையாக அமைந்தது.

இத்தகைய வள்ளலுக்கு இயற்கையாகவும் செயற்கையாகவும் வந்த தொல்லைகள் 'துன்பமாலை'யாக வடிவெடுத்தன. இயற்கையில் வந்தது குட்டநோய்; செயற்கையாக வந்தவை தில்லிமாநகரில் விடுதியொன்றில் தங்கியிருந்தபோது குளியலறையில் வழுக்கிவிழுந்து காலொடிந்தது; கண்ணனூர் (கேரளம்) உமையாள் நெசவாலையில் மூன்றடுக்குமாடியிலிருந்து அறிவயர்ந்துவீழ்ந்தது. தலையில் ஏற்பட்ட பலத்த அடியினால் நினைவிழந்து சில திங்கள் வேலூர் C.M.S. மருத்துவமனையில் சிகிச்சை பெற்று ஒருவாறு பிழைத்தெழுந்தார். இந்தத் துன்பமாலையை,

> தில்லியிற் காலொடிந்தான்; தென்னாலை மாடிமேல்
> வெல்லும் அறிவயர்ந்து வீழ்வுற்றான்;—
> கொல்லுகின்ற
> குட்ட நோய்ப் பட்டான்; பொழுதுபடா ஈகையால்
> சற்றுநோய் வென்றான் தணித்து.[12]

என்று பாட்டாக வடித்துக் காட்டுவர் பெரும் புலவர் வ.சுப. மாணிக்கனார்.

வள்ளல் அழகப்பர் உயர்ந்த வடிவழகையும் பெற்றிருந்தார். பொன்மனச் செம்மலாகத் திகழ்ந்தவர். செம்மேனி எம்மானாகவும் காட்சியளித்தார். நெற்றியில் திலகம் எடுப்பாகத் திகழும். செல்வச் செருக்கு இல்லாதவர். எளிய ஆடையையே விரும்புபவர். கூர்த்தமதியினர்: கொடையால் பெயர் பெற்ற பெரியார். நாடியவரைத் தோள் தழுவிப் பேசும் நற்பண்பு மிக்கவர். இவர்தம் ஆங்கிலப்பேச்சு கேட்டாரை ஈர்க்கும்; கேளாரையும் கேட்கும் பேறு இல்லையே என்று வருந்தச் செய்யும். தமிழ்ப் பொழிவில் பேச்சுத்தமிழ் நடையாடினாலும்

12. கொடை விளக்கு—91

கருத்துகள் கேட்பார் உள்ளத்தில் நிலைத்து இடம்பெறும். சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதைக் 'குறள் போல்' என்று உவமை கூறும் விற்பன்னர். 'இடுக்கண் வருங்கால் நகுக' (குறள்—621) என்ற வள்ளுவர் கூற்றைக் கடைப் பிடிக்கும் மனத்திட்பம் உடையவர். வாணிகத்தில் நட்டம் மலைபோல் அழுத்தினும் மாமல்லபுரத்துச் சிலைபோல் சிரித்துக் காணப்படுவார். அழித்துக் குடையும் அழிநோய் வருத்தினாலும் குலுங்கச் சிரித்துக் குலாவுவார். நாளும் இறைவனை ஒன்றி வணங்கும் ஒருமைப்பாடுடையவர். விஞ்ஞானக் காதலர் எனினும் எஞ்ஞான்றும் மெய்ஞ் ஞானம் வேண்டும் விறலர். பொய்ஞ்ஞானம் தீருவதற்கு மெய்ஞ்ஞானமே நல்விளக்கு என்பதை நன்கு அறிந்து தெளிந்தவர்.

தாம் நிறுவிய கல்லூரிகளையெல்லாம் இணைத்து பல்கலைக் கழகம் காண நினைத்தார். நல்ல கனவு; நல்ல குறிக்கோள். இத் தலையான வேட்கை அவர் காலத்தில் நனவாகவில்லை. எல்லோரும் அவர் விருப்பத்தை நன்கு அறிவர். தாம் வாழ்ந்த காலத்தே நடுவண் அரசுடன் கடிதப்போக்குவரத்து செய்து அடிப்படை கோலி வைத் திருந்ததும் எல்லோருக்கும் தெரியும் உடலும் குன்றியது. செல்வ வளமும் குறையத் தொடங்கியது. இந்த நிலையில் ஒருநாள் (பிப்பிரவரி 1957) வள்ளல் அழகப்பர் கல்லூரி வளாகத்திற்கு வந்தார். இரு சக்கரம் அமைந்த சிறு வண்டி யில் சாய்ந்த வண்ணம் அனைத்தையும் பார்வையிட்டார். கூட்டங்களில் கலந்து கொண்டு உரையாற்றினார். பயிற்சிக் கல்லூரிக்கு வந்தபோது அடியேன் அவர்மீது வைத்த கண் வாங்காது பார்த்தவண்ணம் இருந்தேன். கண்கள் குளமாகி நீரும் வடியத் தொடங்கியது. அக் காட்சி இன்றும் நினைவிற்கு வருகின்றது. மக்கள் யாவரும் அவரை வாழ்த்திச் சென்னை செல்ல விடை தந்தனர். இதுவே கல்லூரி வளாகத்திற்கு அவருடைய இறுதி வருகை என்று அன்று யாரும் நினைக்கவில்லை.

பூவிருந்தவல்லி நெடுஞ்சாலையிலுள்ள தனியார் மருத்துவமனையில் சிகிச்சைபெற்றுவந்தார். 'அழகப்பர் அறத்தின்' துணை மேலாளர் திரு. பத்மநாபன் துணையாக இருந்துவந்தார். நான் மார்ச்சுத் திங்கள் சென்னை சென்றிருந்தபோது வள்ளலைப் பார்த்துவந்தேன். அசையாமல் கிடந்தவண்ணம் இருந்தார். அச்சமயம் 'அறிவியல் பயிற்றும் முறை' என்ற எனது நூல் விரைவாக அச்சாகிக் கொண்டிருந்தது, தமிழ்க்கடல் ராய.சொ. அவர்களையும் 'கம்பன் அடிப்பொடி' சா.க. அவர்களையும் கலந்து இந் நூலை வள்ளலுக்கு அன்புப் படையலாக்க எண்ணினேன்.

நலங்கிளர் ஊக்கம் எனும்புனல் பெய்து
நாள்தொறும் அன்புற வளர்த்த
பொலங்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த
பொருள்எனும் நறுமலர் கொய்து
புலங்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே
பொற்புற அணிந்துளம் களிக்கும்
வளம்கிளர் டாக்டர் அழகப்ப வள்ளல்
மலரடிக் குரியதிந் நூலே.

என்ற பாடலும் உருவாயிற்று. இதை உடனே திரு. பத்மநாபனுக்கு அனுப்பி வள்ளல் அவர்கட்கு இசையுடன் படித்துக்காட்டுமாறு வேண்டியிருந்தேன். திரு.பத்மநாபன் தமிழறிவும் இசையறிவும் மிக்கவர். தேவார திருவாசக, திவ்வியப் பிரபந்தங்களில் ஈடுபாடு மிக்கவர். இவற்றிலுள்ள சில பாசுரங்களை இசைக்கக் கேட்பதற்கே வள்ளல் திரு. பத்மநாபனைத் தம் பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்தார். நான் அனுப்பிய பாடலை அடிக்கடி இசைக்குமாறு வள்ளல் கேட்டதாகவும், அதை மனம் விரும்பி அநுபவித்ததாகவும் திரு. பத்மநாபன் எனக்கு எழுதியிருந்தார். மூன்று திங்கள் கழித்து நூல் வெளி வந்தது. அதன் முதற்படியைக் கண்டனூர் சென்று அவர்தம் அருமைத் திருமகளார் உமையாள் இராமநாதன் கையில் சேர்ப்பித்து மகிழ்ந்தேன்.

ஒரு சில நாட்களில் வள்ளலின் பருவுடல்தான் அவர் பிறந்த ஊராகிய கோட்டையூர் வந்து சேர்ந்தது. கோட்டையூரில் பிறந்த கோடீஸ்வரன் தாம்; இறந்தபின் அவ்வூர் சுடு (இடு) காட்டில் தம்மை அடக்கம் செய்வதை விரும்பவில்லை. தம் எண்ணம், அறிவு, பொருள் இவற்றைப் பணி கொண்ட கல்லூரி வளாகத்திலேயே தம் பருவுடலை எரியூட்ட வேண்டும் என்று விரும்பினார். இறப்பதற்கு நெடுநாள் இல்லை என்பதை உணர்ந்த வள்ளல் கல்லூரி வளாகத்தில் தமக்கு உரிய இடம் 'இது' என்று முன்னரே சுட்டிக் காட்டியிருந்தார்.

தன்னை துயிற்றுந் தனியிடம் சுட்டி
பின்னர்த் துயின்ற பெருஞானி[13]

என்று இவர்தம் ஞானத்தைப் பாராட்டுவர் மாணிக்கனார். இறப்பினுக்கு அஞ்சாத இப்பெருமகனார் ஈயாத பிறப்பினுக்குத் தான் பெரிதும் அஞ்சுவார்.

வள்ளல் அழகப்பரின் பருவுடலைத் தாங்கிய தேரைச் சுமார் மூன்று கல் தொலைவிலுள்ள கோட்டையூரிலிருந்து அனைத்துக் கல்லூரி மாணவர்களும் வடந்தொட்டுக் கல்லூரி வளாகத்திற்கு இழுத்து வந்தனர். மின்சார வேதியியலில் ஆராய்ச்சி நிலையத்திற்குக் கால் கோள் செய்ய நேரு வந்தபோது (25-7-1948) பல்லாயிரக் கணக்கான மக்கள் திரண்டதைவிட அழகப்பரின் பரு உடலைத் தாங்கிய தேரைக் காணவும் பருவுடலை அங்கியங் கடவுள் உண்ணும் காட்சியைக் காணவும் பெரிய கூட்டம் திரண்டெழுந்தது. அன்று மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மிதந்தனர். இன்று (6-4-1957) மக்கள் கூட்டம் துன்பக் கடலில் ஆழ்ந்து கிடந்தது.

13. கொடை விளக்கு—125.

நேரு வருகையினும் நீண்ட பெருங்கூட்டம்
தேரு வருகைக்குத் தேம்பிற்று;—பாரும்
அழாஅமை யாரோ அறிந்தார்காண்; வானும்
தொழாஅமை கண்டாரைச் சொல்.[14]

என்ற மாணிக்கனார் பாடல் அழுகையையும் தொழுகையையும் காட்டுகின்றது. மக்கள் அனைவரும் அழுதனர்; தொழுதனர். நிலமகள் அழுவதையும் வான் மகள் புலம்பியதையும் காண்பதற்கு ஒருவரும் இல்லை என்ற குறிப்பையும் பாடலில் காணலாம்.

ஒரு டன் மேலாக சந்தனக் கட்டைகள் ஈமப் படுக்கையாக்கப் பெற்றன. அந்தப் படுக்கையின்மீது வள்ளலின் திருமேனி கிடத்தப் பெற்று முறைப்படி செய்ய வேண்டிய சடங்குகள் செய்வித்த பிறகு தீ மூட்டப் பெற்றது. சந்தனக் கட்டைகளின் நறுமணம் வள்ளலின் புகழ்போல எங்கும் பரவியவுடன் கூட்டம் அழுத கண்ணீருடன் கலையத் தொடங்கியது. நானும் கலைகின்றேன்,

வீற்றிருந் தான்வள்ளல் வளாகம்தனில் இருந்தான்
நேற்றுஇருந்தான் இன்றுவெந்து நீறுஆனான்
—பால்தெளிக்க
எல்லீரும் வாருங்கள் ஏதுஎன்று இரங்காமல்
எல்லாம் சிவமயமே யாம்.15

என்ற பாடலை வாயினால் நவிற்றிக் கொண்டே. வள்ளலின் ஆன்மாவும்,

---

14. கொடைவிளக்கு—14

15. பட்டினத்தார் பாடல்கள் — அன்னையாருக்கு இறுதிக் கடன் இயற்றியபோது பாடியவை—10. பாடலில் 'இருந்தாள்' என்பது 'இருந்தான்' எனவும் 'வீதிதனில்' என்பது 'வளாகந்தனில்' எனவும் மாற்றப்பட்டன.

யாவரே இருந்தும் யாவரே வாழ்ந்தும்
யாவரே எமக்குஉற வாயும்
தேவரீர் அல்லால் திசைமுகம் எனக்குத்
திருவுளம் அறியவேறு உளதோ?
பாவலன் ஒருவன் செந்தமிழ்க்கு இரங்கிப்
பரவையார் ஊடலை மாற்ற
ஏவலாள் ஆகி இரவெலாம் உழன்ற
இறைவனே ஏகநா யகனே.[16]

என்று தியானிக்கின்றது என்று நினைந்த வண்ணம் இல்லம் திரும்புகின்றேன்.

செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்போம் எனினே தப்புன பலவே.[17]

பிறப்பு : 6-4-1909 சிவப்பேறு : 5-4-1957

16. பட்டினத்தார் பாடல்கள்—(திருவெண்காட்டுத் திருவிசைப்பா)
17. புறம்—189.

# 24. கலெக்டர்
# தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

1949-காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் திருநாளில் முதன் முதல் அறிமுகமானவர். இரசிகமணி டி.கே.சி.யுடன் சென்று இவர் மருமகன் திரு. V.K.C. நடராசன் இல்லத்தில்தான் மூன்று நாட்கள் தங்கியிருந் தேன். (அழகப்பா கல்லூரி ஆசிரியர் குடியிருப்பிலுள்ள ஒரு திருமாளிகையில்) மூன்று நாள் ஒரே இடத்தில் தங்கி யிருந்தமையால் இவருடன் நெருங்கிப் பழக வாய்ப்புகள் கிடைத்தன. தவிர, இரசிகமணி டி.கே.சியும் அதே இல்லத்தில் தங்கியிருந்தபடியால் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் பற்றி ஓரளவு நன்றாக அறிந்து கொள்ள முடிந்தது. இங்கு 'கலெக்டர்' என்பது அவ்வளவு முக்கிய மல்ல; அது அரசு அதிகாரி என்பதை மட்டிலும் காட்டும் சொல்; வருமானத் துறையில் மாவட்டத் தலைவர் என்ற நிலையை (அந்தஸ்தை)க் குறிப்பிடுவது. நான் அப்போது அறிந்து கொண்டது: ''தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் ஒரு கலைஞர்; இலக்கிய ரசிகர்; இவர் பேச்சும் மூச்சும் கம்பன் புகழ்பாடும். இத்தனைக்கும் மேலாக இரசிகமணியின் பிரதம சீடர். ஆங்கில எழுத் தாளர் பாஸ்வெலுக்கு டாக்டர் ஜான்செனிடம் கொண் டிருந்த பிடிப்பு போன்ற ஒன்று, இவர் இரசிகமணியிடம் கொண்டிருந்தது'' என்பது. பின்னர் இவரால் எழுதப் பெற்று வெளிவந்த (1961) 'ரசிகமணி டி. கே. சி.' என்ற

நூல் என் கருத்தை விளக்குவதுபோல் அமைந்தது. மூன்று நாட்களும் இவருடன் நெருங்கியே பழகி வந்தேன். காரணம் இவர்தம் எளிமை; குழந்தைத் தன்மை; எவருடனும் இன்முகத்துடன் உரையாடும் பண்பு, இலக்கியம், கவிதை, சிற்பம் இவைபற்றியே அடிக்கடி பேசும் இரசிகத் தன்மை எவரையும் ஈர்க்கும் பெற்றியது.

*நினைவு-1* :1949-கம்பன் திருநாளைக் கண்டு களித்து துறையூருக்குத் திரும்பிய ஒன்றிரண்டு நாட்களில் வைரி செட்டிபாளையம் (திருச்சி மாவட்டம்) திரு. S. R. நாக ரெட்டியாரால் சீரும் சிறப்புமாக நடத்தி வந்த விவேகாநந்தர் வாசக சாலையின் ஆண்டு விழாவில் கலந்து கொண்டார் திரு. தொண்டைமான். துறையூர் சிலோன் லேபர் கமிஷன் ஏஜண்டு திரு. K. S. முத்துவேல் பிள்ளையவர்கள் புருஷகாரமாக நின்று தொண்டைமான் கலந்து கொள்வதற்கு ஏற்பாடு செய்யப் பெற்ற விழா இது. இந்த விழாவுக்கு நானும் சென்றிருந்தேன். தொண்டைமான் பேச்சென்றால் சொல்ல வேண்டுமா? அவரது சஞ்சாரம் கவிதை உலகில் தானே. அவர் அவையோரைச் சுவைக்க வைத்த இரண்டு பாடல்கள் மலரும் நினைவுவாக வெளிப்படுகின்றன.

*(1)* திருச்சீரலைவாய் செல்லுகின்றான் ஒரு பக்தன். அரிசனங்கள்—இராமாநுசர் கூறும் திருக்குலத்தார்கள்—உட்பட எல்லோருக்கும் சேவை சாதிக்கும் செந்தில்வேலன் சந்நிதிக்குதான் செல்லுகின்றான். அந்த முருகனோ சிறு குழந்தை; பாலறாவாயன். வேலேந்தி விளையாடும் இளங்குமரன்—மயிலேறி விளையாடும் மாணிக்கம் என்றெல்லாம் போற்றித் துதிக்கப்பெறும் ஆறுமுகன்தான். செந்தூர் ஆலயத்தில் சண்முக விலாசத்தைக் கடந்து உள்ளே சென்றதும் பக்தனை ஆட்கொள்ள ஒராறு முகங்களுடனும் ஈராறு கைகளுடனும் வேலேந்திய நிலையில் சண்முக நாதன் நிற்பதைக் காண்கின்றான்.

வேல்கொண்ட கையும்
விறல்கொண்ட தோளும்
விளங்கு மயில்
மேல்கொண்ட வீறு
மலர்முகம் ஆறும்
விரைகமலக்
கால்கொண்ட வீரக்
கழலும் கண்டான்

என்று முருகனையும் பக்தனையும் காட்டுகின்றார் திரு. தொண்டைமான். அத்துடன், ''பக்தன் அதிசயித்து நிற்கின்றான். அவனுக்கு இரு புறங்களிலும் இரண்டு பெண்கள் நிற்பதையும் காண்கின்றான். அன்னம் போன்ற மென்மையும், மயில் போன்ற சாயலும் உடைய வள்ளியும் தெய்வயானையும் அவனுடன் மிகவும் நெருக்கமாகவே ஒட்டிக்கொண்டு நிற்கின்றனர். பக்தன் இந்தக் காட்சியைக் கண்குளிரக் காண்கின்றான். பக்தன் நல்ல கவிஞன். கவிஞனுக்குத்தான் வறுமைவழி வழியாகவரும் சொத்தாயிற்றே. அவன் தன் துன்பங்களை அந்த முருகன் சந்நிதியில் நினைக்கின்றான்'' என்று கூறுகின்றார்.

முருகன் சந்நிதி முன் அவன் நினைப்பதென்ன? ''ஏன் இந்த முருகன், கலியுகவரதன் என்று எல்லோராலும் போற்றப்படுபவன், நம் துன்பங்களைத் துடைக்கவில்லை? ஏதோ அவன் சிறுவன் தான். பால் மணம் மாறாத பாலன் தான். அவனுக்கு என் சிரமங்களை அறிந்து கொள்ளும் ஆற்றல் உண்டா? அன்னையின் அரவணைப்பிலிருந்து கொண்டு அவளது மடியில் விளையாடுவான், அன்னைக்கோ இவன் அருமந்த பிள்ளை. இந்தப் பிள்ளையின் கண்ணுக்கு மையிட்டு நெற்றிற்குப் பொட்டிட்டு அழகு பார்த்துக் கொண்டிருப்பவள் இவள்; வாரியணைத்து முத்தம் கொடுப்பாள்; அவனிடமிருந்தும் முத்தம் பெறுவாள். இப்படியே அன்னையும் அருமந்த மகனும் விளையாடத்தான் நேரம் இருக்கும். பக்தனைப்

பற்றி நினைக்க நேரம் ஏது? பக்தனது துயரம் என்ன? அதைப் போக்குவதற்கு வழி என்ன? அதைப் போக்குவதும் நம் கடமை தானே—என்றெல்லாம் தெரிந்து கொள்ளு கின்ற வயதா இது? சிறு பிள்ளை தானே அவன்?—என்று இதுகாறும் வாளா இருந்து விட்டோம். இப்போதல்லவா தெரிகின்றது இவன் வண்டவாளம்! நல்ல வயது வந்த ஆண்பிள்ளையாகத் தெரிகின்றான். மல்லுக்கு நிற்கக் கூடிய வயது. ஒருத்திக்கு இரண்டு பேராக இவனுக்கு இரு மனைவிமார். இன்னுமா இவன் சிறு பிள்ளை? என்னைக் காத்து என் துயரத்தையெல்லாம் துடைக்கும் வயதா இவனுக்கு இல்லை?''—என்றெல்லாம் எண்ணுகின்றான் கவிஞன். அவன் மனத்தில் பொங்கியெழும் ஆத்திரத் திற்குக் குறைவில்லை. சண்முகநாதன் சந்நிதி முன் வந்து நின்றதும் அவன் கொண்டிருந்த ஆத்திரம் எல்லாம் ஒரு பாடலாக வடிவெடுத்து விடுகின்றது.

முன்னம்நின் அன்னை அமுதூட்டி
மையிட்டு முத்தம் இட்டுக்
கன்னமும் கிள்ளிய நாளலவே
என்னைக் காத்தளிக்க
அன்னமும் மஞ்ஞையும் போல்இரு
பெண்கொண்ட ஆண்பிள்ளை, நீ!
இன்னமும் சின்னவன் தானோ!
செந்தூரில் இருப்பவனே.

என்பதுதான் அந்தப் பாடல்.

'அன்னமும் மஞ்ஞையும் போல்இரு
பெண்கொண்ட ஆண்பிள்ளைநீ!'

என்று சொல்வதில் கவிஞனின் ஆங்காரம் தொனிக் கின்றது.

'இன்னமும் சின்னவன் தானோ!'

என்று பாடலை முடிக்கும் போது ஆத்திரத்தின் கொடு முடியைக் காண முடிகின்றது. இவ்வாறு முருகன் முன்

நிற்கும் கவிஞன் யார் தெரியுமா? அவர்தான் படிக்காசுப் புலவர்.'' இங்ஙனம் தொண்டைமான் கைகளை ஆட்டி ஆட்டி தமக்கே உரிய முக பாவனையுடன் பாடலை விளக்கும் பாணி இன்னும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது. அவர்தம் குரல் இன்றும் என் காதில் ரீங்காரம் செய்கின்றது. அவர்தம் கார்மேனி உருவத்தை என் கண்கள் மானசீகமாகக் காண்கின்றன.

2. ''ஞான சம்பந்தர் தம்மை இறைவனுடைய சேயாகவே பாவித்து ஒழுகி வந்தார். தம்மை இறைவனது சேயாகப் பாவிப்பதிலும் இறைவனையே தம் சேயாகப் பாவிப்பதிலும் பக்குவம் பெற்றிருந்தார்கள் பல பெரியோர். தமிழ் நாட்டில் எழுந்த பிள்ளைத் தமிழ் நூல்கள் எல்லாம் இறைவனைப் பக்தன் குழந்தையாக வழிபடும் முறைதான் என்று கொள்வதில் தவறில்லை. இன்னும் ஒரு சிறப்பு உண்டு. இறைவனை மட்டிலும் குழந்தையாக ஆக்கிக் கொண்டால் போதாது; பக்தனும் தன்னைக் குழந்தையாக ஆக்கிக் கொள்ள வேண்டும். நாம் ஐந்து வயதுப் பாலகனாக இருக்கும்போது அரச மரத்துப் பிள்ளையாரை நெருங்கி அவருடன் விளையாடத் தான் செய்தோம். அவருடைய கொம்பைப் பிடித்து அசைத்து, அவருடைய காதைப் பிடித்துத் திருகிக் குறும்புகள் செய்தோம். இல்லையா? நாமும் குழந்தையாக இருந்த காரணத்தால்தான் அவ்வாறு உறவு கொண்டாட முடிந்தது. வயது ஏற ஏற கடவுள், தெய்வம், பாவம், புண்ணியம், முத்தி, நரகம் என்றெல்லாம் அறிய அறிய நாம் இறைவனை நெருங்கவே அஞ்சுகின்றோம்; எட்ட நின்றே 'கும்பிடு போட்டு விட்டுத்' திரும்பி விடுகின்றோம். அறிவு வளர வளர நமக்கும் ஆண்டவனுக்கும் இடையே யுள்ள தூரமும் அகன்று கொண்டே வருகின்றது. இறைவன் குழந்தையாகவும், நாம் மனிதனாகவும் இருந்தால் பயன் இல்லாது போனாலும் போகும். ஆதலால் நாமும்—பக்தி செலுத்த விரும்பும் நாமும்—குழந்தையாகவே ஆக்கிக்

கொள்ள வேண்டும். இதனைத் தெரிந்து தெளிந்த பிறகு தானே,

'சேய்போல் இருப்பவர் கண்டீர்
மெய்ஞ்ஞானம் தெளிந்தவரே'

என்று பாடி வைத்துள்ளனர் நம் பெரியவர்கள்?''

இவ்வாறு இறைவனையும் நம்மையும் குழந்தை நிலைக்கு ஆக்கிக் கொள்ளவேண்டும் என்று கூறும் திரு. தொண்டைமான், ''பக்தி செய்த பக்தர்கள் சிலரின் உள்ளங்களைக் காட்டுவார். இஃது எப்படி முடியும்? அந்த உள்ளமாகிய வீணைதனில் எழுந்த நாதங்களாகிய பாடல் களைப் பார்த்தாலேபோதும்; அந்த உள்ளங்கள் நமக்குத் தெளிவாகி விடும்'' என்று கூறுவார். பின்னர் கண்ணனின் குழந்தைப்பருவச் சிறுகுறும்புகளில் தம்மை மறந்து பேசு வார்.

''உலகங்களையெல்லாம் 'பாலனாய் ஏழுலகினையும் உண்டு உமிழ்ந்த' கண்ணன் ஒரு தெய்விகக் குழந்தை. குழந்தைக் கண்ணனின் திருவிளையாடல்களில் உள்ளத் தைப் பறிகொடாதவர்கள் யார்? சிறைச் சாலையில் ஒருத்தி (தேவகி) மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி (யசோதை) மகனாய் வளர்ந்த கண்ணனை— கண்ணனாகவும் கண்ணம்மாவாகவும் பாராட்டி வந்திருக் கின்றனர் பக்தர்கள். தமிழரது உணர்ச்சியையெல்லாம் தட்டி எழுப்பிய தேசிய கவிஞன் பாரதியாரும் கண்ணனை எப்படி எப்படியெல்லாம் பாராட்டுகின்றார்; போற்று கின்றார் தம்முடைய 'கண்ணன் பாட்டில்'. இதில் ஒன்று- 'கண்ணம்மா—என் குழந்தை' என்ற பாட்டு—முத்தாய்ப்பு வைத்ததுபோல் அமைந்திருப்பது. கண்ணனைக் கவிஞ ருடைய தாயுள்ளம் நல்ல அழகிய சின்னஞ்சிறு குழந்தை யாகக் காண்கின்றது. 'பிள்ளைக் கனியமுதமாகவும்', 'பேசும் பொற் சித்திரமாகவும்', 'அள்ளி அணைத்திடவே —ஆடி வருந் தேனாகவும்' 'செல்வக் களஞ்சியமாகவும்'

கண்டு மகிழ்கின்றது. அந்தக் கற்பனைக் கண்ணம்மாவின் கன்னத்தில் முத்தமிட்டு முத்தமிட்டுக் கள்வெறி கொள்ளு கின்றது அவரது தெய்விகத் திருவுள்ளம். இறுதியாக,

இன்பக் கதைகள் எல்லாம்
உன்னைப்போல் ஏடுகள் சொல்வதுண்டோ?
அன்பு தருவதிலே—உனைநேர்
ஆகுமோர் தெய்வம் உண்டோ?

என்று அதன் மழலை மொழிகளில் மெய்மறந்து பாடுகின் றார்; உள்ளத்தைப் பறி கொடுக்கின்றார். ''கண்ணம்மா குழந்தை தான்; குழந்தையுருவில் காட்சி நல்கும் தெய்வம் தான் அது பாரதியாருக்கு என்று தெரிந்து கொள்ளுகின் றோம் நாம்'' என்று கூறித் தம்மை—ஏன் நம்மையும்—அந்தக் கண்ணன் ஆயர்பாடியில் வளர்ந்த காலத்திற்குக் கொண்டு சென்று விடுவார்.

இங்ஙனம் பாரதியார் பாடல்களில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்த திரு. தொண்டைமான், குலசேகராழ்வார் பாசுரங்களில் தம்மையே மறந்து ஆழங்கால் பட்டு விடு வார். ''குழந்தை என்றால் அதுதான் அன்னையின் உடைமை, சுவர்க்கம் எல்லாம். குழந்தை பேசும் மழலை மொழிகளிலே கற்பனைக்கும் எட்டாத வேத கீதங்களை—தேவ கீதங்களை—எல்லாம் கேட்பாள். அது குறுகுறு நடந்து சிறு கை நீட்டி நடந்து வந்து—தான் உண்ணும் உணவை அளைந்தால் அது கூழாக இருந்தாலும் அமுதாகி விடும் அந்தத் தாய்க்கு. 'தன் முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்து வரும்' கண்ணனைக் கட்டி அணைத்துக் கொள்ளும் யசோதை நிலையிலுள்ள பெரியாழ்வார் அக் கண்ணனோடு ஒன்றியே விடுவார். சேரர்கோன் குல சேகரப் பெருமாளும் அப்படித்தான். தம்மைத் தேவகி யாகவே பாவித்துக்கொண்டு யசோதைப் பெருமாட்டி அநுபவித்தவற்றையெல்லாம் தாம் அநுபவிக்கக்கொடுத்து வைக்கவில்லையே என்று தம்மையே நொந்து கொள்ளு

கின்றார்'', என்று கூறி நம்மை ஆழ்வார்கள் காலத்திற்கே இழுத்துச் சென்று விடுவார்.

இப்படிப் பேசுபவர் மீண்டும் முருகனிடமே வந்து விடுவார். ''முருக வழிபாடு தமிழ் மக்களின் பரம்பரைச் சொத்து; அந்த வழிபாடு மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழ் மக்கள் இதயத்தைக் கொள்ளை கொண்டுள்ளது. நம்முன்னோர் இறுதியில்லாத நீலவானத்தைத்தான் நீலத் தோகை விரித்தாடும் மயில் என்று உருவகப் படுத்தினார்கள்; எங்கும் நிறைந்த கடவுள் தத்துவத்தையே முருகன் என்று உருவகப்படுத்தினார்கள். அந்த முருகனை அழகனாகக் கண்டார்கள்; குமரனாகக் கண்டார்கள்; குழந்தையாகவே கண்டார்கள்'' என்று தம்மையே மறந்து பேசுவார்.

இங்ஙனம் குழந்தையுலகில் புகுந்து பேசும் திரு. தொண்டைமான் அதைவிட்டு வெளியே வர முடியாமல் தவிப்பதைக் காணலாம். மீண்டும் தொடர்வார்: ''முருகனைப் பற்றி எண்ணும்போதெல்லாம் அவனைக் குழந்தையாகவே கருதினார்கள். அவன் சூரனையே கொன்ற பெரிய சூரனாகவே இருக்கலாம்; கடலைச் சுவற அடித்த வேலனாகவே இருக்கலாம்; மலையைப் பிளந்த மைந்தனாகவும் இருக்கலாம். வள்ளிக்கு வாய்த்த நல்ல மணாளனாகக் கூட இருக்கலாம். இருந்தாலும் பக்தர்களின் கண்களுக்கு அவன் சின்னஞ்சிறு பிள்ளைதான் எப்போதும். வல்வேல் முருகனை, மாலோன் மருகனை, மன்றாடி மைந்தனை அப்படிக் குழந்தை முருகனாகப் பார்ப்பதில்தான் ஓர் அழகு! அந்த அழகில் தானே பக்தர்களும் கவிஞர்களும் சொக்கி நிற்கின்றார்கள்'' என்று கூறி தம் பேச்சுக்கு முத்தாய்ப்பாக,

சின்னஞ் சிறுபிள்ளை,
செங்கோட்டுப் பிள்ளை,
பொன்னம் மணிப்பிள்ளை,
பூலோகம்எங்கும் புகழும்பிள்ளை,

சொல்நெஞ்சுழல அச்சூரனைக்
கொன்ற சொக்கேசர்பிள்ளை
வன்னக் கிளியன்ன
செந்தில்குறத்திக்கு மாப்பிள்ளையே

என்ற பாடலுடன் தம் உரையை முடிப்பார்.

**நினைவு—2 :** திரு. தொண்டைமானிடம் பேசும் பொழுதெல்லாம் இலக்கிய சல்லாபந்தான். அதுவும் கம்பனிடம்தான். கம்பனின் இராமகாதையில் ஈடுபடு பவர் அவனுடைய சில தனிப்பாடல்களிலும் உள்ளம் பறி கொடுத்துப் பேசியதை அநுபவித்திருக்கின்றேன். இப்படி அவர் அநுபவித்த பாடலை ஒரு சமயம் என்னிடம் (எங்கு எப்போது என்பது நினைவில்லை) பேசி அநுபவித்தார்; என்னையும் மெய்மறக்கச் செய்து விட்டார். பாடல் தனிப் பாடலாக இருந்தாலும் அதற்கு ஒரு சூழ்நிலையை உரு வாக்கி, அந்தச் சூழ்நிலையில் அப்பாட்டு பிறந்த வரலாற்றை ஒரு கதைபோல் கூறி நம்மை மகிழ்விப்பார். இது திரு. தொண்டைமானுக்கு ஒரு கைவந்த கலை. நாங்கள் பேசிக்கொண்டிருந்த போதே, ''மிஸ்டர் ரெட்டியார், கம்பனைப்பற்றி ஒருவரலாறு உண்டு. அஃது உங்கட்குத் தெரியுமா?'' என்று தொடங்கியவர் அந்தக் கம்பன் செய்த ஒரு பயணத்தைப்பற்றிக் கூறத் தொடங்கி விட்டார் பாட்டி பேரனுக்குக் கதை சொல்வதுபோல. ''கம்பன் ஒரு சிறு கிராமத்தை நோக்கிப் பயணம் புறப் பட்டான். அவன் சென்றஇடம்எல்லாம் நமது மூதாதையர் நமக்குக் கொடுத்த தமிழ்ச் செல்வங்களையெல்லாம் பிறருக்கு வாரி வழங்கி வந்தான். இந்தப் பயணத்தில் அவனது 'மடக்கு' தொலைந்து போய்விட்டது. 'மடக்கு' என்றால் கத்தியும் எழுத்தாணியும் சேர்ந்த ஓர் ஆயுதம். பழைய காலத்தில் பனையோலையில் எழுத்தாணி கொண்டுதானே எழுதி வந்தார்கள்? அந்தக் காலத்தில் தாளும் பேனாவும் இல்லையல்லவா?''

''கம்பன் வைத்திருந்த மடக்கு'' நல்ல துவைச்சல் கொடுத்துச் செய்யப்பட்டது. இங்ஙனம் துவைச்சல் கொடுத்து மடக்கு செய்யும் கருமான்கள் இங்கொருவரும் அங்கொருவருமாகத்தான் இருந்தார்கள். அக்காலத்தில் மடக்கு அரியபொருள். இதற்குச் சந்தனம் பூசி மாலை சாத்தி வழிபடும் வழக்கம் கூட இருந்தது (இப்படிக் கூறிய போது நான் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் படித்த காலம் நினைவிற்கு வந்தது. ஆசிரியர் இலிங்கச் செட்டியார் ஏட்டில் எழுத்தாணி கொண்டு எழுதியதும் அந்த எழுத்தாணி சரசுவதி பூசையன்று சந்தனம் பூசி மாலை சூட்டி வழிபட்டதையும் கண்ட காட்சி எனக்கு நினைவிற்கு வந்தது). கம்பன் காஞ்சி மாநகருக்கு அருகிலுள்ள மாவண்டூருக்கு வந்து சேர்ந்தான். மடக்குத் தொலைந்த செய்தியைக் கருமானிடம் சொன்னான். கருமானும், 'அப்படியா! கவலை வேண்டா. நாளையே புதிதாக ஒன்றைச் செய்து தருவேன்' என்றான். கம்பனுக்கோ ஐயப்பாடுதான். '' 'நாளை' என்றால் குறைந்தது ஓராண்டாவது ஆக வேண்டாவோ? இஃது அவர்களுடைய குலதர்மத்திற்கே விரோதமல்லவா?'' என்று எண்ணினான் (நான் நாட்டுப் புறத்திலிருந்து வந்தவனாதலால் கிராமத்தில் தச்சர்களும், கொல்லர் களும் சொல்லும் 'வாக்குறுதிகளை' நான் நன்கு அறிந் திருந்தேன்). ஆனால் இந்தக் கருமான் அரிச்சந்திரன் வமிசத்தவன் போலும். மறுநாளே முதல் நாள் சொன்ன படியே புதிய மடக்கு ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்து விட்டான் கருமான். நல்ல தந்தப்பிடி. நல்ல துவைச்சல், கம்பனுக்கோ அளவற்ற திருப்தி. ஓலையிலே எழுதிப் பார்த்தான். அது நன்றாக எழுதிற்று. உடனே கம்பன் கருமானுக்குச் 'சான்றிதழ்' வழங்கினான். சான்றிதழ் ஒருபாடல் தான்.'' என்று கூறியவர் ''சான்றிதழை உரைநடையில் தருகின்றேன்'' என்று தொடங்கி விட்டார்.

''கருமானின் பெயர் சிங்கன் (நரசிங்கன் என்பதன் குறுக்கம் போலும்). மாவண்டூர் நத்தத்தில் அவனது உலைக்களம் இருந்து வந்தது. அவனது உலைக்களத்தில் யாரெல்லாம் வந்து தவம் கிடந்தார்கள் தெரியுமா? ஆழியான்—சக்கரப் படையை ஏந்திக் கொண்டிருக்கும் திருமால். துட்டர்களைநிரசிக்க வேண்டும், அதற்குக்கூர்மை யான சக்கரப்படை வேண்டாமோ? அதற்காகச் சக்கரம் செய்து தருமாறு வேண்டி நிற்பான், ஒருபுறம். பரமசிவன் மற்றொருபுறம் நிற்கின்றான். பகைவர்களை ஒழிப்பதற்கு மொட்டை மழு ஒன்றிருந்தால் போதும்; விரைவாக மழு வொன்றைத் தட்டிக் கொடுக்குமாறு வேண்டுகின்றான். இவனுடைய அருமை மகன் சின்ன முருகன் துடிப்பாக நிற்கின்றான். குன்றினுள் இருக்கும் சூர்பதுமனை ஒழித்துக்கட்ட வேல் ஒன்று வேண்டும். இது மிக அவசர மான காரியம். 'எனக்கு வேல் ஒன்று அடித்துக் கொடுத்து விட்டு மறுகாரியம் பார்' என்று துடித்து நிற்கின்றான் கோழிக் கொடியோனான குமரப்பன். அடுத்து வருபவன் நான்முகன்; நம் தலையில் நமது தலையெழுத்தைப் பொறிக்கும் பணி அவனுக்கு. இவனது அவசரமோ சொல்ல முடியாது. குடும்பக் கட்டுப்பாடு இல்லாமல் 'புலபுலவென கலகலவென' குழந்தைகள் பிறந்த வண்ணம் உள்ளார்களே அவர்களின் தலையெழுத்தை உறுதியிட வேண்டாமா?'' என்று கூறுவார்.

தொடர்ந்து ''இவ்வளவும் நடைபெறுவது எங்கே தெரியுமா? மாவண்டூர் சிங்கன் உலைக் களத்தில் தான். வீட்டிலிருந்துகொண்டு கட்டளையிட்டால் வேலைகள் நடைபெறுமா? எல்லோரும் உலைக்களத்திற்கு ஓட வேண்டும்; திருமாலின் செவ்வரியோடிய திருக்கண் களிலும், பரமனது நெற்றிக் கண்ணிலும், நான்முகனின் எட்டுக் கண்களிலும் உலைக்களத்தின் தீப்பொறி விழ வேண்டும். விழுந்து உறவாடத்தானே செய்யும். இனி பாவடிவில் அமைந்த சான்றிதழைப் பார்ப்போம்.

ஆழியான் ஆழி
அரன்மழுத்தான் என்பான்
கோழியான் குன்றுஎறிய
வேலென்பான்—ஊழியான்
அங்கை எழுத்தாணி
அருள்என்பான் மாவண்டூர்
சிங்கன் உலைக்களத்தே
சென்று.

என்பது பாடல். இப்படிக் கம்பனால் மட்டிலும் தான் பாட முடியும்'' என்று கூறி என்னை மகிழ்வித்தார்.

**நினைவு—3 : 1959**-மார்ச்சு என நினைக்கின்றேன். திருநெல்வேலி இந்து கல்லூரி உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திரு. நவநீதக் கிருட்டிணன் என்ற என் அருமை நண்பர் தமது பள்ளி மாணவர் மன்ற ஆண்டு விழாவில் சொற்பொழிவாற்ற என்னை அழைத்திருந்தார். இவர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக அதிபர் அமரர் வ. சுப்பையா பிள்ளையின் நெருங்கிய உறவினர். அச்சேறாமல் காத்துக்கிடந்த 'கவிதையநுபவம்' என்ற நூலின் கைப்படியையும் அதற்குரிய ஏழு வரை படங்களையும் என்னுடன் எடுத்துச் சென்றிருந்தேன். திரு. நவநீதக் கிருட்டிணன் பரிந்துரையால் கழக வெளியீடாக இதனைக் கொண்டு வரலாம் என்று எண்ணினேன்.

நான் தங்கவும் உணவு கொள்ளவும் ஒரு விடுதியில் ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. விழா அன்று காலையிலேயே நெல்லை அடைந்தேன். விழா முடிந்து மறுநாள் அலைவாய் அண்ணலைச் செந்தில் குமரனைச் சேவிக்க வேண்டும்என்ற பேராவல் என் உள்ளத்தில் இருந்தது. அன்று காலையில் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு நானும் திரு. நவநீத கிருட்டிணனும் எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை பதிப்பகம் சென்றோம். அதன்

அதிபர் திரு சங்கையா பிள்ளையைப் பார்த்தோம். ''நாளை செந்தில் வேலனைச் சேவிக்க நினைத்திருக் கின்றேன். உங்கள் மகிழ்வுந்து தந்து உதவினால் வசதி யாகச் சென்று முருகனைச் சேவித்துத் திரும்ப முடியும்'' என்றேன். திரு சங்கையாபிள்ளை தருவதாக ஒப்புக் கொண்டார். அன்று நண்பகல் தம் வீட்டில் விருந்தினனாக இருக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். விருந்துண்டு என் அறைக்குத் திரும்பினேன்.

அன்று மாலை 3-மணிக்குப் பள்ளி மாணவ மன்ற ஆண்டு விழாவில் பேசினேன். விழா இனிதாக நிறை வேறியது. விழாவிற்குத் திரு. சங்கையா பிள்ளையும் வந்திருந்தார். அப்போது திருபிள்ளை ''நாளை சிரீவை குண்டம் உயர்நிலைப்பள்ளி ஆண்டு விழாவில் திரு. தொண்டைமான் பேசுகின்றார். பேராசிரியர் அ. சீநிவாசராகவன் விழாவிற்குத் தலைமை ஏற்கின்றார். திரு. தொண்டைமானும் மகிழ்வுந்து கேட்டுள்ளார். நீங்கள் போகும்போது திரு. தொண்டைமானை சிரீவை குண்ட உயர்நிலைப் பள்ளியில் இறக்கிவிட்டுச் திருச்செந்தூர் சென்று முருக சேவையை முடித்துக் கொள்ளுங்கள். நம்முடையமகிழ்வுந்தைப் பார்த்ததும்குருக்கள் உங்களைக் கவனித்துக் கொள்வார். நீங்கள் காலை 8-30க்குத் தயாராக இருங்கள்'' என்று சொல்லி வைத்தார்.

காலை 8-30க்குத் தயாராக இருந்தேன். திரு, தொண்டைமானையும் பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டரையும் ஏற்றிக் கொண்டு மகிழ்வுந்து நான் தங்கி யிருந்த விடுதிக்கு வந்தது. நானும் வண்டியில் ஏறிக் கொண்டேன். கவிதையநுபவத்தின் கைப்படியையும் அவற்றிற்குரிய ஏழு படங்களையும் திரு. தொண்டைமா னின் பார்வைக்காக எடுத்துச் சென்றேன். மகிழ்வுந்தில் செல்லும் பொழுதே நூலைப் பற்றிச் சிறிது கூறினேன். '''கவிதையநுபவம்' நம்மிடம் ஏற்படும் போது உடலிலும்

சில மாறுதல்கள் உண்டாகின்றன. திருவாசகப் பாடல் களை ஓதும் போது 'மெய்ம் மயிர் சிலிர்ப்ப, விதிர் விதிர்ப் பெய்தி, கருங்கல் மனமும் கரைந்துருகக், கண்கள் தொடு மணற் கேணியின் சுர்ந்து நீர் பாயும்' என்று கூறப் பெறு கின்றது.

வான்கலந்த மாணிக்க
வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்

என்பது இராமலிங்க வள்ளலின் திருவாக்கு. இங்கு 'உள்ளம் கலந்து பாடுதல்' முக்கியமானது. அப்பொழுது தான் கவிஞனின் இதயம் படிப்போரின் இதயத்தைத் தொட்டு விடுகின்றது. நாம் கவிதையைப் படித்துத் துய்ப்பது 'தூண்டல்—துலங்கல்' (Stimulus-Response) தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. வெளியுலகி லுள்ள பொருள்கள் நம்புலன்களைத் தூண்டுவதனால் தான் நாம் செய்திகளை அறிந்து கொள்ளுகின்றோம். இவை தூண்டலை எழுப்பும் அடையாளங்களா கின்றன, நம்முடைய கண்கள் அச்சிட்ட கவிதை யின் சொற்களைப் பார்க்கின்றன. கவிதையை வாய்க்குள்ளும் படிக்கின்றோம்; வாய் விட்டும் படிக்கின் றோம். கண்ணின் மூலமும் காதின் மூலமும் ஏற்படும் தூண்டல்கள் நம் மூளையை அடைகின்றன. நாம் கவிதையின் பொருள்களை— கருத்துகளை— அறிகின் றோம். நம் மனத்தில் பல்வேறு எண்ணங்கள் எழுகின்றன. இவை தம்மொடு தாமாகக் கலந்து தொகுதிகளாகிப் பிற எண்ணங்களுக்கும் குறியீடுகளாக அமைகின்றன. இவை யாவும் பெருமூளையின் புறணியில் (Cerebral cortex) நடைபெறுபவை. நம் மூளையிலுள்ள ஒருபகுதியாகியமேற் பூத்தண்டு(Hypo-thalamus)உள்ளக்கிளர்ச்சிநிலையில்பங்கு கொள்கின்றது என்பதை ஆய்வுகளால் கண்டறிந் துள்ளனர். உள்ளக் கிளர்ச்சிபற்றிப் பல கொள்கைகளும்

எழுந்துள்ளன. இவற்றையெல்லாம் ஒருங்கு வைத்து எண்ணினால் ஓர் உண்மை புலனாகின்றது.'' என்று கூறினேன்.

மேலும் தொடர்ந்து, ''கவிதையைப் படித்து அதிலுள்ள செய்திகளைப் பெருமூளை அறிந்ததும் அங்குத் தோன்றும் எண்ணங்களும் எண்ணக் கோவைகளும் மேற்பூத் தண்டைத் தூண்டி அதன்மூலம் தன்னாட்சி நரம்பு மண்டலத்தை இயக்குகின்றன. இம்மண்டலத்தின் இயக்கத்தால் சுரப்பிகள் (Glands) தூண்டப்பெறுகின்றன. அவற்றின் சாறுகள் குறிப்பாக மாங்காய்ச் சுரப்பிகளின் (Adrenal glands) சாறுகள் குருதியோட்டத்தின் கலந்து உடலெங்கும் உணர்ச்சி அலைகளை எழுப்புகின்றன. வாழ்க்கையநுபவத்தில் இவ்வுணர்ச்சிகள் ஏற்படுங்கால் இத்தகைய உடல் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பது உளவியல் காட்டும் உண்மை. வெகுளிச்சுவை, அவலச் சுவை, மருட்கைச்சுவை போன்ற சுவைகள் உள்ள கவிதை களைப் படிக்கும்பொழுது அவற்றால் பெறும் செய்திகள் பெருமூளையில் பல்வேறு எண்ணக் கோவைகளை எழுப்பி மேற்குறிப்பிட்ட நிலைமைகளை உண்டாக்குகின்றன என்று ஊகம் செய்யலாம். இதனால்தான் கவிதை யிலுள்ள கவிஞனின் உணர்ச்சிகள் நம்மிடமும்எழுகின்றன. உண்மையான கவிதையநுபவமும் நம்மிடம் உண்டா கின்றது. இத்தகைய முடிவுக்குக் கொண்டு செலுத்தக் கூடிய பல்வேறு கருத்துகளை நூலின் முதற்பகுதி ஆராய் கின்றது. உடலியல், உளவியல் பற்றிய கருத்துகள் பெரும் பான்மையான வாசகர்கட்குப் புதியனவாக இருக்கக் கூடுமென்று கருதி அவை சற்று விரிவாகவும் விளக்கமாக வும்--இந்நூலுக்கு அவை இடைப்பிறவரலாக இருக்குமோ என்று கூடக் கருதும் அளவுக்குக்—கூறப்பெற்றுள்ளன. இக் கருத்துகளைப் படங்களும் விளக்குகின்றன. இந்த நூலினைப் படிப்பவர்கள் நூலின் இப்பகுதியை ஒரு முறைக்குப் பலமுறை ஊன்றிப் படித்து அக்கருத்துகளைத்

தெளிவாக உளங்கொண்டால்தான் 'கவிதையநுபவம்' ஏற்படும். அடிப்படைக் கருத்துகளை நன்றாகப் புரிந்து கொள்ள இயலும்'' என்று கூறிமுடித்தேன்.

மகிழ்வுந்தில் போகும்போதே இக்கருத்துகள் கூறப் பெற்றன. திரு. தொண்டைமான் நூலின் முற்பகுதிகளின் பல ஏடுகளைப் புரட்டிப் பார்த்தார்கள்; படங்களையும் நன்கு உற்று நோக்கினார்கள். இறுதியாக, ''நூல் ஒரே அறிவியல் மயமாக இருக்கின்றதே. இக்கருத்துகள் மனத்தில் ஏற்றிக்கொண்டு கவிதைகளைப் படித்தால் கவிதையநுபவம் காற்றாகப் பறந்து விடும்போல் தோன்று கின்றது'' என்று அவருக்கே உள்ள முறையில் சிரித்துக் கொண்டே கூறினார்கள். திரு. தொண்டைமானிடம் நன்றாகப் பழகும் போதுதான் அவருடைய தூய்மையான உள்ளத்தில் எழும் அபிப்பிராயங்களைப் புரிந்து கொள்ள முடியும். கள்ளம் கபடமற்ற பேச்சின் சாரத்தையும் உணர்ந்து கொள்ள இயலும். அருகிலிருந்த பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் ''ஆமாம் உண்மைதான். நம் ரெட்டியார் எதைப் பேசினாலும் எழுதினாலும் அவருடைய அறிவியல் கருத்துகள் முந்திரிக் கொட்டை போல் முன் நின்று கவிதை யநுபவத்தைக் காற்றில் பறக்கச் செய்கின்றது'' என்று ஒத்து ஊதினார். இப்படிப் பலர் ஒரு பெரியவரைச் சுற்றியிருந்து முகத்துதிபாடி அவருடைய சிந்தனையை மழுங்க வைத்து விடுகின்றனர். அப் பெரியவரும் தாம் கூறியவையே சரி என்ற ஒரு பிரமையை (மயக்கத்தை) அடைந்துவிடுகின்றார். இதனை அன்றாட வாழ்க்கையில் பலரிடம் காணலாம். இத்தகைய வீர வழிபாடு (Hero-worship) பலருடைய வாழ்க்கையில் காணலாம்.

நான் சொன்னேன்: ''ஓவல்டின்'' என்ற ஒரு பானம் உண்டல்லவா? இது பருகுபவர்கள் அனைவருக்குமே இன்பத்தை நல்குவது. என்றாலும், அப்பானத்தில்

இன்னின்ன சத்துகள் சேர்ந்துள்ளன என்றும், அச்சத்து களின் அடிப்படைத் தன்மைகள் இவை என்றும் புரிந்து கொண்டு அதனைத் துய்த்தற்கும், ஒன்றுமே அறியாமல் ஒவல்டினைப் பருகித் துய்த்தற்கும் வேறுபாடு உண்டு; அவ்வேறுபாடு தரத்தில் உள்ளது. சத்துகளின் தன்மை களை அறிந்து கொண்டு ஒவல்டினைத் துய்த்தலால் சுவையநுபவம் மிகுமேயன்றிக் குன்றிப் போவதில்லை.''

''இன்னோர் எடுத்துக் காட்டைத் தருகின்றேன். ஒரு மகிழ்வுந்தினை அதன் பொறி நுட்பம் முதலியவற்றை நன்கு அறிந்து கொண்டு கடவுவதற்கும், ஒன்றுமே அறியாது இயக்கும் முறைகளை மட்டிலும் அறிந்து கொண்டு கடவுவதற்கும் வேறுபாடு இல்லாமல் இல்லை. இதனை அநுபவத்தால் அறிய முடியுமேயன்றித் தருக்க முறையால்,— வாதமுறையால்— அறிந்து கொள்ள முடியாது.''

''மற்றுமோர் எடுத்துக்காட்டு. மருத்துவர் ஒருவர் உடற் கூற்றினை நன்கு அறிந்து கொண்டு சிக்கலான பிரசவத்தின்போது வயிற்றைக் கிழித்துக் குழந்தையை எடுக்கின்றார். இப்படிக் கிழிக்காமல் கருவாயிலேயே சிறுசிறு அறுவை முறைகளைக் கையாண்டு பெண்ணைப் பிரசவிக்கச் செய்கின்றார். இம்முறைகளால் தாயும் சேயும் காப்பாற்றப் பெறுகின்றனர். இதனால் அந்த மருத்துவர் 'காயமே இது பொய்யடா; காற்றடைத்த பையடா' என்று சொல்லிக் கொண்டு துறவியாகி விடுவதில்லை. தன் மனைவியிடம் காதல் உண்டாகின்றது. இல்லற இன்பத்தில் ஈடுபடுகின்றார். மகப்பேறும் உண்டா கின்றது.''

''பிறிதுமோர் காட்டு. ஏன் அங்கும் இங்கும் போக வேண்டும். நம்முன் உள்ள திரு. தொண்டைமானை எடுத்துக் கொள்வோம். இவர் பரமபக்தியையுடையவர் என்பதை மறுத்தற்கில்லை. 'வேங்கடம் முதல் குமரி

வரை' உள்ள பல திருக்கோயில்களை வழிபட்டிருக்கின்றார். கோயில் கலையை ஆராய்ந்துள்ளார். சிற்பக் கலையை வடித்துக் காட்டுகின்றார். தஞ்சையிலுள்ள 'சிற்பக் கூடம்' இவர்தம் அழியாப் புகழ் பெற்ற அற்புதப் படைப்பு. 'கல்லும் சொல்லாதோ கவி' என்ற கருத்தை பல அற்புதப் பாடல்கள் மூலம் காட்டுவார். கண் கண்ட தெய்வத்தைக் கல்லிலே இருப்பதை நமக்குக் காட்டுவார். கல்லில் உருவான கற்பனையை நமக்கு விளக்குவார். நாணமும் பெண்மையும் கல்லிலே இருப்பதைக் காட்டி மகிழ்வார். காதலும் புலவியும் கல்லிலே இருக்கும் நுட்பத்தை நமக்குக் காட்டுவார். இங்ஙனம் கலைகளின் நுட்பங்களை எல்லாம் அறிந்த இவர் கோவிலில் உள்ள மூர்த்திகளின் அழகில் மூழ்கித் தம்மையே மறந்து விடுவார். இவ்வளவு அறிவு நுட்பத்தைக் 'கருவிலே திருவுடையவருக்கு' பக்தி குறைந்து விடும் என்று சொல்ல முடியுமா?''

''இறுதியாக ஒன்று சொல்வேன். எல்லாவித அறிவியல் உண்மைகளை அறிந்து கொண்டு ஆண்டவனின் படைப்புத் திறனை உணர்வதற்கும், வெறும் கற்பனையிலேயே உணர்வதற்கும் வேறுபாடு உண்டு. ஐன்ஸ்டைன் என்ற அறிவியல் மேதை உண்மையான அறிவியலறிஞன் தான் ஆண்டவன் படைப்பின் விந்தையையும் சமயங்களின் உண்மைகளையும் நன்முறையில் உணரமுடியும்'' என்பார்.

திரு. தொண்டைமான் என் பேச்சை கூர்ந்து கவனித்தார். நான் ஆய்ந்து வெளிப்படுத்தும் கருத்துகளில் கவர்ச்சியுற்றார். பின்னர், ''மிஸ்டர் ரெட்டியார், நீங்கள் கூறிய அனைத்தும் எனக்கு உடன்பாடே. நான் வருவாய்த் துறை ஆய்வாளர் பதவியிலிருந்து இன்று வரை பல நிலைகளில் கொண்ட பதவியின் போதும் பின்னரும் என்னைச் சூழ்ந்திருக்கும் பலர் என்னை உகப்பிக்கும் பொருட்டு நான் சொல்வதெல்லாம் சரி என்று தாளம் போடுவர். இதனால் ஒரு மயக்கம் ஏற்பட்டு நான் சொல்வன எல்லாம்

சரியே என்று நினைத்துக் கொள்வேன். இப்போது இப் பிழையான போக்கை உணர்கின்றேன்'' என்றார். அருகிலிருந்த பேராசிரியர் கவுண்டர் அவர்களும், ''ஆமாம், ஆமாம்; ரெட்டியார் எப்போதும் அறிவியல் வழியே கருத்துக்களை விளக்கும் பழக்கமுடையவர். நமக்குப் புரியும் வண்ணம் விளக்கி விடுவார். அவர் ஒரு அபூர்வப் பிறவி'' என்று தொண்டைமான் கருத்துக்குத் தாளம் போட்டார். இந்த நிகழ்ச்சி இன்றும் என் உள்ளத்தில் பசுமையாகவே உள்ளது.

திரு. தொண்டைமானையும் பேராசிரியர் கு.அருணாசலக் கவுண்டரையும் சிரீவைகுண்டம் பள்ளியின் வாயிலில் இறக்கி விட்டிருக்கும் பொழுதே அவரை வரவேற்கப் பள்ளித் தலைமையாசிரியர் திரு. ஆதிநாதன் தயாராக இருந்தார். திரு ஆதிநாதன் சைதை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் (1940–41) என் ஒரு சாலை மாணாக்கர். அவரைப் பார்த்ததும் பழைய நினைவுகள் ஒன்றன் பின் ஒன்றாக என் மனத்தில் எழுந்தன. செந்தில் நாதனைத் தரிசித்துத் திரும்பும்போது தம் இல்லத்தில் திருவமுது கொள்ள வேண்டும் என்று வேண்டுகோளும் விடுத்தார். சுமார் முற்பகல் 11-மணிக்கு அலைவாய் அப்பனைச் சேவித்தேன்.

மாலோன் மருகனை மன்றாடி
    மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
    தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோ
    டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில
    னேஅந்த நான்முகனே[1]

என்ற பாடல் என் மனத்தில் குமிழியிட்டது.

---

1. கந்தரலங்காரம்—90

தரிசனத்தை முடித்துக்கொண்டு பகல் பன்னிரண்டரை மணிக்குச் சிரீவைகுண்டம் திரும்பினேன். பள்ளி விழா முடியும் சமயம். நன்றியுரை நடைபெறும் சமயம் வந்து சேர்ந்தேன். அன்று விழாவில் கலந்து கொண்ட சுமார் பத்துப் பெரியோர்க்கு திரு. ஆதிநாதன் அளித்த விருந்தில் நானும் கலந்து கொண்டேன்; உண்டபின் ஒரு பத்து மணித்துளிகள் பேராசிரியர் அ.சீநிவாச ராகவனுடன் அளவளாவிக் கொண்டிருந்தேன். சுமார் 2-30க்குத் திருநெல்வேலி திரும்பினோம். அன்று மாலை கவிதை யநுபவத்தின் கைப்படியையும் அதற்குரிய படங்களையும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் சேர்த்து விடுவ தாகக் கூறி, திரு. நவநீதக்கிருட்டிணன் பெற்றுக் கொண் டார். மாலை ஆறு மணிக்குத் நெல்லையை விட்டுத் திரும்பினேன்.

'பரம்பரை வாசனை' என்று சொல்வார்கள். திரு. தொண்டைமானின் பாட்டனார் ஒரு நல்ல புலவர். இவரது தந்தையார் முத்தையாத் தொண்டைமான் திருநெல்வேலி இந்து கல்லூரி—உயர்நிலைப் பள்ளியில் ஓர் ஓவிய ஆசிரியர். நூற்றுக்கணக்கான மாணவர்கள் இவரிடம் ஓவியப் பயிற்சி பெற்று ஓவிய ஆசிரியர்களா யினர் என்று சொல்வார்கள். இந்த நல்ல பரம்பரையில் வந்த திரு. தொண்டைமான் தமிழகம் 'கலைமணி' என்று பாராட்டத்தக்க வகையில் உயர்ந்தது வியப்பன்று. கருவிலே திருவுடைய இப்பெருமகனை டி.கே.சி.யின் வட்டத்தொட்டி ஒரு கலைஞராக, இரசிகராக, இலக்கியப் பண்பாளராக, வளர்த்து விட்டது. இது தவிர, திரு. தொண்டைமான் தமது ஒழுக்கத்தாலும் உழைப்பாலும் நேர்மை தவறாத நெறியைக் கடைப்பிடித்தமையாலும் படிப்படியாக உயர்ந்து மாவட்ட ஆட்சித் தலைவர் (District Collector) என்ற உயர் பதவியையும் எட்டிப் பிடித்தவர். இரசிகமணி டி.கே.சியின் அன்புக்குப் பாத்திர மானவர்; அரசியல் ஞானி அருமை இராஜாஜியின்

ஆசியை நிறையப் பெற்றவர். கம்பனடிப் பொடி சா. கணேசனின் நட்பால், காரைக்குடிக் கம்பன் கழகத் தொடர்பால் இவருடைய புகழ் மேன்மேலும் பரவியது.

நான் திருப்பதியிலிருந்தபோது இவருடைய மணி விழா 1964இல் சீரிய முறையில் கொண்டாடப் பெற்ற தையும் அதன் நினைவாக 'மணிவிழா மலர்' ஒன்று வெளி வந்ததாகவும் இந்து நாளிதழில் செய்தியாக வெளிவந்த தைப் பார்த்து மகிழ்ந்தேன். அதன் பிறகு இவரைப் பற்றிய செய்தி ஒன்றும் எட்டவில்லை. திருப்பதியில் என்னை மறந்து யான் மேற்கொண்ட தமிழ்ப் பணியால் பல பெரியார்களின் தொடர்பை இழக்க நேர்ந்தது. இவர் திருநாடு அலங்கரித்த செய்திகூட ஓராண்டுக்குப் பின்னரே அறிய முடிந்தது. இந்துவில் வந்த இரங்கற் செய்தி எப்படியோ என் கண்ணில் படாமல் போயிற்று.

இன்று என் உள்ளத்தில் இருக்கும் தொண்டைமானை இப்படிச் சொல்வேன்: கறுப்புக்கு ஓர் அழகு உண்டு. 'கிருஷ்ண விக்ரகம்' என்றுதானே சொல்கின்றார்கள்! இவர் திருமேனி 'எண்ணெய் உண்ட இருள்புரை மேனி' (கம்பன் வாக்கு) என்று சொல்லலாம், கலைப் பண்பு நிறைந்த இவர்தம் முகப்பொலிவு எவரையும் ஈர்க்கும் பெற்றியது. காரைக்குடியில் ஆண்டுக்கொரு முறையாக சில ஆண்டுகள் நெருங்கிப் பழகிய கலைமணி—ஏன்? கவிமணியும் கூடத்தான்—திரு. பாஸ்கரத் தொண்டை மானின் முகத்தில் தவழும் கலைஞனுக்கு உரிய செம்மை யான பண்பாட்டின் பொலிவும் ஒளியும் இன்றும் என் மனக்கண்முன் தென்படுகின்றன. அவர்தம் புன்முறுவல் பூத்த திருப்பவழத்தில் வெளிப்படும் கம்பனின் கவியமுதம் என் மனக்காதில் பாய்ந்து இன்பம் தந்து கொண் டிருப்பதனையுட் உணர்கின்றேன்.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. (குறள்—783)

## 25. ஜஸ்டிஸ் டாக்டர் எஸ். மகராஜன்

பண்புடையார் பட்டுண்டு உலகம்; அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன் (குறள்—996).

(1941—50) துறையூரில் பணிபுரிந்த காலத்தில் நான்கு மாவட்ட முனிசீப்புகளின்தொடர்பும், காரைக்குடியில் பணியாற்றிய காலத்தில் ஒரு மாவட்ட முனிசீப்பின் தொடர்பும் ஏற்பட்டன. துறையூரில் தொடர்பு கொண்ட நால்வரிடமும் இலக்கியத்தைச் சுவைக்கும் பழக்கம் இல்லாததால் அவர்கள் தொடர்பு நட்பாக வளரவில்லை; காரைக்குடிக் கம்பன் திருநாளில் (1949) தொடர்பு ஏற்பட்ட மாவட்ட முனிசீப்புதான் திரு. எஸ் மகராஜன் அவர்கள். அவர்கள் தூத்துக்குடியில் முனிசீப்பாகப் பணியாற்றி வந்தார்கள். அவருடன் அறிமுகமான மற்றொர் அன்பர் வழக்குரைஞர் A. C. பால்நாடார் அவர்கள். பின்னவரிடம் பழகினவரையில் அவர் உள்ளம் பால் போன்றிருந்தமையைக் கண்டேன். பெயர்ப் பொருத்தம் சரி என்று பட்டது என் மனத்திற்கு. உண்மையான, உள்ளத்தூய்மையான கிறித்தவர் ஒருவரின் தோழமை பெற்ற பேற்றால் என் உள்ளம் நிறைவு கொண்டது. ஆனால் அவரைக் காரைக்குடியில் அடிக்கடிச் சந்திக்கும் வாய்ப்பு பெறவில்லை. ஆனால், திரு மகராஜன் அவர்களை அடிக்கடிச் சந்திக்கும் வாய்ப்பு இருந்தது. அக்காலத்தில் நான் கம்பனையும் வில்லியையும் துய்ப்பதுடன் அதிகமாக என் மனம் ஈடுபட்டிருந்தது கல்வியியல், உளவியல்,

அறிவியல் (சிறப்பாக அணுவியல், உடலியல்) என்ற துறைகளில்தான். திரு. மகராஜன் இத்துறைகளில் நான் அதிகமாக ஈடுபட்டதைக்கண்டு வியந்தார்;இவற்றில் நான் நூல்களை படைத்து வருவதைப் போற்றினார்; உற்சாகப் படுத்தினார். அவரிடம் தனிமையில் உரையாடினபோதுதான் இலக்கியத்திலும் சமயத்திலும், அறிவியலிலும் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டைக் காண முடிந்தது.

**நினைவு-1** : கம்பராமாயணத்தில் ஆழங்கால் பட்டு வெளிவரும்போது நம் உள்ளத்தில் மிஞ்சி இருப்பதைப் பற்றி அவர் கூறுவார்: ''மனிதனுடைய சிறுமையைப்பற்றிய உணர்ச்சியல்ல; மனிதனுடைய புன்மையைப் பற்றிய உணர்ச்சியுமல்ல. மனிதனுடைய நிலையாமையைப்பற்றிய உணர்ச்சியும் அல்ல. 'மனித ஆன்மா எவ்வளவு மாண்புடையதாயிருக்கின்றது. மனிதனுடைய ஆற்றல் எப்படிக் கங்குகரையற்று இயங்குகின்றது!' என்ற வியப்பும் தன்னம்பிக்கையும் மேலோங்கி நிற்கின்றன!' கம்பராமாயணம் நமக்கு அவ்வளவு மன நிறைவினைத் தருகின்றது'' என்று வியந்து கூறுவார்.

திரு. மகராஜனுக்கு ஆங்கில இலக்கியத்திலும் அதிக ஈடுபாடு உண்டு. செகப்பிரியரின் நாடகங்களை நன்றாகப் படித்து அநுபவித்தவர். அந்த நாடகங்களில் வரும் கதைமாந்தர்களின் பண்பைப் பாராட்டிப் பேசுவார். ''மனிதன் என்ற பொருள் என்ன வேலைப்பாடு நிறைந்தது! அவனுடைய பகுத்தறிவின் மாட்சிதான் என்ன! அவனுடைய அறிவுத்திறன் எவ்வாறு எல்லையற்று இயங்குகின்றது! உருவத்திலும் இயக்கத்திலும் என்ன சிறப்பு! செயலிலே கந்தர்வனைப் போலிருக்கின்றானே! உணர்விலே தெய்வத்தை ஒத்திருக்கின்றானே! உலகத்திற்கோரழகு! விலங்கினத்தின் வெற்றி!'' என்று ஹேம்லெட்வாக்கில் செகப்பிரியர் வியப்பதைக் காட்டுவார். இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போதே கம்பனுக்கு வந்து விடுவார், ''கம்பன் கண்களைக் கொண்டு மனிதனைப் பார்க்கும்

போது, மனித இனம் இன்னும் ஒரு படி உயர்ந்து விடுகின்றது. செகப்பிரியரின் சிறந்த பாத்திரங்கள்கூட குற்றங் குறையுள்ளவர்களாக இருப்பர். ஆனால் கம்பனுடைய காவியமாந்தர்கள் (Epic characters) இலட்சிய மாந்தர்களாய், பூர்ண நிறைவு பெற்றவர்களாய், மானிட சாதிக்கே பெருமை தேடிக் கொடுப்பவர்களாய், அமைந்துள்ளனர்'' என்று காட்டுவார். இரு பெருங்கவிஞர்கள் படைத்த கதை மாந்தர்கள், காவிய மாந்தர்கள் ஆகிய இருவரையும் ஒப்பாய்வு செய்வதற்கு நமக்கே விட்டு விடுவார்.

கம்பன் படைத்த காவிய மாந்தர்களில் பல எடுத்துக் காட்டுகளையும் தருவார். ஒன்றை மட்டிலும் ஈண்டுக் காட்டுவேன். ''இராமலட்சுமணர்கள் ஒரு மலையின் உச்சியில் நின்று கொண்டுள்ளனர். அவர்களுடைய பண்பு நலங்களையெல்லாம் அநுமன் வாயிலாகக் கேட்ட சுக்கிரீவன் அவர்களை ஆர்வத்தோடு சந்திக்க வருகின்றான். ஒரு மூலை திரும்பியவுடன் அவர்களுடைய உருவம் திடீரென்று கண்ணுக்குப்படுகின்றது. உடனே அவர்களுடைய உருவ அழகில் சொக்கி அப்படியே நின்று விடுகின்றான், இறைவன் படைப்பில் இப்படியும் உண்டா என்று வியப்பு அடைகின்றான், ஏதோ திருமால் என்றும், சிவன் என்றும், நான்முகன் என்றும் நாமங்களைச் சூட்டித் தெய்வங்களை வணங்குகின்றோமே, அந்தத் தெய்வக் கூட்டங்களை யெல்லாம் மானிடச் சாதி வென்று விட்டது என்று தோன்றுகின்றது சுக்கிரீவனுக்கு.

ஆறுகொள் சடிலத் தானும்
  அயனும் என்(று)இவர் களாதி
வேறுள குழுவை யெல்லாம்
  மானிடம் வென்ற தம்மா[1]

என்று போற்றுகின்றான்'' என்று கூறுவார். இத்துடன் நிறுத்தாமல் விளக்கமும் தருகின்றார், ''அப்படியானால்

1. கிட்கிந்தை—நட்புக்கோள்—18.

மானிடப் பிறவி கிடைத்ததனாலேயே வெற்றி கிடைத்து விட்டதா? இல்லை. கம்பன் அப்படிச் சொல்லவுமில்லை. அப்படிச் சொல்லியிருந்தால், அது வெற்றுரையாக முடிந் திருக்கும். மானிடப்பிறவி நமக்கு அரிய வாய்ப்புகளை நல்குகின்றது; அந்த வாய்ப்புகளை உரிய முறையில் நாம் பயன்படுத்துவோமேயானால் பரிபூரணத்தையே தொட்டு விடலாம். தேவர்களையும் வென்று விடலாம் என்பதையே பல கோணங்களிலிருந்து வற்புறுத்திக் காட்டுவான் கம்பன்'' என்பார்.

**நினைவு -2 :** ஒரு சமயம் (உயர்மன்ற நீதிபதியாக உயர்ந்த பிறகு) அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, ''ஐயா, தாங்கள் கம்பனிலே தோய்ந்து அவனது கவிதைக் கடலில் மூழ்கி முத்தெடுத்துக் காட்டிக் கொண்டிருக் கின்றீர்களே, வள்ளுவர் பற்றி அதிகமாகப் பேசுவ தில்லையே. ஏன்?'' என்றேன். உடனே ஆரம்பித்து விட்டார். வள்ளுவரின் 'சொல்லாட்சி' பற்றிப் பேசத் தொடங்கி விட்டார். எத்தனை எடுத்துக்காட்டுகள்!

''வள்ளுவரைப் போன்ற சிறந்த கவிஞன் வெண்பா அல்லது விருத்தப் பாவினுள்ளே பூர்ண சுதந்திரத்தோடு நடமாடலாம். ஒவ்வொரு விருத்தத்திலும் நான்கு அடிகள்; ஒவ்வோர் அடியிலும் எத்தனையோ சீர்கள்; எதுகை, மோனை கவரி வீச, நீண்டு விரிந்த சீர்கள் அணி வகுத்து நிற்க, உணர்ச்சி பாவத்தோடு தமிழ்ச் சொற்கள் நடன மாட, கவிஞன் இராஜ கம்பீரத்தோடு, நான்கு வீதிகளும் சுற்றிப் பவனி வரலாம்; நிற்க வேண்டிய இடங்களில் நின்றும், துரித வேளைகளில் துரிதமாகச் சென்றும் காட்சி கொடுக்கலாம். இத்தகைய வசதிகளையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, வளமான பாவினங்களையெல்லாம் துறந்து, ஒன்றே முக்கால் அடிக் குறள் ஊசி முனையிலே, ஒற்றைக் காலில் நின்று காட்சி தருகின்றார், தியாக மூர்த்தியான வள்ளுவர்.'' ''இவ்வளவு கட்டுப்பாடும் துன்பமும் அடக்க

மும் தேவையா என்றுகூட நாம் வள்ளுவரைப் பார்த்து அனுதாபப்படுகின்றோம்'' என்று ஒரு போடு போட்டார்.

தொடர்ந்து கூறுவார் : ''ஆனால் வள்ளுவர் மெய் யுணர்வு பெற்ற ஞானி. கட்டுப்பாட்டின் மூலந்தான் மனிதன் உண்மையான வல்லமையைப் பெறலாம் என்று நமக்குத் தெரிவித்தவர். சொல்லினால் செய்த தவம், அவருக்கு மாத்திரமன்று, தமிழ் மொழிக்கே என்று மில்லாத சொல்லாட்சித் தன்மையைக் கொடுத்து விட்டது.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு (குறள்—269)''

என்று,

வள்ளுவரின் சொல்லாட்சியைப் பற்றி ஜஸ்டிஸ் மகராஜன் மேலும் கூறுவது நம்மைத் திகைக்க வைக்கின்றது. ''வள்ளுவர் என்ன செய்தார்? தமிழுக்கு அற்புதமான குரலைக் கொடுத்தார். தமிழுக்கு நடை பழக் கினார்; தமிழ்ச் சொல்லுக்குத் தெளிவும், ஒளியும் கொடுத்தார். வேகமும் பொருள் வலிமையும் தந்தார். மின்சாரக் கம்பி இவ்வளவு 'லோட்' (Load) தான் தாங்கும் என்ற கணக்குண்டு; தமிழ்ச் சொல்லுக்கு இவ்வளவு பாரம் தாங்கலாம், இவ்வளவு வேகந்தான் ஏற்றுக் கொள்ளலாம் என்ற ஒரு வரம்பும் உண்டு'' என்று விளக்குவார்.

தொடர்ந்து, ''சாதாரணமாக, நாம் தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தும்போது கால் வேகம், அரைக் கால் வேகம்தான் கொடுக்க முடியும். கம்பனைப் போன்ற பெருங் கவிஞர்கள் முழு வேகத்தோடு பேசும்படிச் செய்வார்கள். ஆனால், வள்ளுவர் கையிலே ஒன்றேகால் வேகத்தோடு தமிழ்ச் சொல் பேசுகின்றது; ஏது, பொருள் சுமை பொறுக்க மாட்டாமல், சொல்லின் இடை நொடிந்து விடுமோ, சொல் சப்பழிந்து போகுமோ,

மூச்சு விட்டுவிடுமோ என்ற பயம் ஒவ்வொரு குறளையும் படிக்கும்போதும் நமக்கு ஏற்படுகின்றது. அவ்வளவு அசாதாரணமான, அமானுஷ்யமான சொல்லாட்சித் திறமை அவரிடத்திலிருக்கின்றது'' என்பார்.

இதனை விளக்குவதற்கு எடுத்துக் காட்டும் தருவார். ''வைர வியாபாரி, வைரத்தை நவநவமான கோணங்களி லிருந்து பார்ப்பான்; உருப்பெருக்கியை (Magnifying Lens) வைத்துப் பார்ப்பான்; எந்தக் கோணத்திலிருந்து பார்த்தால், 'டால்' அதிகமாக அடிக்கும், எந்தக் கட்டுமானம் கொடுத்தால் அதன் முழு ஒளியையும் வெளிப் படுத்தலாம் என்றெல்லாம் ஆராய்ச்சி செய்வான். அதே முறையில் தமிழ்ச் சொல்லை ஆராய்ச்சி செய்தவர் வள்ளுவர். அவருடைய சாந்நித்தியத்திலே, கட்டுக் கடங்காது, திமிறி அலைந்த சொற்களெல்லாம், பயபக்தி யோடு கைகட்டி, வாய்புதைத்து, தலை குனிந்து அவருடைய ஏவலாட்களாகப் பணிபுரிந்தன'' என்று கூறுவார்.

மேலும் பேசுவார்: ''இந்தச் சாதனையை அவர் எவ்வாறு கற்றுக் கொண்டார்? ஒவ்வொரு சொல்லுக்கும் ஓர் எல்லை கட்டி, அதன் அதிகாரம் இவ்வளவுதான் என்று முடிவு கட்டினார்:

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து (குறள்—645)

கருத்தைச் சொல்மூலமாக வெளியிடுவதற்கு முன்னால், என்ன செய்ய வேண்டுமாம்? அந்தக் கருத்தைச் சொல்லத் தெரிந்த, கிட்டத்தட்ட ஒத்த பொருள் உள்ள சொற்கள் எல்லாம் நம் மனத்தகத்தே வந்து அணிவகுத்து நிற்க வேண்டும். நினைத்ததை நினைத்தபடி சொல்ல ஏலாத சொற்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும். எஞ்சி நிற்கின்ற சொற்களை ஒன்றோ

டொன்று மோதவிட்டு, எது இதர சொற்களை வென்று வெற்றி பெறுகின்றதோ அந்தச் சொல்லைத்தான் சொல்லவேண்டும் என்கின்றார்'' என்று.

இன்னும் கூறுவார்: ''சிந்தனைக்கும் சொல்லுக்கும் நெருங்கிய உறவு உண்டு. சிந்தனை, சொல்லைப் பாதிப்பதுபோல், சொல் சிந்தையைப் பாதிக்கின்றது. இந்த மர்மத்தை உணர்ந்த வள்ளுவர், கல்லை வணங்கு வதற்குப் பதில், சொல்லையே வணங்கலாம் என்று ஒரு புது சமயத்தையே நிலைநாட்டுகின்றார்.

திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங் கில். (குறள்-644)

என்பது குறள். புருஷதர்மம் என்றால் ஒன்றுதான் உள்ளது. புருஷ லட்சியமும் ஒன்றே ஒன்றுதான். சொல்லைத் திறனறிந்து சொல்லவேண்டும்; இதை மாத்திரம் கற்றுக் கொண்டால், வேறு தர்மத்தைப் பற்றியோ, லட்சியத்தைப் பற்றியோ மனிதன் கவலைப் பட வேண்டுவதேயில்லை என்று சொல்வார். சொல்லிலே தெளிவு ஏற்பட்டால், மனத்திலே தெளிவு ஏற்படும்; மனத்திலே தெளிவு இருந்தால் நடத்தையிலே தெளிவு இருக்கும்; ஆகவே திறனறிந்து சொல்லுக சொல்லை'' என்பதாக. இங்ஙனம் விளக்கம் தந்து கொண்டேபோவார் ஜஸ்டிஸ் மகராஜன்.

***நினைவு-3 :*** கம்பனில் தம்மைப் பறிகொடுத்திருந்த திரு. மகராஜன் அவர்கள் அவன் நாடக உத்தியைக் கையாண்டிருப்பதைத் தனிமையிலும் அற்புதமாகக் காட்டுவார். சொற்பொழிவிலும் காட்டுவார். நான் காரைக்குடியிலிருந்தபோது திரு. மகராஜன் சொற் பொழிவிலும், தனியாக உரையாடும்போதும் இந்த நாடக உத்தியை நன்கு அநுபவித்திருக்கின்றேன். எத்தனையோ இடங்களில் இதனைக் காட்டி நம்மை நாடக அரங்கிற்கே கொண்டு போய்விடுவார். ஒரு

காட்சியை வால்மீகி எப்படிக் காட்டுகின்றார்? கம்பன் எப்படிக் காட்டுகின்றான்? என்று ஒப்பிட்டுக் காட்டும்போது இரங்கூன் கமலத்துக்கும் வைரத்திற்கும் உள்ள வேற்றுமையை வைர வியாபாரி காட்டும்போது நாம் உணர்வதுபோல் உணர்கின்றோம். நினைவிற்கு வரும் இரண்டு காட்சிகளை மட்டிலும் காட்டுவேன்.

(1) ''நாடக உத்தி என்று எடுத்துக் கொண்டால், ஹாலிவுட் டைரக்டர்கள் கம்பனிடம் பிச்சை வாங்க வேண்டும். கதையை நடத்தும் தோரணையில் மாத்திர மல்ல. வெறும் மெய்ப்பாடுகளுக்கே நாடகப் பாங்கை நல்கி விடுவான் கம்பன்'' என்ற பீடிகையுடன் தொடங்கு வார் திரு. மகராஜன்.

''கேகய நாட்டிலிருந்து அவசரம் அவசரமாக வருகின்றான் பரதன். கோசல நாடு இடுகாடு போலிருக் கின்றது. அரண்மனைக்குள் சென்று கைகேயியைக் கேட்கின்றான், ''எங்கே என் தந்தை'' என்று. 'வானகம் எய்தினான், வருந்தாதே' என்று நீலித் தனமாக மறு மொழி தருகின்றாள் அவனுடைய 'அன்புடைய அன்னை'. இதைக் கேட்டதும் விழுந்து புரண்டு அரற்றுகின்றான். பின்னர், ''எனக்கு அப்பனும், ஆயும், பிரானும் இராமனே. அவன் காலில் விழுந்தால்தான் துயர் தீரும். எங்கே இராமன்?'' என்று சிரம்மேல் கரம் குவித்துக் கேட்கின்றான். கைகேயி அவன் 'கானகத்தான்' என்றாள். 'இன்னும் கேட்டுத் துன்புற வேண்டிய செய்தி எத்தனையோ?' என்று நினைத்துக் கலங்குகின்றான். 'கானகத்துக்கு ஏங்கின காரணம் யாது?' என்று வினவு கின்றான். ''இரண்டு வரங்கொண்டு, ஒன்றால் இராமனை வனத்திற்கு அனுப்பினேன்; மன்றொன்றால் அரசை உனக்கு ஆக்கினேன். இதைப் பொறுக்க மாட்டாமல் தசரதன் உயிர் துறந்தான்'' என்றாள் அன்னை. இந்த சொல்லைக் கேட்டதும் என்ன நடந்தது? ''இராமனை

தியானம் செய்து கொண்டு தலைமேல் குவிந்திருந்த பரத னுடைய கரங்கள் தலையிலிருந்து இரங்கிக் காதைப் பொத்திக் கொண்டன.

சூடின மலர்க்கரம்
சொல்லின் முன்செவி
கூடின; புருவங்கள்
குதித்துக் கூத்துநின்(று)
ஆடின; உயிர்ப்பினொ(டு)
அழற்கொ ழுந்துகள்
ஓடின; உமிழ்ந்தன
உதிரம் கண்களே.[2]

உள்ளத்தில் ஏற்பட்ட ஆங்காரத்தை நாடகம் போட்டுக் காட்டுகின்றன பரதனுடைய கரமும், புருவங்களும், உயிர்ப்பும், உதிரம் சிந்தும் கண்களும்''

(2) ''மனித உறுப்புகளால் நாடக வடிவத்தில் காட்ட முடியாத மனித உணர்ச்சிகளை மிருக உறுப்புகள், பறவையின் சிறகுகள், அலகுகள், செடி கொடிகளின் ஓசிவுகளின் மூலமாக நடித்தே காட்டி விடுகின்றான் கம்பன். அதனால்தான் கம்பராமாயண நிகழ்ச்சிகள் தத்ரூபமாக (நேரில் காண்பவை போல்)—நம் கண்முன் நடப்பனபோல்—காட்சி தருகின்றன. நம் உள்ளத்தில் பதைபதைப்பு ஏற்படுகின்றது. ஆனால் எலும்புக் கோவை யால் உண்டான நம் மனித உடலைக் கொண்டு பதை பதைப்பைத் திருப்பிக் காட்ட முடியாது. நாகப் பாம்பின் வளைவு நெளிவுகள் நிறைந்த உடம்பைக் கொண்டு மனிதப் பதைபதைப்பைக் காட்டலாம். இடி விழுந்த நாகம் இப்படியும் அப்படியுமாகத் துடித்துப் புரள்வதுபோல் புரண்டு ஏங்கினாள் சீதை என்று சொல்லும்போது பதைபதைப்பு நம் கண்முன் வந்து

2. அயோத். பள்ளிப்படை—66

நிற்கின்றது'' என்று தமக்கே உரிய முறையில் விளக்கம் தருவார்.

தொடர்ந்து 'வால்மீகியைக் கற்றால்தான் கம்பனுடைய தனிப்பண்பு இன்னதென்பதைத் தெரிந்து கொள்ள முடியும். முதன் முதலாக இராமலக்குவணர்கள் சடாயுவைப் பார்க்கும்போது சடாயு, வால்மீகியின் சடாயு, ஓர் ஆலமரக் கிளையில் உட்கார்ந்திருக்கின்றான். பருமனான, வலிமையுடைய கழுகு அது என்று சொல்லி வருணனையை முடித்து விடுகின்றார் வால்மீகி. கம்பனுக்கு இந்த ஆலமரப் பின்னணி (Setting) பிடிக்கவில்லை. சடாயுவின் கழுத்துக்குக் கீழுள்ள மேனி பொன்னிறமாக இருந்தது. கழுத்தும் தலையும் ஒரே வெண்ணிறம், இது மந்திரகிரிமேல் சந்திர ஒளி படர்ந்த சிகரம் போலிருந்ததாம். இவ்வளவு கம்பீரமான பறவையை, பிராட்டிக்காக உயிரையே தியாகம் செய்யப் போகும் சடாயுவை, ஆலமரத்திலும் புளிய மரத்திலுமா அமர்த்தி வைப்பது? பின்னணியை மாற்றுகின்றான் கம்பன். கருமலையின் சிகரம் ஒன்று துருத்திக் கொண்டு நிற்கின்றது. அதை ஒட்டிய முற்றத்திலே சடாயுவை அமர்த்துகின்றான் கவிச்சக்கரவர்த்தி.

முந்தொரு கருமலை முகட்டு முன்றிலில்
சந்திரன் ஒளியொடு தழுவச் சார்த்திய
அந்தமில் கனைகடல் அமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வான்தனை[3]

சொற்பங்கம் உறநிமிர் இசையின் சும்மையை
அற்பகம் உறவரும் அருணன் செம்மலைச்
சிற்பங்கொள் பகல்எனக் கடிது சென்றுநீர்
கற்பங்கள் பலப்பல கண்டு ளான்தனை.[4]

---

3. ஆரணிய. சடாயுகாண்—3
4. ஷ ஷ—8

''இத்தகைய வருணனையெல்லாம் வால்மீகியின் சடாயுவுக்குக் கிடைக்கவில்லை. இராமலக்குவணர்கள் அவனை அரக்கனோ என்று ஐயுற்று அம்பைத் தொடுக்க முற்படுகின்றனர். உடனே வால்மீகியின் சடாயு ஓடி வந்து ''உங்கள் தந்தையின் நண்பன் நான்'' என்று சொல்லுகின்றான். ஆனால் 'தசரதன் நலமா?' என்று கூட உசாவவில்லை. வால்மீகியின் சடாயு. கம்பன் இந்தக் கட்டத்தை எப்படிக் கையாளுகின்றான்! கண்ணீர்ச் சுனை ஒன்றையல்லவா தோண்டி எடுத்து விடுகின்றான்.

'விரைத்தடந் தாரினிர்! வேந்தர் வேந்தர்தன்
வரைத்தடந் தோளிணை வலியவோ?[5]

என்கின்றான்.

துறக்க முற்றான்

என்று இராமன் சொல்லவும் 'இரக்க முற்றான்' என ஏக்கம் எய்துகின்றான். அன்பைக் காட்டுதற்கு சடாயுவின் சிறகு கிடைத்துவிட்டது கம்பனுக்கு. என்ன பாடுபடுத்துகின்றான், பாருங்கள்!

மருவினிய குணத்தவரை இருசிறகால்
உறத்தழுவி 'மக்காள்! நீரே
உரியகடன் வினையேற்கும் உதவுவீர்!
உடல்இரண்டுக்கு உயிர்ஒன் றானான்
பிரியவுந்தான் பிரியாதே இனிதிருக்கும்
உடல்பொறையாம் பீழை பாரா
எரியதனில் இன்றேபுக்கு இறவேனேல்
இத்துயரம் மறவேன்' என்றான்.[6]

இப்படியாக உணர்ச்சி தெரிவிக்கின்ற பண்பும்(Lyrical quality) நாடகம் உணர்த்துகின்ற பண்பும் (Dramatic

5. ஷை ஆரணிய. சடாயுகாண்—18
6. ஷை. ஷை—32

quality) மாறி மாறி வந்து கொண்டிருக்கின்றது கம்ப ரமாயணத்தில். வால்மீகிக்கும் கம்பனுக்கும் சம்பந்தமே இல்லை. எல்லாம் புத்தம் புதிய படைப்பு'' என்று கூறுவார்.

காரைக்குடியிலிருந்தபோதே திரு. மகராஜனைச் சந்திக்கும் வாய்ப்புகள் குறைந்தன. 1960-ஆகஸ்டு முதல் திருப்பதியில் பணியேற்றேன். திரு. மகராஜனும் தாம் வகித்த பதவியில் பல உயர்வுகளை பெற்று எங்கெங்கோ சுற்றி இறுதியாக புதுச்சேரியில் சில ஆண்டுகள் தலைமை நீதிபதியாகப் பணியாற்றிச் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியாக வந்து சேர்ந்தார். பல ஆண்டுகள் கழித்து இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது சென்னை யில் (1968) சந்திக்கும் வாய்ப்பு பெற்றேன்.

**நினைவு-4 :** இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் பல தடவை சந்திக்கும் வாய்ப்புகள் ஏற்பட்டன. மாநாட்டைக் கூட்டியவர்கள் ஒருநாள் அலங்கார வண்டி யில் பவனி வரும் நிகழ்ச்சியையும் ஏற்படுத்தி இருந்தனர். அண்ணாசாலையில் சில இடங்களில், மாநாட்டுப் பேராளர்கள், முக்கிய பெரியோர்கள் (ViP), முதலியோர் அமர்ந்து பார்த்துக் களிப்பதற்கு பல இடங்களில் இருக்கை வசதிகள் செய்யப் பெற்றிருந்தன. ஸ்பென்ஸருக்கு எதிரில், TVS-க்கு அருகில் உள்ள ஓர் இடத்தில் நானும் ஜஸ்டிஸ் மகராஜனும் சேர்ந்து அமர்ந்து பார்க்கும் நேர்வு ஏற்பட்டது. ஜஸ்டிஸ் மகராஜன் சதா 'வெற்றிலை, பாக்கு, புகையிலை'யை மென்று களிப்பதை வழக்கமாகக் கொண்டிருப்பவர். அலங்கார வண்டிகளைக் கண்கள் கண்டுகளிக்க, வெற்றிலை முதலியவற்றை வாய்மென்று களித்துக் கொண்டிருந்தது. அருகில் அமர்ந்திருந்த நான், ''எதை அநுபவிக்கின்றீர்கள்- 'அலங்கார வண்டிகளையா? அல்லது வெற்றிலை பாக்கு புகையிலையையா?' என்று வினவ, உடனே 'இரண்டையுந்தான்!' என்று அநுபவ சுகத்தோடுஅவர் மறுமொழிவந்தது.உடனே தான்

வெற்றிலை முதலியவற்றை மெல்லும் பழக்கத்தை கைவிட முயன்ற அநுபவத்தைச் சொல்ல ஆரம்பித்து விட்டார்.

''புகையிலைக்கு அடிமையாயிருந்த நிலையினின்றும் விடுதலையடைய ஒரு சமயம் முயன்றேன். 'வாழ்க்கை யிலே கிடைக்கும் இன்பங்களோ ஒரு சில; அவற்றையும் வேண்டா என ஒதுக்கித் தள்ளுவானேன்? புகையிலைக்குக் கட்டுப்பட்டிருப்பது நாக்கு தானே, ஆன்மா இல்லையே' என்று மனதைத் தேற்றிக் கொள்வதுண்டு. ஆனால் ஊன்றிப் பார்க்கும்போது இது வெறும் சோம்பேறியின் சித்தாந்தம் என்பது தெளிவாகும். 'வைராக்கியம் இல்லாத கோழைநீ' என்று என் மனச்சான்று என்னை இடித்து ஏளனம் செய்யும். புலன் இன்பத்தில் ஈடுபட்ட என் அறிவோ 'புகையிலை போடுவதால் என்ன பாதகம்?' என்று சொல்லி என் கண்ணைத் துடைக்கும். 'எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விடுவதைக் காட்டிலும், எட்டினாலும் பழம் புளிக்கத் தானே செய்யும்' என்று மனத்தை ஏமாற்றிக் கொள்வது மனித இயல்பு. ஏமாற்றத்தின் மூலம் திருப்தி அடைவது எளிது. ஆனால் அந்தத் திருப்தி எவ்வளவு ஏளனத்துக் குரியது! மனிதப் பண்புக்கே உலை வைப்பது இந்தத் திருப்திதான். ஆன்மா வின் கண்ணியத்தை அவமானப்படுத்துவதும் இதுதான்'' என்று சொல்லி தத்துவ சிந்தனைக்கு இழுத்துச் சென்று விடுவார்.

உடனே இப்பழக்கத்தினின்றும் விடுதலை அடைய முயன்ற கதையையும் அந்தப் போலி வைராக்கியம் தன்னை ஏமாற்றிவிட்ட கதையையும் சொல்லத்தொடங்கி விட்டார். ''என்னுடைய ஆண்மையைச் சோதிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடும் புகையிலையின் கொட்டத்தை ஒடுக்க வேண்டும் என்ற ஆத்திரத்தோடும், புகையிலைப் பழக்கத்தை நிறுத்தினேன் ஒரு மூன்று நாள்.

எழுபத்திரண்டு மணி நேரமாகப் புகையிலையின் உதவி யின்றி என் வாழ்க்கை ஓடியது! ஆனாலும், ''அப்பப்பா! என்ன வாழ்க்கை அது—'பித்துப் பிடித்த வாழ்க்கை!' என்று ஒரு பெருமூச்சு விட்டார். தொடர்ந்து, புகையிலை இல்லாமல், அறிவே மறைந்து விட்டது போலத் தோன்றியது. புகையிலைக்கு அடிமைப்பட்டிருந்த காலத்திலாவது அதனைப் பயன்படுத்திக் கொண்டிருப் பேனேயொழிய, அதைப் பற்றி ஒரு மணித்துளியாவது சிந்தனை செய்ததில்லை. பழக்கத்தை விட்ட பிறகோ சதா புகையிலைப் பற்றியசிந்தனையும் தியானமும்தான்'' என்று மீண்டும் ஒரு பெருமூச்சு விட்டார்.

தொடர்ந்து பேசுகின்றார்: 'என்ன செய்வது? உள்ளம் வேறு வேலையில் ஈடுபட மறுத்து விட்டது. நாக்கு 'சிவபுரியை' நினைந்து தவம் செய்து கிடக்கவே ஆரம்பித்து விட்டது. பல்லும் எயிறும் திமிர் கொண்டு தம் வசம் இழிந்தன; மூக்கும் கண்ணும் அநுதாபத்தோடு இயங்கின. ஐம்புலன்களும் ஆமை போல் அடங்கி, ஒருமைப்பட்டு, புகையிலையோடு பின்னிக்கிடந்து மயங் கின. என் ஆண்மையும் செயலும் மாண்டன. 'மகாபாத கத்தைச் செய்து விட்டோம்' என்று உணர்ச்சியோடு வெற்றிலையையும் புகையிலையையும் மறுபடியும் போட்டுக் கொண்டு தப்பினேன். அரை நாழிகைக்கு முன்னால், உடனே, என் ஐம்புலன்களிலும் படிந்து, சுற்றி யிருந்த இருண்ட மேகங்கள் கலைந்தன. மறைந்திருந்த அறிவு திரும்பவும் உதயமாயிற்று. புகையிலையைப் பற்றிய தியானத்திலிருந்து என் மனம் விடுதலையடைந் தது'' என்று சொல்லி சிறையிருந்த கைதி விடுதலை அடையும்போது அடையும் மகிழ்ச்சியுடன் காணப் பட்டார்.

இப்போது நம்மாழ்வார் இந்திரியங்களால் துன்பப் பட்ட கதையைக் கூறும் திருவாய்மொழிப்பதிகம் (7.1) என் நினைவிற்கு வந்தது.

உள்நி லாவிய ஐவ ரால்குமை
　　தீற்றி என்னையுன் பாத பங்கயம்
நண்ணிலா வகையே நலிவான்
　　இன்னம் எண்ணு கின்றாய்! (1)

என்று ஆழ்வார் இறைவனை நோக்கி முறையிடுவது நினைவிற்கு வந்தது. மேலும்,

விண்ணு ளார்பெரு மாற்க டிமைசெய்—
　　வாரை யும்செறும் ஐம்பு லனிவை
மண்ணுள் என்னைப் பெற்றால்
　　என்செய் யாமற்று நீயும்விட்டால் (6)

என்று புலன்களின் வலிமையைப் பேசும் திருவாய்மொழிப் பாசுரமும் என் மனத்தில் குமிழியிட்டது.

ஆனால், மிக்க நாணத்துடன் பேச்சைத் தொடர்கின்றார். ''சொல்ல முடியாத வெட்கமும், சோகமும் என்னைப் பற்றிக் கொண்டன. வைராக்கியத்தைக் காப்பாற்ற முடியவில்லையே என்று நினைக்குமபோது அவமானம் ஏற்படுகின்றது, இதுதான் பூவுலகில் மனித நாடகத்தில் நாம் நாள்தோறும் காணும் அவலக்காட்சி. மனித—ஆன்மா விண்மீன் மண்டலங்களைத் தாண்டி, அண்டசராசரங்களை அளந்து, பரந்த வெளியிலிருக்கும் ஆனந்தக் கூத்தனோடு நடனமாட விரும்புகின்றது. ஆனால் மனித—உடல், மனம் போன போக்கெல்லாம் சென்று புழுவைப் போல, கேவலம் சேற்றிலும், சாக்கடையிலும் அழுந்தித் திணறி, நாக்குக்கும் மூக்குக்கும் கட்டுண்டு, உப்புக்கும் கூழுக்கும் ஏன் புகையிலைக்கும்! கூட—குற்றேவல் செய்கின்றது'' என்கின்றார்.

இப்படிப் பேசிக் கொண்டே என்னைத் திருமூலர் சந்நிதிக்கே இழுத்துச் சென்று தத்துவ தரிசனத்தில் ஈடுபடுத்துகின்றார்; ஆழங்கால் படச் செய்து விடுகின்றார். ஜஸ்டிஸ் பெருமான் பேசுகின்றார் : ''உடலுக்கும் உயிருக்கும் இடையே நடந்து கொண்டிருக்கும் இந்தத்

தீராத பூசலை எப்படித் தீர்த்து வைப்பது?'' என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அதற்கு விடையும் தருகின்றார். 'ஐம்புலன்களை வெல்லுவதென்பது சாத்தியமான காரியமாகத் தோன்றவில்லை. ஆனால், ஒன்று செய்யலாம். ஐம்புலன்களைப் அவை போகும் போக்கிலே விட்டு, அவற்றைப் பின் தாக்காட்டிப் பிறகு உயிருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் ஏவலாளர்களாக மாற்ற வேண்டும். இதைத்தான் மேல் நாட்டு உளவியலார் 'மடைமாற்றம்' (Sublimation) என்று கூறுகின்றனர். புலன்களுக்கு வெறியுண்டு. அந்த வெறியையே இறைவனிடத்தில் திருப்பிவிடலாம்'' என்று வழிகாட்டுகின்றார்.

தொடர்ந்து பேசுவது : ''காமம் என்ற உணர்ச்சிஇருக்கின்றதே, அதை வெல்லுவது எளிதன்று. ஆனால் அஃது இயங்கும் வழியைத் திருப்பி விடலாமல்லவா? இறைவனையே காதலனாகப் பாவித்து விட்டால், காமம் சிறுமை நீங்கிப் புனிதமடைந்து பக்தியாக மாறிவிடுகின்றது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் காட்டிய வழி இதுதான். அப்படியில்லாமல், அந்த உண்மையை வெல்ல வேண்டும், அல்லது மடக்க வேண்டும் என்று முயற்சி செய்தால் அது கங்குகரையின்றிச் செல்லத் தொடங்கும்! சில சமயம் கரையையே, போடும் அணையையே, உடைத்துக் கொண்டும் போகும். இந்த உண்மையை உணர்ந்தவர் திருமூலர். அவர் சொல்லுவதென்ன? மிக்க விழிப்புடனும் நுட்பமாகவும், மனத்தை மெல்ல மெல்லப் பழக்கி, ஐம்புலன்களையும் ஐந்து வாடா விளக்குகளாகப் பாவிக்கச் செய்ய வேண்டுமாம். இந்த விளக்குகள் அலங்கரிக்கச் செய்ய வேண்டிய ஆலயம் எது? ஊனாகிய உடம்பு இருக்கின்றதே, அதுதான் ஆலயம். அந்த ஆலயத்தின் நடுவில் இருப்பது மனதாகிய கருவறை. கருவறையினுள்ளே வீற்றிருப்பது சீவனாகிய சிவலிங்கம். இப்படி மனிதன் தன்னுடைய உடம்பை இறைவனுடைய திருக்கோயில ।

பார்க்கத் தொடங்கி விட்டால், அவனது மனமும் ஊனுடம்பும், கள்ளப் புலன்களும் கருவறையை ஒட்டி நின்று சுற்றி, ஏவல் புரியும் சிறப்பு அங்கங்களாக மாறி விடும்'' என்று கூறி,

உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்,
தெள்ளித் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே[7]

என்ற திருமந்திரப் பாடலை முத்தாய்ப்பாக நம் முன்னே வைப்பார். இன்னும் இதனையொட்டி சில பாடல்களைக் காட்டினார். விரிவஞ்சி அவை ஈண்டு கூறப் பெறவில்லை.

**நினைவு—4 :** 1971—பிப்பிரவரி என்பதாக நினைவு. என் 'மலை நாட்டுத் திருப்பதிகள்' என்ற நூல் அச்சு வடிவம் பெற்றது. அதற்கு ஓர் அணிந்துரை ஜஸ்டிஸ் மகராஜனிடம் பெறுவதற்காகச் சென்னை வந்தேன். தியாகராய நகரில் அவர் இல்லத்தில் தான் (17,விசயராக வாச்சாரி சாலை) சந்தித்தேன்: ஓய்வாக இருந்தார். இப்படி ஓய்வாக இருக்கும்போது நாம் சந்தித்து விட்டால், ஏதாவது விருந்து கிடைக்கும்; அது சமய—தத்துவ விருந்தாகவும் இருக்கும்; இலக்கிய விருந்தாகவும் அமையும். அப்போது அவர் பேச்சு 'சும்மா' என்ற சொல்லைப் பற்றித்தான். இந்தச் சொல்லைச் சோம்பேறிகளும் கையாளுகின்றனர். சொல்லிழந்து நிற்கும் ஞானிகளும் கையாளுகின்றனர். இருப்பூர்திப் பயணத்தின் போது அருகிலிருப்பவரை ''என்ன வேலை பார்க்கின்றீர்கள்?'' என்று வினவினால் அவர் ''சும்மா தான் இருக்கின்றேன்'' என்று மறுமொழி தருகின்றார்.

'சிந்தையை அடக்கியே
'சும்மா' இருக்கின்ற
திறம் அரிது'[8]

7. திருமந்.—சிவபூசை —1
8. தா. பா: தேசோமயானந்தம்—8

என்று சொல்லுவார் தாயுமான அடிகள். இவருக்கு உபசேதம் செய்த மௌன குரு அடிகளும் 'சும்மா இரு' என்று தான் உபதேசம் செய்ததாக வரலாறு. இந்தச் சொல்லின் பொருளை நமக்கு விளக்கும் ஜஸ்டிஸ் மகராஜன் உலகியலில் வட்டம் போட்டு அருணகிரியாரின் "கந்தரநுபூதிக்கே' வந்து விடுகின்றார்.

அவர் தரும் விளக்கம் : உலக வழக்கில் பல சந்தர்ப்பங்களில் பரிமாறப்படும் 'சும்மா' தினுசுகளைப் பட்டியலிட்டுக் காட்டி விளக்கத் தொடங்குகின்றார். ''உரையாடலில் சொற்களுக்குப் பஞ்சம் ஏற்படும் போதெல்லாம் 'சும்மா'வைத் தயங்காமல் பரிமாறுகின்றோம். ஓட்டைப் பலகைக்குச் சக்கை வைத்து அடித்து சரிப்படுத்துகின்ற மாதிரி, கருத்திலோ அல்லது மொழியிலோ முடக்கம் ஏற்பட்டால் சும்மா என்கின்ற ஆப்பை அடித்துச் சமாளித்துக் கொள்ளுகின்றோம். ஆனால் 'சும்மா' என்பது வெறும் சக்கை வார்த்தை அல்ல, மனித மொழியின் எல்லையைத் தாண்டி, பாரமார்த்திகத்தின் இதயத்திலே நின்று விளையாடுகின்ற வார்த்தை அது. தமிழ்ச் சொற்கடலிலே முங்கி மூழ்கிக் கும்மாளம் போட்ட அருணகிரி நாதரே,

''செம்மான் மகளைத் திருடும் திருடன்,
பெம்மான், முருகன், பிறவான் இறவான்,
'சும்மா இருசொல் அறஎன் றலுமே
அம்மா! பொருள்ஒன் றும்அறிந் திலனே''[9]

என்று கூறுவார்.

'' 'சும்மா' என்பது 'சுகமா' என்ற சொல்லிலிருந்து தோன்றியிருக்க வேண்டுமென்று ஓர் ஆசிரியர் கூறுவார். இது அக்கிரமம் என்று நான் கருதுகின்றேன். 'சும்மா'வின் அகண்ட அர்த்த பரிபூரணத்தை இப்படியெல்லாம் விலங்கு போட்டு வில்லங்கப் படுத்தி விடமுடியாது. ரிஷி

9. கந்தரநுபூதி—12

மூலத்தையும் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்து விடலாம். ஆனால் 'சும்மா'வின் பிறப்பை நினைக்க 'அம்மா!' என்று அநுபூதி நிலையை அடைந்த அருணகிரிநாதரைப் போல் கையை விரிக்க வேண்டியது தான்; அஃதாவது அவ்வளவு அர்த்தத்திற்கு அப்பாற்பட்ட பதம்.'' என்று விளக்கு வார்.

இதன் பொருளைக் கம்பராமாயணப் பாடல் ஒன்றினா லும் விளக்குவார். ''அநுமன் இலங்கையில் பிராட்டியைத் தேடிப் புறப்படுகின்றான். மாளிகைக்கு மாளிகை தாவிக் கொண்டே போகின்றான். எங்குப் பார்த்தாலும் மதியை முட்டிக் கொண்டு நிற்கும் மாடங்கள். ஒவ்வொன்றும் கோமேதகத்தாலும் வைரத்தாலும் கட்டப்பட்டது. நீல மாளிகையின்மீது தாவியதும் அநுமனுடைய திருமேனி நீல மயமாகத் தோன்றுகின்றது; பொன் மாளிகையின் மீது தாவியதும் பொன் மயமாக மாறி விடுகின்றது. இதைப் பார்த்து அதிசயித்துக் கொண்டிருந்த கம்பன்,

கரியனாய், வெளியனாய், செய்யனாய்க்
காட்டும், காண்டற்கு
அரியனாய், எளிய னாய்த்தன்
அகத்துறை அழக னேபோல்![10]

என்று சொல்லுவான். இப்படித் தான் 'சும்மா' என்ற சொல் அநுமனின் திருமேனி பல வண்ணங்களைக் காட்டு வது போல பல பொருள்களைச் சந்தர்ப்பங்களால் காட்டி நிற்கின்றது. இவ்வாறு தன்னைச் சுற்றியிருக்கும் சூழலை யும்,பற்றியிருக்கும் சமய சந்தர்ப்பங்களையும் பொறுத்து, பொருள் வேற்றுமைகளைப் பெற்று 'டால்' அடிக்கின்றது 'சும்மா' என்ற மணி வார்த்தை'' என்று விளக்குவார்.

'மலை நாட்டுத் திருப்பதிகள்' என்ற என் நூலின் அணிந்துரையில் ஜஸ்டிஸ் மகராஜன் கூறுவது: ''மலை

10. சுந்தர. ஊர்தேடு—102

நாட்டுத் திருப்பதிகளுக்கு நம்மை அழைத்துக் கொண்டு போவதுபோல் பாசாங்கு செய்யும் இவ்வாசிரியர் உண்மையில் வைணவ சமயத் தத்துவங்கள், பக்தி நிலைகள், மரபுகள்—இவற்றையெல்லாம் நமக்குச் சுட்டிக் காட்டி விடுகின்றார். வீர சைவ சமயத்தைச் சேர்ந்தவர் ஆசிரியர் ஆனாலும், வைணவத்தைப் பற்றிப் பேசும் போதும் எம் பெருமானைச் சேவித்து அவனுடைய பரம கல்யாண குணங்களை எடுத்து விரித்துரைக்கும் போதும் அதிசயிக்கத் தக்க ஈடுபாட்டோடும், விரிந்த பரந்த மனப்பாங்கோடும் தன்னையே வைணவத்தோடு இரண்டும் ஒன்றும் அறக் கலந்து கொள்கின்றார். ஆசிரியருடைய ''நினைவும் சொல்லும் ஒருமைப்பட்டிருக்கையாலே'' இந்த அரிய சாதனை அவருக்குக் கைவந்திருக்கின்றது.

.... ... .... ....

''ஒன்றினோடு ஒன்றொவ்வாப் பல துறைகளிலும் பாண்டித்தியம் பெற்றவர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார். அவருடைய விரிந்த படிப்பைக் கண்டு நான் அஞ்சிய காலம் ஒன்றுண்டு. பல ஆண்டுகளுக்கு முன் அவரைக் காரைக்குடியில் சந்தித்தபோது, ''எதற்காக நீங்கள் இவ்வளவு படிக்கின்றீர்கள்? கொஞ்சம் படிப்பைக் குறைத்துக் கொண்டால் நலமாயிருக்கும்'' என்று அவரிடம் சொன்னேன். மிதமிஞ்சிய படிப்பு கவனத்தைச் சிதற அடித்து விடுமே என்ற அச்சத்தால் அவ்வாறு சொன்னேன். ஆனால், இந்நூலைப் படித்த பிறகு என்னுடைய அச்சம் மறைந்துவிட்டது. ஆசிரியரின் பிடிக்குள் அடங்காத படிப்பு, பக்தி என்ற சூரியகாந்தக் கல்லில் பிறந்து ஒருமையும் பயனும் பெற்று விட்டது. வாழ்க ''மலை நாட்டுத் திருப்பதிகள்!''

**நினைவு—5 :** *1977—ஆகஸ்டு (1-3)* திருப்பதியில் தமிழ்த் துறையில் கம்பராமாயணம் பற்றிய கருத்தரங்கு ஒன்று பல்கலைக் கழக மானிய ஆணையத்தின் ஆதரவில்

நடைபெற்றது. இதில் கம்பனடிப் பொடி சா. கணேசன், தமிழ்இலக்கிய வரலாற்றுப்பேராசிரியர் மு.அருணாசலம், உத்திரப் பிரதேச முன்னாள் ஆளுநர் திரு. B. கோபால ரெட்டி, ஜஸ்டிஸ் மகராஜன் ஆகியோரைப் பங்கு பெற ஏற்பாடு செய்தேன். அப்போது ஜஸ்டிஸ் மகராஜன் ஓய்வு பெற்று தமிழ்நாடு ஆட்சி மொழி (சட்டம்) ஆணையத்தின் தலைவராகப் பணி புரிந்து கொண்டிருந்தார். கம்பனில் ஊறித் திளைத்த இரு பெரியார்கள் இக்கருத்தரங்கில் பங்கு கொண்டது எங்கட்கு மிக்க மன நிறைவைத் தந்தது. பெரும்பாலும் கருத்தரங்கின் தொடக்க அமர்வின் நிகழ்ச்சிகள் யாவும் (தமிழ் நடையாடாமல் செய்யப் பட்ட தேசமாதலின்) ஆங்கிலத்திலே நடைபெறும் மரபை யும்,அழைப்பிதழும் ஆங்கிலத்திலேயே வழங்கும் மரபையும் மேற்கொண்டிருந்ததால் மக்கள் திரண்டு ஆட்சி மன்ற மண்டபம் நிறைந்திருக்கும். ஜஸ்டிஸின் ஆங்கிலச் சிறப்புரை மிகவும் அற்புதமாக அமைந்து கருத்தரங்கிற்குப் பொலிவும் பெருமையும் தந்தது. திரு. கோபால ரெட்டி, திரு. அருணாசலம் இவர்களின் ஆங்கில உரைகளும் கூட்டத்தினரின் கவனத்தைக் கவர்ந்தன.

**நினைவு-6 :** 1976-ஆகஸ்டில் என் மணிவிழா திருமலையில் இறைவன் சந்நிதியில் இறைவன் திருமண விழாவாக அமைதியாக நடைபெற்றது. 1977-செப்டம் பரில் (24) நடைபெற்றது தமிழ்துறையில் திரு. M அனந்தசயனம் அய்யங்கார் அவர்களின் சீரிய தலைமை யில். இந்த ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் வாரத்தில் ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களைச் சென்னையில் அவர் இல்லத்தில் சந்தித்து (1) மணிவிழா மலருக்கு ஆசிச் செய்தியும், (2) அரிய ஒரு கட்டுரையும், (3) கம்ப ராமாயணக் கருத்தரங்கில் ஒரு சிறப்புரை நிகழ்த்துமாறும் (ஆங்கிலத்தில்) வேண்டினேன். மூன்று வேண்டுகோளையும் அன்புடன் நிறைவேற்றினார்.

எப்பொழுது போனாலும் அது ஜஸ்டிஸுக்கு ஓய்வாக மட்டிலும் இருந்து விட்டால் சொல்ல வேண்டியதில்லை, பெரிய இலக்கிய விருந்து கட்டாயம் கிடைத்துவிடும். நான் சென்ற போது 'கலைமகளில்' வெளி வந்த 'நீலத்திகிரி' என்ற கட்டுரையையும், அதைப் பாராட்டி ஆங்கிலத்தில் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் எழுதியிருந்த நீளமான ஆங்கிலக் கடிதத்தையும் படித்துக் காட்டினார். இரண்டும் நயத்திலும் மொழி நடையிலும் ஒன்றையொன்று வெல்லு வதாக அமைந்திருந்தன. 'நீலத்திகிரி' என்ற இலக்கியக் கட்டுரை 'ஞாலத்திகிரி' எனத் தொடங்கும் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் திருவரங்கத்து மாலையிலுள்ள ஒரு பாசுரத்தின் (89) விளக்கமேயாகும்.[11] இந்தக் கட்டுரை அறிவியலடிப்படையில் அமைந்த ஒன்று; ஜஸ்டிஸ் அவர்களின் அறிவியற்புலமை, இலக்கியப்புலமை, சிந்தனை ஆற்றல் இவற்றை அற்புதமாக விளக்கி நிற்கின்றது.

மணிவிழா மலருக்கு இவர் அனுப்பிய ஆசிச் செய்தி :

I have known Dr. N. Subbu Reddiar for over a quarter of a century. He is a rare phenomenon in the field of Tamil Scholarship. While most Tamil Scholars confine their studies to their mother-tongue– infact, they know more and more about less and less— Dr, Subbu Reddiar has wide-range of interests and bilingual competence. The numberless books he has published cover a magnificent spectrum cf themes, right from Sciences through Literature and Education to Philosophy and Religion. And yet he has preserved his exequisite sensibilities and a fine literary

11. இது நூல் வடிவம் பெற்று 'தெய்வமாக்கவி' என்ற நூலில் (பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-600 014) 6-வது கட்டுரையாக வெளி வந்துள்ளது.

perception. His genuine humility enables him to carry his encyclopaedic learning lightly. He has the knack of combining humility with fearlessness and of keeping up a just equipoise between character and intellect. I think it is his Bhakti which has integrated the diverse elements in his personality into a charming and creative unity. I am happy to learn that his Shastiapdapoorthi is to be celebrated shortly. May Lord Venkateswara bless him with a long aud happy life (16-3-77)[12].

தவிர, ஒன்பது தலைப்புகளில் 85 கட்டுரைகள் அடங்கி 'Studies in Art and Sciences' என்ற தலைப்பில் வெளி வந்துள்ள நூலை ஐஸ்டிஸ் மகராஜனின் 'மொழி பெயர்ப்பது எப்படி?' என்ற கட்டுரை இரண்டாவது தலைப் பின் கீழ் நூலை (கட்டுரை—13) அலங்கரித்து நிற்கின்றது.

**நினைவு-7 :** பாரதி நூற்றாண்டின் நினைவாக (1) பாரதீயம், (3) பாஞ்சாலி சபதம்—ஒரு நோக்கு (3) கண்ணன் பாட்டுத்திறன் (4) குயில்பாட்டு—ஒரு மதிப்பீடு என்ற நான்கு நூல்களை வெளியிட்டு அக்கவிஞர் பெருமானின்பால் நான் கொண்டிருக்கும் பக்தியையும் மரியாதையையும் புலப்படுத்திக் கொண்டேன். இவற்றில் 'பாரதீயம்' என்ற நூலை நான் கொண்டிருக்கும் பெருமதிப் பிற்கும் மரியாதைக்கும் அறிகுறியாக,

ஆங்கில அணங்கும் செந்தமிழ்த் தாயும்
　　ஆடல்செய் கின்றநா வுடையார்:
ஓங்கிய கம்பன் மாண்பினை மேற்கும்
　　உணர்ந்திடப் புரிஎழுத் தாளர்;

---

12. டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் மணிவிழா மலர் (1977) பக். 12.

பாங்குறு புகழ்சால் ஷேக்ஸ்பியர் பொதியில்
படர்தரச் செய்தவர்; கலைச்சொல்
ஈங்களித் துயர்ந்தோர் எஸ்.மக ராசர்
இசையுடம் பணிகஇந் நூலே.

என்ற பாடலின் மூலம், முத்தருலகில் வாழும் ஜஸ்டிஸ் டாக்டர் எஸ். மகராசனுக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்.

நான் சென்னைக்கு வந்த பிறகு (சனவரி—1978) இவருடன் மிக நெருக்கமாகப் பழகி வந்தேன்; அடிக்கடிச் சந்தித்து பழகும் வாய்ப்புகளையும் பெற்றிருந்தேன். இரண்டு முறை டி. கே. சி. யின் வட்டத் தொட்டியில் என்னைப் பேச வைத்துப் பெருமைப் படுத்தினார். இப்பொழுது அப்பெருமகன் ஊனுடம்பில் வாழவில்லை. ஆனால் அவருடைய புகழுடம்பு இவ்வுலகில் நிலைத்து வாழ்கின்றது. என்னுடைய உள்ளத்திலும் நீங்காத அன்புடன் நிலைத்து வாழ்கின்றார்; ‘தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்த பெரியாராக’ வாழ்கின்றார்.

## 26. பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்
சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்[1]

காரைக்குடி காந்தி சா. கணேசனின் அருளால் வள்ளல் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் பதவி வந்தது. 'கொடுக்கின்ற தெய்வம் இருந்தால் கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்' என்பார்கள். என் வாழ்நாளில் இப்பதவிஒன்றே என் முயற்சி சிறிதும் இன்றி—ஏன்? விண்ணப்பம் ஒன்றும் அனுப்பாமலேயே—என்னை நாடி வந்தது. காரைக்குடி வாழ்வில் எனக்குப் பல பெரியோர்கள் அறிமுகம் ஆயினர். இதற்குச் சா. கணேசனால் தோற்றுவிக்கப் பெற்ற கம்பன் கழகமும் அதன் ஆதரவில் ஆண்டுதோறும் நடைப்பெற்று வரும் கம்பன் திருநாளும் காரணங்களாயின. இங்ஙனம் எனக்கு அறிமுகம் ஆன பல பெரியோர்களில் பன்மொழிப் புலவர் தெ பொ. மீனாட்சிசுந்தரனாரும் ஒருவர்.

திரு. தெ.பொ.மீ. அவர்களை நான் நினைக்கும் போதுபல்வேறு நினைவுகள் மலர்கின்றன. நாடு விடுதலை பெற்றபிறகு எல்லாத் துறைகளிலும் பல திட்டங்கள் தீட்டப்பெற்று முன்னேற்றத்திற்கு வழிகளாக அமைந்தன. வெள்ளையர் ஆட்சியின் போது வடமொழி, அறபு மொழி இவையே உயர்தனிச் செம்மொழிகளாகக் (Classical languages) கருதப்பெற்று வந்தமையால் இம்மொழிகட்கு

1. வெற்றி வேற்கை—*18, 19*

மட்டிலுமே மாநிலக் கல்லூரியில் பேராசிரியர் பதவிகள் இருந்து வந்தன. தமிழ்க் காதலர் திரு தி.சு. அவினாசி லிங்கம் செட்டியார் அவர்கள் கல்வி அமைச்சராக இருந்த காலத்தில் (விடுதலை பெற்றவுடன்) தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு திராவிட மொழி கட்கும் மாநிலக் கல்லூரியில் பேராசிரியர் பதவிகளை உண்டாக்கினார்கள். பி.ஏ.யில் சிறப்புப் பாடங்களாகக் கற்பிக்கப்பெறும் வாய்ப்புகள் உள்ள கல்லூரிகளில் மட்டிலுமே இப்பதவிகள் இருந்து வந்தன. இதற்கு முன்னர் மண்டல மொழிகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் 'பண்டிதர்கள்' (Pandits) என்றே வழங்கப் பெற்றனர். இவர்கள் பெற்று வந்த சம்பளமும் 'ஈச்சம் பழமே'; மிகக் குறைவான சம்பளம். டாக்டர் உ.வே.சாமிநாத அய்யர், திரு. செல்வகேசவ முதலியார், திரு. கா. நமச்சிவ முதலியார் போன்ற பேரறிஞர்கள் யாவரும் இந்த நிலை யில்தான் இருந்தனர். பல்லாண்டுகள் இந்த மானக்கேடு தான் நிலவி வந்தது.

அடுத்து, கல்வி அமைச்சராகப் பதவியேற்ற திரு. மாதவமேனன் காலத்தில் இன்னொரு திட்டம் கொண்டு வரப்பெற்றது. அதாவது மாநிலக் கல்லூரியில் பணி யாற்றும் பேராசிரியர்கள் 'தலைமைப் பேராசிரியர்கள்' என வழங்கப் பெறுதல் வேண்டும் என்றும், இவர்கள் பெறும் ஊதியமும் ரூ 500/- என்று உயர்த்தப் பெற வேண்டும் என்றும் ஒரு திட்டம் நடைமுறைப்படுத்தப் பெற்றது. அந்தக் காலத்தில் ஒரு மலையாளப் பேராசிரி யருக்கு உதவ வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையில் இத்திட்டம் அமைந்தாலும், அஃது எல்லார்க்கும் உதவுவ தாயிற்று.

நெல்லுக்கு இறைத்தநீர் வாய்க்கால் வழிஓடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல் உலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.[2]

---

2. வாக்குண்டாம்—10

என்ற ஔவைப் பாட்டியின் வாக்கும் இப்பொழுது நம் நினைவில் குமிழி இடுகின்றது. ஆனால் பாவம், அந்த மலையாளப் பேராசிரியர் இத்திட்டம் நடைமுறைப் படுத்தப் பெறுவதற்குமுன்னரே திருநாடு அலங்கரித்து விட்டார்! இங்ஙனமே சென்னைப் பல்கலைக் கழகத்திலும் ஒரு திட்டம் நடைமுறைக்கு வந்தது. பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவரை அவர் திறமையைக் கருதி வயது அறுபதிற்கு மேலும் வைத்துக் கொள்ளலாம் என்றும், இஃது அறுபத்தைந்து அகவை வரையிலும் நீட்டப் பெற லாம் என்றும், ஆனால் ஆண்டுதோறும் மருத்துவர் சான்றிதழின் கனத்தால் இஃது ஒவ்வோர் ஆண்டாக உயர்த்தப் பெறுதல் வேண்டும் என்றும் துணைவேந்தர் டாக்டர் A.L. முதலியார் காலத்தில் ஒரு திட்டம் உருவாயிற்று. பேராசிரியர் V. R. இராமச்சந்திர தீட்சிதர் அவர்கட்கு உதவ வேண்டும் (இவரே திரு. முதலியார் அவர்களின் சிலையைப் பல்கலைக் கழக வளாகத்தில் நிறுவக் காரணமாக இருந்தவர்) என்ற கருத்தின் அடிப் படையில் இந்தத் திட்டம் உருவானாலும் பொதுமக்களின் குற்றச்சாட்டுக்கு இலக்காகக் கூடாது என்று கருதி அவர் வயதுடைய பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளையும் இத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பெற்றார். பேராசிரியர் தீட்சிதர் படியேற முடியாத நிலையில் இருந்ததால் முதல் தளத்தில் இடம் பெற்றிருந்த வரலாற்றுத் துறை தரை தளத்தில் (இப்போது பல்கலைக் கழகத்தில் பாரத வங்கி இருக்கும் இடம்) இடம் மாறிற்று. ஆனால், பேராசிரியர் தீட்சிதர் ஓராண்டுக் காலத்திற்கு மேல் இத்திட்டத்தின் பயனை நுகர முடியாமல் திருநாடு அலங்கரித்தார்கள். பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை இத்திட்டத்தின் முழுப் பலனையும் நுகர்ந்தார்கள். பல்கலைக் கழகத்தில் கௌரவ டாக்டர் பட்டம் பெறும் அளவுக்கு இவரது ஆகூழ் துணை நின்றது. 'கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது' (குறள்-377) என்ற பொய்யாமொழி யாரின் வாக்கும், ''வருந்தி அழைத்தாலும் வாராத

வாரா; பொருந்துவன 'போமின்' என்றால் போகா''
(நல்வழி—5) என்ற ஔவைப் பாட்டியின் வாக்கும் நம்
நினைவில் மலர்கின்றன. நிற்க.

'தலைமைப் பேராசிரியர்' பதவியைத் திரு. தெ.பொ.மீ.க்கு வழங்குவதற்கு அரசு நினைத்தாலும் இதற்கு எதிர்ப்பாக பல 'எதிர்ப்புச் சக்திகள்' கிளம்பின. திரு. தெ.பொ.மீ.க்குத் தமிழில் எம்.ஏ. பட்டம் இல்லையென்றும், வரலாற்றில் எம்.ஏ. பட்டம் பெற்றவருக்கு இப்பதவி வழங்குவது அடாத செயல் என்றும் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவில் (Syndicate) எதிர்ப்புக் குரல் எழுந்தது. பெருந்தலைவர் காமராசரின் தலையீட்டால் (அப்போது முதலமைச்சராக இருந்தவர்) டாக்டர் A.L. முதலியார் அவர் பெற்றுள்ள M.O.L (தமிழ்)பட்டம் போதும் என்று கூறி ஆட்சிக் குழுவைத் தம் வசப்படுத்தி எதிர்ப்புக் குரலை அடக்கினார். தெ.பொ.மீ,யின் தகுதிக்கு 'விதிவிலக்கு' அளிக்கப் பெற்று மாநிலக் கல்லூரியின் முதல் 'தமிழ்த் தலைமைப் பேராசிரியர்' பதவியில் அமர்த்தப் பெற்றார்.

'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' எனும்பெரு
வழக்குக்கு இழுக்குமுண்டோ?[3]

என்ற தாயுமான அடிகளின் திருவாக்கும் இப்போது நம் நெஞ்சில் எழுகின்றது. தெ.பொ.மீ.யின் விஷயத்தில் தாள் தகுதியை (Paper qualification) விடத் தகுதித்திறனுக்கு (Ability qualification) மதிப்பு அளிக்கப் பெற்றதை அறிஞருலகம் போற்றி மகிழ்கின்றது.

மாநிலக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த காலத்தில்தான் இவர் எனக்கு அறிமுகமானார். இவரது பல நற்குணங்களையும் புலமைநயத்தையும் அறிந்து கொள்ள காரைக்குடி கம்பன் கழகம் வாய்ப்புகள் அளித்தது; எனக்கு இப்பெரியாருடன்

3. தாயுமானவர் பாடல்—சுகவாரி—3.

நல்லிணக்கமும் ஏற்பட்டது. நாங்கள் எல்லாம் 'குருதேவ்' என்றே செல்லமாகவும் அழைத்தோம். இவரும் தமிழுலகில் ஒரு தனிப் பெருமையுடன் விளங்கினார். இங்ஙனம் இவர் பெற்ற பெருமைக்குக் காரைக்குடிக் கம்பன் கழகமும் அதை நிறுவிய திரு. சா. கணேசனும் காரணமாக அமைந்தமையையும் நினைக்கின்றோம். சென்னையில் தனியாக வித்துவான் தேர்வு எழுதுவதற்குப் பலருக்குப் பாடம் சொன்னதாலும் புகழ்பெற்றுத் திகழ்ந்தார், வடிவேல் செட்டியார் போன்ற பெரியார்களின் தொடர்பின் காரணமாகச் சமயங்களைப்பற்றிய அறிவும் இவர்தம் சொத்தாக அமைந்ததால் இவர் புகழ் மேலும் பரவியது. நான் இவருடன் நெருங்கிப் பழகியதால் என் வளர்ச்சியையும் கவனிக்க இவருக்கு வாய்ப்பு ஏற்பட்டது.

1957—58 என்பதாக நினைவு. காரைக்குடி அழகப்பா கல்லூரித்(தமிழ் எம்.ஏ வகுப்பு தொடங்கப் பெற்றகாலம்) தமிழ்ப் பேரவையைத் தொடங்கி வைக்கத் திரு. தெ.பொ.மீ. காரைக்குடிக்கு வந்திருந்தார். கல்லூரி வட்டத்திலுள்ள பவநகர் ஆடரங்கிலுள்ள அறையில் தங்கி யிருந்தார். அப்போது அழகப்பா கல்லூரியின் முதல்வர் திரு. அலெக்ஸாண்டர் ஞானமுத்து; அழகப்பா ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியின் முதல்வர் திரு ப. துரைக்கண்ணு முதலியார். முன்னவர் எதையும் சாதிக்கும் தன்மையர்; பின்னவர் முந்திரிக் கொட்டைபோல் மூக்கை நீட்டாது அடக்கமான பண்பினர். தவிர, தெ.பொ.மீ. சிந்தாதிரிப் பேட்டை உயர்நிலைப் பள்ளியின் தாளாளராகவும் திரு ப. துரைக்கண்ணு முதலியார் அப்பள்ளியின் தலைமை யாசிரியராகவும் இருந்த காலத்தில் பல்லாண்டுகள் நன்கு பழகியவர்கள். இதனை நன்கு அறிந்த நான் திரு முதலியாரிடம், ''நம் தமிழ் மன்றக் கூட்டத்தைப் முற்பகல் 11—மணிக்குத் தொடங்கி தெ.பொ.மீயைப் பேசச் செய் வோம். நீங்கள் சென்று அவரை அழைத்து வாருங்கள்'' என்றேன். அவர், ''அலெக்ஸாண்டர் ஒரு மாதிரியானவர்.

நமக்காக வந்திருப்பவரைப் பயிற்சிக் கல்லூரி பயன் படுத்திக் கொள்வதா?' என்று சங்கடப் (பொறாமைப்) படுவார்'' என்றார். நான், ''நீங்கள் புருஷோத்தமனாக மாறி தெ.பொ.மீயைக் கைப்பிடித்துக் கொணர வேண்டும்'' என்று ஒரு நகைச்சுவையை உதிர்த்தேன். திரு. முதலியார் சிரித்தார். ''நீங்கள் சென்று கூட்டி வந்தால் கூட்டத்தை நடத்தலாம்'' என்றார். உடனே நான் மிதிவண்டியில் சென்று அவரைப் பேச ஒப்புக் கொள்ளச் செய்து (என் மிதிவண்டியை அங்கேயே வைத்து விட்டுக்) காரில் கூட்டி வந்தேன். ஒரு மணி நேரத்தில் கூட்டத்தை அற்புதமாக முடித்தோம். பகல் 12-15க்கு தெ.பொ மீ.யை ஆடரங்கில் கொண்டு சேர்த்தேன்.

அப்போது அழகப்பா கல்லூரிப் பேராசிரியர்கள் க. தேசிகன், அ.மு. பரிமணம், இரா. சாரங்கபாணி, உ. பாலசுப்பிர மணியம் முதலியோர் தெ.பொ. மீ.யைப் பார்த்துஅளவளாவவந்திருந்தனர்.அப்போதுதெ.பொ.மீ. அவர்கட்கு எனது பெரிய நூலாகிய'தமிழ் பயிற்றும் முறை' யில் ஒரு படியைக் கொடுத்திருந்தேன்; நூலின்படி தெ.பொ.மீ. யின் கையிலிருந்ததைப் பார்த்த திரு. க. தேசிகன் என்னை நோக்கி, ''ரெட்டியார், அடுத்த யானைக்குட்டி ('தமிழ் பயிற்றும் முறை' பெரிதாக இருந்தமையால் இப்படிச் சுட்டினார்) எப்போது வரப் போகின்றது?'' என்று'கிண்டல் பாவனையில்' கேட்டார். நானும் '' 'கஜகருப்பம் என்று சொல்வார்கள். யானைக் கருப்பம் பதினான்கு திங்கள் என்பர். சாவகாசமாகத்தான் அடுத்த குட்டி வெளிவரும்'' என்று 'கிண்டல் பாவனை யிலேயே' மறுமொழி பகர்ந்தேன். கூடியிருந்தோர் அனைவரும் எங்கள் பேச்சைச் சுவைத்து மகிழ்ந்தார்கள்.

தெ.பொ.மீ. சொன்னார்: ''ரெட்டியார் வெளியிடு வதற்கு ஆள் இருக்கின்றார் என்று எழுதியவுடன் நூலை வெளியிட்டு விடுகின்றார். அப்படிச் செய்யக் கூடாது.

எழுதியதை அப்படியே கட்டி வைத்து விடவேண்டும். ஓராண்டு கழித்துத் திருப்பிப் பார்த்தால் திருத்த வேண்டியவை தெளிவாகும். பிறகு திருத்தி வைத்துவிட வேண்டும். இப்படியே சில ஆண்டுகள் செய்து வந்தால் நூல் சிறப்புற அமையும் அப்பொழுதுதான் நூல் அச்சிடப் பெறல் வேண்டும்'' என்று.

நான் சொன்னேன்: ''சில ஆண்டுகள் கழித்தும் அந்த நூல் குறைபாடில்லாது இருக்கும் என்பதற்கில்லை. நாம் வாழ்நாள் முழுவதும் இப்படியே மாற்றிக் கொண்டே போனாலும் முழுமை அடைய முடியாது. ஏனெனில், கருத்துகள் வளர்ந்து கொண்டே போகும்; மாறிக் கொண்டும் போகும்; நூல் என்றுமே வெளிவரமுடியாது. தாங்கள் கூறும் யோசனை நடைமுறைக்கு ஒவ்வாது. ஒரு முட்டாள் கூட உங்கள் அறிவுரையை ஒதுக்கித் தள்ளி விடுவான். அந்த முட்டாளுக்குக் கீழ்ப்பட்டவன் அல்லன் நான்'' என்று மேலும் தொடர்ந்து, ''உங்களைப் போன்று இல்லாவிட்டாலும் உங்கட்குக் குறைந்த அளவாவது எனக்கும் அறிவு உண்டு; கருத்தும் உண்டு. அதன்படிதான் நான் நடப்பேன். உங்கள் அறிவுரையை, இதோ இருக்கின்றதே (குப்பைத் தொட்டியைச் சுட்டிக்காட்டி) அதில்தான் போடுவேன்'' என்றேன்.

இப்படி நான் கூறுவேன் என்று கூடியிருந்தோர் கருதவில்லை. தெ.பொ.மீ.யும் கருதவில்லை. அவர் என்னைக் கூர்ந்து நோக்கினார். அருகிலிருந்தோர். பார்வையும் என் பக்கம் திரும்பியது. தெ.பொ.மீ. சொன்னார்: ''ரெட்டியார், நீங்கள் உண்மையிலேயே என் ஞானக் கண்ணைத் திறந்தீர்கள். இப்போது இங்குக் கூடியிருப்பவர்கள்போல் எப்போதும் என்னைச் சூழ்ந்து கொண்டு துதிபாடும் ஒரு சிறு கூட்டம் (Sycophants) இருக்கும். அவர்கள் பாடும் 'துதியில்' மயங்கி வாய்க்கு வந்தபடி பேசிக் கொண்டிருந்தேன். என் சிந்தனையும் மழுங்கியது. நீங்கள் செய்து வருவதுதான் சரி. மாற்றம்

இருப்பின் அடுத்து வரும் பதிப்புகளில் சரிசெய்து கொள்ள லாம். தொடர்ந்து எழுதுங்கள்; அதிக நூல்கள் வெளி வரட்டும். வாழ்க நும் திருப்பணி'' என்று வாழ்த்தினார். கூடியிருந்தோர் அனைவரும் என் துணிவான 'மறுப்புரை யைப்' போற்றினார்கள்; வியந்தார்கள்.

1957-58 ஆண்டின் இறுதியில் புகுமுக வகுப்பிற்கு அறிவியல் பாடங்களைத் தமிழில் எப்படிக் கற்பிக்கலாம் என்ற முறைகளை ஆய்வதற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆறுவாரக் கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. அப்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்த திரு. தி.மூ. நாராயணசாமி பிள்ளை தகுவழிகாணும் திறமுடையவனாக (Resource Person) என்னை நியமித்திருந்தார். நான் பல்கலைக்கழக விருந்தின னாக விருந்தினர் மாளிகையில் தங்கியிருந்தேன். ஒருநாள் தெ.பொ.மீ.யும் வந்திருந்தார். இருவரும் காலை உணவின் போது உண்ணும் அறையில் சந்தித்தோம். தாம் துணை வேந்தரின் சிறப்பு அழைப்பின்படி வந்திருப்பதாகக் கூறினார். டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார் இருந்த இடத்தில் தம்மை நியமிக்கும் விஷயமாகக் கேட்டறிவதற்காகவே இந்த அழைப்பு இருக்கலாம். என்றும் குறிப்பாகத் தெரிவித்தார். ''உங்கள் நல்லுள்ளம் வாழ்க. தாமாக வரும் பணியை உதறித்தள்ளாமல் ஒப்புக் கொள்ளுங்கள்'' என்றேன். ஒரு சில திங்களில் ரூ 1250/- இல் (அப்போது பேராசிரியர் ஊதியத்தில் இது உயர் வெல்லை.) பேராசிரியராக வந்து சேர்ந்தமை குறித்து மகிழ்ந்தேன். ''கொடுக்கின்ற தெய்வம் இருந்தால், கூரையைப் பொத்துக் கொண்டும் கொடுக்கும்'' என்ற பழமொழியை நினைத்துக் கொண்டேன். ஒரு காமராசர் துணையினால் மாநிலக் கல்லூரியில் நுழைந்தார்; ஒரு நாராயணசாமி பிள்ளையின் உதவியால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புகுந்தார். ''அறிவுடை ஒருவனை அரசும் விரும்பும்'[4] என்ற அதிவீரராம பாண்டியனின்

திருவாக்கை நினைத்துக் கொண்டேன். தெ.பொ.மீ. விஷயத்தில் ஆசூழ் செயற்படுவதைக் கண்டு வியந்து போனேன்.

1960-ஆகஸ்டு முதல் காரைக்குடி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிப் பேராசிரியர் பணியைத் துறந்து திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளர் பணியை ஏற்றேன். அந்த ஆண்டு பி.ஏ, பி,எஸ்கி வகுப்புகளில் தமிழ்ப் படித்த மாணவர் ஒருவர்தான் இருந்தார். உற்சாகமின்றிக் காலம் கழிந்தது. 1962-இல் தெ.பொ.மீ. சென்னையில் முன்னின்று நடத்திய மொழிபெயர்ப்புக் கருத்தரங்கிற்கு என்னைப் பார்வையாளராக அனுப்பி வைத்தது திருவேங்கடவன் பல்கலைக் கழகம். இந்தக் கருத்தரங்கு மயிலாப்பூர் உட்லாண்ட்ஸ் உணவு விடுதியில் மூன்று நாட்கள் நடைபெற்றது. நான் மயிலாப்பூரில் பன்மொழிப் புலவர் வேங்கடராஜுலு ரெட்டியார் இல்லத்தில் தங்கிக் கொண்டு நாடோறும் கருத்தரங்கில் கலந்து கொண்டேன். இக்கருத்தரங்கில் டாக்டர் V.A. தேவசேனாபதி (சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத்துறை இணைப் பேராசிரியர்) டாக்டர் மொ அ. துரை அரங்கனார் (சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர்), டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் (சென்னைப் பல்கலைக் கழக ஆங்கில—தமிழ் அகராதி தலைமைப் பதிப்பாசிரியர்) டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம் (கேரள பல்கலைக் கழகத் தமிழ்த் துறை இணைப் பேராசிரியர்) ஆகியோர் பேராளர்களாகக் கலந்து கொண்டனர். நான் இத்தகைய கருத்தரங்குகளில் கலந்து கொள்ளும் அநுபவம் பெற வேண்டும் என்றே என்னை அனுப்பிவைத்தார் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்துணை வேந்தர் எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள். இக்காலத்தில்

4. வெற்றிவேற்கை—39

'அறிவுக்கு விருந்து' என்ற நூல் ஒன்றை (ஒன்பது கட்டுரைகளின் தொகுப்பு) வெளியிட்டேன்.

நான் திருப்பதியில் பணியாற்றியபோது கவிதையநுபவம்' என்ற தலைப்பில் பெரிய அளவில் திறனாய்வு நூல் ஒன்று (மே திங்கள் 1961) வெளிவந்தது. அப்போது தெ.பொ.மீ. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர்—பேராசிரியர். அணிந்துரை ஒன்று இந்நூலுக்கு அருளுமாறு வேண்டியதற்கிணங்க அரியதோர் அணிந்துரையை அருளினார். அணிந்துரையில் ''திருவாளர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் 'கவிதையநுபவம்' என்ற நூலை எழுதித் தமிழ் நாட்டிற்கு உதவுகின்றார். இலக்கிய ஆராய்ச்சியினை ஒரு கலையாகக் கொண்டு அதனை விளக்குவதற்கு எழுந்தது இந்நூல். ஓயாது உழைத்து மிகமிக நீண்ட நூல்களை எழுதி வருவதில் நண்பர் தலைசிறந்தவர். 'கவிதையநுபவம்' என 417 பக்க அளவிலே ஒரு பெருநூலை இப்போது எழுதித் தந்துள்ளர் (என் நண்பர் க.தேசிகன் மொழியில் கூறினால் இஃது எனது இரண்டாவது யானைக் குட்டி). மேலை நாட்டு அறிஞருடைய கருத்துகள் நம் நாட்டு அறிஞர்களின் எண்ணங்கள், வடமொழி ஆராய்ச்சிவாணரின் போக்குகள் முதலிய அனைத்தையும் இங்கே நண்பர் விளக்குகின்றார்......எனவே, இந்நூல் இலக்கிய ஆராய்ச்சியின் பல துறைகளையும் விளக்குவதாகக் கொள்ளலாம். தமிழ்ப் பாடல்கள் பல இங்கு எடுத்துக் காட்டுகளாக வருவதால் இக்கொள்கைகளை விளக்கமாக அறிதற்கு இங்கே வாய்ப்புண்டு.......நண்பர் தொண்டுள்ளத்தில் பழுத்த அன்பின் காணிக்கைகளைத் தமிழன்னைக்கு மேலும் மேலும் செலுத்தி உயர்ந்தோங்கி வாழ்வாராக'' என்று வாழ்த்து கூறினார். இவ்வாழ்த்திற்கு என்றும் என் நன்றி இவருக்கு உரியது.

1963-இல் 'அறிவுக்கு விருந்து' என்ற நூலைச்சென்னைப் பல்கலைக்கழக பி.ஏ., பி.எஸ்சி. வகுப்புகளுக்குப் பாட

நூலாக்க முயன்றேன். அப்போது பாடநூல் குழுவிற்கு (Tamil Board of Studies) தலைவராக இருந்தவர் தெ.பொ.மீ. கூட்டம் நடைபெறும் நாளை அறிந்து கொண்டு சென்னைக்கு வந்திருந்தேன். டாக்டர் மு.வ. வையும் தெ. பொ. மீயையும் சந்தித்தேன். டாக்டர் மு.வ. அவர்கள் டாக்டர் A.L. முதலியாரே (துணை வேந்தர்) ஒரு நூலுக்குப் பரிந்துரைக்கின்றார் என்றும், என் நூல் இடம் பெறாது என்றும் உண்மையைத் தெரிவித்தார். தெ, பொ. மீ 'உங்கள் நூல் இடம் பெறுவது எளிது என்று நினைத்தா வந்தீர்கள்?' என்று கேட்டார். ''குருதேவ் ஆசியால் இடம் கிடைக்கும் என்று நினைத்தே வந்தேன்'' என்று சொல்லி அவரை மகிழ்வித்தேன். பின்னர் 1966-இல் ஒரு முறை முயன்றேன். இப்போது டாக்டர் மு.வ. தமிழ்ப் பாடத்திட்டக் குழுவின் தலைவர். இந்த ஆண்டும் என் முயற்சி வெற்றியடையவில்லை. 1975-ல் மூன்றாவது முறை முயன்றபோது வெற்றியடைந்தேன். இப்போது மேற்கொண்ட முயற்சியைப் 'பன்னி உரைக்கில் பாரதமாம்,'

1963-இல் தெ. பொ. மீ. சென்னைப் பல்லைக்கழக ஆட்சிக் குழுவில் (Syndicate) இடம் பெற்றார். இவையெல்லாம் 'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' (Coming events cast their shadows before) என்பதன் அறிகுறிகளாகும். தமிழகத்தில் அப்போதிருந்த காமராசர் அரசு இவரை இந்தப் பொறுப்பில் தேர்விலாது அமர்த்தியது (Nominated). தவிர, தமிழக அரசின் பாடநூல் வெளியீட்டுக் குழுவின் (Bureau of Publications) கௌரவத் தலைவராகவும் நியமனம் பெற்றார். அப்போது இக்குழுவின் முழு நேரச் செயலராக அமர்த்தப் பெற்றவர் பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம். சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்ற 'அணுக்கரு பௌதிகம்' (Heisenberg's Nuclear Physics) என்ற நூல்

40 பக்கம் அச்சுவேலை நடைபெற்று முடிந்த நிலையில் வல்லுநர் ஒருவர் கிளப்பிய கருத்து வேற்றுமையை ஒப்புக் கொள்ளாமல் அச்சிட்ட பாரங்கள், அச்சிடப் பெறாத கைப்படி இவற்றைத் திரும்பப் பெற்றேன். இந்த நூலை 'அரசுப் பாடநூல் வெளியீட்டுக் குழுவின்' மூலம் வெளியிட முயன்றேன். பேராசிரியர் அ.ச. ஞான சம்பந்தம் இதை வெளியிட ஒப்புக்கொண்டு படிகளை ஏற்றார். சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின் (Syndicate) உறுப்பினராக இருந்த தெ. பொ. மீ. இந்த நூலின் வரலாற்றை (கருத்து வேற்றுமையால் திரும்பப் பெற்ற கதையை!) அறிந்தவராதலால் இந்தநூல்பாடநூல் வெளியீட்டுக் குழுவினாலும் ஏற்கப்பெறாமல் என்னிடமே திரும்பி வந்தது. இத்தகைய குழுவிலும், பல்கலைக் கழக வல்லுநர் குழுவிலும், சிந்தனையும் விவேகமும் அநுபவமும் இல்லாதவர்கள் இடம் பெறுவதால் நல்ல திட்டங்களும் சிதைவுறுகின்றன. 'அணுக்கரு பௌதிகம்' என்ற நூலைப் பின்னர் 'தமிழ்ப் புத்தகாலயம்' என்றதனியார் நிறுவனத் தின் மூலம் வெளியிட்டுப் பெரும் புகழ் பெற்றேன். இந்த நூல் பரிசு பெற்ற கதையையும் பல்கலைக் கழகம் தமிழ் வெளியீட்டுக் குழு இவை மூலம் வெளிவராமல் தனியார் மூலம் வெளிவந்த 'உண்மை வரலாற்றை அறிந்தால் அறிஞருலகம் சிரிக்கும்; தொடர்ந்து சிரித்துக் கொண்டே யும் இருக்கும்.

1964-சனவரியில் டாக்டர் உமாயூன் கபீர் மத்திய அரசின் கல்வியமைச்சராக இருந்த காலத்தில் தில்லி மாநகரில் 26-வது உலகக்கீழ்த்திசை மாநாடு—கருத்தரங்கு நடைபெற்றது. இந்தப் பத்துநாள் கருத்தரங்கு விஞ்ஞான பவனில் நடைபெற்றது- இந்திய அரசு கருத்தரங்கில் பங்கு பெற்றவர்கட்கு விருந்தினராக இருந்தது. கருத்தரங்கில் பங்குகொண்டவர்கள் தங்குவதற்கு இந்திய அரசே பல இடங்களில் வசதிகள்செய்தது.என்னைத் திருவேங்கடவன்

பல்கலைக் கழகம் பேராளனாக அனுப்பி வைத்தது. திருப்பதியிலிருந்து நான், தெலுங்கு விரிவுரையாளர் டாக்டர் கே. மகாதேவசாஸ்திரி, வரலாற்றுப் பேராசிரியர் எம். இராமராவ், வடமொழி இணைப் பேராசிரியர் டாக்டர் சிரீ கிருஷ்ணசர்மா ஆகிய நால்வரும் கலந்து கொண்டோம். எங்கட்கு டில்லியில் இந்திரப் பிரஸ்தா தோட்டத்தில் பொருளாதார ஆய்வுமையஉணவு விடுதியில் தங்க இடம் தரப்பெற்றிருந்தது. உணவுக்குரிய செலவு நாளொன்றுக்கு ஒன்பது ரூபாய் தரவேண்டியிருந்தது. நல்ல உணவு; சத்துணவு. நாடோறும் மாநாட்டிற்குப் போய் வர பேருந்து வசதிகள் செய்யப் பெற்றிருந்தன. நான் திராவிடமொழிப்பகுதியில் தெ.பொ·மீ. யின் தலைமையில் The Concept of one India in Ancient Tamil Literature என்ற ஆய்வு கட்டுரையைப் படித்தேன். தெ. பொ. மீ. இதனை மிகச் சிறந்த கட்டுரை என்று பாராட்டினார். மாநாட்டிற்குவந்திருந்த டாக்டர். மு.வ. (சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்), டாக்டர் மொ. அ. துரை அரங்கனார் (செ.ப.க. தமிழ்த் துறை இணைப் பேராசிரியர்) ஆகியோரும் என் கட்டுரையைப் பாராட்டினர்.

அப்போது புவனேசுவரத்தில் அனைத்திந்திய காங்கிரசு மாநாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது. திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவினைக் கொள்கையை முழங்கிக் கொண்டிருந்த காலம். இதனால் என்னுடைய ஆய்வுக் கட்டுரை செய்தித் தாள்களின் கவனத்தை ஈர்த்தது. எல்லாச் செய்தித்தாள்களிலும் என்னுடைய கட்டுரை முன்பக்கம் பெரியஎழுத்துகளில் புகழப்பெற்றது. ‘‘பாருங்கள். இந்தியா ஒரே நாடு என்பதை இலக்கியச் சான்றுகளுடன் விளக்குகின்றார் ஒரு தமிழ்ப்பேராசிரியர்’ என்று பெரிய எழுத்துகளில் பதிப்பித்துக் கட்டுரையின் சுருக்கம் அதன் கீழ்த் தரப் பெற்றிருந்தது. ஒரு திங்கள் கழித்து இந்தக் கட்டுரை ‘இந்து’ நாளிதழிலும் நடுப்

பக்கத்தில் வெளி வந்தது. பதினைந்துக்கு மேற்பட்ட இந்தியத் தூதரகங்களிலிருந்து இக் கட்டுரையின் நகல் ஒன்றை அனுப்புமாறு கடிதங்கள் வந்தன. படியெடுத்து கட்டுரையைக் கேட்ட தூதரகங்களுக்கெல்லாம் அனுப்பினேன். மாநாடு நடந்து கொண்டிருந்தபோது செய்தித் தாள்களின் முதல் பக்கத்தில் என் கட்டுரையைப் பற்றிய புகழ் மாலைகளைக் கண்டு தெ. பொ. மீயும் கைகுலுக்கி மகிழ்ச்சி தெரிவித்தார்; டாக்டர் மு.வ.வும் என்னை மகிழ்ச்சியுடன் பாராட்டினார்.

1965-முதல் தெ. பொ. மீ. புதிதாகத் தொடங்கப் பெற்ற மதுரைப் பல்கலைக் கழகத்தில் முதல் துணை வேந்தராக நியமனம் பெற்றார். நாட்டுப்பற்று மிக்கவர்; காந்தியை நினைந்து போற்றுபவர்; அவர்தம் கொள்கைகளைக் கடைப் பிடிப்பவர், தமிழகத்தில் காங்கிரசு கட்சியின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. பெருந் தலைவர் காமராசர் முதலமைச்சராக இருந்த காலம். தெ. பொ. மீ, துணை வேந்தரானதில் வியப்பு ஒன்றும் இல்லை. இவ்விடத்தில்,

> அறியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
> பேணித் தமராக் கொளல். (குறள்—443)

என்ற வள்ளுவர் வாக்கும் நினைவிற்கு வருகின்றது. அரசியல் செல்வாக்குள்ள பெரியவர்களின் துணையும் ஊழ்வலியும் தெய்வசங்கல்பமும் இருக்கும்போது 'வருவது தானே வரும்' என்பதற்கு என்ன தடை? செய்தித் தாள்கள் தெ. பொ. மீயிடம் இருக்கும் குணங்களையும் இல்லாத குணங்களையும் போற்றிப் பறை சாற்றின. நியமனத்திற்காக நடைபெற்ற பாராட்டுக் கூட்டமொன்றில் டாக்டர் ஏ. எல். முதலியார் (சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்) கலந்துகொண்டு 'தெ. பொ. மீ பிறவித் துணைவேந்தர்' என்று கூட பாராட்டிப் பேசுமளவுக்கு நிலைமை ஏற்பட்டது. இதுவே

உலகியல் என்பதை என் போன்றார் சிந்திக்கவும் இஃது ஓர் வாய்ப்பாக இருந்தது. நானும் திருப்பதியிலிருந்து ஒரு பாராட்டுக் கடிதம் எழுதி மகிழ்ந்தேன்.

இவர் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்த காலத்தில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வெளி யாகாமல் எனக்குத் திருப்பித் தரப் பெற்றதும் தமிழக அரசு வெளியீட்டுக் குழுவால் வெளியிட ஏற்றுக்கொள்ளப் பெறாததும், சென்னைப் பல்கலைக் கழகப் பரிசு பெற்றது மான 'அணுக்கரு பௌதிகம்' என்னும் நூலை 'தமிழ்ப் புத்தகாலயம்' என்ற தனியார் நிறுவனத்தின் மூலம் வெளி யிட்டேன். (ஜூலை, 1966), இதனைப் பன்மொழிப் புலவருக்கு,

சீலமார் தமிழ்த்தாய் புரிதவத் துதித்தோன்;
செவ்விய நல்லுளச் செம்மல்;
ஞாலமாம் கனியின் சாறெனத் தக்க
நன்மொழி பலபல சுவைத்தோன்;
கோலமார் மதுரைப் பல்கலைக் கழகக்
கோயிலின் முதற்றுணை வேந்தன்;
தாலமீ தோங்குமீ னாட்சிசுந் தரனார்
தாள்மலர்க் குரியதிந் நூலே.

என்ற பாடலின் மூலம் அன்புப் படையலாக்கிமகிழ்ந்தேன். நான் இவர்மீது கொண்டிருக்கும் மதிப்பிற்கும் மரியாதைக் கும் அறிகுறியாக இருக்கட்டும் என்று இவ்வாறு செய்த தைத் தவிர, வேறு ஒரு காரணமும் உண்டு.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் கண்ணன் மீது கொண்டிருந்த ஆராக் காதலைத் தமிழுலக மும் வைணவ உலகமும் நன்கறியும். 'கண்ணனென்னும் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பேனை' (நாச். திரு. 13:1) என்ற நாச்சியார் திருமொழியின் தொடரும் இக் கருத்தை அரண் செய்யும். உள்ளுக்குள்ளே நைந்துகொண் டிரா நின்ற ஆண்டாள்,

கொள்ளும் பயனொன் றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட் டவன்மார்பில்
எறிந்து என் அழலைத் தீர்வேனே'
—நாச். திரு. 13:8.

என்று தன் அழலைத் (துக்கத்தைத்) தீர்த்துக் கொள்வ தாகக் கூறுகின்றாள். ''ஆட்டின் கழுத்தில் முலை போலே என் மார்பில் வியர்த்தமாக (வீணாக) முளைத்துக் கிடக் கின்ற இப்பாழும் முலைகளை வேருடன் பறித்து அவ னுடைய மார்பிலே விட்டெறித்து என் துக்கம் தீரப் பெறு வேன்'' என்கின்றாள் இப்பாசுர அடிகளில். ''கிழங்கோடும் அள்ளிப் பறித்திட்டு''என்றதனால் அளவிறந்த ஆற்றாமை புலப்படும். பகைவனை நோக்கி, ''உன்னை வேருடன் ஒழித்துக் கட்டுவேன். பார்!'' என்பாரைப் போல உள்ளத்தில் உள்ள சினமும் துக்கமும் தோன்றச் சொல்லு வதாகும் இது. இங்கு 'கிழங்கு' என்பது ஆன்மப் பொருளைக் குறிப்பதாகும். ''கொங்கை தன்னைக் கிழங் கோடும் அள்ளிப் பறித்திட்டு எறிந்து என் அழலைத் தீர்வேனே' என்றால் போதாதோ? 'அவன் மார்பில் எறிந்து' என்று கூறுவதற்குக் காரணம் என்? என்னில் : இம்முலைகளால் தான் படும்பாட்டை 'பெண்ணின் வருத்தம் அறியாத (நா. திரு 13:1) பெருமானான அவனும் படவேண்டும் என்ற கருத்தினால் என்க. இம் முலைகள் அவன் மார்பில் ஏறி அவனைக் கும்மிக் குமைக்க வேண்டும் என்று நினைக்கிறாள் ஆண்டாள். இந்தச் சிரமத்தை அவனும் பட்டானாகில் அதுவே இவள் அழல் தீர்த்தபடி போலேயாகும் என்பது கருத்து.

இத்தகைய ஆண்டாளின் உட்கிடக்கையையொட்டியே நானும் பரிசு பெற்ற இந்த அரிய நூலைப் பன்மொழிப் புலவருக்கு அன்புப் படையலாக்கினேன். படையல் பாடலை நோக்கிய வண்ணம் அவர் ஒளிப்படத்தையும்

அமைத்தேன். 'அணுக்கரு பௌதிகம்' என்னும் அரிய நூலைச் சென்னைப் பல்கலைக் கழகமும், அரசு நூல் வெளியீட்டுக் கழகமும் போட முடியாமல் போனதற்கு வருந்தட்டும் என்றும், தனியார் நிறுவனம்மூலம் வெளியிடப் பெற்றதற்கு மகிழட்டும் என்றும் கருதியே இவ்வாறு செய்தேன். தவிர, இந்த நூலைப் பார்க்கும் போதெல்லாம் இந்த இரு வேறு உணர்வுகள் மாறிமாறி எழட்டும் என்பதே என் குறிக்கோள். பொது மக்கள் இந்த நூலைப் பார்க்கும் போதெல்லாம் இந்த வரலாற்றை நோக்கட்டும் என்பதும் என் குறிக்கோளாக இருந்த்து.

1970-முதல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ் எம். ஏ. வகுப்பு தொடங்கப் பெற்றது. பத்து ஆண்டுகளாக நான் ஒருவனே துறையின் ஒரே தமிழ் விரிவுரையாளனாக இருந்து வந்தேன். இப்போது பேராசிரியர், இணைப் பேராசிரியர் பதவிகட்கு நியமனம் செய்ய வல்லுநர் குழு அமைக்கப் பெற்றது. இதில் தெ.பொ. மீ (மதுரைப் பல்கலைக் கழகத்துணைவேந்தர்) டாக்டர் மு. வ. இடம் பெற்றிருந்தனர். பேட்டி நடை பெறக் குறிப்பிட்ட நாளுக்கு ஐந்து நாட்கள் முன்வரை பேட்டிக்கான அறிவிப்பு எனக்குத் தரப் பெறவில்லை. டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்திக்கு மட்டிலும் அறிவிப்பு அனுப்பப் பெற்றதாகப் பதிவாளர் அலுவலகத்திலுள்ள ஓர் ஊர்க்குருவி மூலம் இச்செய்தியை அறிந்தேன். இரண்டு துணைவேந்தர்களும் கூடி ஏதோ சதித்திட்டம் போடுவதாக என் உள்ளுணர்வு அறிவித்தது. உடனே துணைவேந்தருக்கு அவரைப் பார்ப்பதற்கு செவ்வி வேண்டி ஒரு கடிதம் எழுதினேன். நேரமும் நாளும் குறிப்பிட்டு ஒரு கடிதம் எனக்கு வந்தது.

துணைவேந்தர் அறையில்தான் என் சந்திப்பு நிகழ்ந்தது, அறையில் துணைவேந்தரின் தனி அலுவலர் திரு. குருநாதம் என்ற இளைஞரும் இருந்தார். ஏதோ பெருந் தலைவர்கள் இருவர் கூடிய உச்ச மாநாடு (Bi- partite

conference) நடைபெற வேண்டிய சூழ்நிலை போல் இருந்தது இந்தச் சந்திப்புக்கு அமைந்த சூழ்நிலை. எடுத்த எடுப்பில், ''ஐயா, இன்னும் ஐந்து நாட்கள்தாம் உள்ளன. பேட்டிக்கான அறிவிப்பு எனக்கு வரவில்லை. ஏன்?'' என்று துணைவேந்தரைக் கேட்டேன். ''நியமனம் பெறுவதற்கேற்ற தகுதிகள் உங்களிடம் இல்லாததால், உங்கள் விண்ணப்பத்தை அலுவலகம் ஒதுக்கி வைத்து விட்டது. அதனால் உங்களைப் பேட்டிக்கு அழைக்க வில்லை'' என்றார் துணைவேந்தர். நான் 'அப்படியா டாக்டர் ஞான மூர்த்திக்கு மட்டிலும் அறிவிப்பு அனுப்பப் பெற்றது ஏன்?' என்று கேட்டேன்; 'அஃது உங்கட்கு எப்படித் தெரிந்தது?' என்றார் துணைவேந்தர். நான் 'பதிவாளர் அலுவலகத்திலுள்ள ஓர் ஊர்க்குருவி என் காதில் கிசுகிசுத்தது' என்றேன், 'யார் அந்த ஊர்க்குருவி?' என்று வினவினார் துணைவேந்தர். 'அதை நான் வெளி யிடேன். இரகசியங்கள் வெளியில் கசியும் சந்துகளை அடைப்பது உங்கள் திறமை. தவிர, இங்கு நடைபெறுவது இட்லர், முசோலினி ஆட்சி அல்லவே' என்றேன். ''டாக்டர் ஞானமூர்த்தியை நியமிப்பதாக முடிவு செய்து பேரம் பேசுவதற்காகக் கடிதம் எழுதி வருமாறு பணித் தோம்''என்றார் துணைவேந்தர். நான் 'அவருக்கும் தகுதி கள் இல்லை. தகுதிகள் இல்லாதவரை நியமிக்க பேரம் பேசுவது அடாத செயல்; விதிகளுக்குப் புறம்பானது. பல்கலைக் கழகம் தனிப்பட்டோரின் நிறுவனம் அல்ல, விதிகளை மீறாது நடக்கும் தாங்கள் இதில் விதிகளைக் காற்றில் பறக்க விட்டது எனக்கு மிக்க வருத்தத்தைத் தருகின்றது. பத்தாண்டுகள் தமிழக அரசுக்குக் காவடி எடுத்து மானியம் பெற்றதையும் மறந்தீர்கள். பயிற்சிக் கல்லூரியில் ஆற்றிய பத்தாண்டுகள் அநுபவத்தைக் கணக்கிற்கு எடுத்துக்கொண்டால் விதிகட்கு இணங்க என்னைப் பேட்டியில் கலந்து கொள்ள அனுமதித்திருக்க லாம்.இனி நீதியைக் கோரி ஐதராபாத் உயர்நீதி

மன்றத்தை அணுக வேண்டியதைத் தவிர வேறுவழி இல்லை'' என்றேன்.

இவ்வாறு சொன்னதும் துணைவேந்தர் மனம் திடுக்கிட்டது அவர் முகத்தில் பளிச்சிட்டது. முகத்தில் ஈ ஆடவில்லை. தொலைபேசியை எடுத்தார். ''டாக்டர் ரெட்டியாருக்குப் பேட்டிக்கு வருமாறு அழைப்பு தாருங்கள்'' என்று பதிவாளரிடம் சொல்ல, அவரும் நான் அறையிலிருந்து வெளியேறுவதற்கு முன்னர் உரிய கடிதத்தை நேரில் கொண்டு வந்து என்னிடம் தந்தார். டாக்டர் ஜகந்நாத ரெட்டி நேர்மையானவராதலால் டாக்டர் ஞானமூர்த்திக்காக ஏற்பாடு செய்யப் பெற்ற 'ஓரங்க நாடகம்' 'மூன்றங்க நாடகமாக' மாற்றப்பட்டது. திரு. தாமோதரனுக்கும் அழைப்பு அன்றே அனுப்பப் பட்டதைப் பின்னர் அறிந்தேன். இங்ஙனம் கிட்கிந்தைக்குச் சினத்துடன் வரும் இலக்குவனைத் தடுக்க வானரங்கள் அமைந்த தடைக்கல் போன்ற ஒரு தடைக்கல் அகற்றப் பெற்றது. இனி 'மூன்றங்க நாடகம்' நடைபெறப் போகின்றது. போட்டிக்கு முன் நடைபெற்ற இந்த வரலாற்றைத் தெ.பொ,மீ. எப்படி அறிவார்? ஒரு துணை வேந்தர் மற்றொரு துணைவேந்தருக்காகப் பாரபட்சமாக நடந்து கொள்வதை இறைவனும் பொறுத்துக் கொள்ள மாட்டான்.

இனி, பேட்டி (போட்டி?) நாடகம் நடை பெறுகின்றது. இதில் தெ. பொ. மீ.யின் அருவருப்பான நடிப்பைக் காணப் போகின்றோம், டாக்டர் ஞானமூர்த்தி முதலில் அழைக்கப் பெற்றார். தாம் துணைப் பேராசிரியர் பதவியை ஒப்புக் கொள்வதில்லை என்ற முடிவுடன் வெளி வந்து விட்டார் இரண்டாவதாக நான் அழைக்கப் பெற்றேன். எனக்கு அளிக்கப் பெற்ற பேட்டியினை விவரமாகக் கூறுவேன். பேட்டி ஆங்கிலத்தில் தான் நடை பெற்றது.

டாக்டர் டி. ஜே. ரெட்டி : டாக்டர் ரெட்டியார், எப்படி உங்கள் வாழ்க்கையைத் தொடங்கினீர்கள்?

நான் : நானே தொடங்கிய ஓர் உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியனாக ஒன்பது ஆண்டுகள் பணி புரிந்தேன்; புதிதாகத் தொடங்கப் பெற்ற ஒரு பயிற்சிக் கல்லூரியில் பத்தாண்டுகள் பணி புரிந்து, அங்குள்ள பேராசிரியர் பதவியைத் துறந்தேன்; தமிழக அரசின் தமிழ் வளர்க்கும் மானியக் கொள்கையைத் துணை கொண்டு மானியம் பெற்று இங்கு எம். ஏ. முதலிய பட்டங்கட்கு வசதி செய்யலாம் என்றே வந்தேன். இப் பல்கலைக் கழகத்தில் பத்தாண்டுகள் விரிவுரையாளராகப் பணியாற்றி இப்போது பதவி உயர்வை நாடி உங்கள் முன் வந்திருக்கின்றேன்.

டி. ஜே. ரெட்டி : டாக்டர் ரெட்டியார், தாங்கள் ஒரு மாநிலத்தின் கல்வி இயக்குநராக நியமனம் செய்து தனியுரிமையும் பெற்றிருப்பதாகக் கருதுங்கள். அப்படி நியமனம் பெற்றால் தாய்மொழி வாயிலாகக் கற்பிப்பது பற்றிய உங்கள் கருத்தென்ன? இதை ஆதரிப்பீர்களா? அப்படி ஆதரித்தால் கொச்சைமொழியைக் கையாளுவதை அனுமதிப்பீர்களா?

நான் : புட்டிப் பாலைவிடத் தாய்ப்பால் சிறந்தது என்பதை சிறந்த மருத்துவராகிய தாங்கள் அறிவீர்கள். தாய்மொழி தாய்ப் பாலைப் போன்றது. ஆதலால் தாய்மொழி மூலம் கல்வி புகட்டும திட்டம் எனக்கு உடன்பாடானது. ஆகவே, அதை முழு மூச்சுடன் ஆதரிப்பேன்; செயற்படுத்துவேன். ஆனால் கொச்சை மொழியை வகுப்பில் பாடம் கற்பிக்கும்போது ஓரளவு பயன்படுவதை அனுமதிப்பேன். பாட நூல்களில் கொச்சை மொழியைக் கையாளுவதை முழு மூச்சுடன் எதிர்ப்பேன்.

டி. ஜே. ரெட்டி : அமைச்சர் முதலியோர் இதை ஆதரிக்கின்றார்களே. இஃது ஓர் இயக்கமாகவும் வேகமாக வளர்கின்றதே.

நான் : வல்லுநர் குழு அமைத்து இதை வளர விடாமல் தடுப்பேன். முளையிலே கிள்ளி எறிவேன். தவிர, அமைச்சர்கள் யாவரும் அறிஞர்கள் அல்லரே; வல்லுநரும் அல்லரே.

டி. ஜே. ரெட்டி : 'அமைச்சர்கள் அறிஞர்கள் அல்லர்' என்பதை நீங்கள் வெளியில் சொல்லியிருந்தால், உங்கட்குச் சிறைவாசம் தான் கிடைக்கும்.

நான் : அமைச்சர்களே (பெரும்பாலோர்) அறிஞர்கள் அல்லர் என்பதை ஒப்புக் கொள்வர். அவர்களும் தமக்குப் பொருத்தமில்லாத விஷயங்களில் தலையிட மாட்டார்கள். தவிர, தேவையில்லாமல் என்னைத் தூண்டினீர்கள். நான் கவடில்லாது விடையளித்தேன்.

டி. ஜே. ரெடடி : டாக்டர் ரெட்டியார், நீங்கள் துணிவுடையவர்; உங்களைப் பேச்சில் மடக்க முடியாது. அதனால்தான் உங்களை நான் பேராசிரியராகவே நியமனம் செய்ய வேண்டும் என்று கருதியுள்ளேன்.

பின்னர் வல்லுநர் குழுவிற்குக் கேட்கும் வாய்ப்பு அளித்தார். வல்லுநரில் தெ. பொ. மீ. கேட்கத் தொடங்குகின்றார்.

தெ. பொ. மீ. : டாக்டர் ரெட்டியார், நீங்கள் துறையூரை விட்டுக் காரைக்குடிக்கு ஏன் சென்றீர்கள்?

இந்த வினா எழுந்ததும் மின்வேகத்தில் என் மனம் சிந்திக்கத் தொடங்கியது. இவர் வினாக்களுக்கு விளிப் புடன் விடை தருதல் வேண்டும் என்று கருதினேன்.

நான் : அஃது என் விருப்பம். மதிப்பிற்குரிய வல்லுநர் குழுவிற்கு என் சொந்த விஷயங்களில் தலையிட எந்த வித உரிமையும் இல்லை. (இது சற்றுக் கடுமையான விடையாகி விடுமோ என்று கருதி) காரைக்குடியினர் எனக்கு அழைப்பு விடுத்தார்கள். அதனால் காரைக்குடிப் பணியை நான் ஏற்றுக் கொண்டேன்.

தெ. பொ. மீ. : காரைக்குடிக்கு நீங்கள் சென்றிருக்க வேண்டியதில்லை, தலைமையாசிரியர் ஊதியம்தான் உயர்த்தப் பெற்று விட்டதே.

நான் : நான் காரைக்குடிக்குச் செல்வதும் செல்லாததும் என் விருப்பம். எனக்கு நல்வாழ்வு அமைத்துக் கொள்ளத் தெரியும். தவிர, நான் ஊதியத்தைக் கருதியும் காரைக்குடி செல்லவில்லை. திங்கள்தோறும் ரூ25/= இழப்பில்தான் காரைக்குடிப் பணியை ஏற்றேன்; தவிர, ஒன்பதாண்டுகள் தலைமையாசிரியனாக இருந்தது போதும் என்று கருதி, கல்லூரிப் பதவியை நாடிக் கொண்டிருந்தேன். காரைக்குடி பணிபற்றிய விளம்பரம் எப்படியோ என் கவனத்திற்கு வராமல் போயிற்று. அதனால் விண்ணப்பம் அனுப்பவும் வாய்ப்பில்லாது போயிற்று. தானாக வந்ததைத் தள்ள வேண்டா என்று கருதி மூன்று திங்கள் ஊதியத்தைச் செலுத்தி (ஒப்பந்தப் படி) என்னை விடுவித்துக் கொண்டு காரைக்குடிச் சென்றேன்.

துறையூர் பள்ளி நிர்வாகத்தின் மீது ஒரு சிவில் வழக்கு தொடுத்திருந்தேன் சில தொகைகள் எனக்கு வர வேண்டுமென்று. இதுபற்றித் தெ. பொ. மீ. எனக்கும் பள்ளி நிர்வாகத்திற்கும் ஏதோ வழக்கு நடைபெற்றது என்பதை அறிந்திருக்க வேண்டும். விவரம் வெளியார் அறியார். என்மீதுதான் பள்ளி நிர்வாகம் ஏதோ வழக்கு தொடர்ந்திருக்க வேண்டும் என்பதை வாயினின்றும் பிடுங்குவதற்காகவே முயன்றிருக்க வேண்டும்என்பதுஎன் ஊகம். இதனை

வெளிப்படுத்தி விட்டால் 'இவன் வம்புக்காரன், தலைமைப் பதவி இவனுக்குப் பொருந்தாது' என்று பின்னர் குழுவினிடம் விவாதிக்க முடியுமல்லவா? இவரும் ஒரு வக்கீல் தானே. வக்கீல் தனத்தை என்னிடம் காட்ட முயன்று ஏமாற்றம் அடைந்தார் என்பதும் என் ஊகம். எனவே, வினாக்கள் விடுப்பதைத் திசை திருப்பினார்.

தெ பொ. மீ. : காரைக்குடியில் வாரத்திற்கு எத்தனை மணி பணியாற்றினீர்கள்?

நான் : குறைந்தது 14 மணி பணியாற்றி இருப்பேன்; அதற்கு மேலும் இருந்திருக்கலாம்.

தெ. பொ. மீ. : 14 மணிநேரம் நீங்கள் பணியாற்றி இருக்க முடியாது. பயிற்சிக் கல்லூரியில் வாரத்திற்கு நான்கு மணிக்குமேல் வேலை இல்லையே.

நான் : கல்லூரியாசிரியர் வாரத்திற்கு பதினான்கு மணிநேரம் பணியாற்ற வேண்டும் என்பது பல்கலைக் கழகத்தின் விதி. பயிற்சிக் கல்லூரியின் வேலையே தனி. விரிவுரை ஐந்து அல்லது ஆறுமணிதான் இருக்கும். பயிற்சி பெறுவோர் எழுதும் மாதிரிப் பாடக் குறிப்புகளைப் பார்த்தல், வகுப்பு எடுக்கும் விவரங்களைக் கூறல், வகுப்பு எடுக்கும் போது கவனித்தல், வேறு பள்ளிகளைப் பார்வை இடும்போது அவர்களுடன் செல்லல் போன்ற பணிகள் இங்கு உண்டு. விரிவுரை நிகழ்த்தியவுடன் பணியைக் கழற்றிக்கொண்டு கைவீசிச் செல்லும் இடம் அல்ல பயிற்சிக் கல்லூரி. பதினான்கு மணி அல்ல, $5 \times 5 = 25$ மணி பணியாற்றினேன்என்று கூடச் சொல்லலாம். இவற்றையெல்லாம் துணைவேந்தர் அறிவதற்கு வாய்ப்பு இல்லை. பணிக்களத்தின் தலைவராக உள்ள கல்லூரி முதல்வரே அறிவார்.

இப்படி வினாக்கள் விடுத்தமைக்குக் காரணம் என்ன? என் பேட்டியின்போது நான் எழுதி வெளியிட்டிருந்த இருபத்து ஆறு நூல்கள் குழுவின் முன் பார்வைக்கு வைத்திருந்தேன். 'இவை பயனற்றவை; வெறும் குப்பை' என்று

சொல்லவேண்டும். தமிழ் வல்லுநராக வந்தவரல்லவா? தெலுங்கு நடையாடும் தேசத்தில் எதைச் சொன்னாலும் வேதவாக்குத்தானே. 'பயிற்சிக் கல்லூரியிலும் சரியாக வேலை இல்லை; பல்கலைக்கழகத்திலும் குறைந்த வேலை தான். இதனால் இந்தக் குப்பைகளை எழுதித் தள்ளி இருக்கின்றார். இவற்றுள் ஒன்றுகூட தரமான நூலாக இல்லை' என்று வாதிடலாமல்லவா? இதற்காகத்தான் இப்படி வினாக்களை விடுத்தார் என்பது என் ஊகம். இன்னும் சற்றுத்தெளிவாக 'வேலையின்மையைச்' சுட்டிக் காட்டியிருந்தால் அவரிடம் 'மூக்கறுத்தலையே' நடத்தி யிருப்பேன். ''இங்கிருக்கும் வல்லுநரில் ஒருவர் டாக்டர் மு.வ. இவர் எழுபதிற்கு மேற்பட்ட நூல்களை எழுதி யுள்ளார். இவர் பணியாற்றிய பச்சையப்பன் கல்லூரி யிலும் இப்போது பணியாற்றும் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் இவருக்கு வேலை இல்லை என்றா நினைக் கின்றீர்கள்? வேலைக் குறைவினாலா இத்தனை நூல்களை எழுதிக் குவித்தார்?'' என்று கேட்டு அவர் மூக்கு உடை படச் செய்திருப்பேன். அதற்கு வாய்ப்பு அளிக்காமல் ஒதுங்கிக் கொண்டது. இறைவன் திருவருள். இதனால் 'ரசாபாசம்' எழாமல் போய்விட்டது.

இருபத்து ஆறு நூல்கள் மேடையின்மேல் உள்ளனவே. வல்லுநர் ஏதாவது கேட்க வேண்டுமல்லவா? நான் எழுதி பல்கலைக்கழகம் வெளியிட்டிருந்த 'முத்தொள்ளாயிர விளக்கம்' என்ற நூலை எடுத்து வைத்துக் கொண்டு கேட் கின்றார்.

தெ.பொ. மீ : முத்தொள்ளாயிரம் பற்றிப் பலர் எழுதியிருக்கின்றார்களே, நீங்கள் எழுதியதன் சிறப் பென்ன?

நான் : ஆம்; உண்மையே. பலர் எழுதியுள்ளார்கள். பொதுமக்கள் கவிதைகளைச் சுவைக்கும் போக்கில் என்விளக்கம் அமைந்துள்ளது. ஆங்காங்குப் பிற இலக்கியங்

களிலிருந்து சில மேற்கோள்களையும் காட்டியுள்ளேன். இவற்றைப் பெருக்கினால் பொதுமக்கள் சுவைப்பதற்கு இடையூறாகி விடும் என்று கருதியே மேற்கோள் கனத்தைக் குறைத்துக் கொண்டேன். தமிழ் அதிகம் நடையாடாத தேசமாகையாலே நூலுக்கு நீண்டதோர் ஆங்கில முகவுரை எழுதியுள்ளேன்.

தெ. பொ. மீ : முத்தொள்ளாயிர ஆசிரியரின் காலத்தைப்பற்றி ஆய்ந்துள்ளீர்களா? உங்கள் முடிவு என்ன?

நான் : காலத்தைச் சுட்டியிருக்கின்றேன்; ஆராய வில்லை. அதற்கு வேண்டிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆகவே, முடிவு ஒன்றும் செய்யவில்லை. சங்க காலத்தை அடுத்து ஏற்பட்ட நூலாக இருக்கலாம் என்பது என் ஊகம்.

பேட்டியின் பெரும்பாலான பொன்னான காலப்பகுதியைத் தெ.பொ.மீ.யே ஆக்கிரமித்துக்கொண்டு விட்டார். இன்னொரு வல்லுநர் இருப்பதையே மறந்து விட்டார். இப்போது டாக்டர் மு.வ. வுக்கு வாய்ப்பு வருகின்றது.

டாக்டர் மு. வ. : கம்பராமாயணம் மக்களிடையே பெரும் செல்வாக்கு பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன?

நான் : மூன்று காரணங்களை முக்கியமானவையாகக் கருதுகின்றேன். முதலாவது : அவதார புருஷனாகிய இராமனைக் காவிய நாயகனாகக் கொண்டமை. இரண்டாவது : திருக்குறள், சீவகசிந்தாமணி, ஆழ்வார் பாசுரங்கள் இவற்றை இடத்திற்கேற்றவண்ணம் கையாண்டமை. மூன்றாவது : அரசனைச் சாராமல் மக்களைச் சார்ந்து நின்று காவியம் அமைத்தமை; மக்களின் சுவைக்கேற்றவாறு கருத்துகளையும் பல்வேறு வண்ணங்களையும் கையாண்டமை.

டாக்டர் மு. வ : பாரதியாரின் புகழுக்கும் பெருமைக்கும் காரணங்கள் கூற முடியுமா?

நான் : முடியும். முதலாவது : கவிதைக்குரிய பொருள்களை நேராகக் கண்டு அவற்றைப் பாடினார். இரண்டாவது : அவர் வாழ்ந்தது சுதந்திரப் போராட்டக் காலத்தில். தேசிய கீதங்களால் புகழின் கொடுமுடியை எட்டிப் பிடித்தார். அவருடைய தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், தனிப்பாடல்கள் மக்கள் கவனத்தையும் கருத்தையும் ஈர்த்தன. அவருடைய 'சுயசரிதை' இலக்கிய நயமும் தத்துவ உண்மையும் கொண்டுள்ளமையால் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றது. மூன்றாவது ; அவருடைய கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் என்ற மூன்றும் இலக்கிய நவநீதம். ஆனால் அவருடைய 'பாஞ்சாலி சபதம்' அவருடைய இடைச் செருகலால் சிறிது தரம் குறைந்து விட்டது; சொட்டு வைத்தது போலாயிற்று. இப்போது தெ. பொ. மீ. குறுக்கிடுகின்றார்.

தெ. பொ. மீ : எங்கு என்ன இடைச்செருகல் என்பதைக் காட்டி விளக்க முடியுமா?

நான் : விளக்க முடியும்; விளக்குவேன். பாஞ்சாலி சபதம் ஐந்தாவது 'சபதச் சருக்கத்தில்' வருகின்றது, கவிஞரே செய்த இடைச் செருகல்.

பிச்சே றியவனைப்போல்—அந்தப்
பேயனும் துகிலினை உரிகையிலே
உட்சோதியிற் கலந்தாள்;—அன்னை
உலகத்தை மறந்தாள்; —ஒருமையுற்றாள்.

என்ற பகுதியினை அடுத்துவரும் 'ஹரி ஹரி ஹரி' என்று தொடங்குவது முதல் 'மணிவண்ணா என்றன் மனச்சுடரே' என்ற அடிவரையில் உள்ள அடிகள் யாவும் இடைச்செருகல் என்பது என் கருத்து. திறனாய்வு நோக்கில் இதனைக் கூறுகின்றேன்.

தெ. பொ. மீ : (சிறிது சினத்துடன்) இஃது எப்படி இடைச் செருகலாகும்?

நான்: கோபப்படவேண்டா. நான் காவியத்தைக் காண்பது திறனாய்வு நோக்கில்—சமய உண்மையை அடிப்படையாகக்கொண்டு. பாரதியார் வைதிக குடும்பத்தைச் சார்ந்தவர். அவருக்குச் சமய உண்மைகள் தெரியா என்று சொல்லுவதற்கில்லை. இங்கு நான் கூறுவது வைணவ தத்துவ உண்மையாகிய சரணாகதியைப் பற்றியது. 'உட்சோதியிற் கலந்தாள்; அன்னை உலகினை மறந்தாள்; ஒருமையுற்றாள்' என்று சொல்லும் போதே 'சரணாகதி' நிறைவேறி விடுகின்றது. 'ஐய, நின் பதமலரே—சரண்' என்ற வாக்கும் எழுந்து விடுகின்றது, 'சரணாகதி'—நிகழ்ந்த பிறகு தோத்திரத்திற்கும் இடம் இல்லை; சகஸ்ரநாம அருச்சனை போன்ற முறைக்கும்—பஜனைக்கும்—இடம் இல்லை.

'பொய்யர்தம் துயரினைப் போல்'...என்ற அடி 'ஒருமையுற்றாள்' என்ற தொடருடன் இணைந்தால் காவியம் அற்புதமாக நடைபெறுவதைக் காணலாம். இதற்கு இடையிலுள்ள பகுதி முழுவதும் தேவை இல்லை என்பது என் கருத்து. வில்லி பாரதத்திலும் 'ஆறாகி இரு தடங்கண் அஞ்சன வெம்புனல் சோர' (வில்லி பாரதம்—சூதுப்போர்—246) என்ற ஒரு பாடலில் 'கோவிந்தா! கோவிந்தா!' என்று அரற்றிச் சரணாகதியை முடித்து விடுகின்றார் வில்லிபுத்தூராழ்வார். இப்படிப் பாரதியும் சகஸ்ரநாமம் போன்ற அருச்சனையின்றி காவியத்தை அமைத்திருந்தால் காவியம் அற்புதமாக அமைந்திருக்கும். இந்த 'இடைச்செருகல்' காவியத்திற்கு ஒரு சொட்டு வைத்தது போலாகி விட்டது.

இதைக் கேட்டதும் தெ.பொ.மீ. சீறத் தொடங்குகின்றார். என்னுடைய திறனாய்வுக் கருத்தை சீரணித்துக் கொள்ள முடியவில்லை. சீரணிக்க முடியாவிட்டாலும் அமைதியுடன் கேட்டிருக்கலாம். பாராட்ட முடியா விட்டாலும் வாளா அப்படியே விட்டிருந்திருக்கலாம். முடிய

வில்லை. பொறாமையும் காழ்ப்பும் தலைதூக்கி ஆடத் தொடங்கிவிடுகின்றன.

தெ. பொ. மீ : நீங்கள் கூறும் இடைச்செருகலாக வந்துள்ள அடிகள் எத்தனை உள்ளன?

நான் : நான் கணக்கிட்டுக் கொண்டு வரவில்லை. இப்படி ஒருசூழ்நிலை உருவாகும் என்று நினைக்கவில்லை. இப்பொழுது சரியான எண்ணிக்கை வேண்டும் என்று தாங்கள் விரும்பினால், மதிப்பிற்குரிய எங்கள் துணை வேந்தர் நூலகருக்குத் தொலைபேசி மூலம் தெரிவித்தால், 'பாரதியாரின் கவிதைகள்' என்ற நூலை வரவழைக்கலாம்; கணக்கிட்டுச் சொல்லலாம். உத்தேசமாகச் சொன்னால் போதும் என்று கருதினால் சுமார் அறுபது அடிகள் இருக்கலாம் என்பேன்.

தெ. பொ. மீ: அறுபது அடிகள் இருக்க முடியாது.

நான் : நாற்பது அடிகள் என்று தான் வைத்துக் கொள்ளுங்களேன். ஆனால் இடைச் செருகல் என்பதை ஒப்புக் கொண்டேயாக வேண்டும்.

தெ. பொ. மீ: அந்த அளவும் இருக்க முடியாது.

நான் : முப்பது அடிகள் என்று வைத்துக் கொள்ளலாமா?

தெ. பொ. மீ : இந்த அளவும் இருக்க முடியாது.

நான் : இருபது அடிகள் வரை இறங்குவேன். அதற்குக் கீழ் இறங்க ஒருப்படேன். ஆனால் தேவையற்ற இடைச் செருகல் என்பதை ஒப்புக் கொண்டேயாக வேண்டும்.

தெ. பொ. மீ : என்ன டாக்டர் ரெட்டியார்? அறுபது இருக்கும் என்று சொல்லி இருபதிற்கு இறங்கி விட்டீர்களே என்று கிண்டல் பாவனையில் கூறினார்.

நான் : ஐயா, அஃது உங்களுக்காகப் பரிதாபப்பட்டு இறங்கினேன். ஆனால் அறுபது அடிகள் என்றே வற்புறுத்துவேன்; இடைச் செருகல் என்பதையும் நிலை நாட்டுவேன்.

இத்துடன் வினாக்கள் விடுப்பது நின்றது. பேட்டியும் நின்றது. ஒரு பேராசிரியர் நியமனத்திற்காக நடைபெற்ற பேட்டியில் வல்லுநர் விடுக்கும் வினாக்களா இவை? இன்னொரு வல்லுநர் விடுத்த வினாக்களையும் இப்பெருமகன் விடுத்த வினாக்களையும் சீர்தூக்கிப் பார்த்தால் மலை யனைய வேற்றுமையைக் காணலாம். நானும் பல பேட்டிகட்குச் சென்றிருக்கின்றேன். சென்னைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற பேட்டியொன்றில் இப்படித்தான் தாறுமாறாக ஒருவர் என்னைக் கேட்டார். அவர் மூக்கு உடையுமாறு பதில் விடுத்தேன். இதற்குள் துணைவேந்தர் ஏ. எல். முதலியார் குறுக்கிட்டு, ''பொருத்த மற்ற வினாக்களை விடுத்து திரு. ரெட்டியாரைச் சீண்டாதீர்கள்.'' என்று தடை போட்டு ரசாபாசம் நேரிடாதவாறு தடுத்து நிறுத்திவிட்டார்.

நானும் சென்னை, கேரளம், மதுரைப் பல்கலைக் கழகங்களில் கூட்டப் பெற்ற வல்லுநர் குழுவில் இடம் பெற்றுப் பணியாற்றியவன்தான். என்னுடன் பல வல்லுநர்கள் வந்திருந்தனர். ஒருவராவது இங்ஙனம் கீழ்த்தரமாக வினாக்கள் விடுத்ததில்லை. அவர்கள் விடுத்த வினாக்கள் அந்தந்த விண்ணப்பதாரர்களின் படிப்பு, பணி, அநுபவத்தையொட்டிப் பெருமிதமாகவே அமைந்திருந்தன. முப்பது ஆண்டுகள் கல்லூரியிலும் பல்கலைக் கழகத்திலும் அநுபவம் பெற்று ஐம்பத்திரண்டு அகவை நிறைந்த என் வாழ்வில் இப்படி ஒரு நேர்வு அமைந்தது என்னுடைய தீயூழே; போதாக் காலமே. கடந்த கால நிகழ்ச்சியை நடந்தது நடந்தவாறே எண்ணிப் பார்த்துப் பதிவு செய்தேனேயன்றி தெ. பொ. மீ. யின் மீது குற்றப் பத்திரிகை

வாசிப்பதற்காக அல்ல என்பதைத் தெளிவுபடுத்த விரும்பு கின்றேன். எய்தவனிருக்க அம்பை நோவதால் பயன் ஒன்றும் இல்லை.

தெ. பொ. மீ. இவ்வளவு கடுமையாக நடந்து கொள்ளக் காரணம் என்ன? என் மனத்திற்குத் தோன்று வது இது: விளம்பரப்படி ஒருவரும் விண்ணப்பிக்காததால் துணைவேந்தர் டாக்டர் D. ஜகந்நாத ரெட்டி பேராசிரி யருக்குத் தக்கார் சிலரது பெயர்களைப்பரிந்துரைக்கும்படி சென்னை, அண்ணாமலை, மதுரைப் பல்கலைக் கழகங் களின் துணைவேந்தர்கட்கு எழுதியிருந்தார். சென்னைத் துணைவேந்தர் தக்கவர் எவரும் இல்லையென்று செப்பி விட்டார்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் தக்கவர் இல்லை என்று கைவிரித்து விட்டார். மதுரைத் துணைவேந்தர் மட்டிலும் (தெ. பொ. மீ) 1. டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி, 2. டாக்டர் மொ. அ. துரைஅரங்கனார். 3. பேராசிரியர் அ. ச. ஞான சம்பந்தம், 4. டாக்டர் K. ஆறுமுகம் இவர்கள் பெயர் களைக் குறிப்பிட்டு எழுதியிருந்தார். இவர்களைப் பற்றிய 'ஆதியும் அந்தமும்' இல்லாததால் டாக்டர் D. ஜகந்நாத ரெட்டி என்னைக் கூப்பிட்டுக் கேட்டதால் இவர்களைப் பற்றிய விவரங்களைத்தந்தேன். இதனால் டாக்டர்ரெட்டி யின் மனத்தில் 'அழுக்கு' இல்லை என்பது தெளிவாயிற்று. நான் திருப்பதியிலிருக்கும்போது என்னை டாக்டர் ரெட்டி விரும்பவில்லையோ? அல்லது வெறுத்தாரோ? என்று தெ. பொ. மீ. தவறாகக் கொண்ட எண்ணமே எனக்கு விரோதமாக நடந்து கொண்டதற்குக் காரண மாக இருக்கலாமோ? இப்படி என் மனம் எண்ணு கின்றது.

1970-இல் கோவை பு. சா. கோ. பொறியியல் கல்லூரியில் என் மகன் இராமலிங்கத்தை எம். எஸ்சியில் சேர்க்கச் சென்றிருந்தேன். அவன் தங்கியிருந்த மாணவர் விடுதியில் நானும் இரண்டு நாட்கள் தங்கியிருந்தேன்.

அந்த விடுதியின் அருகில் உள்ள ஓர் இல்லத்தில் ஓய்வு பெற்ற தெ. பொ. மீ. அவருடைய மகனுடன் (இவர் பொறியியல் கல்லூரிப் பேராசிரியர்) தங்கியிருந்தார். இதைக் கேள்விப்பட்டு அவரை மரியாதைக்காகப் பார்க்கச் சென்றேன். என்னுடன் வழக்கமாக உற்சாகமாக உரையாடும் பாங்கு அவரிடம் காணப்படவில்லை. 'உம்மா மூஞ்சி'யுடன் இருந்தார். இடையில் ''உங்கள் துணைவேந்தர் நல்லவர்; நேர்மை தவறாதவர்'' என்று ஒரு வார்த்தை பேசினார். பின்னர் காஃபி வழங்கச் செய் தார். யாருக்கோ உதவுவதற்காக எனக்கு அளவுக்கு மீறின கொடுமை இழைத்ததற்காக வருந்தியிருக்க வேண்டும் என்று எனக்குப் பட்டது. நன்றி செலுத்தி விடை பெற்றுத் திரும்பினேன்.

1972-என்பதாக நினைவு கேரள திராவிட மொழி யியல் மையத்தின் ஆதரவில் ஓராண்டு உதவித் தொகை ஏற்பாட்டுடன் (Fellowship) ஆய்வாளர் பொறுப்பேற்று அப்பணியைத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியாற்றினார். நூலகக் கட்டடத்தில் அவருக்கு இடம் தரப் பெற்றிருந்தது. உணவுக்கு மகளிர் விடுதியிலும் தங்கு வதற்கு மகளிர் விடுதியிலுள்ள விருந்தினர் மாளிகையிலும் ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. நான் மரியாதைக்காக அவரை நூலகக் கட்டடத்தில் சந்தித்துப் பேசி மகிழ்ந் தேன். இயல்பான கலகலப்பு அவர் என்னிடம் காட்ட வில்லை. அடிக்கடித் தெலுங்குத் துறைக்கு வந்து போவ துண்டு. ஒரு நாள் கூட தமிழ்த் துறையை எட்டிப் பார்க்கக் கூட இல்லை. ஏதோ எனக்குத் தவறிழைத்ததை நினைத் துக் கொண்டு நாணப்படுவதாக எனக்குப் பட்டது. நான் நேரில் வழியில் கண்ட போதெல்லாம் வாய்விட்டுப் பேசும் போது எனக்கு இது தெளிவாயிற்று. கூடிய வரை ஒதுங்கி யிருக்கநினைப்பதாகவேகுறிப்பினால்அறிந்துகொண்டேன். துறை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளச் செய்வதும் என் இல்லத்திற்கு விருந்தினராக அழைக்க நினைத்ததும் நடை

பெற முடியாமல் போய்விட்டது. ஒதுங்கி ஒதுங்கிப் போய்க் கொண்டிருப்பவரை அழைக்க என் மனமும் ஒருப் படவில்லை. இஃதுஅவரைஉபசரிக்க எனக்குஊழ் இல்லை போலும் என்பதாகவே நான் நினைத்துக் கொண்டேன்.

1974-இல் என நினைக்கின்றேன். டாக்டர் சஞ்சீவியும் நானும் ஒரு மூதறிஞர் குழு ஒன்றில் மதுரைப் பல்கலைக் கழகத்தில் (அழகர் கோயில் சாலையில் உள்ள பகுதி) கலந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. அதற்கு அருகிலுள்ள குடியிருப்பிலுள்ள இல்லமொன்றில் டாக்டர் சண்முகம் (தெ. பொ. மீ.யின் மருகர்) வாழ்ந்து வந்தார். அவர் இல்லத்தில் தெ. பொ. மீ. தங்கியிருந்ததை அறிந்து நாங்கள் இருவரும் மரியாதைக்காக அவரைச் சந்தித்துப் பேசினோம்.

அக்காலத்தில் தெ.பொ.மீ. ஆறுமாதகாலம் ஆழ்நிலை தியானத்தில் பயிற்சி பெற்று அப்பணியில் இறங்கி இருந்தார். அவருடைய இறுதிக்காலம் வரையில் அப்பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்ததை அறிந்தேன். அதன் பிறகு சென்னையில் சில கூட்டங்களில் அவரைச் சந்தித்து உரையாடியதுண்டு, பின்னர் அடையாறு புற்றுநோய் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்ததும் என் காதிற்கு எட்டியது; மருத்துவமனையிலிருந்து வெளி வந்ததையும் அறிந்தேன். சில திங்களில் அவர் திருநாடு அலங்கரித்த செய்தியும் எனக்கு எட்டியது. மிகவும் வருந்தினேன். விரோதிகளிடமும் மனம் கலந்து பழகும் இயல்பினை இறைவன் எனக்கு அளித்துள்ளான். காரைக் குடியிலிருந்து என்னிடம் மிக அன்பாகப் பழகி வந்த இப்பெருமகனாரிடம் எந்தவித உதவியையும் பெற முடியாமல் போனது எனது தீயூழே என்பதை நினைந்து நினைந்து வருந்துகின்றேன். தெ.பொ.மீ.யின் ஆணவ மலத்தின் செயற்பாடே இவ்வளவுக்கும் காரணம் என்று கூட என் மனம் எண்ணத் தொடங்குகின்றது. என் வாழ்வில்எந்தப் பெரியவரின்உதவியையும் பெறமுடியாமல் செய்தவன் இறைவனே என்பதைச் சிந்திக்கின்றேன்.

## 27. பூதூர் மகாவித்துவான் கி.வேங்கடசாமி ரெட்டியார்

தமிழ் உலகில் நான் மிக்க மதிப்பும் மரியாதையும் வைத்திருந்த பெரியோர்களில் முதலிடம் வகித்தவர் பன்மொழிப் புலவர் வே.வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள். இவருக்கு அடுத்த படியாக என் உள்ளத்தில் நிலையாக இடம் பெற்றவர்கள் வைணவ உலகில் 'பூதூர் சுவாமிகள்' என்றும் தமிழ் உலகில மகாவித்துவான் கி. வேங்கடசாமி ரெட்டியார் என்றும் வழங்கப்படும் பெரியார் ஆவர். நான் சென்னைக்கு வரும்போதெல்லாம் பன்மொழிப் புலவர் இல்லத்தில்தான் தங்குவேன். அப்போதெல்லாம் பூதூர் ரெட்டியார் பேச்சு வரும். பன்மொழிப்புலவர் பேச்சைத் தவிர அவர் இல்லத்தில் பணிபுரிந்து வந்த கோவிந்தன் என்ற வேலையாள், பன்மொழிப் புலவர் பரிந்துரையால் மாக்மில்லன் அச்சகத்தில் பணியேற்ற ஆறுமுகம் இவர்களும் தம் பேச்சில் பூதூர் ரெட்டியார்பற்றி மிகப்பெருமையாகப் பேசியதைக் கேட்டதுண்டு. ஆனால் நான் சென்னைக்குச் செல்லும் நாட்களும் பூதூர் ரெட்டியார் சென்னைக்கு எழுந்தருளும் நாட்களும் ஒத்துவராததால் சென்னையில் பன்மொழிப் புலவர் இல்லத்தில் சந்திக்கும் வாய்ப்பு நேரிடவில்லை. துறையூர் வாழ்வுக் காலத்தில் இவரைச் சந்திக்கவே இல்லை.

நான் காரைக்குடியில் பணியேற்ற பிறகுதான் இச்சந்திப்பு நிகழ்ந்தது. கம்பன் திருநாள் தொடங்கு வதற்கு ஒரு திங்களுக்கு முன்னதாகவே காரைக்குடியி லுள்ள முக்கிய தமிழாசிரியர்களாகிய பேராசிரியர் ஆ.முத்துசிவம், க. தேசிகன், பூ. அமிர்தலிங்கம், அடியேன் ஆகியோர்களை அடிக்கடி சந்திக்குமாறு பணிப்பார் திரு.சா.கணேசன் அவர்கள். இந்தக் குழுவில் இந்தி ஆசிரியராகப் பணியாற்றி வந்தவரும் தமிழ்ப்பற்று மிக்க வருமாகிய ஜகத்ரட்சகன் என்பாரும் அடங்குவார். இன்னும் கம்பனை நன்கு சுவைக்கும் அபிசீனியா நாச்சி யப்பன்,முத்துராமன்,மெ. சிதம்பரம் போன்ற நகரத்தார் இளைஞர்களும் வருவார்கள். நிகழ்ச்சிகளை அமைக்கும் முறை, அவற்றிற்குப் பொருத்தமாக யார் யாரை அழைக்கலாம் என்ற விவரங்களை எல்லாம் ஆராய்வார் சா. கணேசன். திரு ஜகத்ரட்சகன் விழுப்புரம் பகுதியைச் சேர்ந்தவர். பூதூர் ரெட்டியாரை நன்கு அறிந்தவர். ஆதலால் அவரை அழைக்கலாம் என்று அவர் பெயரைப் பரிந்துரைத்து முகவரியையும் தந்தார். நானும் பூதூர் ரெட்டியாரை நேரில் பார்த்திராவிடினும் அவர் புலமை யைப்பற்றி நன்கு கேள்வியுற்றிருந்தபடியால் திரு ஜகத்ரட்சகன் பரிந்துரைக்கு வழி மொழிந்தேன். எங்கள் பரிந்துரையை ஏற்று பூதூராரை அழைப்பது என்ற முடிவு ஏற்பட்டது. இது 1952 இல் நடைபெற்ற கம்பன் திருநாளுக்கு என்பதாக நினைவு. பூதூர் ரெட்டியார் கம்பன் விழாவில் கலந்து கொண்டார். நானும் என்னை அவருக்கு அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவரும் என்னைப் பற்றிப் பன்மொழிப்புலவர்மூலம் கேள்விப் பட்டிருந்ததாகத் தெரிவித்தார்

ஒருநாள் பழகினும், பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே[1]

---

1. வெற்றிவேற்கை—34

என்ற அதிவீரராமபாண்டியன் திருவாக்குப்படி எங்கள் கேண்மைவளர்ந்துவந்தது. ஒருநாள்என் இல்லத்தில்இவருக்கும்எஸ்.கே. இராமராசன், வேறு இருவர் ஆகியோருக்கும் ஒரு சிறு விருந்து வைத்ததாக நினைவு. அதன் பிறகு எங்களிடையே கூடுதப் போக்கு வரவு தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டிருந்தது.

1953-56 முடிய பன்னிரண்டு முறை சென்னைக்குச் செல்லும் வாய்ப்புகள் இருந்தன. அதற்குப் பிறகும் 1960 மே முடிய சில அலுவல்கள் நிமித்தம் சென்னைக்கு வந்து கொண்டிருந்தேன். இப்படி வந்து கொண்டிருந்த போது பூதூர் ரெட்டியார் அவர்களை பன்மொழிப்புலவர் இல்லத்தில் இருமுறை சந்தித்து அளாவளாவியதுண்டு. 1960-ஆகஸ்டு முதல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியேற்ற பிறகு திரு. ரெட்டியார் அவர்களுடன் தொடர்பு அடிக்கடி நேரிட்டது.

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடையாளர் தொடர்பு.[2]

என்ற குறளுக்கு இலக்கியமாக அமைந்தார் திரு. ரெட்டியார். அடிக்கடிப் பழகியதால் திரு. ரெட்டியாரின் புலமை ஒளியும் நன்கு தெரிந்தது. அவர் உயர் பண்புகளையும் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

திருப்பதியில் பணியாற்றிய முதல் ஆறாண்டுக் காலத்தில் சிறுவர்கட்கு; தமிழ்க் கல்வி வசதிகள் திருப்பதியில் இல்லாததால் குடும்பம்காரைக்குடியிலேயே இருந்தது. ஒவ்வொரு விடுமுறைக்கும் (செப்டம்பர், டிசம்பர், ஏப்பிரல்) திருப்பதியிலிருந்து காரைக்குடிவந்து போய்க் கொண்டிருந்தேன் திருப்பதியிலிருந்து. அதிகாலை 2-20க்கு புறப்படும் திருப்பதி விழுப்புரம் இருப்பூர்தி வண்டி விழுப்புரத்தை முற்பகல் 10 மணிக்கு வந்தடையும்.

---

2. குறள்—783

பிறகு சென்னை—இராமேசுவரம் இருப்பூர்தி மாலை ஐந்து மணிக்கு விழுப்புரத்தை அடையும். அதில்தான் நான் காரைக்குடி செல்ல வேண்டும். அது காரைக்குடியை விடியற்காலை 4.மணி சுமாருக்கு வந்து சேரும். இந்தப் பயணத்தின்போது விழுப்புரத்தில் முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 5 மணி வரை காத்திருக்க வேண்டும். இந்த நிலையை விளக்கிப் பூதூர் ரெட்டியாருக்கு எழுதுவேன்—விழுப்புரம் நிலையத்திற்கு வரும்படி. அவர் பூதூரில் பகலுணவை முற்பகல் 9-10க்குள் முடித்துக் கொண்டு 11-மணிக்குள் விழுப்புரம் நிலையத்திற்கு வந்து விடுவார்.

சுமார் 6 மணி நேரம் மேல் வகுப்பினர் காத்திருக்கும் அறையில் இலக்கியச் சல்லாபம் தான். இக்காலத்தில் ஒரு முறை 'வில்லிபாரதத்தில் விநோத திருத்தங்கள்' (1962) என்ற ஒரு சிறு நூலை எனக்கு அளித்தார்கள். இதில் 'வில்லிபாரதத்தில்' பல திருத்தங்களைச் செய்து வில்லி புத்தூராழ்வாரைச் சைவராக்க முற்பட்ட முறைகேடுகள் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. இதிலுள்ள சில கருத்தும் ஆசிரியரின் பொது நோக்கையும், வைணவத்தில் பற்று மிக்கிருப்பினும் பிறசமயக் காழ்ப்பின்றி சமரச நோக்குடைய பண்பாட்டையும் காணமுடிகின்றது. வைணவத்திலும் சைவத்திலும் படிப்போர் உள்ளத்தை உருக்குகின்ற தோத்திரங்களும் அறிவியல் நூல்களும் (சாத்திரங்களும்) புராணங்களும் உள்ளன. இவை அவ்வச் சமயத்தினருக்கு அருமருந்தாக அமைவன. ஒரு சமயத்தார் பிற சமய நூல்களைப் பயிலவேண்டின் தம் சமய நூல்களைப் பயில்வதைப் போலவே ஈடுபாட்டுடன் பயிலவேண்டும் என்றும், அந்நூல்களில் பொருள் காணு மிடத்து அச்சமயநூலோர் கருத்துக்கு மாறுபடா வண்ணம் காணுதல்வேண்டும் என்ற கொள்கையைப் பொன்னே போல் போற்றுபவர் என்பதையும் அச்சமயக் கருத்துக்கு மாறாகப் பொருள் காணலைக் கடிபவராகத்

திகழ்வதையும் இந்நூலில் காணலாம்; நேரில் பழகும் போதும் அறியலாம்.

இந்தக் காலத்தில் 'மகாத்மா காந்தியடிகள்மீது நெஞ்சு விடுதூது' (1934) என்ற நூலின் மூலத்தில் ஒரு படியையும் தந்தார். நூல் மிக அருமையான நூல்; சொல் வளமும் பொருள்வளமும் என் உள்ளத்தை ஈர்த்தன. இதனைக் குறிப்புடையுடனும் ஆராய்ச்சி முகவுரையுடனும்—டாக்டர் அய்யர்வாள் பதிப்பைப் போல்—வெளியிட்டால் பலரும் விரும்பிப் படிப்பர் என்ற கருத்தைத் தெரிவித்தேன். இப்பொறுப்பை என்னையே ஏற்றுக் கொள்ளுமாறு பணித்தார். ஒப்புக்கொண்டேன். திருப்பதியிலிருந்த வரை வேலை பளுவாலும் வேறு பணி களில் ஈடுபட்டிருந்தமையாலும் இப்பணியை மேற் கொள்ள இயலவில்லை. ஓய்வு பெற்றுச் சென்னை வந்த பிறகும் கலைக்களஞ்சியம் (இரண்டாம் பதிப்பு) வெளி யிடும் பொறுப்பு வந்ததாலும் உடனே கவனிக்க முடிய வில்லை. என்றாலும், இப்பணியில் சிறிது சிறிதாக ஈடு பட்டு என்மன நிறைவிற்கேற்ப நூலை வெளியிட்டேன் (நவம்பர்-1982). நூலும் திருவேங்கடத்தான் திருமன்றம் (32, பெருமாள் முதலித் தெரு, இராயப்பேட்டை சென்னை-600 014) மூலம் வெளி வந்துள்ளது.

இக்காலத்தில் (செப்டம்பர் 1964) பல்லாண்டுகள் பிஎச். டி. க்குப் பதிவு செய்ய முயன்றும் பதிவு செய்ய முடியாத முயற்சியும் கை கூடியது. 'நாலாயிரத் திவ்விய பிரபந்தத் தில் நம்மாழ்வார் தத்துவம்' என்ற பொருள்பற்றி ஆராயத் தீர்மானித்திருந்தேன். இப்பிரபந்தத்திலுள்ள கருத்துக் களையும் பன்னிரு திருமுறைகளின் கருத்துகளையும் (இலக்கிய நயம் பற்றியவை மட்டிலும்) ஒப்பிட நினைத் திருந்தேன். திரு. ரெட்டியாருக்கு இதுபற்றி எழுதி யிருந்தேன். நானும் சில ஒப்புமைப் பாடல்களைக் குறித்து வைத்திருந்தேன்; திரு. ரெட்டியாரவர்களும் சில வற்றைக் குறித்து வைத்திருந்தார்கள். விழுப்புர இருப்

பூர்தி நிலையத்தில் இரண்டு நூல்களையும் கையில் வைத்துக் கொண்டு பாடல்களையும் பாசுரங்களையும் ஒப்பிட்டு ஆராய்வோம். பிறப்பிலேயே வைணவராக இருந்தும் 'மறந்தும் புறந்தொழா மாந்தர் (நான்முகன் திருவந்தாதி-68) என்று தம்மைச் சொல்லிக் கொள் ளாமல் சைவ இலக்கியத்தில் ஆழங்கால் பட்டிருந்ததைக் கண்டு வியந்து போனேன். ஒப்புமைப் பகுதிகளை இவர் எனக்குக் காட்டிக் கொடுத்தது எனக்குப் பெரிதும் உதவியது. சைவ சமயத்தில் காழ்ப்பு சிறிதும் இல்லாத, பரந்த மனப்பான்மையுள்ள ஒரு வைணவராகத் திகழ்ந்த ஒரு பெருமகனாரை இவரிடம் காண முடிந்தது. இரு சமய இலக்கியங்களையும் பழுதற வோதிய பெரியார் இவர் என்பதைக் கண்டு தெளிந்தேன். ஓர் ஆறு ஆண்டு காலம் இவ்வாறு ஆராய்ந்து குறிப்புகளை நிரல் படத் தொகுத்து வைத்திருந்தேன். இவற்றை ஆங்கிலத்தில் 150 பக்கத்தில் ஓர் அரிய கட்டுரையாகவும் எழுதிவைத் திருந்தேன். ஆனால், என் ஆய்வுப் பொருள் தத்துவத் தைப் பற்றியிருந்தமையால் இந்த ஆராய்ச்சி என ஆய்வுக் கட்டுரைக்குச் சிறிதும் பொருந்தாது என்று அறுதியிட்டு இதனைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனால் இவற்றை நான்கு கட்டுரைகளாக்கித் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் நடத்தி வரும் 'சப்தகிரி' என்ற திங்கள் இதழில் வெளியிட்டேன்.

இப்பயணத்தில் மற்றொரு சமயம் 'திருமலை மாலவனுக்கா? வேலவனுக்கா?' என்ற பொருள் பற்றி ஆய்ந்தோம். ஏற்கெனவே பேராசிரியர் மு. இராகவய் யங்கார் அவர்கள் 'ஸ்ரீ திருவேங்கடமுடையான்' (ஆராய்ச்சித் தொகுதி 20-வது கட்டுரை) என்ற தலைப்பில் ஓர் ஆய்வு கட்டுரை வரைந்திருந்தார்கள். இக்கட்டுரையிலுள்ள கருத்துக்களை மறு ஆய்வு செய் தோம்; இதனால் கருத்துக்கள் மேலும் எங்கட்குத் தெளிவாயின.

1. நெடியோன்— தனித்து நின்ற நிலையில் திருமாலையே குறிக்கும். இச்சொல் 'உயர்ந்தோன்' என்ற பொருளுடையதாய் மற்ற தெய்வங்கட்கும் அரசர்க்கும் வழங்கும். இவ்வாறு வழங்கும்போது சிறப்பு அடையுடனோ அல்லது முன் தொடர்ச்சி பற்றியோ அவர்களுள் ஒருவனைக் குறிக்குமேயல்லது தனித்து நின்ற நிலையில் அங்ஙனம் குறிக்கும் ஆற்றலுடையதன்று. 'முந்நீர் விழவின் நெடியோன்' (புறம்-9) 'தேர் வீசிருக்கை நெடியோன்' (ஷை-114) 'பொலந்தார் மார்பின் நெடியோன்' (மதுரைக்காஞ்சி-61) 'நிலந்தரு திருவின் நெடியோன்' (சிலம்பி 28:4) என்று பாண்டிய னையும் பாரி போன்ற அரசர்களையும் அடையுடன் 'நெடியோன்' என்ற சொல்லால் குறித்தல் காணலாம். அங்ஙனமே 'மஞ்ஞை வெல் கொடியுயரிய....நெடியோன்' (அகம் 149) என்றும், 'படுமணியானை நெடியோய்' (பரிபா, 19 :28) என்று அடையுடனும், 'நெடியாய் நின்குன்றின் மிசை' (ஷை. அடி. 84) என்று முன் தொடர்பு பற்றியும் கூறுவது பண்டைய வழக்கே யாகும். ஆனால், திருமாலைக் குறிக்கும்போது 'நெடியோன் என்ற சொல் தமிழில் அநாதியாய் அக்கடவுட்கே வழங்கும் 'மால்', 'மாயோன்' என்பவை போன்று திருநாமமாய், நிலங்கடத்தற்கு நீண்ட திரிவிக்கிரமன் என்ற பொருள் குறிக்கும் பெயராகும். 'நெடியோன் மார்பில் ஆரம் போல்' (சிலம்பு 25 : 84), 'நெடியோனன்ன நெடுங்கை' (பெருங். 5. 4:9), 'நெடியவன் மூவகைப் படிவம்' (ஷை 2. 15:10) என்று அடைகளும் முன் தொடர்ச்சிகளும் இல்லாமல் தனித்து நின்றே திருமாலைக் குறிக்கும் ஆற்றலுடையதாதலைக் காணலாம். இங்ஙனமே இளங்கோவடிகள் கூறிய 'நெடியோன் குன்றமும் தொடி யோன் பௌவமும்' (சிலம்பு 8 ; 1) என்ற தொடரில் 'நெடியோன்' என்ற பெயர் திருமாலையன்றி வேறு எவரையும் குறிக்கவில்லை என்றும் அறுதியிட்டோம். திருவேங்கடமுடையானை 'நெடியோன்' என்ற பெய

ரால் இளங்கோவடிகள் கூறியது அப்பெருமானைத் திரிவிக்கிரமனாகக் குறிக்கும் ஆழ்வார் பெருமக்கள் வழக்கு கட்கு மிகவும் ஒத்துள்ளதையும் கண்டோம். 'நெடியோனே வேங்கடவா!' (பெரு.திரு 3:9) என்ற குலசேகரப் பெருமாள் வாக்குடனும் 'தாள் பரப்பி மண்தாவிய ஈசனை' (திருவாய் 3.3:11) என்ற சடகோபர் வாக்குடனும் ஒத்து வருவதையும் நினைத்தோம். நச்சினார்க்கினியரும் 'நிலம் கிடந்த நெடு முடியண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடு பெற்ற மலை' என்று திரிவிக்கிரமனாகவே திருமலை எம்பெருமானைக் கூறி மகிழ்வதையும் சிந்தையிற் கொண்டோம்'.

2. 'மாயோன் மேய காடுறையுலகமும், சேயோன் மேய மைவரை யுலகமும்' (தொல்.பொருள்.5) என்ற நூற்பாவில் திருமாலுக்கு முல்லை நிலமாகிய காட்டையும் முருகனுக்குக் குறிஞ்சி நிலமாகிய மலையையும் உரியன வாகக் கூறியிருக்க, இளங்கோவடிகள் 'நெடியோன் குன்றம்' என்று வேங்கடத்தை மாயோன் மலையாகக் கூறினது நியாயம் ஆகாது என்று சிலர் கூறும் வாதத்தை யும் கலந்து ஆய்ந்தோம். இதற்கு நாங்கள் கொண்ட முடிவு : இளங்கோவடிகளே அதே காதையில் பாண்டி நாட்டு அழகர் மலையையும் கூறியிருக்கின்றார் அல்லவா? அம்மாதிரியே திருவேங்கடத்தையும் அவர் மாலவன் குன்றமாகக் கருதுவது பொருத்தம் தானே. தொல்காப்பியர் ஒவ்வொரு கடவுளர்க்கும் நிலம் வகுத் திருப்பது உண்மை தான். ஆயினும் மலைப்பகுதியில் திருமால் கோயில் கொள்வது உண்டென்றால் அது பிழை யென்றும், அதனால் அத்திருமாலை மலைக்குரிய முருக னாக்கி விடுதலே தமிழ் நூல் முறையென்றும் துணிவது தான் மிகவும் விநோதமான போக்காகும். எனவே, இப்போக்கினை ஏற்றுக்கொள்வோமாயின், ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருமாலிருஞ்சோலை மலை, திருக்குறுங்குடி, திருநீர்

மலை, திருமெய்யம், சிங்கவேள் குன்றம் (அகோபிலம்), திருக்கடிகை (சோழசிங்கபுரம்—சோளிங்கர்), பதரியா சிரமம், சாலிக்கிராமம் முதலாக மலைப்பகுதியில் கோயில் கொண்டிருக்கும் திருமால்களை என் செய்வது? அவர் களைக் காலி செய்வித்து முருகனுக்கு இடந்தருமாறு ஆணை பிறப்பிக்க முடியுமா? அன்றியும், மருதம் நெய்தல் நிலப் பகுதிகளில் கோயில் கொண்ட திருமால்; சிவபிரான், முருகன் முதலிய தெய்வங்களையும் அகற்றி விட்டு அவ்வந்நிலங்களுக்கு உரியவராகத் தொல்காப்பியத்தில் வரையறுக்கப் பெற்ற இந்திரனையும் வருணனையும் முறையே குடியேற்ற வேண்டியதும் இன்றியமையாததாகி விடும். இஃது எவ்வளவு அசம்பாவிதம்?—இவ்வாறு எண்ணி எண்ணிச் சிரித்து மகிழ்ந்தோம்.

3. 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடை' என்ற தொல்காப்பியத்தின் பாயிரமான பனம்பாரனாரின் நூற்பா அடியையும் சிந்தித்தோம். தமிழ்கூறு நல்லுலகத் திற்கு வடக்கேயுள்ள நிலப்பகுதியின் இயல்பினை வரலாற்றுப் பேரறிஞர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கூறியிருப்பதை திரு பூதூர்ரெட்டியார் கவனத் திற்குக் கொணர்ந்தேன்.[1] அப்பொழுது இந்நூல் வெளிவர வில்லை. கருத்தை மட்டிலும் குறிப்பிட்டேன். டாக்டர் அய்யங்கார் அவர்கள் குறிப்பிடும் தமிழ்கூறு நல்லுலகிற்கு வடபால் உள்ள நாட்டுப் பகுதியும் சங்ககாலத்து வேங்கடப் பகுதியும் (அகம்—275) இயற்கையமைப்பிலும் தட்பவெப்ப நிலைகளிலும் கிட்டத்தட்ட ஒன்றுபோல் காணப் படுகின்றன. இதனால் சங்கஇலக்கியங்கள் குறிப்பிடும் 'வட வேங்கடம்' இன்னதென வரையறை செய்ய முடிகின்றது.

இவ்வாறு அவருக்கு விளக்கினேன்: ''தமிழ்கூறு நல்லுலகத்திற்கு வடதிசையில் மேற்குக் கடற்கரை யிலிருந்து கிழக்குக் கடற்கரை வரையிலுமுள்ள நீண்ட

1. A History Tirupati-பக். 1—2. இந்த ஆசிரியரின் 'திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்' —பக் 29—39.

மலைத் தொடர்கள், பொறுக்கமுடியாத வெப்பத்துடன் கூடிய காடுகள், சுவடுகள் இவற்றுடன் கூடிய குன்றுகள், சிறுகுன்றுகள் அடங்கிய பகுதியேசங்கநூல்களில்குறிப்பிடப் பெறும் வேங்கடமாகும். இப்பகுதி மேற்குக் கடற்கரை யிலிருந்து கிழக்குக் கடற்கரைவரை தொடர்பு அறாத வட எல்லையாக அமைந்திருப்பதால் அது 'வடவேங்கடம், என்ற பெயருடன் வழங்கிற்று. தொல்காப்பியப் பாயிர மாக அமைந்த 'வடவேங்கடம் தென்குமரி' எனத் தொடங்கும் பனம்பாரனார் நூற்பாவில் குறிப்பிடப் பெற்றுள்ள 'வடவேங்கடமும்' ஏனைய சங்க நூல்களில் குறிப்பிடப்பெற்றுள்ள 'வேங்கடமும்' இப்பகுதியையே குறிக்கின்றது என்று உறுதிப்படுத்தலாம். மற்றும், 'வேங்கடம்' என்ற பகுதி கிழக்குக் கடற்கரையின் அருகில் திருப்பதி மலையிலிருந்து தொடங்குகின்றது என்பது திருப்பதி மலைக்கு 'வேங்கடம்' என்ற பெயர் அமைந் திருந்தலே ஒரு சான்றாக அமைகின்றது. சங்க இலக்கியங் களில் வெப்பம் மிக்க பகுதியாகக் குறிப்பிடப் பெறும் வேங்கடத்தின் ஒரு பகுதியாகவோ அல்லது அப்பகுதியின் ஓரத்திலோ இம்மலை இருந்திராவிடில் சிறந்த தமிழறிஞர் களாகத் திகழ்ந்த 'முதலாழ்வார்கள்' இம்மலையை 'வேங்கடம்' என்று வழங்கியிரார். இவர்கள் பாடல்களில் சங்க இலக்கியச் சாயலும் நெறியும் நிழலிடுவதை நாம் அறிவோம். அன்றியும், நீண்ட பகுதியை எல்லையாகக் கொள்ளப்படுவதேயன்றி திருப்பதி மலை போன்ற சிறு மலையை எல்லையாகக் கொள்ள முடியாது என்ற கருத் தையும் நாம் சிந்திக்க வேண்டும்.'' அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த திரு ரெட்டியார் இக்கருத்துகளை ஒப்புக் கொண்டு என் ஆய்வுத் திறனை வியந்து பாராட்டினார் கள். அவர்களிடமும் ஆழ்வார்களின் தத்துவம் பற்றிய பல குறிப்புகளைத் தெரிந்து கொண்டேன். இப்படியாக விழுப்புர இருப்பூர்தி நிலையத்தில் மேல்வகுப்புப் பயணி கள் தங்கும் அறையில் எங்கள் தமிழ், சமய ஆய்வுகள் பற்றிய சல்லாபங்கள் ஆறு ஆண்டுகள் நடைபெற்றன.

இன்னும் எத்தனையோ செய்திகளை நினைவுகூர முடிய வில்லை.

திருமலையில் 18-8-1971ல் உறவினர்கள், நண்பர்கள், புலவர்கள் பெரியோர்கள் அடங்கிய குழுவினர் இவரது மணிவிழாவைக் கொண்டாடினர். சிறந்த வைணவ அடியார் ஒருவரின் மணிவிழா ஏழுமலையான் திருக் கோயில் கொண்டுள்ள திருமலையில் கொண்டாடுவதற்கு என்ன தவம் செய்திருக்க வேண்டும்? என்று நினைத்துக் கொண்டேன். இந்த ஏற்பாட்டிற்கு—பெரிய குடிசை (Big Cottage) ஒதுக்கீடு செய்வது முதல் பிற செயல்கள் நடைபெறுவது வரை—அடியேனும் இவர்தம் கிருஷ்ணா புரம் சம்பந்தி ரெட்டியாரும் திருமலை—திருப்பதிதேவஸ் தான அலுவலகத்திற்குப் பல முறை சென்று முயன்றதை இப்போது நினைவுகூர்கின்றேன். இத்தகைய ஏற்பாடு களை முன்னின்று செய்வதில்—திறமையாகச் செய்வதில்—கிருஷ்ணாபுரம் ரெட்டியாருக்கு நிகர் அவரே என்பதை யும் நினைக்கின்றேன்.

1970-ஆம் ஆண்டில் தமிழ் எம்.ஏ. வகுப்புகளும் பிஎச்.டி. ஆய்வு வசதிகளுடன் தொடங்கப் பெற்றன. இதன் பிறகு திருப்பதிக்கு திரு. ரெட்டியார் அடிக்கடி வரவும் வாய்ப்புகள் ஏற்பட்டன. 1974-இல் தமிழ்த்துறை யின் முதல் கருத்தரங்காக திருக்குறள் கருத்தரங்கு நடை பெற்றது. அதில் ஓர் அமர்வு 'வள்ளுவரும் சமயமும்' என்ற தலைப்பில் சைவம், வைணவம், பௌத்தமும் சமணமும், இஸ்லாம், கிறித்தவம் என்ற தலைப்புகளில் ஐந்து அறிஞர்கள் ஆய்வுக்கட்டுரைகள் படித்தனர். வைணவம்பற்றிய திரு ரெட்டியாரின் கட்டுரை அனைவர் கவனத்தையும் கவர்ந்தது. மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை, என் நோற்றான் கொல் எனும் சொல் (70) என்ற குறள் பெரியாழ்வார் திருமொழியில்,

என்ன நோன்பு நோற்றாள் கொலோ
இவனைப் பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை எய்துவித்த
இருடிகேசா முலையுணாயே

2: 2: 10

என்று வேறு வகையில் வருவதைக் காட்டினது அனைவர் கவனத்தையும் கவர்ந்தது. வருகிற ஆண்டுகளில் நடைபெற்ற சிலப்பதிகாரக் கருத்தரங்கு, கம்பராமாயணக் கருத்தரங்கு ஆகியவற்றில் பங்கு பெற்று சிறந்த ஆய்வுக் கட்டுரைகளை வழங்கி அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தார்.

இந்தக் காலத்தில் ஒருமுறை பண்ணுருட்டி வைணவ சபையில் எனக்குப்பேச வாய்ப்பிருந்தது. என்ன பேசினேன் என்பது நினைவு இல்லை. ஆனால் திருப்பதி நண்பர் சதாசிவ ரெட்டி (தெலுங்குப் பேராசிரியரை) இந்தச் சபைக்கு இட்டுச் சென்று எளிய தெலுங்கில் பேச வைத்தேன். அப்பக்கத்து ரெட்டிகுலப் பெருமக்கள் தெலுங்குச் சொற்பொழிவு கேட்க விரும்பினார்கள். திரு சதாசிவ ரெட்டியின் தெலுங்குப் பேச்சு பெரும்பாலோருக்குத் தெளிவாக விளங்கியதாகக் கேட்டு மகிழ்ந்தேன். இவர் கிராமியத் தெலுங்கில் உரையாற்றும் பழக்கமுடையவர். வடமொழி அதிகமாகக் கலந்த பண்டிதத் தெலுங்கிலும் உரையாற்றுவார். என்னுடைய மணிவிழாவில் (செப்டம்பர் 1977) இந்தத் தெலுங்கில் பேசி அனைவரையும் மகிழ்வித்தார். பண்ணுருட்டி வைணவ சபை பொன்னாடை போர்த்தி சன்மானம் வழங்கி இவரைப் பெருமைப்படுத்தியது. இதற்கு மூலகாரணமாக இருந்தவர் நம் பூதூர் சுவாமிகளே என்பதை நினைவுகூர்கின்றேன்.

1976- ஆகஸ்டில் என் மணிவிழா நடைபெறும் நாள். இதனைத்திருமலையில் நான்பிறந்தநட்சத்திரத்தில்இறைவனுக்குக் கல்யாண உற்சவம் செய்து வைத்து மனநிறைவு

பெற்றேன். 1977 செப்டம்பரில் தமிழ்த்துறையில் என் செலவில் என் மணிவிழா சிறிய அளவில் நடை பெற்றது. விழாவிற்கு திரு. எம். அனந்த சயனம் அய்யங்கார் அவர்கள் தலைமை வகித்தார்கள். தமிழகத்திலுள்ள மடாதிபதிகள், பல்கலைக்கழக மானிய ஆணையத்தலைவர் துணைத்தலைவர், பல்கலைக்கழகத் துணைவேந்தர்கள், திருவேங்கடவன் ஆட்சிக்குழு உறுப்பினர்கள், என் ஆசிரியர்கள், மேல்நீதிமன்றம், உயர்நீதிமன்ற நீதிபதிகள் அரசியல் தலைவர்கள், உயர்நிலைப்பள்ளியில் என்னுடன் பணியாற்றியவர்கள், என் நண்பர்கள்— என்பால் நல்லெண்ணம் கொண்டவர்கள், திருவேங்கடவன் பல்கலைக்கழகப் பேராசிரியத் தோழர்கள், பிற பல்கலைக் கழகப் பேராசிரியர்கள், என் முன்னாள்—இன்றைய மாணவர்கள் அனுப்பிய வாழ்த்துச் செய்திகள் அடங்கிய மலர் வெளியிடப் பெறறது. இம்மலரில் திருரெட்டியார் அவர்கள் என்னை வாழ்த்திய பாடல்கள்.

உழைப்பதனால் மிகஉயர்ந்தோன் யார்க்கும் நல்லோன்;
உண்மையுணர் நன்னெஞ்சன்; உணர்ச்சி மிக்கான்;
அழைப்புவிடு மாநிலங்கள் பலவும் சென்றோன்;
ஆழ்வார்கள் கருத்துணர்ந்தோன்; அயர்வே இல்லான்;
தழைப்பவரு சமயவேற் றுமைகா ணாதான்;
தண்டமிழும் ஆங்கிலமும் தேர்ந்த ஞானி;
மழைப்பருவம் கண்டமயில் இனம்போல அன்பர்
மகிழவரு சுப்புரெட்டி என்பான் மன்னோ

இலக்கியமா? இலக்கணமா? இயல்விஞ் ஞான
எழிற்கலையா? உளநூலா? எதிலும் வல்லான்;
கலக்கமிலா தாராய்ச்சி முடிவு காட்டிக்
களிப்புறுவோன்; அறிஞரெலாம் கருத வாழ்வோன்;

புலக்கண்உற உரைகாண்பான்; நூலும் காண்பான்;
போதகா சிரியனுமாய்ப் போந்தான் கண்டீர்;
தலக்கணிவன் தனக்குநிகர் தானாய் நின்ற
சான்றோன்காண் சுப்புரெட்டி என்பான் மன்னோ

அறிவுடைநூல் பலதமிழில் தந்த நந்தம்
அறிஞர்பிரான் சுப்புரெட்டி யாரென் றுற்றேன்
இறையருளால் அறுபதாண் டெய்தி நின்ற
இவன்திருவேங் கடத்தெந்தை யருளால் இன்னம்
துறைபலவா விரிந்த பன்னூல் தோய்ந்து தோய்ந்து
சொல்லமுதம் நமக்களிக்க சிறுவர் தம்மோ
டுறவினரும் அயலவரும் போற்ற வாழ்க;
உறற்கரிய வளம்பலவும் உறுக மாதோ.

தூயஉள்ளமும் திருமாலை நிரந்தரமாக நெஞ்சில் கொண்ட இப்பெரியாரின் வாழ்த்துக் கனத்தால் என் இலக்கியப்பணி நடைபெற்று வருகின்றது என்பது என் அதிரா நம்பிக்கை.

1982-இல் ‘முத்திநெறி’ என்ற தலைப்பில் வைணவ சித்தாந்தத்தைத் தெளிவாக விளக்கும் பாங்கில் கடித உத்தியை மேற்கொண்டு நூலொன்றை எழுதி வெளியிட்டேன். இதற்கு அணிந்துரை வழங்குவதற்குப்பொருத்தமானவர் திரு. ரெட்டியாரே என்று கருதி அவரை வேண்டினேன். ஒப்புக் கொண்டு எழுதி வாழ்த்தினார். 1983க்குப் பிறகு இவர் அருமைத் திருமகனார் (திரு. வே. இலக்குமி நாராயணன் B. E. (பொறியியல் துறையில் பணியாற்றுபவர்) சென்னைக்கு மாற்றலாகி என் தெருவிற்கு அடுத்த தெருவில் வாழும்போது இப்பெருமான் பெரும்பாலும் இங்குத் தங்கியிருப்பார். இதனால் அடிக்கடி இவருடன் அளவளாவும் வாய்ப்புகள் ஏற்பட்டன. இவற்றால் யான் வைணவ இலக்கியங்களிலும் வைணவ தத்துவங்களிலும் பல நுட்பங்களை அறியவும் தெளிவு

பெறவும் முடிந்தது. இக்காலத்தில் இவர் நோய்வாய்ப் பட்டுத் துடித்தது எனக்குத் தீரா வருத்தமாக இருந்தது. எனக்கு எழுதிய பல கடிதங்களிலும் நேரிலும் 'மரணத் திற்கு அஞ்சேன்' என்று எழுதுவார். இன்னொரு கடிதத் தில்,

கூவிக்கூவிக் கொடுவினை
தூற்றுள் நின்று
பாவியேன் பலகாலம்
வழிதிகைத்து அலமர்கின்றேன்[2]

என்று எழுதுவார். திருவாய்மொழியில் என்ன ஈடுபாடு? துன்புற்ற நிலையிலும் அதற்கேற்ற திருவாய்மொழிப் பாசுரத்தை நினைந்து உருகி எழுதுவதை என்னை வியக்க வைத்தது. ''கூப்பீடு கேட்டு இரங்கி எடுப்பதாக ஈசுவரன் கை நீட்டினால், நீட்டினகை வாங்கவொண்ணாத நிலத் திலே யிற்றுக்கிடப்பது'' என்ற ஈட்டின் ஸ்ரீசூக்தியை நினைந்து மேலும் உருகிப் போனேன். மரணத்தைத் தவிர்க்க முடியாது என்பதை யான் அறிவேன். ஆனால் இப்படி எம்பெருமான் இவரை நோயால் துன்புறுத்த வேண்டுமா? என்பதுவே என் கேள்வி.

இக்காலத்தில் இவர் சென்னையிலும் கடலூரிலும் இருந்து கொண்டு சிகிச்சை பெற்று வந்தார். இந்தக் காலத்தில் 'வைணவ உரைவளம்' என்ற எனது நூல் அச்சாகிக் கொண்டிருந்தது. பல அடிக்குறிப்புகட்கு மூலம் தெரியவில்லை. தெரிவிக்க வேண்டும் என்று கடிதம் எழுதி னால் உடனே பாசுர எண்களைத் தெரிவித்துக் கடிதம் வரும். நோயுற்ற நிலையிலும் நாலாயிரத்தைச் சேவித்துக் கொண்டிருந்தவர். இறுதியாக இராயப்பேட்டை மருத்துவ மனையில் சிகிச்சை பெற்ற வண்ணம் திருநாட்டுக்கெழுந் தருளினார் (22. 12. 84இல்).

2. திருவரங். 3. 2 : 9,

மயிலைத் தொல்காப்பியர் பன்மொழிப் புலவர் வேங்கடராஜுலு ரெட்டியாருக்குப் பிறகு இவர் அடியேனின் உடன் பிறவா அண்ணனாக இருந்துவந்தவர். தமிழ் வைணவக் களஞ்சியம்போல் இருந்து அடியேனுக்கு ஒல்லும் வகையெல்லாம் உதவி வந்தவர். என்றும் 'விஷ்ணு சித்தனாக, இருந்து வாழ்ந்தவர்; நிறைவாழ்வு வாழ்ந்தவர். எப்பொழுதும் திருமண்காப்புத் திகழும் திருமுகமண்டலத் துடனும் சட்டை போடாத பொன் மேனியுடனும் இவரைச் சேவிப்போர் வில்லிபூத்தூர்ப் பெரியாழ்வார் நினைவிற்கு வராமற் போகார். வைணவப் பெருமக்கள் இவரைப் பூதூர் சுவாமிகள்என்றே குறிப்பிடுவர். தமிழிலும் வைணவத்திலும் ஆழங்கால்பட்டு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை இருமுறை பதிப்பித்து எல்லையில்லாப் புகழ் பெற்ற இப்பெரியாருக்கு 'வைணவ உரைவளம்' என்ற எனது நூலை,

நன்னயஞ் சான்ற வுளத்தினை ஆழ்வார்
நவின்றருள் மறைகளுக் களித்தும்
பன்னரும் நுட்ப அறிவினைப் புலமைப்
பாவலர் தங்களுக் களித்தும்
பொன்னெனத் திகழும் ஒப்பிலா உயிரைப்
பூரண நாரணற் களித்தும்
மன்னிய புகழ்கொள் வேங்கட சாமி
வள்ளலார்க் குரிய திந்நூலே.

என்ற பாடல் மூலம் அன்புப் படையலாக்கி இதனை ஒரு பாகவத கைங்கரியமாகக் கருதி மனநிறைவு கொள்ளு கின்றேன். நித்தியசூரிகளுடனும் முக்தர்களுடனும் திவ்விய பிரபந்தக் காலட்சேபம் செய்து வருவார் என்றே எனக்குத் தோன்றுகின்றது. நம்மாழ்வாரின் முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்திற்குத் தெளிவுரை கண்டவரல்லவா?

## 28. திரு. M. அனந்தசயனம் அய்யங்கார்

ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.[1]

என்ற அதிவீரராம பாண்டியனின் வாக்கு திரு. அனந்த சயனம் அய்யங்கார் அவர்களுடன் எனக்கு ஏற்பட்ட தொடர்பை எண்ணும் போதெல்லாம் நினைவிற்கு வரும். திருப்பதி வாழ்வில் (1960—77) முதல் ஆறு ஆண்டுக் காலம் சிறுவர்களின் படிப்பின் நிமித்தம் குடும்பத்தைக் காரைக்குடியில் தங்கும்படி செய்து தனிமையாக வாழ்ந்து வந்தேன். கிழக்கு—மேற்காகவுள்ள காந்தி சாலை யிலிருந்து வடக்கு நோக்கிப் பிரியும் தீர்த்தகட்ட வீதியின் தொடக்கத்திலுள்ள ஒரு சிறு அறையே நான் தங்கியிருந்த இடம். இக்காலத்தில் மாலை நேரங்கள் கோவிந்தராஜ சுவாமியின் சந்நிதி, இருப்பூர்தி நிலையம் ஆகிய இடங் களில் தான் கழியும். நான் தங்கியிருந்த வீதிக்குப் பின்புறம் இருப்பது கங்கைகொண்டான் மண்டபத் தெரு; கங்கைகொண்ட சோழன் பெயரால் ஏற்பட்டது. அதில் தான் பரம்பரைச் சொத்தாக இருந்து வந்த அனந்த சயனம் அய்யங்கார் அவர்களின் இல்லம் இருந்தது. அந்த இல்லத்தின் கீழ்பகுதியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு ஒரு குடும்பம் தங்கியிருந்தது; மேற்பகுதியில் என் அரிய நண்பர் நாராயணன் என்பார் (திருப்பதிப் பல்கலைக் கழக பொருளாதாரத்துறை விரிவுரைவாளர்) என்னைப் போலவே குடும்பத்தை ஐதராபாத்தில் விட்டு

1. வெற்றிவேற்கை – 34

விட்டுத் தனிமையாக வாழ்ந்து வந்தார். இவர் தமிழ் பேசும் வைணவர்; படித்தது தெலுங்கு மொழி.

1962—என நினைக்கின்றேன். திரு. நாராயணன் இருந்த வீட்டின் கீழ்ப் பகுதியில் இருந்த குடும்பத்தைக் காலி செய்யச் செய்து பழுதுபார்க்கும் வேலை பரபரப் புடன் நடைபெற்று வந்தது. இல்லத்தின் முன்புறத்தில் மாற்றம், வெள்ளையடித்தல் முதலான வேலைகள் வேகமாக நடைபெற்று வந்தன. ஒருநாள் திரு. நாராயணனைச் சந்தித்தபோது வீட்டிற்குரிய திரு. அனந்தசயனம் அய்யங்கார் வரப் போகின்றார் என்ற செய்தியைத் தெரிவித்தார். அப்போதுதான் பீகார் மாநிலத்தின் ஆளுநர் பதவிக் காலம் முடிவுற்று திருப்பதிக் குத் திரும்புகின்றார் திரு. அய்யங்கார் சித்தூரில் வக்கீல் தொழிலை நடத்தி வந்த திரு. அய்யங்கார். அவர்கள் நாடு விடுதலை பெற்ற பிறகு நாடாளுமன்றத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுப் பத்தாண்டுகள் நாடாளுமன்ற சபாநாயகராக டில்லியில் வாழ்ந்தார்; தொடர்ந்து ஐந்தாண்டுகள் பீகார் மாநிலத்தின் ஆளுநராக நியமனம் பெற்று ஐந்தாண்டுக் காலம் பாட்னாவில் வாழ்ந்து பதினைந்து ஆண்டுக் காலம் வட நாட்டில் கழித்து முதன்முதலாகத்தென்னாடு திரும்பியவர் சித்தூர் செல்லாது திருப்பதியிலேயே தங்குகின்றார் தம் சொந்த இல்லத்தில்.

ஒருநாள் திரு. நாராயணன் என்னைத் திரு. அய்யங் காரிடம் அறிமுகம் செய்து வைக்கின்றார். தமிழ்மொழி தான் எங்கள் இருவரையும் நன்கு பிணித்து வைத்தது. எடுத்த எடுப்பில், ''நான் பச்சைத் தமிழன்; பிழைப்பின் நிமித்தம் இருந்த இடத்திற்கேற்ப சூழ்நிலை என்னைத் தெலுங்கு படிக்கச் செய்தது. ஆனால் வீட்டில் பேசுவது தமிழ். தமிழ் எங்கள் தாய்மொழி'' என்றார். மீண்டும் என்னை நோக்கி, ''ரெட்டியார்வாள், நீங்கள் வீட்டில் தெலுங்கு பேசுவீர்கள் என நினைக்கின்றேன். தமிழ்

கலந்த சிதைந்த தெலுங்கைத்தான் பேசி வருவீர்கள் என்பதையும் அறிவேன். பல்லாண்டுக் காலமாகத் தமிழகத்தில் வாழ்ந்து வரும் உங்கள் குடும்பம் தமிழ்க் குடும்பமாக மாறிவிட்டது. பிழைப்பின் நிமித்தம் தமிழ் படித்தீர்கள். தவிர, உங்களூரில் (திருச்சி மாவட்டத்தில்) தெலுங்கு படிக்கவும் வாய்ப்பில்லை அல்லவா?'' என்றார். மேலும் தொடர்ந்து 'மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப் பெற்ற பிறகு மக்களிடம் மொழிவெறி தோன்றி விட்டது. இந்த வெறி மொழி படிப்பதற்காக அல்ல. பிரித்துப் பேசி பேசிப் பிழைப்பின் நிமித்தம் ஓர் அலுவலில் அமர்வதற்காக. என்னை 'அரவ வாடு' (தமிழன்) என்று ஒதுக்கப் பார்க்கின்றார்கள். உங்களைத் 'தெலுங்கன்' என்று ஒதுக்கி விட்டிருப்பார்கள். இல்லையா? இவையெல்லாம் திரைமறைவில் நடை பெற்று வரும் நாடகங்கள்'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார். குளிர்பானம் வழங்கச் செய்து அடிக்கடித் சந்தித்து அளவளாவுமாறு பணித்தார். ''எந்தவிதமான தேவையானாலும் சிறிதும் நாணப்படாமல் என்னை அணுகிக் கேட்கலாம். என்னால் இயலும் உதவிகளைச் செய்யக் காத்திருக்கின்றேன்'' என்று அன்று (1962) சொன்ன அன்புமொழி இன்றளவும், வைணவர் வழக்கில் சொன்னால், 'ஆராவமுதமாக' இனிக்கின்றது. ஆனால், அவரிடம் எந்தவித உதவியும் நாடவேண்டிய இன்றியமை யாமை இல்லாது போய்விட்டது.

1966-ஜூன் வரையில் திரு. அய்யங்கார் அவர்களை அடிக்கடிச் சந்தித்து உரையாடுவதுண்டு. தமிழ் இலக்கணத்தைப் பற்றி அடிக்கடி பேசுவார். தமிழ் இலக்கண நூலறிவு இல்லை. பேச்சு வழக்கிலுள்ள சில சொற்களைத் தெலுங்குச் சொற்களுடன் ஒப்பிட்டுப் பேசுவார். 'அகப்படுதல்' என்ற தமிழ்ச்சொல் 'தன் வசப்படுதல்' என்ற பொருளுடையது. இது தெலுங்கில் பேச்சு வழக்கில் சர்வ சாதாரணமாக வழங்கப்படுகின்றது.

'அகப்பட லேது' என்று 'கிடைக்கவில்லை' என்ற பொருளில் வழங்குவதை எடுத்துக் காட்டுவார். இன்னும் பல சொற்களை இங்ஙனம் காட்டுவார் அவற்றையெல்லாம் இன்று நன்றாக நினைவுகூர முடியவில்லை. தமிழில் 'மூங்கில்' என்று பொருள்படும் 'வெதிர்' என்ற சொல் இலக்கிய வழக்கில் மட்டுமே உள்ளது. ஆனால் இச்சொல் தெலுங்கில் பேச்சு வழக்கில் உள்ளது. 'வெதிர் கொய்ய' —மூங்கில் குச்சி என்று வழங்குவர். 'வெதிர்' பேச்சு வழக்கில் 'எதிர்' என்று திரிந்து 'எதிர் கொய்ய' என்று வழங்குகின்றது. தெலுங்கு மக்கள் 'வேங்கடேசு' என்ற சொல்லை 'ஏங்கடேசு' என்றே ஒலிக்கின்றனர். 'வேங்கட முனி' என்பதை 'ஏங்கடமுனி' என்றே ஒலிக்கின்றனர். 'வே' என்ற எழுத்து பேச்சு வழக்கில் 'ஏ' ஆகத் திரிந்து விடுகின்றது. இம்மாதிரி எங்கள் பேச்சு அடிக்கடி நிகழும்.

சிலசமயம் கம்பராமாயணம்பற்றிப் பேச்சு எழும். வால்மீகி ராமாயாயணத்தை நன்கு படித்தவர். கம்ப ராமாயணத்தைப் பற்றி கேள்வி ஞானம் அவருக்கு நிறைய உண்டு. தெலுங்கில் உள்ள இராமாயணத்தையும் நன்கு படித்திருப்பதாகத் தெரிகின்றது. வாலிவதத்தைப்பற்றி விவாதிப்பார். நிகழ்ச்சிக்கு நாம் நீதிநூல்களில் வகுத்துள்ள விதிகளைக் கொண்டு நோக்கும்போது வாலியை இராமன் மறைந்திருந்து அம்பெய்து கொன்றது நியாயமற்றது என்பது போல் தெரியும். மானிட உருத்தாங்கி வந்ததத்கேற்ப இந்தப் பழியை அவன் ஏற்றுக்கொள்ளத் தான் வேண்டும். ஆனால் அவதார ரகஸ்யத்தை நோக்கும்போது இத்தகைய நிகழ்ச்சிகட்குப் பொருள் இல்லை என்பார். கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணன் செய்த பல செயல்கள் அக்கிரமம்போல் தோன்றவில்லையா? பொய்யையும் மெய் போல் அவன் தோன்றச் செய்யவில்லையா? இதனால்தான் ஸ்ரீவைணவர்கள் 'இராமனது மெய்யும் கிருஷ்ணனது பொய்யும் நமக்குத் தஞ்சம்' என்று சொன்னார்கள் போலும் என்பார்.

இராமன்மீது எவ்வளவோ பழியை ஏற்றிச் சொன்ன வாலிகூட இறுதியாக இராமனை 'மேலொரு பொருளு மில்லா மெய்ப் பொருள்' என்று கொள்ளவில்லையா? என்று பேசுவார். இப்படியாக எங்கள் உரையாடல் நாட்டு நடப்பிலிருந்து தத்துவங்கள்வரை விரிந்து செல்லும். திருப்பதியில் நான் குடும்பக் கவலையை மறந்திருப் பதற்கு இவர்தம் உரையாடல் எனக்குப் பெருந்துணை செய்யும்.

1966-ஜுனுக்குப்பிறகு என் குடும்பத்தைத் திருப்பதிக் குக் கொணர்ந்து விட்டேன். மூத்த மகனை பி. எஸ்சி வகுப்பிலும், இளையவனை நடுவரசுப் பொறுப்பில் நடை பெற்ற பள்ளியில் (Central School) எட்டாம் வகுப்பி லும் சேர்த்து விட்டேன். வாடகை வீடு கபில தீர்த்தம் சாலையிலுள்ள 'உமாபதி ரெட்டி குடியிருப்பு' என்ற இடத்தில் அமைந்தது. தொலைவு காரணமாக முன் போல் திரு அய்யங்காரைச் சந்திக்க முடியாமல் போய் விட்டாலும் திங்களுக்கு ஒரு தடவையாவது அப்பெரு மகனாரைச் சந்திப்பது தவறுவதில்லை. ஆனாலும் ஒன்றிரண்டு ஆண்டுகளில் மருத்துவமனைசாலைக் கருகில் ஒரு புதுவீடு கட்டிக்கொண்டு அங்குக் குடியேறி விட்டார். இந்தப் புதிய வீடு நான் பல்கலைக் கழகத்திற்குச் செல்லும் வழியிலிருந்ததால் என் மிதிவண்டியை அவர் இல்லத் திற்குத் திருப்பி ஒரு சில மணித்துளிகளாவது உரையாடிச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

1971-சனவரிவாக்கில்பல்கலைக்கழக வளாகத்திலேயே எனக்கு ஓர் இல்லம் கிடைத்தது. வீடும்பெரியது. வசதிகளும் அதிகம், நடையிலேயே பல்கலைக் கழகத்திற்கு வந்து திரும்பலாம். ஆனால் மிதிவண்டியில்தான் வந்துபோய்க் கொண்டிருந்தேன். என் வாழ்நாளில் எனக்குக் கிடைத்த வருமானத்திற்குள் மிதிவண்டி ஊர்தியைத்தான் வைத்துக் கொள்ள முடிந்தது. இக்காலத்தில் மாதத்திற்கு ஒருமுறை

யாவது திரு. அய்யங்காரைச் சந்திக்காமல்இருப்பதில்லை. 1970 ஜுன் முதல் தமிழ் முதுகலை வகுப்புகளும் பிஎச்.டிக்கு ஆராயும் வாய்ப்புகளும் அமைந்து விட்டதால் ஓய்வு அதிகமாகக் கிடைப்பதில்லை. இதனால் திரு அய்யங்கார் அவர்களைச் சந்திக்கும் வாய்ப்புகள் குறைந்து விட்டன; சந்திப்புகளும் அரியனவாயின.

1974-இல் என் டாக்டர் பட்ட ஆய்வேடு அச்சேறியது. இதற்காக நான் மேற்கொண்ட முயற்சியைப் 'பன்னி யுரைக்கில் பாரதமாகும்.' இம்முயற்சிகள் டாக்டர் D. ஜகந்நாத ரெட்டி துணைவேந்தராக இருந்தபோது நடைபெற்றன. அப்போது என் அரிய நண்பர் திரு B. K. இராம சந்திரன் (பல்கலைக் கழக அச்சக இயக்குநர்) துணை கொண்டு விரைவாக அச்சக வேலையை முடித்தேன் (1976). அப்போது பேராசிரியர் எஸ். சச்சிதானந்த மூர்த்தி அவர்கள் துணைவேந்தர்; தத்துவப் பேராசிரியராக இருந்தவர். அவரிடம் ஒரு அணிந்துரை வாங்க நினைத்து அவரை அண்மி வேண்டி னேன். அவரும் வழங்குவதாக ஒப்புக் கொண்டார். இதற்கு ஓர் எதிர்ப்புச் சூழ்நிலை உருவானதால் தன் இயலாமையைத் தெரிவித்து விட்டார் துணைவேந்தர். பின்னர் வைணவ சீலர் திரு மாடபூசி அனந்தசயனம் அவர் களை நாடினேன். அப்போது மிகவும் தளர்ந்த நிலை; படுத்தே ஓய்வு கொண்டிருக்க வேண்டிய நிலையிலிருந் தார். கண்ணொளியும் சரியாக இல்லை. 900க்கு மேற்பட்ட பக்கங்களையுடைய ஆங்கில நூலை அவரால் படிக்க முடியாது என்பதை நான் உணர்ந்தேன். எனினும் சிறிது கூட மறுப்புச்சொல்லாது ஒப்புக் கொண்டார்.

ஒரு மாதகாலம் தினந்தோறும் மாலை 4—30க்கு மேல் வர வேண்டும் என்றும், ஒவ்வொரு இயலிலும் (32 இயல்கள் கொண்டது நூல்) முக்கியமான பகுதிகளைப் படித்துக் காட்டி அந்த இயலின் சுருக்கத்தையும் சொல்ல வேண்டும்

என்றும் பணித்தார். அங்ஙனமே நானும் அவர் இல்லம் சென்று படித்து வந்தேன். ஒரு ஞாயிறு அன்று மாலை மூன்று மணிக்கே வருமாறு பணித்தார். சுருக்கெழுத்து முறை தெரிந்த எழுத்தரையும் வருமாறு பணித்திருந்தார். இருவரும் சரியாக மூன்று மணிக்குத் தயாராக அவர் இல்லத்தில் இருந்தோம். எங்கட்குக் காஃபி பானம் வழங்கச் செய்து தானும் அருந்தினார். பிறகு அணிந்துரை யைச் சொல்லத் தொடங்கினார். கடல் மடை திறந்தது போன்று ஆங்கில வாசகம் அவர் திருவாயினின்றும் புறப்பட்டது. சுமார் ஒன்றரை மணி நேரம் மெதுவாகச் சொன்னார். பின்னர் தட்டச்சு செய்யச் சொல்லிவிட்டு ஓய்வாகப் படுத்துக் கொண்டார். ஒரு மணி நேரத்தில் மிக அழகாக மூன்று படிகளைத் தயாரித்து விட்டார் தட்டச்சு செய்த அன்பர். பின்னர் எழுந்து வந்து தட்டச்சு செய்திருந்த ஏழு பக்கங்களைப் படிக்கச் சொல்லி கவனமாகக் கேட்டார். 'திருப்திதானே' என்றார். உணர்ச்சிப் பெருக்கில் திளைத்த என்னால் நிலை கொள்ள முடியவில்லை. தழுதழுத்த குரலில் 'ஆம்' என்றேன். மூன்றிலும் கையெழுத்திட்டு மூன்றாவது படியைத் தாம் வைத்துக் கொண்டு முதலிரண்டு படிகளையும் என்னிடம் தந்து ஆசி கூறி அனுப்பினார். இந்தக் காட்சியை என்னால் இன்றளவும் மறக்க முடியவில்லை; பசுமை யாகவே உள்ளது.

தமது அணிந்துரையில் என்னுடைய முயற்சியால்தான் தமிழ்த்துறை வளர்ந்தது என்றும், இத்துறையைக் கண்ணெனப் பாதுகாத்து வருகின்றேன் என்றும், பல்வேறு துறைகளில் பல நூல்கள் எழுதி வெளியிட்டுப் பெரும்புகழ் பெற்றுள்ளேன் என்றும், என்னுடைய தமிழ்நடை தெளிவும் எளிமையும் கொண்டுள்ளதென்றும் கூறி நூலின் சிறப்பான கூறுகளைத் தெளிவாக எடுத்துக்காட்டி என்னுடைய கடுமையான உழைப்பிற்கு வியந்து பாராட்டி வேங்கடவன் அருள் என்றுமே இருக்க வேண்டும் என்றும்

வாழ்த்து கூறியுள்ளார். முன்னுரை நான்கு பக்கங்களில் அமைந்துள்ளது. இதுவே ஒரு சிறந்த கட்டுரை போல் நூலை அலங்கரித்து நிற்கின்றது. வைகுந்த வாசியான இப்பெருமகனாரின் ஆசியும் தொடர்ந்து இருந்து வருகின்றது.

வடகலை திருமண்காப்புத் திகழும் அழகிய சாந்த மான திருமுக மண்டலம், கதர் குல்லாய் தரித்த திருவபிஷேகம் இடுப்புக் கீழ் நீண்டுள்ள காவி நிற மேலங்கி யும் பஞ்சகச்சமும் அலங்கரிக்கும் திருமேனியுடைய பெருமான் என்றும் மனத்தில் உள்ளார். இவரைச் சேவிக்கும் பொழுதெல்லாம்

'கெடும்இடர் ஆய எல்லாம்
கேசவா! என்ன;'
..............................
மாய்ந்துஅறும் வினைகள்தாமே
மாயவா என்ன;'[2]

என்ற திருவனந்தபுரத்து எம்பெருமான்மீது மங்களா சாசனம் செய்த நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத் தொடர்கள் என் மனத்தில் எழும். சயனத்திருக் கோலத்தில் சேவை சாதிக்கும் அனந்தசயனத்து அண்ண லார் இருந்த கோலத்தில், நின்ற கோலத்தில், நடந்த கோலத்தில் சேவை சாதிப்பது போன்ற ஒரு பிரேமை என்னிடம் ஏற்படும். அவ்வளவு அன்பும்பாசமும் என்னிடம் வைத்திருந்தார் அப்பெருமகனார்.

1976 பிப்ரவரியில் என் மூத்த மகன் இராமலிங்கத்தின் திருமணம் வேலூரிலும் 1977-ஜுனில் என் இளைய மகன் டாக்டர் இராமகிருஷ்ணனின் திருமணம் திருச்சியிலும் நடைபெற்றன. இத்திருமணங்கள் நடைபெற்ற இரண்டு நாள் கழித்து, திருப்பதியில் பல்கலைக் கழக வளாகத்தி லுள்ள என் குடிசையில் ஒரு சிறு வரவேற்பு விருந்து

2. திருவாய் 10.2:1,10

வைத்தேன். இந்த இரண்டு சிறு விருந்துகளுக்கும் திரு அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள் முன்னதாகவே எழுந்தருளி மணமக்களை வாழ்த்தினார்கள். சிற்றுண்டி அருந்திய பின் இரண்டுமணி நேரம் தங்கி வந்திருந்த விருந்தினர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்தார்கள். எவ்வளவு அன்பும் பாசமும் வைத்திருந்தால் மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள என் குடிலுக்கு எழுந் தருளியிருக்க வேண்டும்? அப்பொழுதெல்லாம் என் மனம், 'என்ன மாதவம் செய்ததோ? இச்சிறு குடில்?' என்று எண்ணி மகிழும். கண்ணன் விதுரனின் திருமாளிகைக்கு எழுந்தருளினபோது விதுரன் பெற்ற மகிழ்ச்சியைப் போல் நானும் பெற்றேன்.

1977-செப்டம்பர் திங்கள் 24 ஆம் நாள் என் செலவில் தமிழ் துறைப் பேராசிரியர்கள், ஆராய்ச்சி மாணவர்கள், முதுகலை மாணவர்கள், என் மணிவிழாவைக் கொண் டாடினார்கள். இந்த நிகழ்ச்சிக்குத் திரு. அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள்தான் தலைமை தாங்கினார்கள். மலரொன்றும் வெளியிடப் பெற்றது. நான் ஓய்வு பெறும் நிலையிலும் இப்பெருமகனாரின் வாழ்த்து பெறும் பேறு பெற்றேன்.

# 29. உரைவேந்தர் ஔவை சு. துரைசாமி பிள்ளை

பண்டைய உரையாசிரியர்களாகிய நச்சினார்க்கினியர் பேராசிரியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார், சேனாவரையர், சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர் போன்ற உரை மன்னர்களுடன் வைத்தெண்ணக் கூடியவர் உரை வேந்தர் ஔவைதுரைசாமிபிள்ளை. காலவேறுபாட்டாலும் இடவேறுபாட்டாலும் இப்பெருமகனாரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பெறாவிடினும் இவர் எழுதிய உரைகளுடன் நெருங்கிப் பழகிய பேறு பெற்றேன். நான் தமிழன்னையின் மடியில் தவழ்ந்து கொண்டிருந்த காலத்தில் இவரது 'சிந்தாமணிச் சுருக்கம்', 'சிந்தாமணி ஆர்ராய்ச்சி', 'மணிமேகலைச் சுருக்கம்', 'மணிமேகலை ஆராய்ச்சி', 'சிலப்ப்திகாரச் சுருக்கம்' 'சிலப்பதிகார ஆராய்ச்சி' (இவை யாவும் உரையிடையிட்ட பாட்டுடை நூல்களின் பாணியில் அமைந்தவை) என்ற நூல்களில் 'சிறுதேர் உருட்டி' மகிழ்ந்ததுண்டு. இவை யாவும் நான் இலக்கிய உலகில் வேகமாகப் புகுந்து நடையாடுவதற்குக் கருவி நூல்களாக அமைந்து உதவின. இந்த அநுபவங்களை நான் துறையூர் வாழ்வில் (1941-1950) பெற்றேன்.

(1949-51) நான் தமிழ் எம்.ஏ. தேர்வுக்கு படித்துக் கொண்டிருந்தபொழுது புறநானூற்றில் முதல் ஐம்பது பாடல்கள் தேர்வுக்குப் பாடமாக அமைந்திருந்தன. 1943-1945க்கு வித்துவான் தேர்வுக்குப் படித்தபொழுது

டாக்டர் உ.வே.சா. அய்யர் அவர்களின் உரை, நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார்—கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளை அவர்களின் உரை, வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் உரை (கிடைத்த வரையில்) எனக்குப் பெரிதும் உதவின. எம்.ஏ. தேர்வுக்குப் படித்தபோது சிறிது அடிப்படை யான தமிழறிவுடன் திரு. பிள்ளை அவர்களின் புறநானூற்று உரையில் ஆழங்கால் பட்டபோது பாடல் கட்கு எழுதப்பெற்ற நய உரைகள் வரலாற்றுக்குறிப்புகள், வள்ளல், அரசர் இவர்களைப் பற்றிய செய்திகள் எவருக் கும் மிகவும் பயன்படத்தக்கவை என்பதைக் கண்டேன். பாடல்தோறும் 'விளக்கம்' என்ற தலைப்பில் காணப்படும் செய்திகள் ஆய்வாளர்கட்கும் புலவர்கட்கும் மிகவும் பயன்படும். இதில் வரும் பல ஒப்புமைக் குறிப்புகள். இலக்கியச் சுவைஞர்க்கு மகிழ்ச்சி தருபவையாகும். இவற்றையெல்லாம் ஈண்டு சான்றுகள்காட்டி விளக்குதல் மிகை.

1965-என நினைக்கின்றேன்; அழகப்பா கல்லூரியின் வளாகத்தில் குடியிருந்த தமிழ்க் கடல் இரா. சொ.வைப் பார்த்து அளவளாவி விட்டு மிதிவண்டியில் வீடுநோக்கி வந்து கொண்டிருந்தேன். அப்போது உரைவேந்தர் காரைக்குடி செக்காலைப் பகுதியில் யாரோ ஓர்அன்பரைப் பார்த்துவிட்டு நடையில் வந்து கொண்டிருந்தார்கள். செக்காலைப் பூங்கா அருகில் மிதிவண்டியை விட்டு இறங்கி வணக்கம் செலுத்தி அவருக்கு என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன். என்னை நேரில் பார்க்காவிடினும் என்னைப்பற்றியும் என் உழைப்பைப்பற்றியும் என் பல துறை அறிவைப்பற்றியும் அதிகமாகவே கேள்வியுற்றிருந்த தாகக் கூறினார்கள். நானும் ஒளிப்படத்தில் அவரைப் பார்த்திருப்பதாகவும் சங்க இலக்கியங்கள் பலவற்றிற்கு அவர் எழுதியுள்ள உரைகள் என்னை மிகவும் கவர்ந்தன என்றும் பணிவாகக் கூறினேன். மிகவும் மகிழ்ந்தார்கள்

இருவரும் ஜப்பார் மருத்துவமனை வரும் அளவும் பேசிக் கொண்டே நடந்து வந்தோம்.

அப்போது 'இராக்கெட்டுகள்' (ஆகஸ்டு-1964) என்ற நூல் கழக வெளியீடாக வெளிவந்திருந்தது. அதைத் தமிழக அரசு பரிசுத் திட்டத்திற்கு அனுப்பப் பெற்றிருந்தது. அதற்குப் முதற்பரிசு கிடைத்திருப்பதாக அன்பு கூர்ந்து தெரிவித்தார்கள். இது நம்பகமான செய்தி என்றும் கூறினார்கள். இஃது உண்மையாயிற்று. இங்ஙனமே 1959-இல் என் 'தமிழ் பயிற்றும் முறை' (1958) என்ற நூலுக்கு முதற் பரிசு கிடைத்திருப்பதாக மதிப்பிற்குரிய பெரியவர் திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் மூலமும், 1965இல் என் 'தொல் காப்பியம் காட்டும் வாழ்க்கை' (1964) என்ற நூலுக்கு முதற் பரிசு கிடைத்திருப்பதாக டாக்டர் மெ. சுந்தரமும் டாக்டர் சி. இலக்குவனார் ஆகியோர் மூலம் நம்பகமான செய்திகளாக அறிந்தேன். செய்திகளில் தவறு இல்லை; மர்மமாக ஏதோ தவறு நேர்ந்து விட்டதாகப் பின்னர் அறிந்தேன். இதனால் எனக்கு வருத்தம் ஒன்றும் இல்லை. சிலசமயம் நேர்மை தவறியும் செயல்கள் நடைபெறு கின்றன என்பதையும் என்னால் அறிய முடிகின்றது. பொறுப்பிலுள்ளவர்கட்கு இறைவன்தான் நேரிய வழி காட்ட வேண்டும்.

1965-க்குப் பிறகு உரைவேந்தரைப் பார்த்துப் பேசும் பேறு பெறவில்லை. ஆனால் அவர் திருநாடு அலங்கரிப் பதற்கு சில திங்கட்கு முன்னர் சென்னை அண்ணாநகரி லுள்ள அவர் அருமைத் திருமகனார் டாக்டர் ஔவை நடராசன் இல்லத்தில் பலமுறை பேசி அளவளாவும் பேறு பெற்றேன். அவர் பேச்சில் தமிழ்க்கடலே அலை வீசு வதைக் கண்டு மகிழ்ந்தேன். அக்காலத்தில் அவருக்கு இயல் இசை நாடக மன்றம் 'கலை மாமணி' விருது வழங்கிச் சிறப்பித்தது. உரைவேந்தரை நேரில் சந்தித்து வாழ்த்து தெரிவிக்கும் பேறும் பெற்றேன்,

'அகத்திணைக் கொள்கைகள்' (டிசம்பர் — 1981) என்ற எனது நூல் வெளிவந்தது. இந்த நூலை உரைவேந்தரி னிடம் யான் கொண்டிருந்த மதிப்பிற்கும் மரியாதைக்கும் அறிகுறியாக,

சங்கநூற் கடலில் தோய்ந்தெழு கொண்டல்;
  சைவசித் தாந்தத்தின் திலகம்;
மங்கலத் தமிழ்த்தாய் இதயத்தை மலர்த்தும்
  வான்சுடர்; வள்ளலார் நூலின்
இங்கிதம் தேரும் அஞ்சிறைத் தும்பி;
  இமயத்தைப் புலமையால் தாழ்த்தும்
துங்கமார் ஔவை நம்துரை சாமித்
  தோன்றலுக் குரியதிந் நூலே.

என்ற பாடலின் மூலம் அன்புப் படையலாக்கி மகிழ்ந் தேன். எனினும், இப்பாடலுடன், நூல் முகத்தில் இக் குறிப்பையும் சேர்த்து வெளியிட்டேன். ''சித்தாந்த கலாநிதி (தூத்துக்குடி சைவ சித்தாந்த சமாஜம் வழங்கிய விருது) உரைவேந்தர் (மதுரை திருவள்ளுவர் கழகம் வழங்கிய விருது). பேராசிரியர் ஔவை துரைசாமி பிள்ளையை அறியாத தமிழர்களே இரார். இவர்தம் தமிழ்ப்பணி பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெற வேண்டிய ஒன்று..........இவர்தம் புற நானூற்றுரை, பதிற்றுப்பத்து உரை திட்பமும் நுட்பமும் நுணுக்கமும் கொண்டவை என்பதைத் தமிழறிஞர்கள் நன்கு அறிவர். ஐங்குறு நூறு, நற்றிணை என்ற அகஇலக்கியங்களின் உரை அகத்திணையின் நுட்பங்களை யெல்லாம் எடுத்துக் காட்டக் கூடியவை என்பதை அக இலக்கியம் கற்போர் நன்கு அறிவர். அகத்திணைக் கொள்கைகளை எடுத்து விளக்குவார்க்கு இவை பெரிதும் துணை நிற்பவை. சில சித்தாந்த நூல்களைப் பதிப்பித்தும் நுணுக்க உரைகளைக் கண்டும் பெரும் புகழ் பெற்ற பெருமகனார் இவர். இவர் சிவப்பேறு பெறுவதற்கு முன்னர் நோயுடன் போராடிக்

கொண்டிருந்த காலத்திலேயே இந்நூலை இவருக்கு அன்புப்படையலாக்கி இவர்தம் ஆசி பெறத் துடித்தேன். பல்வேறு காரணங்களால் நூலை அச்சேற்றி வெளிக் கொணர முடியவில்லை. எனினும், இந்நூலை முத்தர் ஔவை துரைசாமி பிள்ளையவர்கட்குப் படைத்துப் பெருமிதம் அடைகின்றேன். இவர்தம் ஆசியால் யானும் என் போன்ற அக இலக்கிய ஆய்வாளர்களும் மேலும் மேலும் அறிவு பெறுவோம் என்பது என் திடமான நம்பிக்கை.''

ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.[1]

என்ற அதிவீரராமபாண்டியரின் திருவாக்கு என் நினைவில் மலர்கின்றது.

1. வெற்றிவேற்கை—34.

## 30. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள்

1950-60 வரை காரைக்குடி வள்ளல் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றிய காலம். இக்காலப் பகுதியில் நான் பி.டி. வகுப்பு மாணவர்களுடன் காரைக்குடிக்குச் சுற்று வட்டத்தில் சுமார் 15-20 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளில் பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களின் வகுப்புக்களை நேரில் பார்த்து அவர்கள் நடைமுறையில் கற்பிக்கும் முறைகளைத் தெரிந்து கொள்வதற்காகச் செல்வதுண்டு. அப்பொழுது பள்ளத்தூர் உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றி வந்த திரு. முத்து வேங்கடாசலம் அய்யர் அவர்களின் நட்பு ஏற்பட்டது. அதே காலத்தில் நான் திருப்பாவை திருவெம் பாவை பற்றிய ஒப்பு நோக்கு ஆய்வில் ஈடுபட்டிருந்தேன். திருப்பாவை (வை.மு.கோ.) உரையையும் திருவெம் பாவை (திரு ப. இராமநாதப் பிள்ளை) உரையையும் படித்து வந்த காலம். 'திருப்பாவையும் திருவெம்பாவை யும்' என்ற தலைப்பில் 'கலைமகள்' இதழில் ஒரு கட்டுரை யும் குமரிமலரில் 'மார்கழி நோன்பு' பற்றிய கட்டுரையும் எழுதி வெளியிட்டிருந்தேன். அப்பொழுது திரு. முத்து வேங்கடாசலம் அய்யர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகளின் திருப்பாவையின் 'திவ்வியார்த்த தீபிகை'யும்; அவர் அதற்கு எழுதிய 'ஆழ் பொருள் விளக்கை'யும் குறிப்பிட்டார்கள். அவை கிடைக் கும் இடத்தையும் முகவரியுடன் தந்தார்கள். ஆனால்

இந்த இரண்டு நூல்களையும் எழுதிப் பெறவில்லை. அக்காலத்தில் 'தமிழ் பயிற்றும் முறை' 'அறிவியல் பயிற்றும் முறை', 'அணுக்கரு பௌதிகம்' (மொழி பெயர்ப்பு) 'அணுவின் ஆக்கம்', 'மானிட உடல்' (மொழி பெயர்ப்பு) நூல்களை எழுதி வெளியிடுவதில் ஊக்கம் மிகுந்திருந்தமை யால் திரு. பி.ப. அண்ணங்கராசாரியர் சுவாமிகளிடம் தொடர்பு கொள்ளும் பேறு பெறவில்லை. மனமும் அவர் பக்கம் பாயவில்லை. இப்போது அதனை நினைக்கும் போது

எண்ணி ஒருகருமம் யார்க்கும்செய் யொண்ணாது
புண்ணியம் வந்துஎய்து போதுஅல்லால்[1]

என்ற ஔவைப் பாட்டியின் வாக்குதான் நினைவிற்கு வருகின்றது. அப்பொழுது ஏழுமலையானின் திருவருளும் கூடி வரவில்லை.

1960-முதல் திருப்பதியில் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது என் டாக்டர்(பிஎச்.டி)பட்டத்திற் காகப் பதிவு செய்து கொள்ள முயன்று கொண்டிருந்தேன். காரைக்குடியிலிருந்தபோதே மேற்கொண்ட முயற்சி பதினைந்து ஆண்டுகட்குப் பின்னர் திருப்பதி மலைமேல் நின்ற கோலத்தில் சேவை சாதிக்கும் 'வேங்கடம் மேய விளக்கின்' அருளால் பதிவு செய்ய அநுமதி கிடைத்தது (1964). 'நாலாயிரத்தில் நம்மாழ்வாரின் தத்துவம்' என்ற தலைப்பை (Religion and philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar) ஆய்வுப் பொருளாகக் கொண்டு ஆய்ந்தேன். கட்டுரையையும் ஆங்கிலத்தில்தான் அமைத்தேன், (அதன் அச்சுவடிவம் 920 பக்கங்களாகப் பின்னர் அமைந்தது.) அப்பொழுது திரு. பு. ரா. புருடோத்தம நாயுடுவின் 'ஈட்டின் தமிழாக்கம்' (பத்துத் தொகுதிகள்) துணையாக இருந்த போதிலும் நாலாயிரம் முழுவதற்கும்—தத்துவ

1. நல்வழி—4

நோக்கில்—பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி மட்டிலும்தான் இருந்தது. இப்போது காரைக்குடியிலிருந்தபோது திரு. முத்து வேங்கடாசலம் அய்யர் அவர்கள் குறிப்பிட்ட பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியாரின் 'திவ்வியார்த்த தீபிகை நினைவிற்கு வந்தது.

இந்த உரையைப் பெற வேண்டுமே. காஞ்சி சென்று இதனை வாங்கி வர நினைத்துக் கொண்டிருந்தபோது திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கீழ்த்திசை ஆய்வு நிறுவனத்தில் (Sri Venkateswara University Oriental Research Institute) வடமொழித் துறையில் பணியாற்றி வந்த திரு K. சீநிவாசவரதன் புருஷகாரமாக (தகவுரை கூறுபவராக) அமைந்தார். அவர் பிரதிவாதி பயங்கரத்திற்கு மிகவும் வேண்டியவர். அவர் திவ்வியார்த்தத் தீபிகை முழுவதையும் ரூ. 50/-க்குப் பெற்றுக் கொண்டு வந்து தந்ததாக நினைவு. இந்த உரை நூல்தான் என் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்தது. ஏகலைவனுக்கு துரோணர் மானசீக ஆசாரியராக அமைந்தது போல பிரதிவாதி பயங்கரம் எனக்கு மானசீகமாக ஆசாரியராக அமைந்தார் என்று சொல்லலாம். இதனை எப்படியோ தெரிந்து கொண்ட என் அரிய நண்பரும் வைணவப் பெரியாருமாகிய திரு. பெ. இராமாநுஜம் என்பார்,

தன்னிலைமை தானறியாத் தன்மை யாளன்
சாதிவெறி சமயவெறி சற்று மில்லான்
துன்னியநல் சைவகுலத் தோன்ற லேனும்
தூயதிருக் கச்சிநகர் அண்ணங் கர்ராம்

மன்னியவாச் சாரியரின் மலர்த்தாள் போற்றி
வைணவத்தின் வளமனைத்தும் உணரப்
பெற்றோன்
பன்னியதை ஏட்டினிலே பரவச் செய்தான்
பலவுரைத்தென்? அவன்திறனைப் பகரல்
ஆற்றேன்[2]

என்று குறிப்பிட்டுள்ளார். அவர் வாழ்க. இப்படியாக இவருடைய திவ்யார்த்த தீபிகையைப் பயன்படுத்திக் கொண்டேன். ஆயினும் இந்த ஆசாரியப் பெருமானை நேரில் கண்டு சேவிக்காமல் என் ஆய்வும் முடிந்தது; டாக்டர் பட்டமும் (1969) பெற்றேன்.

திவ்யார்த்த தீபிகையைப் பயன்படுத்தி வந்த போது அதிலுள்ள வடமொழிச் சொற்களுக்கு உரை கூறி விளக்கியவர் என் அரிய நண்பர் திரு. V. S. வேங்கடராகவாசாரியார். (அப்பொழுது திருப்பதி மத்திய வடமொழி ஆய்வு நிறுவனத்தில் இயக்குநராகப் பணியாற்றிக் கொண்டிருந்தவர்). அவர் இன்று இல்லை. இரண்டாண்டுக்கு முன்னர் பரமபதித்துவிட்டார். வைணவ தத்துவக் குறிப்புகளை என் ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்த டாக்டர் V. வரதாச்சாரியார் (திருவேங்கடவன் பல்கலைக் கழக வடமொழித் துறையில் 'ரீடராகப்' பணியாற்றிக் கொண்டிருந்தவர்) விளக்குவார். முன்பின் நேரில் அறியாதவராக இருந்தாலும் எனக்கு ஐயங்கள் ஏற்பட்ட பொழுதெல்லாம் அவற்றைக் குறிப்பிட்டுபி.ப.அக்கு எழுதுவேன். உடனே விளக்கம் மறு அஞ்சலில் வந்து விடும். கடிதங்கள் எழுதுவதிலும் வந்த கடிதங்கட்கு மறுமொழி தருவதிலும் நானும் என் நண்பர் P. அரங்கசாமி ரெட்டியாரும் (துறையூர் திருச்சி வழக்குரைஞர், 1952-57இல் சென்னை சட்டமன்றப் பேரவை உறுப்பினர்) பெரும் புகழ் பெற்றிருந்தோம். எங்களையும் மிஞ்சி

---

2. டாக்டர் ந. சுப்புரெட்டியார் மணிவிழா மலர் (செப்டம்பர் 1977)—பக்—25

விட்டார் இந்த ஆசாரியப் பெருமகனார். வயது முதிர்ந்த காரணமாக உடல் நிலை மிகவும் தளர்வுற்றிருந்தாலும் கையெழுத்து மணிமணியாக இருக்கும். ஒன்றிரண்டு கடிதங்களைத் தவிர பெரும்பாலான கடிதங்களைப் பாதுகாத்து வைக்கவில்லை. இப்போது வருந்து கின்றேன்.

நான் திருப்பதியிலிருந்த காலத்தில் ஆழ்வார் பாசுரங்களில் ஈடுபட்டிருந்தேன். எனினும் ஆசாரியர் களிடம் காலட்சேபம் பெறாதவனாதலால் சில வைணவ சம்பிரதாயங்தளைநான் அறியேன்.மேலும் பாசுரங்களிலும் அவற்றின் உரைகளிலும் நன்கு படித்து அநுபவியாத தொடக்கக் காலம். இக்காலம் முதற் கொண்டே திவ்வியப் பிரபந்தம்பற்றிய கட்டுரைகளைத் தொடர்ந்து திருமலை —திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிடும் சப்தகிரியில் வெளியிட்டு வந்தேன். ஒரு சமயம் பெரியாழ்வாரைப் பற்றிய ஒரு கட்டுரையில்,

ஒருமகள் தன்னை உடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்.[3]

என்ற பாசுரத்தை எடுத்துக் காட்டி ஆழ்வார் தன் வளர்ப்பு மகள் ஆண்டாள் பிரிவு பற்றி இவ்வாறு வருந்து கின்றார் என்று குறிப்பிட்டிருந்தேன். இது தவறு என்பதை அப்போது அறிந்திலேன். திவ்வியப் பிரபந்தத் தில் அதிகம் ஆழங்கால் பட்டு அநுபவியாத காலம்.

காஞ்சியிலிருந்து விரிவான கடிதம் ஒன்று வந்தது. காஞ்சி பிரதிவாதி பயங்கரம் தான் எழுதியிருந்தார் ''இது தாய்ப் பாசுரம். ஆழ்வார் தாய் நிலையிலிருந்து பேசுவது. திவ்வியார்த்த தீபிகை இத்திருமொழியின் (3.8) அவதாரிகை காண்க. விளக்கமுறும்'' என்று எழுதிய

3. பெரியாழ். திரு. 3.8;4

பின் ''நீங்கள் பல்கலைக் கழகத்தில் பொறுப்பு வாய்ந்த பதவியிலுள்ளீர்கள். பிரபந்தப் பயிற்சியில்லாத பொதுமக்கள் இதை வேதவாக்காக கொள்வார் களாதலால், இப்படி எழுதுவதைத் தவிர்க்கவும்'' என்று அறிவு கொளுத்தியும் இருந்தார். வாசகர்களின் கவனத் திற்காக இவண் குறிப்பிட்ட அவதாரிகையும் ஈண்டுத் தருகின்றேன். ''தன் மகளுக்கு எம்பெருமான் பக்கலி லுள்ள அன்பு மிகுதியைக் கண்ட திருத்தாயார் இவனுக்கு அவளோடு கலவி உண்டாயிற்றென்று தானறிந்தும் 'லோகோபவாதம் பிறப்பதற்குமுன் இவன் பக்கலில் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள்' என்று பந்துக்கள் சொல்லிய பின்பும் அவளைத் தாயார் எம்பெருமான் பக்கலில் கொணர்ந்து சேர்க்கா தொழிகையாலே, அவன் றானே ஏகாந்தமாக இரவில் வந்து, ஒரு படுக்கையில் தாயுடன் படுத்திருந்த இவளை எழுப்பித் திருவாய்ப் பாடியேறக் கொண்டு போக, பிறகு கண் விழித்த திருத் தாயார் படுக்கையில் பெண்ணைக் காணாமல் பலவகை யாகக் கதறின படியைக் கூறுவது இத்திருமொழி. இதனால் இவ்வாழ்வாருக்குப் பகவத்விஷயத்திலுள்ள அபிநிவேசாதியம் (அதிகப் பற்று) சொல்லியவாறு. பெரிய திருமொழியில் 'கள்வன் கொல் யானறியேன்' (3.7) என்ற திருமொழியை ஒருபுடை ஒத்திருக்கும் இத்திருமொழி.'' என்பது.

இங்ஙனம் பல இடங்களில் என் தவறுகளைத் திருத்திப் பணி கொண்டவர் பிரதிவாதி பயங்கரம் சுவாமிகள். பின்னர் 'ஆழ்வார் பாசுரங்களில் அகப்பொருள் கலப்பு' பற்றிய தத்துவங்களை அறிந்த பிறகு இத்தகைய தவறு கள் நிகழாது கவனமாக இருந்து கொள்வேன். நான் எழுதும் நூல்களிலும் இத்தவற்றினைத் திருத்திக் கொண் டேன்.[4] என்னுடைய ஐயங்களை அகற்றினதாக மேலே

4. 'விட்டு சித்தன் விரித்த தமிழ்' (பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை—600 108) பக். 245—246 காண்க.

குறிப்பிட்டேன். அதற்கு எடுத்துக்காட்டு ஒன்று தருவேன். ஒரு சமயம் திவ்வியார்த்த தீபிகையில் காணப் பெறும் 'விளாக்குலை கொண்டு' என்ற தொடருக்கு விளக்கம் கேட்டிருந்தேன். அதற்கு சுவாமிகள் எழுதிய விளக்கம்: 9-1-70 நாளிட்டு 48, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை—600 001 என்ற முகவரியிலிருந்து எழுதிய கடிதம் இது. "உயர் திரு. டாக்டர் N. S. ரெட்டியார் அவர்கட்கு அன்பார்ந்த விதேயன் எழுதுவது. தங்கள் கார்டு கிடைத்தது. 'விளாக்குலை கொண்டு' = ஆசாரியர் களின் அருமருந்தன்ன ஸூக்திகளில் இதுவொன்று, உபமானத்தை உள்ளடக்கிப் பல வார்த்தைகளுண்டு. நாமெல்லாம் விளங்கனி உண்ண விரும்பினால் ஓட்டை உடைத்துத் தள்ளி உள்ளிருப்பதை உண்போம். யானை குலைகுலையாகப் பறித்து வாய்க் கொள்ளும். அதுபோல, ஓரே கவளமாக விழுங்கி—என்றபடி. விதேயன் P. B. Annangaracharya". சுவாமிகள் சென்னையில் திருப்பாவை காலட்சேபம் செய்து கொண்டிருந்த காலத்தில் (டிசம்பர்—சனவரி) இக்கடிதம் எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்று கருதுகின்றேன். என் ஆராய்ச்சியின் போதும் (1964 69) அதன் பின்னரும் என் ஐயங்களைப் போக்குவதற்காக நூற்றுக்கணக்கான கடிதங்களைச் சுவாமிகள் எழுதியதை இப்போது நினைக்கும்போது மயிர் சிலிர்க்கின்றது; உள்ளம் ஆனந்தப் படுகின்றது; அவ்வாச்சாரிய புருஷனை வணங்கவும் செய் கின்றது.

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களைச் சேவித்து அநுபவிக்கும்போது ஆழ்வார் பெருமக்களின் திருப்பாதங்கள் தீண்டிய திவ்விய தேசங்களையெல்லாம் சேவிக்க வேண்டும் என்ற பேரவா என்பால் எழுந்தது. குடும்பத்துடன் சேவிக்க வேண்டும் என்று ஆசைப்

பட்டேன். இதற்குப் பல ஆயிரம் ரூபாய் தேவை. ஓய்வும் தேவை. இவற்றிற்கெல்லாம் மேலாக திருமாலின் திருவருளும் வேண்டும். எல்லாமே கிடைத்தன. 1964 செப்டம்பரில் தொடங்கிய இத்திருத்தலப் பயணம் 1969 ஜுனுடன் நிறைவு பெற்றது. சில திருத்தலங்களை என் இளைய மகன் இராமகிருஷ்ணனுடனும், சிலவற்றை என் மூத்த மகன் இராமலிங்கத்துடனும், ஒரு சிலவற்றை என் மனைவியுடனும் பெரும்பாலானவற்றை என் குடும்பத்தி லுள்ள மூவருடனும் சேவித்தேன். துவாரகை, நைமி சாரண்யம், திருப்பதி, பதரிகாச்சிரமம், சாளக்கிராமம் (இவ்வுலகிலுள்ளவை), திருப்பாற்கடல், வைகுந்தம் (இப்பருவுடலால் சேவிக்க முடியாதவை) ஆகிய ஏழு திருத்தலங்களைத் தவிர 101 திருத்தலங்களைச் சேவிக்கும் பேறு பெற்றேன்.

இங்ஙனம் சேவித்த தலங்களைப் பற்றியும் திருத்தலப் பயணத்தின் போதும், அர்ச்சாவதார எம்பெருமான் களைச் சேவித்தபோதும் பெற்ற அநுபவங்களையெல்லாம் நூல் வடிவம் பெறச் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் என் மனத்தில் தோன்றியது. எழுதத் தொடங்கினேன். முன்னர் பெற்ற அநுபவத்தை மீண்டும் சிந்தித்து அநுபவித்து எழுதும்போது நல்ல விருந்தை உண்ட பிறகு பிறிதொரு சமயம் அதை மனத்தால் சிந்தித்துப் பெறும் அநுபவத்தைப் போல் ஓர் அற்புத அநுபவத்தைப் பெற முடிந்தது. முதன்முதலாக மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றையும் எழுதி முடித்தேன் (மார்ச்சு—1971). இந்த நூலை நான் வைணவத்தைத் தெளிவாக உணர் வதற்குக் காரணமாக இருந்த கருவி நூல்களைப் படைத் தவரும் ஏகலைவனுக்கு துரோணர் மானசீகக் குருவாக இருந்ததுபோன்று எனக்கு மானசீகமாகக் குருவாக அமைந்தவருமான காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங் கராசார்ய சுவாமிகட்கு அன்புப் படையலாக நினைத்தேன்.

வடமொழிச் சுவையைத் தென்றமிழ்ப் பயனை
மாநிலம் வியப்புறப் பருகித்
திடமுறு ஞானக் கொண்டலாய் வளர்ந்து
சேதன ரெனும்பயிர் முளைக்கக்
கடலுல குவக்க மழைபொழி அண்ணங்
கரரவர் திருவடி மலரில்
சுடர்மிகப் பெற்று வயங்குக என்றித்
தூயநூல் சமர்ப்பணம் புரிந்தேன்.

என்ற பாடலின் மூலம் சமர்ப்பணம் செய்தேன். ஜஸ்டிஸ் எஸ். மகராஜன் அவர்களின் அணிந்துரை நூலை அலங்கரிக்கின்றது.

நூல் முடிந்த சமயமும் பிரதிவாதி பயங்கரத்திற்கு சதாபிஷேகம் நடைபெறும் சமயமும் ஒன்றாக இருந்தன. (பிப்பிரவரி-மார்ச்சு 1971). சதாபிஷேகம் நடைபெறும் செய்தியை என் அருமை நண்பரும் பிரதிவாதி பயங்கரத்தின் சீடர்களில் ஒருவரும், திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கீழ்த்திசை ஆய்வு நிறுவனத்தில் வடமொழித் துறையில் பணியாற்றி வந்தவருமான திரு. K. சீநிவாசவரதன் மூலம் அறிந்தேன். ஆசாரிய புருஷரின் தூலத் திருமேனியை சேவித்து ஆசி பெறுவதற்கு இதுதான் தக்க சமயம் என்று கருதினேன். ஒருநாள் விடுப்பு' எடுத்துக் கொண்டு காஞ்சி மாநகர் அடைந்தேன். ஒரு டசன் சாத்துக்குடி, ஒரு டஜன் ஆப்பிள், இரண்டு கிலோ விதையில்லாத திராட்சை இவற்றை வாங்கிக் கொண்டு பேருந்து நிலையத்திலிருந்து ஒரு குதிரை வண்டியை அமர்த்திக் கொண்டு சென்றேன். மாடவீதியிலுள்ள அவர் திருமாளிகையை அடைந்து பெரிய தட்டு ஒன்றைக் கொணரச் செய்து அதில் பழங்களை வைத்துக் கொண்டேன். 81 சீடர்கள் திவ்வியப்பிரபந்தம் சேவிக்க அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார் ஆசாரியப் பெருமகனார். என் வருகையை ஆள் மூலம் தெரிவித்தேன்.

ஆசாரியர் மெதுவாக வாயிலருகில் வருகின்றார். துவாதச நாமங்கள் அழகாகத் தீட்டப் பெற்ற பொன்னிறத் திருமேனி. கலையுணர்வுடன் அலங்கரிக்கும் திருமண் காப்புடைய திருமுக மண்டலம். புன்முறுவல் தவழும் திருப்பவளம். இத்தகைய தோற்றமுடைய ஆசாரியரை முதன்முதலாகக் காண்கின்றேன். நெடுஞ்சாணாக வீழ்ந்து அவரைச் சேவிக்கின்றேன். பழங்களும் 'மலை நாட்டுத்திருப்பதிகள்' என்றநூலின் முதற்படியும் கொண்ட தட்டையும் அவர் திருவடிகளில் வைத்து வணங்குகின்றேன். அன்பொழுகப் பேசுகின்றார். விடைபெற வேண்டும்போது தம் திருமாளிகையில் திருவமுது கொண்டபின் திரும்பலாம் என்று பணிக்கின்றார். பின் தம் இருக்கையில் அமர்ந்து பிரபந்த சதஸைக் கவனிக்கின்றார். அடியேனும் சதஸின் ஒருபுறம் அமர்ந்து பிரபந்த சேவையைக் கவனித்தேன். பத்துப் பதினைந்து சிறுவர்களும் இளைஞர்களும் கூட அமர்ந்து சேவிப்பதைக் காண்கின்றேன். பதினைந்து மணித்துளிகள் கழித்துத் திரும்புகின்றேன். இப்போது மணி பதினொன்றரை. காஞ்சி வரதராசரையும் பெருந்தேவித் தாயாரையும் சேவித்துப் பேருந்து நிலையத்துக்கருகிலுள்ள விடுதியில் உணவு கொண்டு திருப்பதி திரும்புகின்றேன் நல்ல மனநிறைவுடன்,

  

ஒரு வாரத்தில் ஆசாரியப் பெருமகனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் ''உண்மையில் பக்தர்கட்கு இந்நூல் நல்விருந்து. ஜஸ்டிஸ் முன்னுரை மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது.... 'திருக்கோயில்' பத்திரிகை தொடக்க

மான காலத்தில் 'மலை நாட்டுத் திருப்பதியநுவம்' என்ற என் கட்டுரை இரண்டாண்டளவும் எழுதித் தந்தேன்; பிரசுரமாயிற்று. .......அதனிற் சிறந்த அநுபவம் உமது என்று அறுதியிட்டேன். அடிக்கடி எடுத்து வாசிக்கத் தூண்டும் நூலிது...... P. B. அண்ணங்கராசாரியர்.'' என்று எழுதியிருந்ததைக்கண்டு என் உள்ளம் குளிர்ந்தது.

இதற்குப் பிறகு பிரதிவாதி பயங்கரம் இருமுறை திருப்பதிக்கு எழுந்தருளினார்கள். அப்பொழுதெல்லாம் அவரைச் சென்று சேவித்தேன். முன் செய்த நல்வினைப் பயனாலோ என்னவோ என்மீது அளவற்ற அன்பினைச் சொரிந்து வருவதைக் கண்டேன். ஒரு முறை அவர் திருப்பதிக்கு எழுந்தருளியபோது என் 'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' (1973) என்ற நூலையும் பிறிதொருமுறை எழுந்தருளியபோது என் 'பாண்டி நாட்டுத்திருப்பதிகள்' (1977) என்ற நூலையும் அவருக்குச் சமர்ப்பித்ததாக நினைவு. 'வைணவன் ஒருவன் செய்யாத பணிகளை யெல்லாம் நீங்கள் செய்து வருகின்றீர்கள். திருமலைமீது எழுந்தருளியிருக்கும் சீநிவாசன் உங்கட்கு எல்லா நலன் களையும் அருளுவான்'' என்று ஆசி கூறினார்கள். ''அடியேன் நெற்றியில் திருநீறு வடிவில் சிவபெருமான் எழுந்தருளியிருந்தாலும் நெஞ்சில் திருமால் நிலையான இடத்தைப் பிடித்துக் கொண்டான்,

அரவத்து அமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம்படி வந்து புகுந்து
பரவைத் திரைபல மோதப்
பள்ளி கொள்கின்ற பிரான்[1]

1. பெரியாழ். திரு. 5. 2: 10.

என்று பெரியாழ்வார் திருவுள்ளத்தில் இடம் பிடித்துக் கொண்டதுபோல.'' என்று பணிவாகக்கூறினேன். 'பேஷ், பேஷ். நல்லதொரு பாசுரத்தை நினைவு படுத்தினீர்கள். நீடுவாழ்க' என்று மீண்டும் ஆசி கூறினார்கள்.

ஓய்வு பெற்ற பிறகு (அக்டோபர், 1977) 1978 சனவரி 14 நாள் முதல் சென்னையில் குடியேறி விட்டேன். வைணவ மாநாடு நடைபெறும் பொழுதெல்லாம் (டிசம்பர்), சென்னையில் ஒரு திங்கள் ஆசாரியாரின் திருப்பாவை காலட்சேபம் நடைபெறும். அப்பொழுதெல் லாம் அப்பெருமானைச் சேவித்து ஆசி பெறுவேன். அவர் திருநாடு அலங்கரிக்கும்வரை இப்பழக்கம் நீடித்து வந்தது.

1981-அக்டோபர் 22இல் ஆசாரியப் பெருமானை ஒரு முக்கிய விஷயமாகக் காஞ்சியில் சந்திக்கக் கடிதம் எழுதிக் கேட்டேன். அதற்கு ஆசாரியார் விடுத்த பதில் : ''கலைக் களஞ்சியம் உயர்திரு N. ஸுப்பு ரெட்டியார் அவர்கட்கு. அன்பு மிக்க வணக்கம். உபய நலம். இன்று (20-10-81) தங்கள் அன்பார்ந்த நிருபம் கிடைக்கப் பெற்றேன்....... நேரில் வருகையை ஆவலுடன் எதிர் பார்க்கிறேன். தை மீ˝ முதல் பெரும்பாலும் சயனமே சரணமாயிருக்கிறேன். வியாதி ஏதுமில்லை. 91-வயதுக்கேற்ற அசதிதான்....... அவசியம் அருள் கூர்ந்து வருக. வருக. வருக—அன்பார்ந்த விதேயன் P. B. அண்ணங்கராசாரியர்.'' காஞ்சி சென்று என் பணியையும் முடித்துக் கொண்டேன். அவருடைய ஆசியையும் உளங்குளிரப் பெற்றேன்.

அப்பொழுது ஆசாரியப் பெருமானிடம் கூறினேன் : ''சுவாமி, தங்கட்குப் பிறகு வைணவ உலகத்தை எழுத் தாலும் பேச்சாலும் கட்டிக் காக்க ஒருவரைத் தயார் செய்யவில்லை. கோடி சூரிய பிரகாசமாக ஒளி விட்டுத் திகழ்ந்து வந்த தங்கட்குப் பிறகு தமிழகமெங்கும் சிறு சிறு

விளக்குகள் தாம் எரியும்.'' என்றேன். ''அதற்கு நானும் தான் வருந்துகின்றேன். எவ்வளவு வருந்தி அழைத்தாலும் வைணவ கிரந்த காலட்சேபத்துக்கே வருவதில்லை. தனிமையாக அழைத்தால் யார் வரப் போகிறார்கள்? எல்லோருமே கோயிலுக்கு வருகிறார்கள். இறைவனைச் சேவிக்கிறார்கள். பிரசாதம் பெறுகிறார்கள். திரும்பி விடுகிறார்கள். பிரசாதங்களில் காட்டும் ருசியை வைணவ கிரந்தங்களில் காட்டுவதில்லை, என்ன செய்வது? இது தான் இன்றைய நிலை'' என்று மிக்க வருத்தத்துடன் கூறினார். இஃது இன்றும் என் உள்ளத்தில் பசுமையாக உள்ளது.

ஒரு சமயம் ஜஸ்டிஸ் டாக்டர் இஸ்மாயில் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது அவர் பிரதிவாதி பயங்கரத்தைப் பற்றிக் குறிப்பிட்டது நினைவுக்கு வருகின்றது. ஜஸ்டிஸ் அவர்கள் காந்தி வழி நின்றவர். சாதி, சமயம், இனம் இவற்றையெல்லாம் கடந்த பெருமகன். இவரிடம் பிரதிவாதி பயங்கரம் சொன்னது: ''ஐயா, தங்களிடம் நான் பேசிக் கொண்டிருந்தால் ஆசாரியப் புருஷர்களிடம் பேசிக் கொண்டிருப்பது போன்ற ஒரு பிரமை (மயக்கம்) ஏற்படுகின்றது. எல்லா வற்றையும் கடந்து நிற்கும் நபி நாயகத்தை நினைவு படுத்துகின்றீர்கள்.'' இந்தக்கூற்றை நாம் சிந்திக்கும்போது இரண்டு பெருமகனார்களின் பரந்த மனப்பான்மையை நம்மால் அறுதியிட முடிகின்றது. 'மறந்தும் புறந்தொழா' மரபில் வந்த வைணவப் பெருமகனின் சீலம் கொழிக்கும் உள்ளத்தைக் காண முடிகின்றது. நாமும் எல்லையற்ற மகிழ்ச்சி அடைகின்றோம்.

இன்று இந்த ஆசாரியப் பெருமகனார் இல்லை. இரண்டு மூன்றாண்டுகட்கு முன்னர் பரமபதவாசியாகி விட்டார்கள். அங்கு நித்தியசூரிகளுடனும் முக்தர் களுடனும் திருவாய்மொழி காலட்சேபம் செய்து கொண் டிருப்பதை மானசீகமாகக் கண்டு மகிழ்கின்றேன்.

## பின்னிணைப்பு—1

## நினைவுகளில் எழுந்த நூல்கள்

அண்ணங்கராசாரிய சுவாமிகள் : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் —திவ்வியார்த்த தீபிகை.

அதிவீரராம பாண்டியன் : வெற்றி வேற்கை—மர்ரே ராஜம் பதிப்பு.

அருணகிரிநாதர் : கந்தரநுபூதி

ஆழ்வார்கள் : நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம். (கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு).

இளங்கோ அடிகள் : சிலப்பதிகார உரை *(கழக வெளியீடு)*

ஔவையார் : வாக்குண்டாம்—*(மர்ரே ராஜம் பதிப்பு.)*
,, : நல்வழி—*(மர்ரே ராஜம் பதிப்பு.)*
,, : வெற்றிவேற்கை *(ஷை)*

கம்பர் : கம்பராமாயணம்—(வை. மு. கோ பதிப்பு)

சங்கப் புலவர்கள் : அகநானூறு—ந. மு. வேங்கடசாமி நாட்டார்—வேங்கடாசலம் பிள்ளை உரை (கழக வெளியீடு)

சமணமுனிவர்கள் : நாலடியார்— வை. மு. கோ. உரை பதிப்பு.

சுப்பு ரெட்டியார், ந : முத்திநெறி—*(பாரி நிலையம்—184, பிரகாசம் சாலை, சென்னை—600108)*

சுப்புரெட்டியார், ந: அறிவியல்விருந்து (பாரி நிலையம்)

,, கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி (செல்வி பதிப்பகம்—செக்காலை ரோடு' காரைக்குடி—623001)

,, தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (பாரி நிலையம்)

,, மலைநாடுத் திருப்பதிகள் இரண்டாம் பதிப்பு (பாரி நிலையம்)

,, தமிழ் பயிற்றும் முறை (மூன்றாம் பதிப்பு)—மணி வாசகர் பதிப்பகம், 12-பி மேல சந்நிதி தெரு, சிதம்பரம்—1

,, தமிழ் இலக்கியத்தில்—அறம், நீதி, முறைமை (ஐந்திணைப் பதிப்பகம், சென்னை—5)

,, அறிவியல் பயிற்றும் முறை (மூன்றாம் பதிப்பு)—பழநியப்பா பிரதர்ஸ் 14, பீட்டர் சாலை சென்னை—14

,, தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை—மூன்றாம் பதிப்பு—(பழநியப்பா பிரதர்ஸ்)

,, கவிஞன் உள்ளம் (கலை வளர்ச்சிப் பதிப்பகம், துறையூர்)

,, விட்டு சித்தன் விரித்த தமிழ் (பாரி நிலையம்)

,, சில நோக்கில் நாலாயிரம் (பாரி நிலையம்)

,, அணுக்கதிர் பௌதிகம் (தமிழ்ப் புத்தகாலயம், தெளி சிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—600 005

,, நமது உடல் (கழக வெளியீடு)

,, வைணவ உரை வளம் (பாரி நிலையம்)

,, மணிவிழா மலர் (1977)

,, அகத்திணைக் கொள்கைகள் (பாரி நிலையம், சென்னை—108)

தாயுமான சுவாமிகள் : தாயுமானவர் பாடல் (தருமை யாதீனப் பதிப்பு)

திரிகூடராசப்ப கவிராயர்— குற்றாலக் குறவஞ்சி (கழக வெளியீடு)

பட்டினத்தார் : பட்டினத்துப் பிள்ளையார் பாடல்கள்.

திருத்தக்க தேவர் : சீவகசிந்தாமணி—நச்சினார்க் கினியர் உரை (டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு)

திருவள்ளுவர் : திருக்குறள்—பரிமேல் அழகர் உரை (கழக வெளியீடு)

திருமூலர் : திருமந்திரம் (காசி மடத்துப் பதிப்பு)

தேசிகவி நாயகம் பிள்ளை : மலரும் மாலையும் (பாரி நிலையம்)

பவணந்தி முனிவர் : நன்னூல் — காண்டிகை (ஆறுமுக நாவலர் பதிப்பு).

பாரதியார் : பாரதியார் கவிதைகள் (S. R. சுப்பிரமணிய பிள்ளை, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை—600 001

பாரதிதாசன் : பாரதிதாசன் கவிதைகள்—முதற்பகுதி (இராமச் சந்திரபுரம், புதுக்கோட்டை)

,, குடும்ப விளக்கு (பாரி நிலையம்)

,, அழகின் சிரிப்பு (பாரி நிலையம்)

பாஸ்கரத் தொண்டைமான் தொ. மு : ரசிகமணி டி. கே. சி. (S. R. சுப்பிரமணிய பிள்ளை)

பிள்ளை உலக ஆசிரியர் : ஸ்ரீவசனபூஷணம் (புருடோத்தம நாயுடு பதிப்பு)

மாணிக்கம், வ. சுப : கொடை விளக்கு (கிடைக்கும் இடம்– செல்விப் பதிப்பகம், காரைக்குடி)

மகராசன், S : தெய்வமாக்கவி (பழநியப்பா பிரதர்ஸ், சென்னை—14)

முருகப்பர், சொ : கம்பர் காவியம்—அதன் நிலை விளக்கம் (கம்பர் பதிப்பகம், மகளிர் இல்லம், அமராவதி புதூர்)

மூவர் : தேவாரம் அடங்கன் முறை (சமாஜப் பதிப்பு)

வில்லிபுத்தூராழ்வார் : வில்லிபாரதம் (மர்ரே ராஜம் பதிப்பு)

## ஆங்கில நூல்கள்

SUBBU REDDIAR, N : Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar (S.V.U., Tirupati—1977).

Subbu Reddiar, N : Collected Papers (Paari Nilayam, 184, Prakasam Salai, Madras-108).

## பின்னிணைப்பு—2

# பொருட்குறிப்பு அடைவு

### வடமொழி எழுத்துக்கள்



## பேராசிரியர்
## டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

**ஆசிரியம் :**

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல் கோட்பாடுகள்
5. யுனஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்

12. அறிவியல் தமிழ்
13. திருக்குறள் கருத்தரங்கு மலர்—1974(பதிப்பு)
14. கம்பனில் மக்கள் குரல்
15. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
16. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
17. தமிழ் இலக்கியத்தில்—அறம், நீதி முறைமை
18. புதுவை(மை)க் கவி சுப்பிரமணிய பாரதியார்—ஒரு கண்ணோட்டம்.

சமயம் தத்துவம் :

(அ) விளக்க நூல்கள் :

19. முத்திநெறி (தமிழக அரசு பரிசு பெற்றது)
20. சிலநோக்கில் நாலாயிரம்
21. வைணவமும் தமிழும்
22. சைவசமய விளக்கு
23. ஆன்மிகமும் அறிவியலும்
24. வைணவ உரைவளம் (ஐதிகம், இதிகாசம், சம்வாதம்)
25. கலியன் குரல்
26. கீதைக் குறள் (பதிப்பு)
27. கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில் (பதிப்பு)
28. ஆண்டாள் பாவையும் அழகுதமிழும் (பதிப்பு)
29. கீதைப் பொழிவுகள்
30. கண்ணன் துதி
31. இராமர் தோத்திரம்

(ஆ) திருத்தலப் பயண நூல்கள் :

32. மலைநாட்டுத் திருப்பதிகள்
33. தொண்டைநாட்டுத் திருப்பதிகள்

34. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
35. வடநாட்டுத் திருப்பதிகள்
36. சோழநாட்டுத் திருப்பதிகள்-முதற்பகுதி (த. அ. ப. பெற்றது)
37. சோழநாட்டுத் திருப்பதிகள்-இரண்டாம் பகுதி (ஷை)
38. தம்பிரான் சோழர்
39. நாவுக்கரசர்
40. ஞானசம்பந்தர்
41. மாணிக்கவாசகர்

திறனாய்வு :

42. பாட்டுத் திறன்
43. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
44. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
45. அகத்திணைக் கொள்கைகள்
46. புதுக்கவிதை - போக்கும் நோக்கும்
47. கண்ணன் பாட்டுத் திறன்
48. பாஞ்சாலிசபதம் - ஒரு நோக்கு
49. பாரதீயம் (த. அ. ப. பெற்றது)
50. குயில் பாட்டு - ஒரு மதிப்பீடு
51. உயிர் தந்த உத்தமன் (பதிப்பு)
52. ஆழ்வார்கள் ஆரா அமுது
53. விட்டுசித்தன் விரித்த தமிழ்
54. சடகோபன் செந்தமிழ்
55. பரகாலன் பைந்தமிழ்

வரலாறு தன்வரலாறு :

56. நினைவுக் குமிழிகள்-முதற்பகுதி

57. நினைவுக் குமிழிகள் - இரண்டாம் பகுதி
58. நினைவுக் குமிழிகள் - மூன்றாம் பகுதி
59. நினைவுக் குமிழிகள் - நான்காம் பகுதி
60. நினைவுக் குமிழிகள் - ஐந்தாம் பகுதி
61. வேமனர்
62. குரஜாட
63. சி. ஆர். ரெட்டி
64. தாயுமான அடிகள்
65. பட்டினத்தடிகள்
66. வடலூர் வள்ளல்
67. பிரதிவாதி பயங்கரம்
68. மலரும் நினைவுகள்

அறிவியல் :

69. மானிட உடல்
70. அணுவின் ஆக்கம்
71. இளைஞர் வானொலி
72. இளைஞர் தொலைகாட்சி
73. அதிசய மின்னணு
74. தமது உடல் (த. அ, ப. பெற்றது)
75. இராக்கெட்டுகள் (த. அ. ப..பெற்றது)
76. அம்புலிப்பயணம்
77. தொலை உலகச் செலவு
78. அணுக்கரு பௌதிகம் (செ. பல்கலைக் கழகப் பரிசு பெற்றது)

79. இல்லற நெறி

80. வாழையடி வாழை

81. அறிவியல் விருந்து (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது)

82. வானமண்டலக் காட்சி

ஆராய்ச்சி :

83. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி

84. வடவேங்கடமும் திருவேங்கடமும்

85. Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar

86. Studies in Arts and Science: (61st Birth Day Commemoration Volume)

87. Collected papers.

# இந்நூலாசிரியரைப் பற்றி....



பிறப்பு : 27-8-1916

74-அகவையைக் கடக்கும் இந்த நூலாசிரியர் பி. எஸ்சி., எல்.டி., வித்துவான், பி. ஏ., எம்.ஏ., பிஎச்.டி., பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகவும், (1941-1950)- பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் பேராசிரியராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் (1960—77) பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978 - இல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (1978-பிப்ரவரி - 1979 - ஜூன்) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் (பிஎச்.டி) பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல்வடிவம் பெற்றன; பெற்றும் வருகின்றன. தவிர ஆசிரியம் (5), இலக்கியம் (12), சமயம் (25), திறனாய்வு (12), அறிவியல் (14), ஆராய்ச்சி (5), வாழ்க்கைவரலாறு (14)-என்று 87 நூல்களின் ஆசிரியர். இவர்தம் அறிவியல் நூல்களில் இரண்டும், சமய நூல்களில் மூன்றும், திறனாய்வு நூல்களில் ஒன்றும் தமிழக அரசு பரிசுகளும்; அறிவியல் நூல்களில் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசும், ஒன்று தமிழ் வளர்ச்சிக்கழகப் பரிசும் - ஆக எட்டு நூல்கள் பரிசுகள் பெற்றவை. இவர்தம் அறிவியல் பணியைப் பாராட்டி குன்றக்குடி திருவண்ணாமலை ஆதினம் 'அருங்கலைக்கோன்' என்ற விருதையும் பண்ணுருட்டி வைணவ சபை இவரது சமயப் பணியைப் பாராட்டி 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' என்ற விருதையும், தமிழக அரசு திரு. வி. க. விருதையும் வழங்கிச் சிறப்பித்தன. இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்புகளாகும்.

---

MK Color Process, Madras-14 Phone : 848311
Design by P. N. Anandan